# அஷ்டாவக்ர மகாகீதை

## இரண்டாம் பாகம்

## துன்பம் ஏன்? துயரம் ஏன்?

ஓஷோ அஷ்டாவக்ர-ஸம்ஹிதாவின் 298 சூத்திரங்களிலிருந்து 35 முதல் 65 சூத்திரங்கள் சார்ந்து கேள்வி-பதில்களுடன் வழங்கிய பத்து சொற்பொழிவுகளின் தொகுப்பு

**ஓஷோ**

தமிழாக்கம்:
**டாக்டர் என். ஸ்ரீதரன்**




**கவிதா பப்ளிகேஷன்**

8, மாசிலாமணி தெரு,
பாண்டி பஜார்,
தியாகராய நகர்,
சென்னை - 600 017.

044-4216 1657
+91-7402222787
kavitha_publication@yahoo.com
kavithapublication@gmail.com
www.kavithapublication.in

அஷ்டாவகர மகாகீதை (இரண்டாம் பாகம்) - துன்பம் ஏன்? துயரம் ஏன்?

முதற் பதிப்பு : ஆகஸ்ட், 2014
இரண்டாம் பதிப்பு : டிசம்பர், 2019

விலை : ₹ 400/-

**Ashtaavakara Mahageethai - Part-2**

Originally published in Hindi as
**ASHTAVAKRA MAHAGITA, VOL.2**



Reprint: (Actual year of reprint)



Translated by : **Dr. N. Sreedharan**
Publishing Editor : **Sethu Chockalingam**
First Edition : August, 2014
Second Edition : December, 2019
Pages : 448
**Price : ₹ 400/-**
ISBN : 978-81-8345-425-4
Printed at : Sree Durga Printers, Chennai

Published by :
**KAVITHA PUBLICATION**
# 8,Masilamani Street,
Pondy Bazaar, Thyagaraya Nagar, Chennai - 600 017.
Phone : 044 - 42161657 Whatsapp : 7402222787
E-mail : kavitha_publication@yahoo.com
kavithapublication@gmail.com
Website : www.kavithapublication.in

# பொருளடக்கம்

ஜனகர் மொழிகிறார்

ஞானம் ஞ்யேம் ததா ஞ்ஞாதா த்ரிதயம் நாஸ்தி வாஸ்தவம் |
அக்ஞானாத்பாதி யத்ரேதம் ஸோஅஹமஸ்பி நிரஞ்சன: || (35)
த்வைத மூலமஹோ துக்கம் நான்யத்தஸ்யாஸ்தி பேஷஜம் |
த்ருஷ்யமேதன்ம்ருஷா ஸர்வமேகோஅஹம் சித்ரஸோ அமல: || (36)

போதமாத்ரோ அஹம் ஞானாதுபாதி: கல்பிதோ மயா|
ஏவம் விம்ருஷ்யதோ நித்ய நிர்விகல்பே ஸ்திதிர்மம || (37)
நமே பந்தோஅஸ்தி மோக்ஷோ வா ப்ராந்தி: ஷாந்தா நிராஸ்ரயா |
அஹோ மயி ஸ்திதம் விஸ்வம் வஸ்துதோ நமயி ஸ்திதம் || (38)
ஸஷரீரமிதம் விஸ்வம் ந கின்சித்தி நிஷ்சதம் |
ஷுத்த சின்மாத்ர ஆத்மா ச தத்கஸ்மின் கல்பனாதுனா || (39)
ஷரீரம் ஸ்வர்கநரகௌ பந்தமோக்ஷௌ பயம் ததா |
கல்பனா மாத்ரமேவைதத கிம் மே கார்யம் சிதாத்மன: || (40)

பேரறிவு, அறியப்படும் விஷயம், அறிபவர் – இம்மூன்றும் உண்மையில் தனித்தனியாக இல்லை. இம்மூன்றும் நிறைந்துள்ள நிரஞ்சன் எனப்படுபவன் நான்தான்.

ஞானம் ஞ்யேம் ததா ஞ்ஞாதா த்ரிதயம் நாஸ்தி வாஸ்தவம்

எது கண்ணுக்குத் தெரிகிறதோ, யாருக்கு அது தெரிகிறதோ, இந்த இரண்டின் இடையே உள்ள சம்பந்தம், அறிவுபூர்வமான சம்பந்தமாக அல்லது காட்சி உணர்வின் அடிப்படையிலான சம்பந்தமாக இருக்கலாம். வேறுவிதமாகக் கூறுவதானால் – நான் விழித்தேன். நான் பார்த்தேன் என்பது எல்லாம் கனவு போன்றவை. இந்த ஞானத்தைப் பெற்றவனுக்கு தெரியும் பொருள், தெரிந்து

கொள்பவன், இடையிலுள்ள உறவு ஆகிய மூன்றும் கனவுபோல் மறைந்துவிடுகின்றன. இந்த உணர்வு ஒன்றே சத்தியமான ஞானம்.

அடிப்படையில், பார்வையாளன் என்பவன் வேறு, சாட்சி வேறு. சாட்சி என்றால் பார்ப்பவன் என்று மேலோட்டமாக அர்த்தம் கொள்ளக்கூடாது. அகராதியில் அப்படி அர்த்தம் போட்டிருக்கலாம். பார்வையாளனைவிட சாட்சி ஆழமானவன். பார்வையாளன் என்ற நிலை முதிர்ந்து நிற்கும் நிலையில் சாட்சியின் ஆரம்பக்கட்ட நிலை தொடங்குகிறது. சாட்சி நிலையை அடையும்போது சாதாரணப் பார்வையாளன், ஒரு மலர் முழுமையாக மலர்ச்சி அடைந்ததுபோல் பரிபூரணன் ஆகிறான்.

பார்வையாளன் என்ற நிலையில் உள்ளவன் பிளவுபட்டவனாக இருக்கிறான். ஏனெனில், காண்பவன் என்று ஒருவன் இருந்தால், அங்கு காட்சி என்ற ஒன்றும் இருக்கும். காண்பவனும் காட்சியும் இருக்கு மானால், நடுவில் ஓர் உறவும் உருவாகிவிடும். அது தரிசனத்தின் (காண்பதன்) அல்லது அறிவின் (அறிவதன்) அடிப்படையில் இருக்க லாம். எப்படியும் இவ்வாறு மூன்று கூறுகள் அமைந்துவிடுகின்றன.

எங்கே கூறுகள், துண்டுகள் உள்ளனவோ அங்கெல்லாம் கனவுநிலை பரவியுள்ளது. இதற்கு மாறாக, உயிருணர்வாகிய இருத்தல் என்ற நிலை பிளவுபடாதது. எங்கெல்லாம் நாம் பிரிவுகளை உண்டாக்குகிறோமோ, எல்லைகளை நிறுவுகிறோமோ, அந்த வரையறைகள் நடைமுறை வசதிக்காக ஏற்பட்டவையே தவிர, ஆன்மீக எல்லைகளில்லை.

பக்கத்து வீட்டுக்காரரின் வீட்டிலிருந்து நம் வீட்டைப் பிரித்துக் காட்ட எல்லைக்கோடு வரைகிறோம்; வேலி கட்டுகிறோம், சுவர் எழுப்புகிறோம். ஆனால் பூமி பிளவுபடுவதில்லை. தேச வரைபடத்தில் இந்தியாவையும் பாகிஸ்தானையும் பிரித்துக்காட்ட எல்லைக்கோடுகள் இழுக்கிறோம். ஆனால் அந்த எல்லைகள் வரைபடத்தில்தான் உள்ளனவே தவிர, பூமி பிரிவு படாததாகவே நீடிக்கிறது.

நம் வீட்டு முற்றத்திலிருந்து தெரியும் வானமும், பக்கத்து வீட்டுக்காரரின் முற்றத்திலிருந்து தெரியும் வானமும் வெவ்வே றானவை அல்ல. இருவீட்டு முற்றங்களையும் ஓர் எல்லைக்குள்

உட்படுத்தும் சுவரானது ஆகாயத்தைப் பிரிப்பதில்லை. எங்கெல்லாம் பிரித்துக் காட்டினோமோ அங்கெல்லாம் அதற்கான அவசியமிருந்தது. அதனால்தான் அப்படிச் செய்தோம். கூறுகளாகப் பிரித்துக் காட்டியது உபயோகம் கருதியே. இப்படிப் பிரிப்பதற்கும் வாஸ்தவமான நிலைக்கும் தொடர்பு கிடையாது. சத்யம் என்பது பிரிக்க முடியாத தாகும்.

நமக்குள்ளேகூட பலத்த பிரிவு உள்ளது. பார்ப்பவன் — பார்க்கப்படுவது என்று இரண்டாக உள்ளதுதான் அந்தப் பிரிவு. இந்தப் பிரிவினை உணர்வு சரிந்து விழுந்தால், அப்போது அரசியல் ரீதியான பிரிவுகள் வீழும். மிஞ்சியுள்ள தேசப்படமும் வீழும். படத்திலுள்ள எல்லைகள்கூட அர்த்தமிழக்கும். இறுதியில் எஞ்சி இருப்பது எதுவோ அதுவே பிரிவற்ற நிலை. அதை எப்படி அழைப்பது? பார்வையாளன் என்று சொல்ல முடியாது. ஏனெனில் அங்கு காட்சி மறைந்துபோன நிலை. காட்சி இல்லை எனில் காண்பவன் என்று ஒருவன் எப்படி இருக்க முடியும்? இந்த பார்வையாளன் பெறுவதை தரிசனம் என்றும் சொல்ல முடியாது. ஏனெனில் தரிசனம் என்பது காட்சிப்பொருள் என்ற ஒன்றில்லாமல் சாத்தியப்படாது. ஆகவே காண்பவன் — காட்சி — காணல் (தரிசனம்) ஆகியவை ஒன்றாக இணைந்துள்ளன. இவை ஒன்றாகவே இருக்கும். ஒன்றாகவே போகும் — வரும்.

பார்த்தீர்களா, எத்தகைய கனவாயினும் மறையும்போது முழுமையாகக் கலைந்துவிடும். அது நிகழும்போது முழுமையாகத் தோன்றினாலும், கனவில் கொஞ்சம் மிச்சப்படுத்திச் சேமித்து வைக்கலாம் என்பது உங்களால் முடியாத காரியம்.

இரவில் ஒரு கனவு கண்டாய். அதில் நீ சக்கரவர்த்தியாக விசாலமான சிம்மாசனத்தில் வீற்றிருக்கிறாய். பெரிய அரண்மனை, திரண்ட சேனை. கோலாகலம். காலையில் கண்விழிக்கும்போது உன்னால் அந்த இனிய கனவிலிருந்து சிறிதளவாவது சேமித்துவைக்க முடியுமா? ‘எல்லாம் பார்வையிலிருந்து மறைந்து போனாலும் குறைந்த பட்சம் இந்த சிம்மாசனத்தையாவது என்னிடமே வைத்துக்கொள்வேன்; அல்லது ராணியை மீட்டுவைப்பேன்; அல்லது தலையிலிருந்த கிரீடத்தையாவது கனவு முடிந்தும் பாதுகாப்பேன்,’ என்றெல்லாம் உங்களால் சொல்ல முடியுமா? இதெல்லாம் சாத்தியமில்லை. கனவு

காணும்போது எல்லாம் முழுமையாக இருக்கும். கனவு கலையும்போது எல்லாம் முழுமையாக நீங்கிவிடும். நீங்கள் விழித்தெழும்போது கனவின் எப்பகுதியையும் மிச்சப்படுத்தி எடுத்துவருவது நடைபெற முடியாத காரியமாகும்.

காண்பவன் – காட்சி – காணுதல் – இவை ஒவ்வொரு கனவிற்குமுள்ள மூன்று அம்சங்களாகும். முழுக்கனவும் கலைந்தபின், விழிப்பு ஏற்பட்டபின், எது எஞ்சிநிற்கிறதோ அதை நீங்கள் கனவின்போது உணரவில்லை. ஏனெனில் அது கனவில் ஓர் அம்சமாகக் கலந்திருக்கவில்லை. அது கனவு நிலையைக் கடந்து நிற்கிறது. எப்போதுமே அது கனவுநிலையைக் கடந்தே நிற்கும். அதுதான் கடந்த காலம். அது கனவை ஆக்ரமித்து நிற்கிறது.

நீங்கள் கடவுள் சம்பந்தமாகக் குறிப்பிட்ட கருத்தோட்டம் கொண்டிருக்கலாம். ஆனால் இறை அனுபவம் உங்களுக்குக் கிட்டும்போது வியப்பில் ஆழ்வீர்கள். ஏனெனில் உங்களது எந்தக் கண்ணோட்டமும் நடைமுறைக்குப் பொருந்திவராது. உங்கள் கருத்துகள், முடிவுகள் எல்லாம் காணாமல் போய்விடும். எந்த சொரூபத்தில் இறை உண்மையை அறிந்தீர்களோ, அதைத் தூங்கியபடியே கனவில் காண வழி ஏதுமில்லை. கனவில் கடவுளைப் பற்றி கொள்கை வகுக்க முடியாது.

ஆகவே கடவுளைக் குறித்து முன்னேற விழைகிறவன் அனைத்துக் கருத்தோட்டங்களையும் கைவிட வேண்டும். இதுவரை சேகரித்த மதிப்பீடுகளைக் குப்பையில் எறிய வேண்டும். வார்த்தை ஜாலங்களுக்கு விடைகொடுத்துவிட வேண்டும். 'கொள்கைகளே, தத்துவச் சொற்களே, நீங்கள் என் வாழ்வில் சிறப்பாகத்தான் இயங்கினீர்கள்; உபயோகமாகவும் இருந்தீர்கள்; ஆனால் நீங்கள் உண்மையான முக்திக்கான அர்த்தத்தைத் தெளிவுபடுத்தவில்லை,' எனத் தெரிவித்துவிட வேண்டும்.

நடைமுறை அல்லது யதார்த்த வாழ்க்கையின் சத்தியம் உயர் ஆன்மீக உண்மையிலிருந்து வேறுபட்டதாகும். நடைமுறைக்கான சத்தியம் உபயோகமானதுதான். ஆனால் அடிப்படையில் அது உண்மையாக இருக்காது. இதற்கு மாறாக, உயர் ஆன்மீக உண்மை அன்றாட சராசரி வாழ்க்கையில் நேரடியாக உபயோகப்படுத்தும்

தன்மை கொண்டிருக்கவில்லை. ஆனால் அதுதான் அடிப்படையான உண்மையாகும்.

"சரி, கடவுளால் என்ன உபயோகம், சொல்லுங்களேன்" என்று நீங்கள் கேட்டால் பதில் சொல்வது சங்கடம். கடவுளால் நேரடியான உபயோகம் என்ன இருக்க முடியும்? கடவுளை வைத்துக்கொண்டு என்ன செய்வது? இதனால் நமது எந்த தீவிர எதிர்பார்ப்பு திருப்தி பெற முடியும்? எந்த விருப்பம் பூர்த்தியாகும்? எந்த வேட்கை தணியும்?

கடவுள் அன்றாட வழக்கமான வாழ்க்கையில் தேவைப் படுவதில்லைதான். நம்மை சமூகத்தில் முக்கியமானவராக ஆக்கிவிட நாம் விசேஷ வலிமை பெற்றுவிட, நமது சமூக அந்தஸ்து வளர — இம்மாதிரியான பணிகள், கடவுளுக்குரியவை அல்ல. எதைக் குறித்தும் 'அதனால் உபயோகம் என்ன?' என்று ஆராய்பவர்கள் கடவுளைத் தேடி செல்வதில்லை. பரமாத்மாவின் மீதான பற்றால் நிச்சயமாக ஆனந்தம் விளைகிறது. ஆனால் தொட்டுணரத்தக்க பலன் விளைவதில்லை.

என்னிடம் வருகின்றவர்களில் சிலர் தியானம் செய்வதால் என்ன லாபம் என்று விசாரிக்கிறார்கள். லாபமா! அவர்களது கேள்வி விசித்திரமாக, வேடிக்கையாக அல்லவா உள்ளது. அப்படியானால் அவர்கள் தியானம் பற்றி புரிந்துகொள்ளவில்லை எனத் தெரிகிறது. தியானம் எவன் செய்கிறான்? லாபப் பேராசையை விட்டொழித்தவன் தான் உண்மையில் தியானிக்கிறான். ஒருவன் லாப நினைவே எழாத மனம் உடையவனாக இருந்தால் அவனது தியானம் உண்மையானது. எவன் மிகுந்த லாபம் அடைந்த பிறகு லாபத்தில் சாரம் ஒன்றுமில்லை என அறிந்துகொள்கிறானோ அவன் செய்யும் தியானமும் உண்மையானது.

செல்வம் கிடைக்கிறது. ஆனால் மனத்தில் வறுமை உணர்வு நீங்கவில்லை. உயர் பதவி கிடைக்கிறது. ஆனால் சுய பரிதாபம் குறையவில்லை. சன்மானம் — கௌரவம் கிடைக்கிறது. ஆனால் மனம் வெற்றிடமாக நீடிக்கிறது. உலகெங்கும் புகழ் மணம் பரவுகிறது. ஆனால் உள்ளேயிருந்து நாற்றமே கிளம்புகிறது. பூ எதுவும் மலரவில்லை, உள்ளே எங்கும் முட்கள்தான் உள்ளன. வலி, குத்தல் — குடையல், மனத்துயரம், அதிருப்தி, கவலை மேல் கவலை — இவையெல்லாம் அடர்ந்து திரள்கின்றன. உள்ளே தகனமேடை

தயாராகிவருகின்றது. வெளியே அரண்மனைபோல் தெரியலாம். வெளிவாழ்க்கை பரந்து விரிந்து முன்னேறுகிறது. உள்ளேயோ சரிவு நாளுக்குநாள் நெருங்கிக்கொண்டிருக்கிறது.

உலகக் கண்ணோட்டத்தில் லாபமாகக் கருதப்படுவதில் உண்மையில் லாபம் இல்லை என்பதைக் காண்பவன் தியானம் மேற்கொள்ளத் தகுதி பெறுகிறான். தியானம் செய்வதால் ஏதேனும் லாபம் கிடைக்கும் என்று எண்ணுபவர்கள் 'சரி, வா, தியானம் செய்வோம்' என்று அழைப்பார்கள்.

தியானம் செய்வதால் லாபம் என்ன? இதனால் என்ன பலன் கிடைக்கும்? சுகமும் வளமும் ஏற்படுமா? பதவியும் கௌரவமும் கிடைக்குமா? செல்வமும் ஆடம்பர வசதிகளும் வாய்க்கப் பெறுமா? இதுவரையில் ஏற்பட்ட தோல்விகள் இறுதிக் கட்டத்தில் வெற்றியாக மாறுமா? வாழ்வில் பரவியுள்ள சோகமும், நாம் உணரும் வெறுமையும் மாறிவிடுமா? நாம் எல்லாவகையிலும் நிறைவு பெற்றவர்களாக ஆகிவிட முடியுமா? – இம்மாதிரியான கேள்விகளை தியானத்துடன் லாபநோக்கைச் சேர்த்துப் பார்ப்பவர்கள் கேட்கிறார்கள்.

இவர்கள் எழுப்பும் இந்தக் கேள்விகளெல்லாம் அடிப்படையில் தவறானவை. அவர்களது மனம் இன்னும் பக்குவப்படவில்லை. இன்னும் பழம் பழுக்கவில்லை. அதற்குரிய பருவகாலம் வரவில்லை. இந்த மனிதர்கள் பிஞ்சிலே பழுத்துவிட்டவர்கள்.

உண்மையான தியானம் செய்பவன், உண்மையில் தியானப் பாதையில் செல்லும் தகுதி படைத்தவன், ஒரு விஷயம் அறிந்திருப்பான். அது என்னவெனில், இந்த உலகத்தில் கிடைப்பது ஏராளம்; அதே சமயம் இந்த உலகத்தில் கிடைப்பது எதுவுமில்லை! எல்லாம் கிடைத்தும் எல்லாம் வெறுமையாக உள்ளது. இந்த முரண்பாட்டைக் காண்பவன் தியானத்தால் என்ன லாபம் என்று வாதம் செய்யமாட்டான். ஏனென்றால் லாபம் என்பது அன்றாட வாழ்க்கை நடவடிக்கைகளுடன் சம்பந்தப்பட்டது. தியானமோ உயர் உண்மை வகையைச் சேர்ந்தது.

தியானத்தில் ஆனந்தம் அவசியம் உண்டு. ஆனால் அதில் அன்றாட வாழ்க்கையுடன் சம்பந்தப்பட்ட லாபம் கிடையாதுதான்.

ஆகவே நீங்கள் தியானத்தைப் பணம் வைக்கும் கல்லாப்பெட்டியில் போட்டுவைக்க முடியாது. தியானத்தின் மூலம் உங்கள் வங்கிக் கணக்கின் இருப்பை உயர்த்த முடியாது. தியானம் உங்கள் உடல் – உடைமைகளின் பாதுகாப்பிற்கு உத்தரவாதம் தராது.

தியானம் உங்களை முன்பின் பழக்கமற்ற நிலையில் கொண்டுபோய்த் தள்ளிவிடும். ஏற்கெனவே உங்களிடம் கொஞ்சம் நஞ்சமிருந்த பாதுகாப்பான உணர்வும் தியானத்தில் நீங்கிவிடும். உங்களை அறிமுகமற்ற புதிய உலகில் சேர்ப்பித்துவிடும். தியானம் ஒருவகையான எழுச்சிப் பயணம். அதில் கலந்து கொண்டால் நீ கொஞ்சம் – கொஞ்சமாகக் கரைந்துபோவாய்; உருகிப்போவாய்; தண்ணீராய் வழிந்துவிடுவாய்.

தியானத்தின் மூலம் லாபம் எப்படி ஏற்பட முடியும்? தியானத்தால் நஷ்டம்தான் விளையும்! அது என்ன நஷ்டமெனில் தியானத்தின் உச்சநிலையில் நீ மிஞ்சியிருக்க மாட்டாய்! தியானம் என்பது ஒருவகையான மரணம். அது உடல்ரீதியாக ஏற்படும் மரணம் போன்றதில்லை. உடலால் நீ எத்தனையோ தடவை செத்திருக்கிறாய். அந்த மரணம் இறுதியான மரணமில்லை. அதனால் யாரும் ஒரே பிறவியில் இறப்பதில்லை. அந்த மரணம் ஆடை மாற்றிக் கொள்வது போன்றது மட்டுமே ஆகும். பழைய ஆடைகளுக்குப் பதிலாகப் புத்தாடைகள் கிடைக்கின்றன. கிழவன் இறந்து மீண்டும் குழந்தையாகி மறுபடியும் உலகிற்கு வந்துவிடுகிறான். இவ்வகை மரணத்தால் யாரும் முழுமையாக இறப்பதில்லை. வெகுசிலர் வேண்டுமானால் இறுதி மரணம் அடைந்திருக்கக்கூடும். ஒரு அஷ்டாவக்ரர், ஒரு புத்தர், ஒரு மகாவீரர் இப்படிச் சிலர் மட்டும் முடிவாக மரணமடைந்திருப் பார்களென்று கருதலாம். அவர்கள் – அத்தகையவர்கள் – பிறகு திரும்பி வரவில்லை.

தியானம் என்பது ஒருவகையான மரணநிலை. தியானத்தில் நீ இறப்பாய். அழிவாய். உனது நிழல்கூட மிஞ்சியிருக்காது. சிறிதளவு எது மிஞ்சியிருந்தாலும் தியானம் குறைபட்டதாகிவிடும். தியானத்தின் உச்சத்தில் நீ துளிக்கூட மிஞ்சியிருக்க மாட்டாய். நீ என்பவனே மிஞ்சாதபோது உனக்கு தியானத்தால் என்ன லாபம் விளையும் என்ற கேள்விக்கே இடமில்லை.

நீ என்பவன் நடைமுறையிலான, ஒரு வசதிக்கான, சத்தியம் மட்டுமே ஆவாய். நீ ஒரு கருத்துரு மட்டுமே. நீ என்று தனியாக ஒன்றும் இல்லை. நீ என்பது ஓர் அபிப்பிராயத்தின் உருவகம். உனக்கென்று தனிப்பட்ட முறையில் இருத்தல் என்பது கிடையாது. நீ என்னும் கருத்தின் உருவகம் சிதறியதும் உன்னைச் சூழ்ந்திருந்த மற்ற அபிப்பிராயங்களும் சிதறிவிடும். ஏனெனில் எஜமான் என்று ஒருவன் இல்லாத நிலையில் அவனுக்கென்று சேர்க்கப்பட்ட பலவகைப் பொருட்களும் சிதறிவிடும் அல்லவா? மீட்டி வாசிக்கும் இசைக் கலைஞர் இல்லாமல் வீணை எப்படி ஒலியெழுப்பும்? மூங்கில் இல்லாவிடில் புல்லாங்குழலும் இல்லைதானே. அதுபோல், நீ போய் விட்டால் மூங்கில் இல்லாமல் போன மாதிரிதான். மூங்கில் இல்லாமல் – ஆகவே புல்லாங்குழலும் இல்லாமல் – மிஞ்சியிருப்பது எதுவோ அதுவே சமாதி. அதுவே உயர் ஆன்மீக உண்மை.

அந்த உயர் ஆன்மீக உண்மை நிரந்தரமானது. பேரானந்த மானது. பேரொளியானது. அது ஆசிகளைப் பொழிகிறது. அதன் மூலம் அமுதம் பருகியது போன்ற பரவச உணர்வு மேலிடுகிறது. ஆனால் அதனால் சொல்லத் தக்க லாபம் எதுவும் கிடையாது. அன்றாடப் பயன்பாட்டின் அளவில் அது லாபம் தராது. அதை அஸ்திவாரமாகக் கொண்டு நீ எந்தவிதமான சொத்து சுகத்தையும் நிர்மாணித்துக்கொள்ள முடியாது.

எவனுக்கு உலகம் ஒரு பெருங்கனவுபோல் தோன்றுகிறதோ அவன்தான் தியானத்தை நோக்கி அடியெடுத்துவைக்கக் கூடியவனாக இருப்பான். அவன் இவ்வுலகத்தில் எதையும் சொத்தாகச் சேமித்து வைக்க விரும்பமாட்டான். அவற்றையும் அவன் கனவென்பான். அந்தக் கனவு முழுமையாகக் கலைந்துபோகட்டுமே என்பான். 'எது கனவில்லையோ அதையே நான் அறிய விரும்புகிறேன்,' என்பான். தேடல் நாட்டமுள்ள அவனுக்காகவே இந்த சூத்திரங்கள் அமைந் துள்ளன.

ஜனகர் சொன்னார் – பேரறிவு, அறியப்படும் விஷயம், அறிபவர் ஆகிய மூன்றும் உண்மையில் தனித்தனியாக இல்லை. இம்மூன்றும் நிறைந்துள்ள நிரஞ்சன் எனப்படுபவன் நான்தான்.

உலகமென்னும் கனவு எவனைப் பாதிக்கிறதோ அந்த அவன் யார்? நீ இரவில் தூங்குகிறாய். கனவு காண்கிறாய். அக்கனவு உண்மை நிகழ்ச்சி அன்று. ஆனால் அந்தக் கனவில் திளைத்தவனாக உண்மையில் ஒருவன் உள்ளான். காலையில் கனவு கலைந்து போயிருக்கும். ஆனால் கனவு கண்ட நீ எப்படியும் இருப்பாய். நீ சொல்வாய், "இரவு ஒரு கனவு கண்டேன். அது மிகவும் பொய்யான கனவு," என்று. ஒன்று நிச்சயம். கனவில் காணப்பட்ட எல்லாம் பொய்தான். ஆனால் அவற்றைக் கனவில் கண்டவனைப் பொய் என்று சொல்ல முடியாது. கனவு கண்டவனைப் பொய்யென்று கருதினால், பிறகு கனவு தோன்றவே வாய்ப்பில்லை.

கனவு உருவாவதற்குக் குறைந்தபட்சம் ஒரு சத்தியச் சான்று தேவை. அந்தச் சான்று நீ என்னும் ஒருவன் உளதாயிருத்தலே. உறங்கி விழித்தபின் நீ கண்டது கனவென்னும் பொய்யே என உணர்ந்ததும் மேற்கொண்டு கொஞ்சம் யோசித்துப் பாரேன். அப்படிச் சிந்தித்தால், கனவு கண்டவன், கனவில் கண்ணில் பட்டவன், கண்டது கனவென்று உணர்ந்தவன் ஆகிய எல்லாமே ஒருவகைப் பொய்தான் என்ற முடிவிற்கு வருவாய்.

நீ கனவில் ஒரு பாம்பைப் பார்த்தாய். பெரிய பாம்பு. உன்னை நோக்கி வருகிறது. புஸ்—புஸ்ஸென்று சீறுகிறது. கனவில் பாம்பைப் பார்த்ததும் நீ நடுங்குகிறாய். மிரள்கிறாய். உன் உடல் வியர்த்துக் கொட்டுகிறது. ஓட்டம் பிடிக்கிறாய், காடு — மலை கடக்கிறாய். பாம்பு விடாமல் பின்தொடர்கிறது. அதன் சீற்றமான மூச்சொலி உன் காதில் விழுகிறது.

ஆனால் உறக்கம் நீங்கி விழித்தபின் அந்தப் பாம்பு பொய்யாகப் போயிருக்கும். உன் கனவில் நீ பாம்பைப் பார்த்தாய். ஓட்டம் பிடித்தாய். நடுங்கினாய், உன் உடலிலிருந்து வியர்வை வெள்ளமாகப் பெருக்கெடுத்தது. கடைசியில் தரைமேல் வீழ்ந்தாய். கனவில் கண்ட 'நீ' உண்மையா? இல்லை, அந்த நீயும் பொய்த் தோற்றமே.

இவ்வாறு கனவும் பொய்யானது. கனவு கண்டவனும் பொய். கனவில் காணப்பட்டவனும் பொய். ஆனால் இந்த இருவருக்கு அப்பாலும் யாரோ ஒருவன் உள்ளான். அந்த மூன்றாமவனுக்கு மற்ற

இருவரும் மாற்றுக்குறைந்தவர்களே. மூன்றாமவன் இல்லாவிடில் காலையில் கனவு யாருக்கு நினைவு வந்தது? 'கண்டது வெறும் கனவு, அது பொய்,' என்று கூறுகின்ற அவன் யார்?

கனவில் கண்ட காட்சி பொய்தான். கனவில் தோன்றியவனும் பொய்தான். கனவைக் கண்டவனும் பொய்யே. ஏனெனில் அவன் பொய்க் காட்சியில் மயங்கிவிட்டான். பொய்ம்மையின் வசப்படுகின்ற வனும் பொய்யாகி விடுவான். இதை உணர்பவன் அந்த மூன்றாமவன்.

ஒருவன் தினமும் காலையில் கண்விழிப்பதைப் போல் கடைசி விழிப்பு நாள் என ஒருநாள் வரும். அந்த நாள்தான் தியானம் – சமாதி – சாட்சி நிலை ஆகியவற்றின் விழிப்புநாள். அப்பொழுது எல்லாம் பொய்யெனத் தெரியும், அப்போது நீ மனைவிதான் பொய் என்று சொல்லமாட்டாய்; கணவனும் பொய்யே என்பாய். அப்போது நீ செல்வம் மட்டும் பொய் என்று கூறமாட்டாய். செல்வத்தைச் சேகரிப்பவனும் பொய் என்பாய். அப்போது நீ 'எனக்கு வெளிப்புறம் உள்ளவை மட்டுமே பொய்யானவை' என்று கூறமாட்டாய். உனக்கு உள்ளேயும் எத்துணையோ அம்சம் பொய்யானது என்பதை அறிந்திருப்பாய். மிஞ்சி நிற்பது எதுவோ அது உனக்கு வெளியேயும் இருக்கவில்லை; உள்ளேயும் இருக்கவில்லை; உள்ளே – வெளியே என்னும் இரண்டு நிலைகளையும் கடந்துநிற்கிறது.

வெளியே உடல் காணப்படுகிறது. உள்ளே மனம் இயங்குகிறது. அப்படியானால் ஆத்மா எங்கே உள்ளது? அது உள்ளேயும் இல்லை; வெளியேயும் இல்லை. ஆத்மா என்பது ஆகாயம் போன்றது. அதனுள் எல்லாம் பரவி அமைந்துள்ளது.

சூத்திரத்தில் வரும் 'எதில் இந்த மூன்றும் நிறைந்துள்ளதோ அந்த நிரஞ்சன் நான்தான்' என்பதில் ஜனகர் கூறும் நிரஞ்சன் என்பதன் அர்த்தம் மாசற்றவன், மாசிலாமணி என்பதாகும். எந்த அளவிற்கு மாசற்றவன் எனில் அதிலிருந்து சிறிதளவுகூட துண்டிக்கத் தேவை யிராது. எவ்வளவு பரிசுத்தமானவன் எனில் அதில் சிறிதும் கலப்படம் இருக்காது.

நிரஞ்சன் எனில் பூரணமான தூய்மை. அது களங்கப்படக்கூடிய சந்தர்ப்பமே இல்லை; அது மாசடைய வழியில்லை. புனிதம் கெட

சாத்தியமுள்ள எதுவும் 'நிரஞ்சன்' ஆகாது. கனவில் ஆழ்கின்ற, கனவில் தன்னை இழக்கின்ற, எதுவும் நிரஞ்சன் ஆகாது. பொய்ம்மையால் சஞ்சலமடைவது நிரஞ்சன் இல்லை. பொய்ம்மையின் வசப்பட்டு அதன் பின்னால் ஓடும் எதுவும் நிரஞ்சன் இல்லை. நிரஞ்சன் (அஞ்சனம் தீட்டப்படாதது) எப்பொழுதும் நிர்மலமாக, சாந்தமாக, ஆகாயம்போல் புனிதமாக இருக்கும்.

வானத்தைப் பாருங்கள். எத்துணைத் தூசிச் சூறாவளி எழுகிறது. கருமேகங்கள் திரண்டு படர்கின்றன. ஆனால் ஆகாயத்தின் நிரஞ்சன் தன்மை (பரிசுத்தம்) அப்படியே நீடிக்கிறது. தூசியை வாரியிறைக்கும் மேகங்கள் ஆகாயத்தை அழுக்காக்க முடிவதில்லை. கருமேகங்களால் ஆகாயம் களங்கப்படுவதில்லை. சுற்றுச்சூழல் எப்படி அமைந்தாலும் வானத்தின் தூய தன்மை நிரந்தரமானது. அதிலிருந்து துண்டித்து அகற்ற அழுக்கான பகுதி எதுவும் கிடையாது. இந்த நிலையைத்தான் நிரஞ்சன் என்கிறோம்.

மறுபடியும் சொல்கிறேன்: நீ இதுவரை என்னென்ன கற்றுக்கொண்டாயோ அதில் உண்மையான அறிவம்சம் எதுவுமில்லை. நீ இதுவரை எதையெல்லாம் சரியென ஒப்புக்கொண்டாயோ அதில் உண்மையின் அம்சம் எதுவுமில்லை. உன்னுடைய எல்லாமே பொய்யானது. தற்சமயம் நீயே ஒரு பொய்தான். பொய், பொய்யுடன்தான் சேரும். பொய்யும் சத்தியமும் எவ்வகையிலும் இணைய முடியாது. வலிந்து கலக்கி அவற்றை ஒன்றாக்க முடியாது.

நீ இதுவரை எதையெதை அறிந்துகொண்டாயோ அதெல்லாம் உண்மை அறிவு இல்லை. நீ வேதம் பயின்றாய்; குரான் ஓதினாய்; பைபிள் படித்தாய்; கீதை கற்றாய். ஆனால் எந்த அர்த்தத்தில் நீ படித்தாயோ அது அவற்றில் எழுதப்படவில்லை. உன்னுடைய அறியாமை நிறைந்த புத்தியைக்கொண்டு நீ என்ன படித்திருக்க முடியுமோ அதைத்தான் அவற்றில் படித்தாய். நீ கடுமையான புலனடக்கம் மேற்கொண்டாய். ஆனால் உன் புலனடக்கம் பொய்ம்மையைச் சென்றடையவே உதவியது. ஏனெனில் பொய்ம்மையின் வசப்பட்ட நீ புலனடக்கத்தில் எப்படி வெற்றிபெற முடியும்? உன் புலனடக்க முயற்சியும் ஒருவகைக் கனவு போன்றதேயாகும். நீ தவம் இயற்றினாய்; தானம் கொடுத்தாய்;

உபவாசம் மேற்கொண்டாய்; பூஜை – அருச்சனை செய்தாய். எல்லாம் வியர்த்தமாகிவிட்டது. எல்லாம் தண்ணீராக வழிந்தோடிவிட்டது. ஏன் அப்படியானது என்றால் நீ மேலோட்டமாகவே சிந்தித்தாய். மூல விஷயம் அல்லது அடிப்படை விஷயம் பற்றி எண்ணிப்பார்க்க வில்லை. அடிப்படைக் குணம் மாறுவது கடினம் என்பதைப் பின்வரும் மழலையர் பாடல் கூறுகிறது.

**நதிக் கரையிலிருந்து பாரம் ஏற்றி**
**நகருக்குக் கிளம்பின கழுதைகள் ஐந்து**
**ஒன்று சொன்னது – நானே ராஜா**
**இரண்டாம் கழுதை 'போடா, போ,போ'**
**எனக் கூறியது இகழ்ந்து.**
**மூன்றாம் கழுதை பலசாலி**
**ஆயினும் நமக்குள் எதற்குச் சண்டை என்றது**
**தந்திரம் மிக்க நாலாம் கழுதை**
**சொன்னது நல்ல யோசனை ஒன்று:**
**உங்கள் சண்டையில் நடுவராக**
**என்னை வைத்துக்கொள்ளுங்கள்**
**உரிய சன்மானம் வழங்குங்கள்**
**தன்னை மதிக்கவில்லை என்று**
**ஐந்தாம் கழுதை ஆவேசப்பட்டது**
**'ரேங்கோ, ரேங்கோ' என்று ஓலமிட்டது**
**காலால் ஓங்கி உதைத்தது செடிகளை**
**ஒவ்வொர் இலையும் கசங்கிப்போனது**
**'வரட்டும் நமது எஜமானன்.**
**அப்போதுதான் உருப்படுவீர்' என்றது.**

எஜமானன் வந்தான். அவனைக் கண்டு கழுதைகள் ஒழுங் காயின; அமைதியாக நின்றன. அதாவது கழுதைகள் அடிப்படையில் மாறவில்லை. இந்தப் பாட்டில் மட்டுமல்ல, எஜமானனை எங்கு பார்த்தாலும் அடங்கிப்போவதால் கழுதைகளின் அடிப்படைக் குணம் மாறுவதில்லை என்பது தெளிவாகிறது.

சில கழுதைகள் கடைத்தெருவில் தென்படும். சிலவற்றை நீங்கள் ஆசிரமங்களில் காணலாம். எங்கிருந்தாலும் அவற்றின் குணம் (கழுதைக் குணம்) மாறுவதில்லை. ஒருவன் பணத்தின் பின்னால் பித்துப்பிடித்து ஓடுகிறான். இன்னொருவன் பணத்தை வெறுத்து அதை

உதறித்தள்ள வெறிகொள்கிறான். இவ்வாறாக இருவர் மீதும் பணத்தின் தாக்கம் படிந்துள்ளது. சேர்த்தாலும் இழந்தாலும் பணத்திலிருந்து தப்பி சுதந்திரம் பெற முடியாதெனத் தெரிகிறது.

ஒருவன் பெண்பித்து பிடித்தவனாக உள்ளான். இன்னொருவன் பெண் என்றாலே நடுங்கி ஓடிப்போகிறான். இருவருக்கும் இடையே என்ன வித்தியாசம்? திசைதான் வெவ்வேறு. அறியாமை மாறவில்லை. இருவரும் கழுதைகள்!

எங்காவது பெண் நம்மைத் தொட்டுவிடக்கூடாது; நம் மேல் படக்கூடாது, கண்ணில்கூடத் தென்படக்கூடாது இப்படிப்பட்ட பயம் ஆசிரமவாசிகளுக்கு ஏன் வருகிறது? எல்லாம் கனவு, மாயை, பொய்த்தோற்றம் என்று உனக்குத் தெரிந்துவிட்டது என்கிறாய். பிறகு ஏன் பெண் என்றால் மிரள்கிறாய்?

ஒருவன் தூங்கி எழுந்து கூறுகிறான், "இரவு ஒரு கனவு கண்டேன். அதோ அந்த அறைக்குள் எங்கு பார்த்தாலும் பாம்புகள் நெளிகின்றன; சிங்கங்கள் கர்ஜிக்கின்றன. எல்லாம் கனவு என்று இப்போது தெரிகிறது." அவனிடம் நாம், "சரி வா, எதற்கும் அந்த அறைக்குள் ஒருமுறை போய்ப் பார்த்துவிடுவோம்." என்கிறோம்.

அவனோ, "நான் வரமாட்டேன். எல்லாம் கனவுதான் என்று புரிந்துபோனது. பிறகு ஏன் போய்ப் பார்க்க வேண்டும்?" என்று மறுக்கிறான். நாம் விடவில்லை. "எல்லாம் கனவு என்று உனக்குத் தெரிந்துவிட்டதல்லவா? பிறகு ஏன் பயப்படுகிறாய்? அறைக்குள் வந்துபார்." என்று வற்புறுத்துகிறோம். அவன் வரமுடியாது என்று பிடிவாதமாக இருக்கிறான். அந்த அறையை தியாகம் செய்துவிட்டேன் என்கிறான்.

ஜனகரைப் போன்ற ஞானி கிடைப்பது அபூர்வம். ஏனென்றால் ஞானம் கிடைப்பதற்காக அதைத் தேடி அவர் அரண்மனையைவிட்டு வெளியேறவில்லை. பரமஞானியாகப்பட்டவரின் உன்னதமான நிலை இதுதான். ஏனெனில், அறிய வேண்டியதை அறிந்துகொண்டுவிட்ட பிறகு உதறித்தள்ள ஒன்றும் இருக்கவில்லை. ஜனகர் ஞானம் கைவரப்பெற்றார். ஆனால் அவரது சுபாவம் கடுகளவுகூட மாறிவிட வில்லை. எங்கே எதில் மாறுதல் செய்வது? கனவோ கலைந்து போய்விட்டது. எது எப்போது எப்படியிருந்ததோ அதுவே நீடிக்கிறது.

ஞானம் கிட்டிய பிறகு தியாகத்திற்கான முயற்சி மேற்கொள்ளப் பட்டால் ஞானம் இன்னும் பூரணமாகவில்லை என்று பொருள். மதியீனர்களைத் தவிர வேறு யாரும் தியாகம் செய்வதில்லை. ஞானி ஏன் தியாகம் செய்ய வேண்டும்? ஞானிக்கு ஞானம் அடைவது மாத்திரம் போதுமே. எல்லாம் மாயாஜாலம் என்று அவன் கண்டுகொண்டுவிட்டான். விஷயம் அவ்வளவுதான்; முடிந்துபோனது. அவன் எதன் சார்பாகவும் சரி, எதை எதிர்த்தும் சரி, சலன மடைவதில்லை. கண்ணில் தெரியும் ஒவ்வொன்றும் அவனைக் கவர்ந்திழுப்பதில்லை; அவனுக்கு அவை வெறுப்பேற்றுவதுமில்லை. உலகக் காட்சிகளின் நிழல் அவன் மீது படுவதில்லை.

ஞானம் சித்தியாகப்பெற்ற மனிதன் எதற்கும் ஆசைப்படுவ தில்லை; எதையும் வெறுத்தொதுக்கும் வைராக்கியமும் காட்டுவதில்லை. எதிலும் மயங்கி ரசிப்பது இல்லை. அவன் போகியுமில்லை, தியாகியுமில்லை. ஏனெனில் போகியாவதற்கும் தியாகியாவதற்கும் கனவு விழவேண்டும். இந்த இருவகையினரின் கனவிலும் ஒற்றுமை உண்டு. பணத்தில் எல்லாம் இருக்கிறது என்பான் போகி. பணம் புழுதிக்கு சமம் என்பான் தியாகி. இருவர் சிந்தனையையும் ஆட்டிப்படைக்கும் அடிப்படை விஷயம் பணம்தானே.

**ஒ**ரு மராட்டியக் கதை. ராங்கா – பாங்கா என்பவர்கள் முறையே கணவன் – மனைவி. பாங்கா ஒயிலான பெண். ராங்கா தியாக மனப்பான்மை கொண்டவன். அவன் எல்லா வசதிகளையும் பொருட்களையும் கைவிட்டிருந்தான். பிட்சை வாங்கக்கூட போவதில்லை. அதற்குப் பதிலாக தினமும் காட்டுக்குள் சென்று விறகு வெட்டிவந்து ஊரில் விற்பான். அவன் கொண்டுவரும் பணத்திற்கு ஏற்ப பாங்கா உணவு தயாரிப்பாள். மிஞ்சிய உணவை இரவுக்கு வைத்திராமல் ராங்கா யாசகர்களுக்குக் கொடுத்துவிடுவான். இரவில் கணவனும் மனைவியும் பிச்சைக்காரர்கள்போல் அப்படியே உறங்கிவிடுவார்கள். காலையில் எழுந்து ராங்கா விறகுவெட்ட மீண்டும் காட்டுக்குப் போவான்.

ஒரு சமயம் அவன் நோய்வாய்ப்பட்டதால் தொடர்ந்து மூன்று நாள் அவன் விறகுவெட்டப் போகமுடியவில்லை. ஆகவே வீட்டில் மூன்று நாள் அடுப்பு எரியவில்லை. நான்காம் நாள் ராங்கா பலகீனமாக

உணர்ந்தும் வேலைக்குப் போக நேர்ந்தது. உதவிக்கு மனைவியும் அவனுடன் வந்தாள். விறகு வெட்டி தலையில் சுமந்தபடி இருவரும் திரும்பினார்கள். பாதையில் குதிரைகளின் குளம்பு அடையாளங்கள் பதிந்திருந்தன. சற்றுமுன்தான் அப்பாதையில் குதிரைவீரர்கள் சிலர் சென்றிருக்க வேண்டும் என்று தோன்றியது. புழுதியும் எழும்பிக் கொண்டிருந்தது. சாலை ஓரம் பணமுடிச்சு ஒன்று விழுந்துகிடப்பதை கணவன் கண்டான். யாராவது ஒரு வீரன் அதைத் தவற விட்டிருப்பான் என்று நினைத்தான்.

மனைவியை முந்திக்கொண்டு சென்றதால் ராங்கா பணமுடிச்சைப் பார்த்ததும் யோசித்தான். 'நானோ தியாகி. பண ஆசையை வென்றவன். பணம் எனக்கு மண்ணுக்கு சமம். ஆனால் மனைவி? பெண்களுக்கே உரிய பணத்தாசை அவளுக்கு இருக்குமே. அவளுக்கு இந்தப் பொட்டலத்தின் மீது ஈர்ப்புத் தோன்றினால், கீழே விழுந்ததை எடுத்துக்கொண்டால் என்ன தப்பு என்று எண்ணினால், பணமுடையாக இருக்கும்போது பயன்படும் என்று கருதினால், மூன்று நாள் பட்டினியால் அனுபவித்த வேதனை இனி நேராமலிருக்க இப்பணம் உதவும் என்று கணக்குப்போட்டால்' — இவ்வாறெல்லாம் நினைத்த ராங்கா பொற்காசுப் பையை அருகிலிருந்த பள்ளத்தில் தள்ளிவிட்டு, காலால் மணலைப் பள்ளத்தில் நிரப்பினான்.

அதேசமயம் அவன் மனைவியும் அங்கு வந்து சேர்ந்து விட்டாள். "என்ன செய்கிறீர்கள்?" என்று கேட்டாள். "ஒரு போதும் பொய் சொல்ல மாட்டேன்," என்றும் ராங்கா சத்தியம் செய்திருந்தான். ஆகவே அவன் பதில் கூற சங்கடப்பட்டான். உண்மை தெரிந்தால் பணப்பையை நாமே வைத்துக்கொள்ளலாமே என்று மனைவி வற்புறுத்துவாளே என்று ராங்கா பயந்தான். "இந்தாங்க, இந்தப் பையை எடுத்துக்கிறதில என்ன தப்பு? நாம ஒண்ணும் திருடலையே, சாமியே பார்த்துக் கொடுத்திருக்கிறார்," என்றெல்லாம் மனைவி சொன்னால் என்ன செய்வது? துறவிகளும் பயப்படுவது பெண்ணிடம்தான் எனில் சம்சாரியான ராங்கா என்ன செய்வான்?

வேறுவழியின்றி அவன் கூறினான்: "உண்மையைச் சொல்கிறேன். கேட்டுக் கொள். என்னை மன்னித்துவிடு. இங்கே ஒரு பணப்பை கிடந்தது. நான் முன்பே ஆசைகளைத் துறந்தவன். ஆனால்

உன்னைப் பற்றி நம்பிக்கை கொள்ள முடியவில்லை. உனக்குப் பணத்தாசை ஏற்பட்டுவிடக்கூடாதே என்று பயந்தேன். அதனால் உனக்கு மோட்சம் கிடைப்பது தடைப்படுமல்லவா? ஆகவே உன் நலன் குறித்த அக்கறை காரணமாகத் தங்கக் காசுகள் கொண்ட பையை குழியில் தள்ளிவிட்டேன். இப்போது குழியை மண்ணால் மூடிக் கொண்டிருக்கிறேன்.''

கணவனின் பேச்சைக் கேட்டு பாங்கா கலகலவென்று சிரித்தபடி சொன்னாள்: "சபாஷ்! பிரமாதம்! பொற்காசு அடிப்படையில் மண்தானே. மண்ணை மண்ணால் மூடுகிறாயே. உனக்கு வெட்கமாக இல்லையா? எனக்குப் பணத்தாசை இருக்கும் என்று நினைக்கிறாயே. அது உனக்குள்தான் எங்கோ ஒளிந்திருக்கிறது. உனக்குத் தங்கம் இன்னுமா மண்ணிலிருந்து வித்தியாசமானதாகத் தெரிகிறது?''

பிறகு அவள் அழுதபடியே, சொன்னாள்: "ஐயோ, நீ பெரிய தியாகியாகிவிட்டாய் என்றல்லவா நான் நினைத்துக்கொண்டிருந்தேன். அப்படியானால் நீ இதுவரை என்னையும் மற்றவர்களையும் ஏமாற்றி வந்திருக்கிறாய். மண்ணின் மேல் மண்ணைப் போடுகிறாயே!''

இதையே ஜனகரின் சூத்திரமும் சொல்கிறது. பாங்கா ஜனகரின் பெயரைக் கூட கேள்விப்பட்டிருக்கமாட்டாள் என்பது வேறு விஷயம். ஜனகருக்கு முழுமையான ஞானம் கிடைத்திருந்தது. ஆனால் அவர் எதையும் உதறித்தள்ளவில்லை. போகமும் தியாகமும் ஞானம் முழுமை அடையாதவனின் அடையாளம். அவை ஒரே நாணத்தில் இரு பக்கங்கள்.

**ஒ**ருமுறை என்னைச் சந்திக்க ஒரு சந்நியாசி வந்தார். அவரை என்னிடம் அழைத்துவந்தவர் அவர் பெரிய யோகி, மகாஞானி என்றெல்லாம் தெரிவித்தார். அவர் கையால் காசு – பணம் தொடமாட்டாராம். யாராவது பணம் சமர்ப்பிக்க முயன்றால் முகத்தை வேறுபக்கம் திருப்பிக்கொண்டுவிடுவாராம். அழைத்துவந்தவர் மேலும் சொன்னார்: "ஆகவே நான் சுவாமிகளுடன் எங்கும் சேர்ந்தே செல்கிறேன். டிக்கட் வாங்கவும், டாக்ஸி வாடகைக்கும், இதரச் செலவுகளுக்கும் பணத்தை என்னிடமே வைத்துக்கொள்கிறேன்.''

நான் கேட்டேன், "உன் பெயர் என்னப்பா?''

"போகீலால், ஐயா."

யோகி – போகி, நல்ல ஜோடிதான் என்று நினைத்தபடி நான் மேலும் கேட்டேன், "நீ செலவு செய்யும் பணமெல்லாம் அடிப்படையில் யாருடையது? உன் பணமா?"

"அதெல்லாம் என் பணமில்லை. நான் வெறும் தொண்டன். எனக்கு எவன் பணம் கொடுப்பான்? மக்கள் இந்த சுவாமிஜியிடம்தான் காணிக்கை சமர்ப்பிக்கிறார்கள். அதை நான் சேகரித்துவைக்கிறேன். ஆகவே பணம் அவருக்குத்தான் சொந்தமானது. அவர் பெரிய யோகீஸ்வரர். ஆகவே பணத்தைத் தொடமாட்டார். இதனால் செலவுகளுக்காக நான் பத்திரப்படுத்துகிறேன்"

யோகியும் போகியும் ஒரே நாணயத்தின் இரு பக்கங்கள். யோகிலால் உள்ள இடத்தில் போகிலாலும் இருப்பார். அந்த இருவரைப் போறுத்தவரையிலும் ஒருவர் இல்லாமல் இன்னொருவரால் எதுவும் செய்ய முடியாது. அது சாத்தியமில்லை. ஏனெனில் ஒரு பக்கம் மட்டுமே உள்ள நாணயம் எங்காவது உண்டா? நாணயத்திற்கு இரண்டு பக்கமும் தேவை.

பற்றற்ற மனிதன் எப்படி இருப்பானெனில் அவன் போகத்திற்கும் வசப்படமாட்டான். யோகத்திலும் மயங்கிவிடமாட்டான். எல்லாம் கனவு மாத்திரமே என்று அறிந்தவன் எதிலிருந்து தப்பித்து ஓடுவான்? எதற்காகத் தப்பித்து ஓடுவான்? அவன் விஷயத்தில் அனுபவிப்பும் இல்லை, தவிர்த்துத் தப்பித்தலும் இல்லை; என்ன நடந்தாலும் அதைப் பார்க்க மட்டுமே செய்கின்ற நிலை இப்போது. இனி சாட்சி மனப்பான்மை அடிப்படையில் வாழ்க்கை நடத்த வேண்டும். அப்படியா, சரிதான்; இப்படியா சரிதான்; அரண்மனையா, சரிதான்; குடிசையா, சரிதான்; ஏதோ இன்னும் உள்ளதா, சரிதான்; எதுவுமே இல்லையா அதுவும் சரிதான். எல்லாமே சரிதான்.

பற்றற்றவனின் மனநிலை போகத்தையும் தியாகத்தையும் கடந்து நிற்கின்ற நிலையாகும். ஏனெனில் போகம் எப்படி ஒருவகைக் கனவோ தியாகமும் அத்தகைய கனவுதான். இரண்டிலிருந்தும் விழிப்புப் பெற்றவனே சாட்சி எனப்படுகிறான்.

ஆனால் நமது சிந்தனைக்குச் சில வழிமுறைகள் பழக்கமாகி விட்டன. நாம் ஏற்கெனவே வரையறுக்கப்பட்டுவிட்ட எல்லைகளுக்கு உட்பட்டே சிந்திக்கிறோம். நாம் வாழ்க்கை முழுவதும் பணத்திற்கு அதிக மதிப்புக் கொடுக்கிறோம். பிறகு சட்டென்று ஒருநாள் நாம் பணத்திற்கு அவ்வளவு முக்கியத்துவம் தரலாகாது என்பதை உணர்கிறோம். ஆனால் இதை அறிவதால் நமது வாழ்க்கைப் போக்கு வேறு வகையில் மாறிவிடாது. நாம் எதிர்மறையான (நெகடிவ்) முறையில் பணத்திற்கு மதிப்புக் கொடுக்கத் தொடங்குகிறோம். 'பணம் அர்த்தமற்றது – அர்த்தம் அனர்த்தம் – அதைக் கண்ணெடுத்தும் பார்க்கமாட்டோம். என்கிறோம். இப்போதும் பழைய பழக்கமே நீடிக்கிறது. ஏனெனில் நாம் பணத்தை மறக்கவில்லை என்பது தெளிவு.

முல்லா நஸ்ருத்தீன் பற்றிய கதை ஒன்று. அவர் ஒருசமயம் நாத்திகராகிவிட்டார். முஸ்லீம்கள் நாத்திகராவது வழக்கமில்லை. அதற்கு அபாரத் துணிச்சல் வேண்டும். ஒரு நண்பர் கேட்டார்: "முல்லா அவர்களே, நீங்கள் நாத்திகராகிவிட்டீர்கள் என்று கேள்விப்பட்டேன். நல்லது. வாழ்க்கையில் உருப்படியாக ஏதோ ஒன்றாக ஆனீர்களே, அதுவே பெரிய விஷயம்தான். சரி, இப்போது உங்கள் புதிய கொள்கை என்ன?"

முல்லா தெரிவித்தார்: "என் கொள்கை மிகவும் தெளிவானது. அதை நான் ஒரு பலகையில் எழுதி என் வீட்டுச் சுவரில் தொங்கவிட்டுள்ளேன். அது என்னவென்றால், ஆண்டவர் யாரும் கிடையாது. ஆனால் முகம்மது நபி நாயகம் அவர்கள் இறைத் தூதர்தான் என்பதில் சந்தேகமில்லை."

எவ்வளவு விசித்திரம்! இறைவன் கிடையாதாம், ஆனால். இறைத் தூதர் உண்டாம்! பழைய நம்பிக்கைப்படி அல்லா ஒருவரே ஆண்டவர். முகமது நபிகள் ஒருவரே இறைத் தூதர். ஆனால் முல்லா நாத்திகரானதும் பாதிக் கொள்கை மாறியது. கடவுள் கிடையாது என்று சொல்லும் அளவிற்கு தைரியம் திரட்ட முடிந்தது. ஆனால் பழக்கம் காரணமாக இறைத் தூதரை மறுக்க முடியவில்லை.

நம்முடைய பழக்கங்கள் இப்படித்தான் செயல்படுகின்றன. அவை வலுவானவை, நுட்பமானவை.

ஒருமுறை முல்லா நஸ்ருத்தீனை அவருடைய நண்பர் ஒருவர் ஒரு ஹோட்டலில் சந்தித்தார். அவர் சொன்னார். "அன்பரே, வாருங்கள். ஆளுக்கொரு பெக் மது அருந்தலாம். இங்கு சரக்கு நன்றாக இருக்கும்."

முல்லா மறுத்தார். "வேண்டாம் நண்பரே. உபசரிப்பிற்கு மிகுந்த நன்றி. நான் குடிக்க விரும்பவில்லை. அதற்கு மூன்று காரணங்கள் உள்ளன. முதலாவதாக, நமது மதத்தில் குடிப்பழக்கம் தடைசெய்யப் பட்டிருக்கிறது. இரண்டாவதாக, என் மனைவி இறக்கும் சமயத்தில் நான் இனிமேல் மது அருந்தமாட்டேன் என்று அவளுக்கு சத்தியம் செய்து கொடுத்துள்ளேன். மூன்றாவது காரணம் என்னவென்றால், நான் சற்று நேரம் முன்புதான் வீட்டில் குடித்துவிட்டு இங்கு வந்திருக் கிறேன்," என்றார்.

மனிதன் முன்பின் யோசியாமல் சபதங்கள் செய்துவிடுகிறான்; விரதங்கள் கடைப்பிடிக்கிறான். தியாகம் செய்கிறான். ஒழுக்கமாக வாழ உறுதி மேற்கொள்கிறான். இதனாலெல்லாம் என்ன பயன்? அவன் சிந்திக்கும் விதம் மாறவில்லையே. அவனது சிந்தனையின் அடிப்படை மாறவில்லையே. அவன் பழைய வார்ப்பிலேயே புதிய காசுகளைச் செதுக்க ஆரம்பிக்கிறான். ஆனால் அந்தப் புதிய காசுகளின் மீது பதிந்திருப்பது பழைய முத்திரைதான். அதை முதலில் வெளியிட்டவரின் பெயரேதான் இன்னமும் உள்ளது.

இப்படி நீ தொட்டும் தொடாமலும், பட்டும் படாமலும் மாற முயலுவதில் ஈடுபட்டால் ஒரு காலும் மாறமாட்டாய். நீ மாறுவதாகச் சொல்வது ஏமாற்றுவேலை. மாறுதல் என்பது வேரிலிருந்து தொடங்கி ஏற்படும் நிகழ்ச்சியாகும். மாறுதல் என்பது ஒரு பெரும் புரட்சி. அது ஒரு சூறாவளி. அது நிகழும்போது உன்னுடைய சகலமும் வேரோடு பிடுங்கப்படும். அப்போது உனது பார்க்கும், நினைக்கும், சிந்திக்கும் செயற்பாடுகள் நிகழாது ஒழிகின்றன. புதுமை பிறக்கிறது. கடந்த காலத்துடன் உனக்கிருந்த தொடர்புகள் அனைத்தும் முறிந்து விழுகின்றன. அந்தப் புரட்சி நிகழ்ந்தபின் கடந்த காலத்திலிருந்து எதையும் நீ கொண்டுவர முடியாது.

பணத்தில் சுவையான ஈர்ப்பு இருக்கிறது. கையால் பணத்தைத் தொடாமலிருந்து நீ தியாகி என்று பெயர் பெறலாம். ஆனால்

மனத்தளவில் உனக்குப் பணத்தில் ஈர்ப்பு நீடிக்கிறது. நீ மக்களுக்கு உபதேசம் செய்கிறாய். பெண் – பொன் ஆகிய இரண்டின் கவர்ச்சியிலிருந்தும் தப்பித்துச் செல்லுமாறு எச்சரிக்கிறாய். இரண்டும் பெரும் அபாயம் என்கிறாய். அப்படியும் நீ விவாதிப்பது பெண் = பொன் சம்பந்தமாகத்தானே. உன் நினைவுகள் எங்கோ அங்குதானே நீயும் இருப்பாய்.

சாஸ்திரங்களை ஆராய்ந்து பார்க்கையில் சில சமயம் மிகவும் திகைப்பாக இருக்கிறது. முனிவர்கள் இடைவிடாமல் பெண்– பொன் பற்றியே பேசியிருக்கிறார்கள். பெண் – பொன்னிடமிருந்து தப்பித்து இரு என்று அவர்கள் தங்கள் மனத்திற்கு அறிவுறுத்துவது சொந்த விஷயம், தனிப்பட்ட விஷயம். அவர்களே முதலில் பயப்பட்டிருக் கிறார்கள். இந்நிலையில் மற்றவர்களுக்கு உபதேசம் செய்வதுபோல் தங்களுக்குத்தான் அறிவுரை கூறியிருக்கிறார்கள். இது அப்படியென்ன பெரிய விஷயம்? மக்கள் அறிந்துகொள்வதற்காக ஒன்றிரண்டு முறை சொல்லலாம். ஆனால் பெண் – பொன்னிடமிருந்து தப்பி ஓடு என்று இருபத்து நான்கு மணி நேரமும் அல்லவா ஓலமிடுகிறார்கள். ஆகவே அவர்களது ஆழ்மனத்தில் 'பெண் – பொன்' விஷயம்தான் துடிப்பாக இயங்குகிறது என்பதுபோல் ஆகிறது. தாங்கள் பெண் – பொன் வலையில் சிக்கிக்கொள்ளக் கூடும் என்று அவர்கள் பயப்படுவது நிரூபணமாகிறது. பிறருக்கு இந்த எச்சரிக்கையை அடிக்கடி சொல்வது தங்களுக்கே சுய எச்சரிக்கை, சுய வசியம், செய்துகொள்ளுவது போலுள்ளது.

பிரான்ஸ் நாட்டில் இமாயில் குயே என்றோர் அறிதுயில் (ஹிப்னாடிசம்) நிபுணர் இருந்தார். அவர் தன் மாணவர்களிடம் சொன்னார்: ஒரு விஷயத்தை தினமும் காலை – மாலை கூறிவந்தால் – உதாரணமாக, 'நான் நலமாக உள்ளேன்' என்று அடிக்கடி கூறினால் – அவ்வாறே நிகழும்.

பெண் – பொன் பற்றி மீண்டும் – மீண்டும் கூறுபவர்கள் இமாயில் குயே கூறிய கொள்கையை நிரூபிக்கிறார்கள். பெண்ணும் பாவம், பொன்னும் பாவம் என்று அதையே நினைப்பதால் அதில் உனக்குச் சுவை உண்டாகிவிடுகிறது. சில விஷயங்களை பாவமாகக் கருதாவிடில் அவற்றில் சுவையும் இருப்பதில்லை என்பது உண்மை.

பாவத்திற்கு அப்படி ஒரு தனிச்சுவை. பாவம் கவர்ச்சிகரமாக இருக்கும் என்றுகூடச் சொல்லலாம். ஒருவனிடம் குறிப்பிட்ட ஓர் இடத்திற்குப் போகாதே என்று சொல்லிப் பாருங்கள். மற்ற இடங்களையும் விட்டுவிட்டு அவன் தடை செய்யப்பட்ட இடத்திற்குப் போவதிலேயே கருத்தாக இருப்பான். அங்குதான் அவனுக்கு சுவாரசியமாக இருக்கிறது.

**கி**றிஸ்தவ புராணப்படி ஆதம் – ஏவாளை பரமபிதா தோற்றுவித்தார். அவர்கள் அங்கிருந்த தோட்டத்திலுள்ள எல்லா வகையும் பழங்களையும் சாப்பிடலாம் என்றார். ஆனால் தோட்ட மையத்தில் வளர்ந்து நிற்கின்ற ஞானமரத்தின் பழத்தை மட்டும் உண்ண வேண்டாம் என்று எச்சரித்தார். இதனால் தான் பிரச்சினை உண்டானது. அந்த பிரச்சினையைக் கடவுள்தான் உண்டாக்கினார். என்பது வியப்பானது. ஒருவேளை வேண்டுமென்றேவா அப்படிச் செய்தார்?

மிகவும் விசாலமான எங்கும் பரந்துவிரிந்த தோட்டக் காடு. கடவுள் ஆதம் – ஏவாளைப் படைத்தபின், எச்சரிக்கை எதுவும் செய்யாமல், அவர்கள் இஷ்டப்படி வாழவிட்டிருந்தால், அவர்களால் குறிப்பாக அந்த மரத்தையோ அல்லது அது ஞானமரம் என்பதையோ ஒருபோதும் கண்டுபிடித்திருக்க முடியாது. ஆனால் கடவுள் மரம் இருக்கும் இடத்தைச் சொல்லிவிட்டாரே. அதன் பழத்தைச் சாப்பிடாதீர் என்று அறிவித்துவிட்டாரே. இந்தத் தடை உத்தரவே ஆதம் – ஏவாளின் ஆர்வத்தைத் தூண்டிவிட்டது. அவர்களைப் பொறுத்த வரையிலும், மீதித் தோட்டமெல்லாம் வீணாகத் தோன்றியது. கடவுள் தடைசெய்த மரத்தின் பழத்தை எப்பொழுது, எப்படிப் பறிப்பது என்பதிலேயே அவர்களது சிந்தனை சென்றது. இதில் ஏதோ ரகசியம் இருக்கிறது என்று அவர்களுக்குக் குறுகுறுப்பு ஏற்பட்டது. இதனால்தான் சைத்தான், பாம்பு வடிவில் வந்து அவர்களுக்குத் தவறான வழிகாட்ட முடிந்தது.

அது சொன்னது: “ஏ முட்டாள்களே! கடவுள் இந்தப் பழத்தைத்தான் சாப்பிடுகிறார் தெரியுமா? நீங்கள் இதைச் சாப்பிட்டால் நீங்களும் அவருக்கு சமமாகக் கடவுள்போல் ஆகிவிடுவீர்கள் என்ற பொறாமையால்தான் தடைபோட்டுள்ளார்.” இந்தப் பழத்திற்குப்

பதிலாகக் கடவுள், ஆதம் – ஏவாளிடம் "மற்ற எல்லாவற்றையும் சாப்பிடுங்கள். பாம்பை மட்டும் தொடாதீர்கள்," என்று தடை விதித்திருந்தால், அவர்கள் முதல் வேலையாகப் பாம்பைத்தான் பிடித்துச் சாப்பிட்டிருப்பார்கள்.

தடை, அழைப்பாகிவிடுகிறது! ஒரு காரியத்தை 'வேண்டாம், செய்யாதே' என்று சொன்னால், 'இதில் ஏதோ விஷயமுள்ளது, செய்து பார்ப்போம்' என்று துடிப்பு ஏற்படுகிறது. மகான்கள் பெண்ணையும் பொன்னையும் பாவ விஷயங்கள் என்று இடைவிடாமல் கூறி, அவற்றிலிருந்து தப்பித்து ஓடச்சொல்கிறார்கள். இதைக் கேட்பவர்கள் நடுங்கி ஓடுவதற்குப் பதிலாக, 'இதில் ஏதோ ரகசியம் இருப்பதால்தான் மகான்கள் இந்த அளவிற்கு அலட்டிக்கொள்கிறார்கள்' என்று நினைத்துவிடுகிறார்கள்.

என் கண்ணோட்டத்தில், பணமும் காமமும் பழிக்கப்படுவது, நிந்திக்கப்படுவது, நிறுத்தப்பட்டுவிட்டால், அவை இரண்டிற்கும் தற்பொழுதுள்ள செல்வாக்கு பூஜ்ஜியமாகிவிடும். அவற்றிற்கு ஒரு மதிப்பும் மிஞ்சியிருக்காது. இவற்றைத் திரட்டுவதிலும் சாரமில்லை; உதறித் தள்ளுவதிலும் சாரமில்லை.

கொஞ்சம் யோசனைசெய். எந்தப் பொருளைச் சேகரிப்பதால் பயன் எதுவும் கிடைப்பதில்லையோ, அப்பொருளைக் கைவிடுவதால் மட்டும் எப்படிப் பயன் கிடைக்கும்? சேகரிப்பதால் உலகளவில் லாபம் இல்லை எனக் கருதினால், அதைக் கைவிடுவதால் கடவுள் கிடைத்துவிடுவாரா? இவ்வாறு தியாகி என்பவன் போகியைவிட அதிகக் குழப்பத்துடன் உள்ளான். போகி சொல்வது – நாம் பணம் சேர்த்தால் உலகம் நம் வசமாகிவிடும். தற்பொழுதுள்ள உலக சூழ்நிலையில் கடவுள் உள்பட எல்லாமே பணத்தால் கிடைத்துவிடும் என்ற பிரமை பரவியுள்ளது. தியாகி இதைவிடப் பெரிய பிரமையில் ஆழ்ந்துள்ளான். அவன் கூறுவது – பண ஆசையைக் கைவிடுவோமானால் நமக்கு பரமாத்மா கிடைத்துவிடுவார்.

ஜனகர் எதையும் துறக்கவில்லை. ஆனாலும் அவர் மகாதியாகி என்ற நிலைக்கு உயர்ந்தார். இது ஒரு புரட்சி. இதைத்தான் இரண்டாவது சூத்திரம் தெரிவிக்கிறது. 'துன்பத்திற்கு மூலகாரணம் இருமை நோக்கு – இரட்டைப் பார்வை. இதற்கு மருந்தில்லை. இந்தக் காட்சிகள்

எல்லாம் பொய். நான் பிளவுபடாதவன், பரிசுத்தமானவன்' ஞானத்தின் சாரமானவன்.' இந்த சூத்திரம் புரட்சிகரமானது.

பொருட்களை இருவகையாகப் பிரித்துப் பார்த்தல் துன்பத்தின் மூல காரணம் ஆகும். நான் படைப்பிலிருந்து தனிப்பட்டவன் என்று எண்ணுவதும் துன்பத்தின் மூல்காரணம். அவ்வாறு நீ பிரிந்து தனிப்பட்டவன் இல்லை என்பதை ஒப்புக்கொண்டு அறிந்து கொண்டால், துன்பமெல்லாம் கரைந்துவிடும்.

அகங்காரம் (மிகையான தன்னுணர்வு) துன்பம் தரும். இந்த உணர்வு ஒருவனைப் பின்வருமாறு சிந்திக்க வைக்கிறது. 'நான் தனிச்சிறப்புள்ளவன், வித்தியாசமானவன். இந்த உலகத்தையே எதிர்த்துக்கூட நான் போராடுவேன். இதில் வெற்றிபெறும் பொறுப்பு என்னுடையது. இந்த உலகிலுள்ள எல்லோரும் என் எதிரிகள். பொறாமையால் என்னை அழிப்பதில் ஈடுபட்டுள்ளனர்.'

இப்படியெல்லாம் நினைப்பவன் மேன்மேலும் துன்பத்தில் மூழ்கிக்கொண்டே செல்வான். ஏனெனில் அவன் யாருடன் மோதுகிறானோ அவனிடமிருந்து பிரிந்திருக்கவில்லை. அவன் நிலை கடலின் ஓர் அலை முழுக்கடலுடன் போராடுவது போன்றதாகும். அந்த அலை சீக்கிரமே காணாமல் போய்விடும். மிதந்து கரை சேராது. அத்தகையவனை சீக்கிரமே நீ மனநோய் மருத்துவமனையில் சிகிச்சை பெற்றுக்கொண்டு கைதிபோல் இருப்பதைக் காண்பாய். அலை, கடலோடு மோதிச் சிதறுவதைப்போல இவனது மனமும் சிதறிக்கிடக்கும்.

அலை எப்படிக் கடலுடன் சண்டைபோட முடியும்? அலை என்பதும் கடல்தானே. கடல்தான் அலையாக அசைகிறது. நாம் அந்த அருவத்தின் (இறை சக்தியின்) உருவங்கள். நாம் அந்த ஒன்றின் வெவ்வேறான தோற்றங்கள். நாம் அந்த எல்லையற்ற பொருளின் அலைகள், நீர் எழுச்சிகள், நம்மில் அதுவே அலையாக வீசுகிறது. அதன் ஓசையே உனக்குள் கேட்கிறது. அதுவே எனக்குள்ளும் ஒலிக்கிறது. அதுவே உன் கண்களால் காண்கிறது; உன் செவிகளில் கேட்கிறது. அதுவே இங்கு அமர்ந்துள்ளது. அதுவே வெளியே மழையாகப் பொழிகிறது; மரங்களில் பசுமையாகக் காணப்படுகிறது. அது ஒரே ஒன்றாக உள்ளது.

'ஒன்றை இரண்டெனக் கருதுபவன் பிரமை வசப்பட்ட வனாவான் என்றும், அவன் துக்கத்தில் மூழ்குவான்' என்றும் ஜனகர் கூறுகிறார். ஏனெனில் இரட்டை அல்லது இருமை என்றதுமே இரண்டிற்குமிடையே வன்முறை தொடங்குகிறது; போராட்டம் மூளுகிறது. இருமை மனப்பான்மை உள்ள இடத்தில் அமைதி ஏற்படாது.

ஆனால் 'இரண்டில்லை, ஒன்றே' என்று கருதுபவன் யாருடன் சண்டை போடுவான்? உன்னிடமுள்ள 'அது' உன் பகைவனிடத்திலும் உள்ளது. உன் வீட்டு வாசற்படியில் மரணம் வந்து நிற்கையில் 'அது'வும் சேர்ந்துவரும். அதைத் தவிர வேறு எதுவும் கிடையாது. உன்னைப் பீடித்த நோயிலும் அதுவே இருக்கிறது. உன் ஆரோக்கியத்திலும் அது உள்ளது. உன் இளமையிலும் முதுமையிலும், உன் வெற்றியிலும் தோல்வியிலும் அதுவும் பங்கு பெறுகிறது. உன் வாழ்க்கையில் வேறு – வேறு வடிவங்களில் அதுவே வருகிறது. ஆம், அது மட்டுமே வருகிறது. வேறு யாரும் வருவதில்லை. இப்படி அது வாழ்க்கையில் வியாபித்திருப்பதை அறிந்தவனுக்குப் பிறகு துன்பம் எப்படி ஏற்படும்?

**த்வைத மூலமஹோ துக்கம் நான்யத்தஸ்யாஸ்தி பேஷஜம் |**
**த்ருஷ்யமேதன்ம்ருஷா ஸர்வம் ஏகோஅஹம் சித்ரஸோ அமல: ||**

துன்பத்தின் காரணம் இருமை நோக்கு. அதற்கு மருந்து எதுவும் கிடையாது.

அமெரிக்காவில் ஒரு பெரும் சிந்தனையாளர். பெயர் ஃப்ராங்லின் ஜோன்ஸ். அவரது ஒரு நூலின் பெயர் 'நோ ரெமடி' (மருந்தேதும் கிடையாது). இந்த வாசகத்தின் விளக்கமே ஒரு முழு நூலாக அமைந்துவிட்டது. ஜோன்ஸுக்கு ஜனகர் மேலே கூறிய 'தஸ்ய பேஷஜம் அன்யத் அஸ்தி (ஆம், வேறு மருந்தில்லை) என்ற சூத்திரம் தெரிந்திருக்க வாய்ப்பில்லை.

மருந்து கிடையாது என்று கேட்டு நீ திடுக்கிடுவாய், பயந்தும் போவாய். ஏனெனில் நீ ஒரு நோயாளி. சரியான மருந்து தேடி அலைகிறாய். நீ சிக்கலில் உள்ளாய். அதிலிருந்து வெளியேற விரும்புகிறாய். உனக்கு ஏற்பட்டுள்ள சங்கடத்திற்குத் தீர்வு தேடுகிறாய்.

பிரச்சினைகளுக்கு சமாதானம் காண முயலுகிறாய். ஆகவே நீ என்னிடம் வந்துள்ளாய். நீ இதைப் புரிந்துகொண்டால் மருந்து கிடைத்துவிட்ட மாதிரிதான். அதாவது, மருந்து எதுவும் இல்லை என்பது புரிந்துபோனால் மருந்து கிடைத்துவிட்டது என்று பொருள்.

ஜனகர் நோயைக்கூட பொய் என்கிறார். பொய்யான நோய்க்கு மருந்து எப்படி இருக்க முடியும்? இல்லாத நோய்க்கு வைத்தியம் பார்த்தால் நிலைமை முன்பைவிட அல்லவா மோசமாகிவிடும்? ஆகவே உண்மையிலேயே நோயா, இல்லையா என்பதை முதலிலேயே சரியாகத் தீர்மானித்துக்கொள்ள வேண்டும்.

ஒரு மனிதன் பெருங்குழப்பத்தில் இருந்தான். காரணம், அவனுக்கு ஒரு பிரமை தோன்றிவிட்டது. அவனுக்கு ஒரு கெட்ட பழக்கம். சிறுவயதிலிருந்தே அவன் வாயைத் திறந்தபடியே தூங்குவான். ஒரு நாள் இரவு அவன் ஒரு கனவு கண்டான். வாயைத் திறந்தபடியே தூங்குவதுபோல் கனவு! அப்போது ஒரு பாம்பு அவன் வாய்க்குள் புகுந்துவிட்டது. பயத்தில் அவனது தூக்கம் கலைந்து விட்டது. ஆனாலும் அந்தக் கனவு வலுவான தாக்கம் கொண்டிருந்தது. ஆகவே அவன் விழிக்கும்போது முடிவாகப் பாம்பின் வால் வாயினுள் நுழைவதுபோல் உணர்ந்தான். பயத்தால் அவன் வீறிட்டான். அதற்குள் பாம்பு தொண்டைக்குள் இறங்கிவிட்டதாகத் தோன்றியது. அவனுக்குப் பெரிய அளவில் சிகிச்சை நடந்தது. எக்ஸ்—ரே எடுத்தார்கள். அதில் பாம்பு தெரியாததால் டாக்டர் அது அவன் உடம்புக்குள் நுழைய வில்லை என்று தெரிவித்தார்.

அவன் டாக்டரிடம், "ஐயா, உங்கள் கருத்தை ஒப்புக்கொள்ள மாட்டேன். எனக்குத்தானே என் நிலைமை தெரியும். பாம்பு என் வயிற்றுக்குள்தான் உள்ளது. அது அசைகிறது," என்றான்.

இந்த மனிதனைப் பற்றி நீ சற்றுச் சிந்தித்துப் பார். நீயும் அவனைப்போலவே பிரமைகொண்டால் உன் உடலுக்குள் பாம்பு அசைவதை உணர்வாய். எண்ணங்களுக்கு வலு அதிகம், கற்பனை சக்தி அதிகம். அந்த மனிதனின் கற்பனை வலுப்பெற்றுவிட்டது. அவனால் உட்கார முடியவில்லை. வயிற்றை வலித்தது. வயிற்றுக்கு இந்தப் பக்கமும் அந்தப் பக்கமும் ஏதோ ஊர்வதுபோல் இருந்தது.

அவனது வாழ்க்கையில் அமைதி குலைந்தது. அவனால் நிம்மதியாகத் தூங்க முடியவில்லை. தன்னுடைய வழக்கமான வேலைகளைக் கவனிக்க முடியவில்லை. டாக்டர்களோ, "உன் உடலுக்குள் பாம்பு இருந்தால் நாங்கள் அறுவை சிகிச்சை செய்யலாம். ஆனால் அப்படி ஒன்றும் காணப்படவில்லையே," என்றனர்.

தற்செயலாக அவன் மனவசிய மருத்துவர் (ஹிப்னாடிஸ்ட்) ஒருவரிடம் சென்றான். எதிர்மறையாகப் பேசினால் அவனது பிரமை உறுதிப்படுவதை அந்த மருத்துவர் புரிந்துகொண்டார். அவன் வழியிலேயே போய் குணப்படுத்த நினைத்து அவர், "ஆமாம், பாம்பு இருக்கிறது. யார் சொன்னது இல்லையென்று? இல்லையென்று தவறுதலாகச் சொல்லியிருக்கிறார்கள். எக்ஸ்–ரேயும் தப்பு. உள்ளே பாம்பு இருப்பது அதில் விழவில்லை. எக்ஸ்–ரே எடுத்தபோது பாம்பு நகர்ந்திருக்கும்," என்று இதமாகப் பேசினார்.

அவர் கூறியதைக் கேட்டதுமே அந்த மனிதன் ஆறுதலடைந் தான். தனக்குக் குருவாக அவர் கிடைத்துவிட்டார் என்றான். மேலும் கெஞ்சினான், "ஐயா, நான் உங்களைத்தான் தேடிக்கொண்டிருந்தேன். நான் சொல்வதை மற்றவர்கள் நம்ப மறுக்கிறார்கள். நான் உள்ளுக் குள்ளேயே செத்துக்கொண்டிருக்கிறேன்."

பாம்பு விஷயம் பொய்யாக இருக்கலாம். ஆனால் அவனது கஷ்டம் உண்மையானதுதான். இதை நாம் கொஞ்சமாவது புரிந்துகொள்ள வேண்டும். பாம்பு பொய்யோ, மெய்யோ, அதனால் என்ன வித்தியாசம் வந்துவிடப்போகிறது? அவன் படும் துன்பம் உண்மையானது. அவன் மெலிந்து போனான். இளைத்து எலும்புக் கூடாகிவிட்டான். அவனுக்கிருந்த ஒரே பயம், ஒரே தவிப்பு, இந்தப் பாம்பு கஷ்டத்திலிருந்து எப்படி விடுதலை கிடைக்கும். என்பதே. இதனால் அவனது வாழ்க்கையே தாறுமாறாகச் சீர்குலைந்திருந்தது.

"உன்னை நான் குணப்படுத்திவிடுகிறேன்," என்று மனவசிய மருத்துவர் உறுதியளித்தார். அவர் அவனது வீட்டுக் கழிவறையில் ஒரு பாம்பை வைக்க ஏற்பாடு செய்தார். அந்த மனிதன் காலையில் அந்த அறைக்குள் செல்லும்போது, அங்கிருந்து பாம்பு ஓடி வெளியே வரும்படி செய்யுமாறு உறவினர்களை தயார்செய்து வைத்திருந்தார். "மற்றதை நான் பார்த்துக்கொள்கிறேன்." என்றார்.

மறுநாள் அந்த மனிதன் கழிவறைக்குள் சென்று உபயோகிக்கும் போது குழியின் உள்ளேயிருந்து பாம்பு ஊர்ந்து வெளியேறுவதைப் பார்த்தான். மகிழ்ச்சியோடு வெளியே ஓடிவந்தான். டாக்டர்களிடம் போனான். எக்ஸ்–ரே எடுக்கச் சொன்னான். அதைப் பார்த்தபின் பாம்பு வெளியேறிவிட்டதை ஒப்புக்கொண்டான். அன்றே அவன் குணமடைந்துவிட்டான்.

'மருந்து ஏதும் இல்லை' என்றால் நோய் போலியானது என்று அர்த்தம். இந்தப் பொய்யான நோயை பொய்யென அறிந்தால்தான் அதிலிருந்து தப்ப முடியும். உண்மையான நோயாக இருந்தால் மருத்துவம் பார்க்கலாம். நீ கடவுளிடமிருந்து தூர விலகியிருப்பவனாக இருந்தால் அவரைச் சென்றடைய ஏதேனும் ஏற்பாடு செய்யலாம். உண்மையில் நீ தூர விலகியிருக்கவில்லையே. விலகியிருப்பதாக நீதான் எண்ணிக்கொண்டிருக்கிறாய்.

நீ ஆத்மாவுடனான உறவைக் கைவிட்டிருந்தால், அப்படி நினைத்திருந்தால், அதனுடன் உன்னை மீண்டும் சேர்க்க வழி அமைக்கலாம். பாலம் கட்டலாம். அறிவியல் மூலம் உபாயம் தேடலாம். ஆனால் நீ ஒருபோதும் ஆத்மாவிலிருந்து பிரிய வில்லையே, இணைந்துதானே இருக்கிறாய்.

மீன் கடலைவிட்டு வெளிய வந்து கிடந்தால் நாம் அதை எடுத்து மீண்டும் கடலில் போட்டுவிட முடியும். ஆனால் அந்த மீன் கடலில்தான் உள்ளது. அதே சமயம் அது அலறுகிறது, கூக்குரலிடுகிறது, தவியாய்த் தவிக்கிறது. "என்னை மறுபடியும் கடலில் சேர்ப்பித்து விடுங்கள்," என்று கெஞ்சுகிறது. "நான் மணலில் கிடந்து துடிக்கிறேன். எனக்கு உயிர் போய்விடும் போலிருக்கிறது," என்கிறது.

இந்த நிலையில் நீ என்ன செய்வாய்? ஒரு வழிதான் உள்ளது. நாம் அந்த மீனுக்கு விழிப்புணர்வு தர வேண்டும். நாம் மீனிடம், "நன்றாகப் பார். உன்னைச் சுற்றிலும் நாலா பக்கங்களிலும் கடல் இருப்பதைப் பார். நீ ஒரு காலத்திலும் கடலைவிட்டு வெளியேற வில்லை," என்று கூற வேண்டும்.

இந்த விஷயத்தை நீ புரிந்துகொண்டாயானால், பரமாத்மாவை அடைவதற்கு எத்தனை உபாயங்கள் கூறப்படுகின்றனவோ, அவை போலி நோயை நீக்குவதற்கான மருந்துகள் என அறிவாய். ஆகவே

நான் ஜனகர் கூறிய வரி மகா புரட்சிகரமானது என்கிறேன். அவ்வரி சொல்கிறது. நீ ஏற்கெனவே பரமாத்மாதான். புதிதாக ஆக வேண்டிய வனில்லை. நீ பரமாத்மா ஆவதற்கு உபாயம் செய்யவேண்டியதில்லை. எல்லா உபாயங்களும் வீண். எத்தனைக்கெத்தனை நீ உபாயம் செய்கிறாயோ, சடங்குகள் மேற்கொள்கிறாயோ. அந்த அளவிற்கு நீ வழிதெரியாமல் தடுமாறிக்கொண்டுதான் இருப்பாய். சடங்குகள் நம்மைக் கட்டிப்போடுகின்றன. ஜனகரின் சூத்திரத்தின் சரியான அர்த்தம் என்னவெனில், 'யோகத்தில் தடுமாறித் தத்தளிக்காதே. உபாயங்களில் சிக்கிக்கொள்ளாதே. உபாயங்கள் உன்னைத் தொலைவில் கொண்டுபோய்விடும். ஏனெனில் நீ யாரைத் தேடுகிறாயோ அவர் ஒருபோதும் தொலைந்துபோயிருக்கவில்லையே! இப்பொழுதேகூட இருக்கிறார். இங்கேயே இருக்கிறார். இக்கணமே நீ பரமாத்மாவாக இருக்கிறாய். சந்தேகமில்லாமல் நீ பரமாத்மாதான். ஏனெனில் பரமாத்மாவாக இருப்பது உனக்கு 'இயல்பானது.'

**வி**வேகானந்தர் ஒரு கதை சொல்லுவார் – ஒரு பெண் சிங்கம் கர்ப்பமாயிருந்தது. ஒரு முறை அது ஒரு குன்றின் மேலிருந்து இன்னொரு பாறைக்குத் தாவியது. அந்த அதிர்ச்சியில் சிங்கக்குட்டி கருப்பையிலிருந்து வெளியே விழுந்துவிட்டது. கர்ப்பச் சிதைவு என்று சொல்லலாம். தாய்ச் சிங்கம் தாவியபடியே எங்கோ போய்விட்டது. குன்றின் கீழ்ப்பகுதியில் ஆட்டு மந்தை ஒன்று சென்றுகொண்டிருந்தது. ஆடுகளின் நடுவில் சிங்கக்குட்டி விழுந்ததால் அது உயிர்பிழைத்து விட்டது. அது ஆடுகளின் நடுவிலேயே வளர்ந்து பெரிதானது. அது மற்ற ஆடுகளைப் போலவே தீனமாக இருந்தது. 'மே – மே' என்றே கத்தியது. காலைத் தரையில் தேய்த்துத் தேய்த்து நடந்தது. ஆட்டு நடை கற்றுக்கொண்டது.

குழந்தைப் பருவத்தில் யாரும் பிறரைப் பின்பற்றியே கற்றுக் கொள்கின்றனர். தன்னைச் சுற்றிலும் யார் உள்ளனரோ அவர்களிட மிருந்தே தனது வாழ்க்கையின் அர்த்தத்தைப் புரிந்துகொள்கின்றனர். மனிதக் குழந்தையும் வேறு எதுவும் செய்ய முடியாது. இதுவோ சிங்கத்தின் குட்டி. அது என்ன செய்யும்? அது தன்னை ஆடென்றே கருதி வந்தது. தன்னைத் தானே நேராகப் பார்த்துக் கொள்ளும் வழிமுறை ஏதும் அதற்குத் தெரியவில்லை. தனக்கு நாற்புறமும் உள்ளனவற்றைப் பார்த்து அது தானும் அவற்றில் ஒன்றென

அபிப்பிராயப்பட்டது. மற்ற ஆடுகளைப் போலவே அதுவும் எதற்கும் நடுங்கியது. மற்ற ஆடுகள் அதனுடன் சமரசமாகிவிட்டன. அவற்றின் நடுவேதானே அது வளர்ந்து பெரிதானது. ஆகவே ஆடுகள் அதைப்பற்றி விசேஷமாகக் கவலைப்படவில்லை. ஆடுகள் அதை ஒரு புதுவகை ஆடாகவே கருதிப் பழகின!

இப்படிப் பல ஆண்டுகள் சென்றன. அந்த சிங்கக்குட்டி வளர்ந்து ஆடுகளைவிட மிகப்பெரிதாக ஆகிவிட்டது. அதன் உடல் விசாலமாகி விட்டது. ஆனால் அது ஆடுகளுடன் சேர்ந்துதான் எங்கும் சென்றது. பயப்படும்படியான நிலைமை சிறிதளவு ஏற்பட்டாலும் ஆடுகள் சிதறி ஓடுவதுபோல் அதுவும் ஓடியது. அது ஒருபொழுதும் தன்னைச் சிங்கம் என்றே உணரவில்லை. அது தன் நிஜத் தன்மையை மறந்தே இருந்தது. தான் ஆடு இல்லை என்றறிய அதற்கு வழி எதுவும் கிடைக்கவில்லை.

ஒருநாள் ஒரு கிழட்டுச் சிங்கம் அந்த ஆட்டுமந்தையைய் பாய்ந்து தாக்கியது. அப்போது அது ஆட்டுமந்தையின் நடுவிலிருந்த இளஞ் சிங்கத்தைக் கண்டு ஆச்சரியப்பட்டது. அழகான, பலசாலியான அந்த இளஞ்சிங்கம் ஆடுகளுடன் சேர்ந்து பயந்து தாறுமாறாக ஓடுவதைக் கிழட்டுச் சிங்கத்தால் நம்ப முடியவில்லை. மற்ற ஆடுகள் இளஞ்சிங்கத்திடம் பயப்படவில்லை என்பதையும் அது கவனித்தது. கிழட்டுச் சிங்கத்தைப் பார்த்து எல்லா ஆடுகளும் ஓடின. தலைதெறிக்க ஓடின. கதறி ஓலமிட்டபடி ஓடின. கிழட்டு சிங்கத்திற்கு முதலில் பசியாக இருந்தது. பிறகு பசியை மறந்துவிட்டது. ஆட்டு மந்தையில் தான் கண்ட அதிசயம் அதற்குப் புரியவில்லை. இத்தகைய அதிசயத்தை அது இதுவரையிலும் கண்டதும் இல்லை, கேட்டதும் இல்லை. என்ன நடக்கிறது இங்கே?

கிழட்டுச் சிங்கம் ஆடுகளைப் புறக்கணித்தது. அது இளஞ்சிங்கத்தையே குறிவைத்துத் துரத்தியது. இளஞ்சிங்கம் தன்னை ஆடு என்றே நினைத்த போதிலும் அடிப்படையில் அது சிங்கம்தானே. சிங்கங்களுக்குரிய வேகத்தில் அது ஓடியது. இதுவோ கிழட்டுச் சிங்கம். கஷ்டப்பட்டுத்தான் இளஞ்சிங்கத்தைப் பிடிக்க முடிந்தது. பிடிக்கப்பட்டதும் இளஞ்சிங்கம் ஆடுபோல் முனகியது. மே மே என்று கத்தியது.

பெரிய சிங்கம் அதட்டியது, "டேய் பயலே, வாயை மூடு. எதற்கும் ஒரு எல்லை உண்டு. நீ என்ன காரியம் செய்து கொண்டிருக்கிறாய்? யாரை ஏமாற்றப் பார்க்கிறாய்?"

இளஞ்சிங்கம் காலைத் தேய்த்துக்கொண்டு தப்பித்து ஓட முயன்றது. "மகாராஜா, என்னை மன்னித்துவிடுங்கள். என்னைப் போகவிடுங்கள்," என்று கெஞ்சியது.

ஆனால் கிழட்டுச் சிங்கம் இசையவில்லை. அது இளஞ் சிங்கத்தைத் தரதரவென்று இழுத்துக்கொண்டு ஆற்றங்கரையை அடைந்தது. நதியின் தெளிவான நீரோட்டத்தைக் காண்பித்து, "அதில் முகத்தை எட்டிப் பார்," என்றது. இரண்டு சிங்கங்களுமே தண்ணீர் பரப்பில் முகத்தைக் காட்டின. இளஞ்சிங்கம், 'அடேடே! என் முகமும் இந்தக் கிழட்டுச் சிங்கத்தின் முகமும் முழுமையாக ஒரே மாதிரியாக அல்லவா இருக்கிறது' என்று நினைத்தது. உடனே அங்கு ஒரு புரட்சியே ஏற்பட்டது.

கர்ஜனை கிளம்பியது. உறுமல் வெளிப்பட்டது. அருகிலிருந்த குன்றுகள் அந்த கர்ஜனையால் அதிர்ந்தன. எதுவும் சொல்ல வேண்டிய அவசியம் ஏற்படவில்லை. கிழட்டுச் சிங்கமும் விளக்கம் தரவில்லை. அது சத்குருவின் ஸ்தானத்தில் இருந்தது. பேசவில்லை. சுட்டிக் காட்டியது. தரிசனம் செய்ய வைத்தது. இளஞ்சிங்கம் தண்ணீரில் உருவம் பார்த்து, தாங்கள் இருவரும் ஒரே இனம் என்பது புரிந்ததும் பழைய விஷயங்களை மறந்துவிட்டது. இத்தனை ஆண்டுகளாகத் தன்னை ஆடென்றே நினைத்த அதன் அபிப்பிராயம் ஒரு விநாடியில் சிதறிவிட்டது. எந்த அறிவிப்பும் செய்ய நேரிடவில்லை. தானாகவே அறிவிப்புக் கிளம்பியது – உறுமல் வடிவில், ஒரு புரட்சி தோன்றி விட்டது.

அஷ்டாவக்ரருக்கும் ஜனகருக்கும் இடையில் இப்படித்தான் நடந்தது. அஷ்டாவக்ரர் கிழட்டுச் சிங்கம். ஜனகர் இளஞ்சிங்கம். இவர் மாட்டிக்கொண்டார். அஷ்டாவக்ரருடன் சத்சங்கம் ஏற்பட்டு அவருக்குத் தன் சுயசொரூபம் தெரிந்தது. அஷ்டாவக்ரரின் அறிவிப்பால் அவருக்குத் தன் நிஜ சுபாவம் புரிந்தது.

ஒரு சிங்கம் ஆட்டு மந்தைக்குள் கலந்துபோய் தான் யாரென்பதை மறந்துவிட்டால், அதை மீண்டும் தான் சிங்கம் என்று

உணரவைக்க என்ன மருந்து உள்ளது? இதற்கு மருந்து ஒன்றும் கிடையாது – நோ ரெமடி! அதற்கு எத்தனை மருந்தூசி போட்டாலும் சரி, எத்தனை கால்நடை மருத்துவரிடம் இட்டுச் சென்று காண்பித்தாலும் சரி, மருந்துகள் குடிக்கவைத்தாலும் சரி இவற்றால் ஒரு பிரயோஜனமும் விளையாது. நீ கொடுக்கும் மருந்துகள், மருந்தூசிகள், கால்நடை மருத்துவர்கள் மூலம் பரிசோதனைகள் இவை எல்லாம் அந்த மிருகத்தை பலவீனமாக்கிவிடும்.

நீ கொடுக்கும் மருந்துகள் அதனுடைய பிரமையை அதிகரிக்கவே செய்யும். அது நினைக்கும்: 'நான் உண்மையில் ஆடுதான். என்னைச் சிங்கமாக மாற்ற இத்தனை உபாயங்கள் செய்கிறார்கள். ஆனாலும் ஒன்றும் பலிக்கவில்லை. அப்படியே தான் இருக்கிறேன். சிங்கமாக மாறவில்லை. நான் நிஜமாகவே சிங்கமாக இருந்தால் என்னை ஆடென்று நினைத்து என்னை மாற்ற முயற்சி செய்கிறார்கள். நிச்சயமாக நான் ஆடுதான். இந்த ஜனங்கள் தேவை யின்றி பலவந்தமாக என்னைச் சிங்கமாக ஆக்க முயலுகிறார்கள்."

நீ அதற்கு எப்படியாவது அறிவுரை கூறிச் சமாளித்து அதற்கு நம்பிக்கை உண்டாகச்செய். தினமும் காலையில் தியானத்தில் அமர்ந்து, 'அஹம்ப்ரஹ்மாஸ்மி' என்பதுபோல், 'நான் ஒரு சிங்கம், நான் ஒரு சிங்கம்' என்று ஜெபித்தால் நீ அப்படியே ஆவாய் என்று சொல். இமாயில் குயே தினமும் 'நான் குணமாகி வருகிறேன், அழகாகி வருகிறேன்' என்று ஜெபிக்கச் சொன்னாரல்லவா? அப்படி தன்னை ஆடென்று நினைக்கும் சிங்கம் பல ஆண்டுகள் 'நான் ஒரு சிங்கம்' என்று ஜெபித்தாலும் அந்த உணர்வு மேலோட்டமான எண்ணமாகத் தான் இருக்கும். அது சிங்கமாகாது.

ஆனால் கிழட்டுச் சிங்கம் வேறு வழியை, சரியான நடவடிக்கையை மேற்கொண்டது. அது இளஞ்சிங்கத்தை மந்திரம் ஏதும் ஜெபிக்கச் சொல்லவில்லை. தவம் செய்யுமாறு சொல்லவில்லை. தரதரவென்று இழுத்துக்கொண்டு போனது. ஒரு சூழ்நிலையை உருவாக்கியது. அதில் இளஞ்சிங்கத்திற்குத் தன் சுபாவம் பரிச்சயமானது.

சத்குருவின் சத்சங்கம் என்ன செய்கிறது? அது உன்னைக் குறிப்பிட்ட ஓரிடத்திற்கு, நிலைக்கு, இழுத்துச்செல்லும். அங்கு நீ

அவரது தோற்றத்தையும் உனது தோற்றத்தையும் ஒப்பிட்டுப் பார்க்க முடியும். அவரது அந்தராத்மாவுடன் உனது ஆழ்மனத்து உணர்வை ஒப்பிடலாம். உடனே, ஒரு விநாடியில், கர்ஜனை எழும்புகிறது.

சத்சங்கம் என்பது தனது ஆத்ம சொரூபத்தை உணர்ந்தவரின் அருகில் அமர்வது, நிற்பது போன்றவற்றைக் குறிப்பிடுகிறது. அவரது அருகிலேயே உட்கார்ந்து இருப்பது ஒருவகைத் தொற்றுபோன்ற பாதிப்பை உண்டாக்கலாம். அவரது முன்னிலையில், அவரது கண்ணொளியில், அவருடைய ஜாடை சங்கேதங்களால் உன்னுள்ளே உறங்கியபடியிருக்கும் சிம்மம் விழித்தெழலாம்.

மருந்து எதுவும் கிடையாது. உபாயம் எதுவும் கிடையாது. வழிமுறை எதுவும் கிடையாது – 'தஸ்ய பேஷஜம் அன்யத் அஸ்தி.'

மருந்து ஏதும் இல்லை. ஏனெனில் காண்பதெல்லாம் உண்மையல்ல. அந்தச் சிங்கம் ஆடுபோல் நடந்துகொண்டது பொய். அந்தச் சூழ்நிலை பொய். ஆடெனத் தன்னைக் கருதியது. ஆகவே எல்லாம் உண்மை எனத் தோன்றியது. தான் சிங்கமெனத் தெரிந்ததும் இதுவரையான சூழ்நிலை பொய்யாயிற்று. கனவுபோல் இருந்தது.

"நான் ஒரு அத்துவைத சுத்த சைதன்ய ரசத் துளி."

**'அஹோ த்வைதமூலம் யத் துக்கம்.'**

- எல்லா துன்பங்களும் இருமை உணர்விலிருந்து தோன்றுகின்றன.

**'தஸ்ய பேஷஜம் அன்யத் அஸ்தி'**

- இந்தத் துன்பத்திலிருந்து விடுபட மருந்து எதுவும் இல்லை.

**'ஸதத் ஸர்வம் த்ருஷ்யம் ம்ருஷா'**

- ஏனெனில் எல்லாம் பொய். எல்லாம் கனவு போன்றது.

**'அஹம் ஏக: அமல: சித்ரஸ:'**

- நான் ஒரு சுத்த சைதன்ய ரசத் துளி.

இந்த முழக்கம் உனக்குள்ளே எழும். இதை இரண்டாம் முறை வாய்விட்டுச் சொல்லவேண்டியதில்லை. புரிந்துகொள்ள மட்டுமே செய். கண்களைத் திறந்து பார்க்க மட்டும் செய். காதுகளைத் தீட்டிக் கேள்.

அஷ்டாவக்ரரின் கீதையில் கட்டளை விதி எதுவும் கிடையாது. அதுவே இதன் சிறப்பு. பரமாத்மாவரை எப்படிச் சென்றடைவது என்று

அதில் எந்த வழிமுறையும் தெரிவிக்கப்படவில்லை. நீ பரமாத்மாவை ஒருபோதும் இழந்து நிற்கவில்லை அவரைத் தேடுவதற்கு. நீ விழித்தால் போதும். கண்களைத் திற. உன் நிஜ சொரூபத்தை அடையாளம் காண்.

'நான் பரிசுத்தமான ஞானவான். அக்ஞானம் காரணமாக எனக்கொரு தனிப் பெயர் கற்பிதம் செய்யப்பட்டது. இவ்வாறு நான் தினமும் சிந்தனைசெய்து மாற்றமில்லாத பரம்பொருளில் ஊன்றி நிற்கிறேன்.'

உண்மை நிலை என்ன என்பது உனக்குத் தெரிய ஆரம்பித்த கணத்திலிருந்து நீ எதையும் கைவிடமாட்டாய். தியாகம் செய்வதற்கு உன்னிடம் எதுவும் மிஞ்சியிராது. கனவு முழுதும் கலைந்து போய்விடும். நீ ஓர் உன்னதமான எழுச்சி உணர்வினால் நிரம்பித் திகழ்வாய். இதெல்லாம் கனவு என்று நீ வலிந்து யோசித்து, தர்க்கம் செய்து, சிந்தனையில் ஆழ்ந்து முடிவுக்கு வந்திருந்தால் எந்தத் தீர்வும் கிடைக்காது. புத்தியின் முடிவாக இந்தக் கொள்கை இருக்கக் கூடாது. நீ சுயமாக வாழ்ந்துணர்ந்த அனுபவத்தின் விளைவாக இருக்க வேண்டும்.

**மு**ல்லா நஸ்ருத்தீனிடம் பக்கத்து வீட்டுக்காரி சொன்னாள், "என் கணவர் உருளைக் கிழங்கு வாங்கிவரப் போனார். போய் ஐந்து வருஷம் ஆகிவிட்டது. இன்றுவரை அவர் திரும்பிவரவில்லை. நான் என்ன செய்வது என்று சொல்லுங்கள்."

முல்லா ஆழ்ந்து யோசித்தார். தலையைத் தட்டிக்கொண்டார். விழிகளை மூடிச் சிந்தித்தார். தியானத்தில் ஆழ்ந்தார். பிறகு சொன்னார்: "அப்படியா விஷயம்? என் ஆலோசனையைப் பின்பற்றுங்கள். நீங்கள் முட்டைக்கோஸ் கறி சமைத்துவிடுங்கள். உருளைக் கிழங்கு வாங்கப் போன கணவர் திரும்பவில்லையா? அந்த விஷயத்தை விட்டுவிடுங்கள். முட்டைக்கோஸ் கறி செய்யுங்கள். அல்லது வேறு ஏதாவது கறி சமைத்துக்கொள்ளுங்கள்."

பெண்மணி ஒன்று கேட்கிறார் – முல்லா ஒன்று சொல்கிறார்.

நீ யாரிடமாவது சென்று, "நான் துன்பப்படுகிறேன். அதைப் போக்க என்ன செய்ய வேண்டும்?" என்று கேட்கிறாய். அஷ்டா

வக்ரரைத் தவிர மற்றவர்கள் கூறும் பதிலெல்லாம் 'முட்டைக்கோஸ் சமைத்துக்கொள்' என்ற பதில் போலவே அமைகின்றன. ஏதோ வாய்க்குவந்த உபாயத்தைச் சொல்லி, "இப்படிச் செய், எல்லாம் சரியாகிவிடும் என்று தட்டிக்கழித்து விடுகிறார்கள். இந்த உபாயத்தால் சந்தேகம் நீங்குவதில்லை. இதைப் புரிந்துகொள்ள முயலுங்கள்.

ஒரு மனிதன், கொடூரன். வன்முறை கெடுதலானது; வன்முறை பாபம் என்று அவன் கேள்விப்படுகிறான். அகிம்சையை, துன்புறுத்தாமையைக் கடைப்பிடிக்கும் எண்ணம் அவன் மனத்தில் உதிக்கிறது. வன்முறை பாபம் மட்டுமன்று, வன்முறையாளனுக்கும் அது துன்பம் தருகிறது. இன்னொருவரைத் துன்புறுத்த விரும்பு கிறவன் அதற்கு முன்பாகத் தன்னையே துன்புறுத்திக்கொள்கிறான். பிறரைத் துன்புறுத்துபவன் அந்தத் துன்பத்தைத் தந்த பிறகும்கூட தானும் துக்கத்தை அனுபவிக்கிறான். பிறத்தியாரைத் துன்புறுத்தலாம் ஆனால் நாம் வருந்தமாட்டோம் என்பது சாத்தியமில்லை. எதை நாம் பிறருக்குக் கொடுக்கிறோமோ அதை நாமும் நம் இதயத்தில் பராமரிக்க நேரிடும். பிறரை, கஷ்டப்படுத்தினால் அதன் பச்சாதாபத்தின், கழிவிரக்கத்தின் நிழல் போன்ற பாதிப்பு நம் இதயத்தைக் கீறும்.

ஆக அந்தக் கொடூரன் காலப்போக்கில் வன்முறை கெடுதலானது என உணர்கிறான். இனி என்ன செய்வது; எப்படி அகிம்சாவாதியாவது என்று அவன் கேட்கிறான். அவன் அகிம்சாவாதியாவதற்கான வழிமுறைகளைச் சொல்லித் தருகிறார்கள். அந்தக் கொடூரன் அந்த விதிகளைப் பின்பற்றவும் செய்கிறான். அப்படிப் பின்பற்றியும் அவனது இம்சைக் குணம் குறையவில்லை. அவன் அந்த விதிகளைக் கடைப்பிடித்து வேறுவிதமான கொடூரன் ஆகிறான். அதாவது, அவன் மற்றவர்களைத் துன்புறுத்துவதை நிறுத்திவிடுகிறான். ஆனால் தன்னை இம்சிக்கத் தொடங்கிவிடுகிறான். அவனது இம்சை குணம் எப்படி விலகும்? நேற்றுவரை அவன் மற்றவர்களைத் துன்புறுத்திவந்தான். இப்போது தன்னையே துன்புறுத்திக்கொள்கிறான்.

**கொ**டூரன் ஒருவன். கிணற்றின் அருகே நின்ற மனைவியை ஏதோ கோபத்தால் அவன் இடித்துத் தள்ளினான். அவள் கிணற்றில் விழுந்து செத்துப்போனாள். அவன் மிகவும் வருத்தப்பட்டான். வழக்கு

நடந்தது குற்றத்தை நிரூபிக்க முடியாததால் அவன் தண்டனையி லிருந்து தப்பிவிட்டான். ஆனால் உள்ளத்தில் குற்ற உணர்வு புயலாக வீசியது. இனி தாங்க முடியாது என்று அவனுக்குத் தோன்றியது. அந்த சமயம் கிராமத்திற்கு ஜைன (சமணத்) துறவி ஒருவர் விஜயம் செய்தார். கொடூரன் அவரிடம் சென்றான். "சுவாமி, தாங்கள் ஜைன மத சந்நியாசி. அகிம்சாவாதி. அகிம்சைக் கொள்கையை முதன்மையான அறமாக, தர்மமாக, கருதுபவர். நான் கொடூரன். எப்படியாவது இந்த சுபாவத்திலிருந்து என்னை விடுவியுங்கள்," என்று கெஞ்சினான்.

துறவி, "அதற்கு நீ துறவியாக தீட்சை பெற்றுக்கொள்," என்று ஆலோசனை கூறினார். "இன்றே, இப்பொழுதே தயாராக உள்ளேன்,"என்றான் அவன்.

கொடூரன், கோபக்காரன் இப்படித்தான் அவசரமாக முடிவெடுப்பான். யாரையாவது கொல்ல வேண்டுமா? உடனே செய்வான். தற்கொலை செய்துகொள்ள வேண்டுமா? உடனே செய்து கொண்டுவிடுவான். தடையே கிடையாது. அவ்வளவு தீவிரம் வன்முறையாளனிடம் இருக்கும்.

துறவி பாராட்டினார். "என்னிடம் ஆலோசனை கேட்டுப் பலர் வருகிறார்கள். ஆனால் உன்னைப்போல் சட்டென்று உறுதியான முடிவெடுப்பவன்...! உண்மையில் அது உறுதியான முடிவன்று. வன்முறையாளனின் குணமே அப்படித்தான். அவன் எதையும் சட்டென அவசரப்பட்டு செய்து முடித்துவிடுவான். பிறகு அதற்காக அவன் வாழ்க்கை முழுவதும் வருந்துவான் என்பது வேறு விஷயம். அவனது ஆவேச மயக்கம் வலுவானதாக இருப்பதால் விநாடியில் வேலையை முடித்து விடுவான்.

துறவி அவனிடம், "என்னைப்போல் சாமியாராகிவிடு," என்றார். "இதோ தயார்." என்றான் அவன். அவனுக்கு தீட்சை அளிப்பது பற்றித் துறவி யோசித்துக் கொண்டிருக்கையிலேயே அவன் தன் ஆடைகளை முழுமையாகக் களைந்துவிட்டு நிர்வாணமாக நின்றான்! துறவி அசந்துபோய், "நானும் எத்தனையோ பேரைப் பார்த்திருக்கிறேன். ஆனால் உன்னைப்போல் தீவிரம்! நீ பெரிய முனிவராக வருவாய். நீ செய்த புண்ணியங்களின் பலன்தான் இது" என்று புகழ்ந்தார்.

'அவன்' அவர் ஆனார். முனிவரானார். துறவி அவருக்கு சாந்திநாதர் என்று பெயர் சூட்டினார். இதுவரை கொடூரனின் மனத்திலிருந்த கொதிப்பு மறைந்துவிடும் என்ற நம்பிக்கையில்தான் சாந்திநாதர் என்று பெயர்வைத்தார். சாந்திநாதரின் புகழ் பரவியது. ஏனென்றால் அவர் எல்லாத் துறவிகளையும் எந்தப் போட்டியிலும் தோற்கடித்தார். மற்றவர்கள் இரண்டுநாள் உண்ணாவிரதம் இருந்தால் இவர் நாலு நாள் உண்ணாமலிருப்பார். மற்றவர்கள் நாலு மணி நேரமே தூங்கினால் இவர் இரண்டு மணி நேரமே தூங்கி அதுவே போதுமென நிரூபிப்பார். மற்றவர்கள் நிழலில் ஒடுங்கினால் இவர் அஞ்சாமல் வெயிலில் நின்று காண்பிப்பார். மேனாள் கொடூரன். வன்முறை உணர்வை முழுமையாகத் தன்னை நோக்கித் திருப்பிக்கொண்டு விட்டார். சிறிது சிறிதாக அவரது புகழ் வளர்ச்சிபெற்றது. தில்லியை வந்தடைந்தார். தொலைவிலிருந்தெல்லாம் மக்கள் அவரை தரிசிக்க வரத் தொடங்கினர்.

இவருடைய பழைய நண்பர் ஒருவர். கோபநாதராயிருந்தவர் சாந்திநாதராகி விட்டார் என்று நண்பர் கேள்விப்பட்டார். 'பெரிய புரட்சிதான் நிகழ்ந்திருக்கிறது. இவரது வாழ்க்கையில் சாந்த குணம் வருவதற்கான வாய்ப்பே இல்லாமலிருந்தது. ஆகவே தரிசித்துவிட்டு வருவோம்' என்று நினைத்து நண்பர் புறப்பட்டுவந்து சந்தித்தார். ஆனால் சாந்திநாதர் பழைய திமிருடன்தான் காணப்பட்டார்! எல்லாம் நீங்கிவிட்டன, எல்லாவற்றையும் உதறிவிட்டார் – ஆனால் திமிர்! அவருடைய கண்களில் எல்லாப் பற்றுகளையும் கைவிட்டோம் என்ற விறைப்பு தெரிந்தது. பழைய இம்சைக் குணம் தென்பட்டது. முன்பிருந்த கோபம் நீடித்தது; ஆவேச நெருப்பு மின்னியது. உடல் மெலிந்துபோயிருந்தது. உலர்ந்துபோயிருந்தது. நிறையத் தவம் செய்திருக்கிறார். ஆனால் உள்ளே அகம்பாவ நெருப்பு கொழுந்து விட்டு எரிந்து கொண்டிருந்தது.

சாந்திநாதர் நண்பரைப் பார்த்துவிட்டார். அடையாளம் தெரிந்து விட்டது. ஆனால் மாமுனிவராகிவிட்ட நிலையில் ஒரு சாதாரண மனிதனை ஏற்கெனவே தெரிந்தவனாக எப்படிக் காட்டிக்கொள்வது? அவருக்குத் தன்னை அடையாளம் தெரிந்துவிட்டது. என்பது நண்பருக்கும் புரிந்துவிட்டது. ஆனால் அவர் மீண்டும் நண்பரைப் பார்க்காமல் அவரை அடையாளம் தெரியாதவர்போல் அங்குமிங்கும் பார்வையைச் சுழற்றிக்கொண்டிருந்தார்.

நண்பர் அவரை அணுகி, "சுவாமி, தங்களை தரிசிக்க வெகு தொலைவிலிருந்து வந்துள்ளேன். தங்கள் திருநாமம் அறியலாமா?" என்று வினயமாகக் கேட்டார்.

துறவி வெடித்தார். "என் பெயர் சாந்திநாதர். நீ செய்தித்தாளில் படித்ததில்லையா? ரேடியோவில் கேட்டதில்லையா? டெலிவிஷன் பார்ப்பதில்லையா? உலகமே என்னை அறிந்திருக்கிறது. சரி, நீ எங்கிருந்து வருகிறாய்?"

நண்பர் சொன்னார், "சுவாமி, நான் பட்டிக்காட்டான். எனக்கு அதிகமாக எதுவும் தெரியாது. வேலை தெரியாது. அதிகமாக எழுத – படிக்கவும் தெரியாது."

பிறகு இருவரும் வேறு விஷயங்கள் பேசினார்கள். திடீரென்று நண்பர் கேட்டார், "சுவாமி, ஏதோ பெயர் சொன்னீர்களே, மறந்துவிட்டது. என்ன சொன்னீர்கள்?"

முனிவர் எரிச்சலடைந்து, "என் பெயர் சாந்திநாதர் என்று ஒரு தடவை சொல்லிவிட்டேனல்லவா? புரியவில்லையா? காது கேட்க வில்லையா?" என்று கேட்டார்.

"அப்படியில்லை சுவாமி, எனக்கு கொஞ்சம் பலகீனமான மூளை," என்று நண்பர் தெரிவித்தார் அங்கேயே அமைதியாக உட்கார்ந்திருந்தார். ஆனால் சில நிமிடங்கள் கழித்து அவர், "சுவாமி, உங்கள் பெயர் மறந்துபோய்விட்டது" என்றார்!

இதைக் கேட்டு சாந்திநாதரின் அசலான சுபாவம் வெளிப் பட்டது. ஜைனத் துறவிகளிடம் இருக்கும் மயிலிறகு விசிறி இவரிடமும் இருந்தது. அதை எடுத்து நண்பரின் மேல் எறிந்தார். "சாந்திநாதர் என்று உனக்கு ஆயிரம் தடவை சொன்னாலும் உன் மூளையில் ஏறாது. இப்படி அடித்தால்தான் நினைவில் வைத்துக் கொள்வாய்," என்று சீறினார்.

நண்பர் சொன்னார், "சுவாமி, இப்பொழுது நன்றாகப் புரிந்துகொண்டேன். இனி ஒருநாளும் மறக்கமாட்டேன். முன்பிருந்த உங்களுக்கும் இப்போதைய உங்களுக்கும் ஏதாவது வித்தியாசம் தெரிகிறதா என்பதை அறியவே விரும்பினேன். நீங்கள் அதே பழைய ஆள்தான்.

மாற்றம் என்பது எளிதான நிகழ்ச்சியன்று. பல விதிகளையும் ஏற்பாடுகளையும் பின்பற்றினாலும் அடிப்படையில் மாற்றம் ஏற்படுவதில்லை. அது முன்பைவிடத் தெளிவாகப் புலனாகிறது.

நான் இதனால்தான் 'மருந்து எதுவும் கிடையாது' என்னும் சூத்திரத்தைப் புரட்சிகரமான அறிவிப்பு என்கிறேன். மருந்துகளில் மாட்டிக்கொள்ளாதே. விழித்தெழு. விழிப்பதற்காக உபாயம் ஏதும் செய்யவேண்டியதில்லை. விழிக்க உபாயம் தேடுவது என்பது தூங்குவதற்கு வழிவகுப்பதாகிவிடும். விழிப்பதானால் இப்போதே இங்கேயே விழித்தெழு. இப்பொழுதே விழி. இல்லாவிடில் ஒருபொழுதும் இல்லை என்றாகிவிடும். நாளைக்கெனத் தள்ளிப் போடாதே. விதிகளைப் பின்பற்றுவதானால் நாளைக்குப் பார்க்கலாம். என்றாகிவிடும். தள்ளிப்போட்டு விடுவோம். விதிமுறை அறிந்தோம்; மேற்கொள்ளுவோம் என்றால் பலன் கிடைக்கப் பல பிறவிகளாகி விடும். சரியான உபாயம் வேறு — ஜனகர் சொன்னது.

ஜனகர் சொன்னார்: இருமை உணர்வே துன்பத்தின் காரணம். இதற்கு மருந்து எதுவும் கிடையாது. ஏனெனில் அடிப்படையில் எதுவும் இரண்டாக ஆகவில்லை. ஆகவே மருந்து எதுவும் தேவைப்படவில்லை. உடையவில்லை. ஆகவே ஒட்டிச் சேர்க்க வேண்டிய அவசியமில்லை. நீ பிளவுபடாமல்தான் இருக்கிறாய். சரியாகப் பார். விழித்தெழு. அறிந்துகொள். நீ வாழ்க்கையிலிருந்து தனியாக எப்படிப் பிரிந்திருக்க முடியும்? அடிப்படையான இருத்தலி லிருந்து வேறாக எப்படி ஆக முடியும்? உன் ஒவ்வொரு சுவாசமும் பின்னிப் பிணைந்துள்ளது.

வாழ்க்கை மொத்தமாக இணைந்து பிராணரசமாக விளங்குவதை நீ பார்க்கவில்லையா? எல்லோரிடமிருந்தும் ரசம் பெருகுகிறது. ஒருவருடையது இன்னொருவருடையதாக மாறுகிறது. தற்போது எனக்குள்ளே இருக்கும் சுவாசம் ஒரு நொடியில் உனக்குள்ளே சென்றுவிடும். அதை நீ பார்க்கவில்லைதான். ஒரு நொடி முன்னர் என் மூச்சுக் காற்று என்று நான் சொன்னேன். அடுத்த நொடியில் அது உன்னுடையதாகிவிட்டது. ஆக, நானும் நீயும் அதிகம் விலகியிருக்க வில்லை. சுவாசம் என்னும் நூல் நம்மை இணைக்கிறது. "நான் என்னுடைய மூச்சினால் மட்டுமே ஜீவிப்பேன். கண்டவனின் ஊசிப்போன மூச்சுக்காற்றை நான் கடன் வாங்கமாட்டேன்," என்று

கூறினால் நான் செத்துப்போவேன். "நாம் இன்னொருத்தரின் செருப்பை அணியமாட்டோம். பிறரது உடையை உடுத்தமாட்டோம். பிறரது மூச்சை மட்டும் எப்படி எடுத்துக்கொள்ளலாம்?" என்று கேட்க முடியாது. எங்கும் பரவியுள்ளது மற்றவர்களின் சுவாசம்தானே. ஆயிரக் கணக்கான நாசிகளின் வழியாக சுவாசக் காற்று வந்துபோகிறது. மனிதர்கள் மட்டுமல்ல. மிருகங்கள், பறவைகள், கழுதைகள், குதிரைகள், தாவரங்கள் ஆகிய எல்லாம் மூச்சை இழுத்து வெளியேற்று கின்றன. இப்படி நாம் எல்லோரும் இணைந்துள்ளோம். நன்கு பார். பிராணன் என்ற சமுத்திரத்தில் நாம் ஒன்றாகக் கலந்துள்ளோம்.

மரத்தில் பேரிக்காய் பழுத்தது. அல்லது மாம்பழம், ஆப்பிள் உண்டானது. நீ அதைச் சாப்பிடு. பழத்திலுள்ள சாறு இருபத்து நான்கு மணியில் உன் உடம்பின் ரத்தமாக ஆகிவிடும்; எலும்பாக, தசையாக, மூளையாக உருவெடுக்கும். ஒருநாள் நீ மரிப்பாய். உரமாக மாறுவாய். உன்னுடைய சாரத்திலிருந்து ஒரு மரம் பழுக்கலாம்.

ஆகவே நீ மரத்திலிருந்து பேரிக்காய் பறித்துவரும்போது அது வெறும் பேரிக்காய்தானே என்று அலட்சியப்படுத்தாதே. அதில் உன் அப்பாவும் தாத்தாவும் உரம் வழியாகக் கலந்திருக்கலாம். ஏனெனில் எல்லாமே மண்ணில் விழுகின்றன; மண்ணில் கலக்கின்றன; உரமாக மாறுகின்றன; பிறகு கனிவகைகளாகின்றன. மரங்கள் மனிதர்களுக்குள் இறங்குகின்றன. மனிதர்கள் மரங்களுக்குள் பிரவேசிக்கிறார்கள். இது ஒரு சக்கரம். சக்கரம் சுழல்கின்றது. சந்திரனிலும் நட்சத்திரங்களிலும் உள்ளது உனது உடலில் வந்துவிடுகிறது. உன் உடலில் உள்ளது சந்திரனிலும் நட்சத்திரங்களிலும் சென்றடைகிறது.

நாம் எல்லோரும் நன்கு இணைந்துள்ளோம். நாம் பிரிந்திருக்க வில்லை. பிரிந்து போகவும் முடியாது. ஒருவர் மற்றொருவரை நம்பியிருக்கிறோம். யாரும் அடிமை இல்லை. சுதந்திரமானவரும் யாரும் இல்லை. நமது வாழ்க்கை அமைப்பிற்குச் சரியான பெயர் சூட்டுவதானால் பரஸ்பர சார்புத் தன்மை (இன்டர்டிபென்டன்ஸ்) என்று பெயர் பெறும்.

நாம் பரஸ்பரம் இணைந்துள்ளோம். அலைகள்போல் ஒருவரோடு ஒருவர் இணைந்துள்ளோம். இந்த இணைப்பைக் கண்டிறந்து பார்.

'மருந்து எதுவும் இல்லை!'

மருந்துகள் புதிய சிக்கல்களை விளைவிக்கின்றன. காம உணர்வால் களைத்துப்போனோம், கவலையடைந்தோம். பிரம்மசர்யம் மேற்கொள்கிறோம். அதை மாற்று மருந்தாக நினைக்கிறோம். ஆனால் அதை நம் மீது பலவந்தமாகச் சுமத்துகிறோம். வலிந்தேற்ற பிரம்மச்சர்யம் புதிய சிக்கல்களைக் கொண்டு வருகிறது. பிறகு உன் உள்ளம் கூடுதலான காம உணர்வால் பீடிக்கப்படுகிறது. எதை நீ வெளிப்புறமாக நிறுத்தினாயோ அது உள்ளே செல்ல ஆரம்பிக்கிறது. உட்காயமாக ஆகிவிடுகிறது. இந்தக் காயங்களிடம் எச்சரிக்கையாக இருக்க வேண்டும். இப்படி ஏற்பட்ட காயங்களால்தான் நீ நோயாளியானாய்.

வாழ்க்கையை சகஜமாக அதன் போக்கில் ஏற்றுக்கொள். வாழ்க்கை எப்படி உள்ளதோ அதிலிருந்து வித்தியாசப்படுவதற்கான முயற்சிசெய்யாதே. அப்படியான வாழ்க்கையே உனக்கு அமைய வேண்டுமென்று பரமாத்மா விரும்பியிருக்கிறார். அவரது அந்த விருப்பத்தில் உன்னைக் கரைத்துக்கொள். 'இறைவனாகிய உன் விருப்பப்படியே எல்லாம் நடக்கட்டும்,' என்று கூறு. நீ உன் விருப்பத்தைக் குறுக்கே கொண்டுவராதே. நீ அறிவிப்புச்செய்:

"இறைவா, நீ காண்பிப்பதையே காண்பேன். எப்படி வழி நடத்துகிறாயோ நடப்பேன். எங்கே கொண்டுபோய்ச் சேர்க்கிறாயோ அவ்விடம் சேர்வேன். நீ நட்டாற்றில் தள்ளினால் அதையே கரையாக நினைப்பேன். கரையில் சேர்ப்பித்தால் சென்றடைவேன். சேர்ப்பிக்கா விட்டாலும் சேர்ந்த மாதிரிதான். ஏனெனில் எல்லாம் உன் விருப்பம் என்று விட்டுவிட்டேன்.'

இம்மாதிரியான சமர்ப்பண உணர்வு உன்னை பாரமற்றவனாக ஆக்கிவிடும். இதை அஷ்டாவக்ரர் மனத்தின், அந்தரங்கத்தின் ஒய்வுநிலை என்று அறிவிக்கிறார். தன்னுணர்வில் ஒய்வு! பிறகு எங்கும் போகவேண்டியதில்லை; எதுவாகவும் சுயமாக ஆக வேண்டியதில்லை; முயன்றும் எதுவாகவும் உருவாக வேண்டியதில்லை. 'நான் இப்படி ஆவேன், இவர்போல் ஆவேன்,' என்று கூறுவது மமதையின் அடையாளம். ஒருவர் அலெக்சாந்தர் ஆக விரும்புகிறார். வேறொருவர் புத்தராக, இன்னொருவர் வர்த்தமான மகாவீரராக ஆக விரும்புகிறார்.

இப்படி 'ஆக விரும்புதல்' ஒருவகையான மூளை பேதலிப்பு. நீ எவ்விதமாகவோ உருவாகியிருக்கிறாய். இந்த நிலையைவிடச் சிறந்ததாக வேறெதுவும் இருக்க முடியாது. உன்னிடத்தில் பூரணத்துவம் (முழுமை) வீற்றிருக்கிறது. நீ லட்சம் வகையில் முயன்றாலும் உனக்குள்ள பூரணத்திலிருந்து நீ சரிந்துவிழ முடியாது. ஏனெனில் உன் பூரணத்துவம் உனது சுபாவமானது. நீ எவ்வளவுதான் பாபம் செய்தாலும் இதனால் மாற்றம் எதுவும் ஏற்படாது. உனது பூரணத்துவம் களங்கப்படாமல் இருக்கும். நீ நிரஞ்சன், தெய்வீக மானவன். நீ அசுத்தப்படுவதற்கான வாய்ப்பு ஏதுமில்லை. இந்த சத்தியத்தில் தன்னை அர்ப்பணித்துக்கொண்டதுமே ஒரு நொடியில் புரட்சி நிகழ்ந்துவிடுகிறது.

'துக்கத்தின் அடிப்படை இருமை உணர்வு. அதற்கு மருந்து ஏதும் இல்லை. காண்பவை எல்லாம் உண்மை அல்ல. நான் அத்வைத (பிரிவுபடாத) சுத்த சைதன்ய (தன்னுணர்வுடைய) ரசத் துளி.'

அந்த ரசத்தை அடையாளம் கண்டுகொள். அந்த ரசம்தான் எங்கும் பெருகுகிறது. மரங்களில் பசுமையாகவும், பறவைகளில் இன்னொலியாகவும் அந்த ரசம்தான் வியாபித்துள்ளது. அந்த ரசம்தான் என் உள்ளேயிருந்து பேசுகிறது. அந்த ரசம்தான் உனக்குள் இருந்து பேச்சைக் கேட்க வைக்கிறது. நாம் எல்லோருமே, எல்லாமே அந்த ஒரே மகா ரசத்தின் அலைகள்தாம். இந்நிலையில் நாம் எங்கே போகவேண்டும்? எதுவாக ஆகவேண்டும்? பிறகு எதற்கு எதிர்காலம்? லட்சியம் ஏன்? வாழ்க்கையில் வேறு எதுவும் அனுபவிக்க வேண்டிய தில்லை. பிறகு வாழ்க்கை கோலாகலமான கொண்டாட்டமாகத் தோன்றும். இதில் ஒவ்வொரு நொடியும் ஆனந்த நடனம் நடைபெறு கிறது. அதில் பங்கேற்றுக் கலந்துகொள். இதனுடன் முரண்பட்டு எதிர்க்காதே. தேவையில்லாத மனக்குமுறலை உண்டு பண்ணிக் கொள்ளாதே. இந்த மகா ரச பிரவாகத்தில் சகஜமாகச் சேர்ந்து மிதந்துசெல். இந்த கங்கை நதி மகாசமுத்திரத்தை நோக்கிச் சென்று கொண்டிருக்கிறது — கலக்க, கரைய.

**நா**ன் ஒரு கதை கேள்விப்பட்டேன். ஒரு சக்ரவர்த்தி தேரில் சென்றுகொண்டிருந்தார். வழியில் ஒரு பிச்சைக்காரன் செல்வதைப் பார்த்தார். அவன் தலையில் ஒரு மூட்டை. சக்ரவர்த்திக்கு அவன் மீது

இரக்கம் ஏற்பட்டது. அவர் அவனைக் கூப்பிட்டு, “இந்தாப்பா, நீயும் தேரில் ஏறி உட்கார்ந்துகொள். எங்கே போக வேண்டுமோ அங்கே இறக்கிவிடுகிறேன்.” என்றார்.

பிச்சைக்காரன் முதலில் கூச்சப்பட்டான். மகாராஜாவின் ரதம், தங்க ரதம், அதிலா ஏறி உட்காருவது என்று தயங்கினான். ஆனால் மறுப்பதும் கடினம். மகாராஜாவின் பேச்சுக்கு மறுப்புச் சொல்ல முடியுமா? தேரில் ஏறி, கூசிக் குறுகி உட்கார்ந்துகொண்டான். ஆனால் தலைமேல் இருந்த மூட்டையை அப்படியே வைத்திருந்தான்; கீழே இறக்கிவைக்கவில்லை! சக்கரவர்த்தி சொன்னார், “ஏ பைத்தியக்காரா! மூட்டையைக் கீழே வையேன்.” பிச்சைக்காரன் சொன்னான், “சாமி! என்னை தேரில் உட்கார வைத்தீர்களே, அதுவே பெரிய விஷயம். இந்த மூட்டையின் பாரத்தையுமா உங்கள் தேர் மேல் சுமத்துவது? வேண்டாம், வேண்டாம்” அவன் மறுத்து விட்டான்.

யோசித்துப்பார். நீ தேரில் ஏறி உட்கார்ந்திருக்கிறாய். மூட்டையைத் தலைமேல் வை அல்லது கீழே வை. இதனால் என்ன வித்தியாசம் ஏற்பட்டுவிடப்போகிறது? ஒரே எடைதான் தேரால் உணரப்படும்.

உலகமென்னும் தேர் இயங்கிக்கொண்டிருக்கிறது. நீ சொல்கிறாய், “பிரபு, நீங்கள் என்னை உட்காரவைத்தீர்கள், தேரில் இடம் கொடுத்தீர்கள். இதுவே பெரிய விஷயம். மூட்டையுமா உங்களிடம் தருவது? தவறு, வேண்டாம்.”

ஆனால் ஒவ்வொரு நொடியும் நீ பரமாத்மாவில்தான் இருக்கிறாய். மொத்தச் சுமையும் அவருடையது. நீ வீணாக நடுவில் இந்த மூட்டையுடன் உட்கார்ந்திருக்கிறாய். இது அகங்காரத்தின் மூட்டை. இது பிரமை மூட்டை. இது இருமை உணர்வு மூட்டை. அந்த இரண்டிற்கும் இடையிலான போராட்டத்தின் மூட்டை. சமர்ப்பணமாகு. பிரவாகத்தில் கலந்துசெல். பிரவாகமே தர்மம், இயற்கை. சமர்ப்பண மாகுதல் தர்மத்தின் முடிவு.

‘நான் சுத்த ஞானம், தூய ப்ரக்ஞை. அஞ்ஞானத்தின் காரண மாகத் தனியாக எனக்கு (இனப்) பெயர் ஒன்று சூட்டிக்கொண்டேன். இவ்வாறு தினமும் சிந்தித்து நான் மாறாத பரம்பொருளில் ஊன்றி யிருக்கிறேன்.

**அஹம் போத மாத்ர:**

நான் ப்ரக்ஞை (தன்னுணர்வு) மட்டுமே ஆவேன். நினைவுடன் இருப்பது என் சுபாவம். மற்ற எல்லாம் கனவுபோன்றவை.

**மயா அக்ஞானாத் உபாதி கல்பித:**

மற்ற எல்லாம் எனது கற்பனை காரணமாக உற்பத்தியானவை.

**ஏவம் நித்யம் விமர்ஷயத: மம ஸ்திதி நிர்விகல்பே**

'விமர்ஷ' என்பது அறிதல், புரிதல் போன்றது. ஆங்கிலத்திலுள்ள 'ரிஃப்ளெக்ஷன்' என்னும் சொல் இதற்குச் சரியான அர்த்தமாகும். சிந்திப்பது என்பது யோசிப்பது. விமர்ஷ என்பது கண்ணாடியின் பிரதிபிம்பம் தோன்றுவது போன்றது. கண்ணாடி எதையும் யோசிப்பதில்லை. நீ அதன் எதிரில் போய் நின்றாலும் அது எதுவும் யோசிப்பதில்லை. தெரிபவர் யார் – ஆணா, பெண்ணா? அழகானவரா, அழகற்றவரா? இவ்வாறெல்லாம் யோசிக்காமல் அந்த உருவத்தை அப்படியே திருப்பிக் காட்டுகிறது. கண்ணாடியில் தரிசனம் உள்ளபடியே ஏற்படுகிறது.

ஜனகர் மொழிகிறார்: இவ்வாறாக தினமும் பிரதிபலிப்பைக் கவனித்து, இந்த நிரந்தரமான ஒற்றுமையை பார்த்தபடி, இதயமெனும் கண்ணாடியில் ஏற்படும் பிரதிபிம்பத்தை நோக்கியபடி, மாற்றமற்ற, உறுதியான மனநிலையில் ஊன்றியுள்ளேன். நான் சுத்தமான ஞான வடிவினன். எனக்கு என்னென்ன அனுபவங்கள் ஏற்பட்டனவோ அவை என் கற்பனையிலிருந்து உதித்தவை. என்னவெல்லாம் நிகழ்ந்தனவோ அவை என் கற்பனையின் லீலைகள்.

கற்பனை மனிதனுக்குக் கிடைத்துள்ள சக்தி. கிழக்கத்திய நாடுகள் கற்பனையை பரமாத்மாவின் சக்தி என்கின்றன. கற்பனையின் இன்னொரு பெயர்தான் மாயை. பரமாத்மா மாயை செய்தார் என்பதைக் கற்பனை செய்தார் என்றும் கூறலாம். பரமாத்மாவின் கற்பனையின் விளைவுதான் இந்த பரந்து விரிந்த பிரபஞ்சம். மனிதன் செய்த கற்பனையின் விளைவுதான் நம்முடைய சிறு–சிறு உலகங்கள். ஒவ்வொருவரும் தத்தம் உலகத்தில் வசிக்கின்றனர் தத்தம் உலகில் அடைபட்டுள்ளனர்.

நாம் அனைவரும் ஒரே உலகத்தில் வசிப்பதாக நீ நினைக்காதே. எத்தனை மனிதர்களோ அத்தனை உலகங்கள் உள்ளன! ஆகவேதான் இரண்டு மனிதர்கள் சந்திக்கும்போது உரசல், மோதல் உண்டாகிறது. இரண்டு உலகங்கள் மோதுகின்றன. தனித்தனியாக உள்ளவரையிலும் எல்லாம் ஒழுங்காக நடைபெறுகிறது. இரண்டு பேர் இணைய முற்படும்போது இடையூறு தோன்றுகிறது. ஏனெனில் இரண்டு வகை உலகங்கள், இரண்டு சிந்தனை முறைகள் ஒன்றுடனொன்று போராடத் தொடங்குகின்றன.

நமது கற்பனைதான் நமது உலகமாக உருவாகிறது. கற்பனை மிகவும் வலிமை வாய்ந்தது. நாம் எப்படி நினைக்கிறோம் என்பதுதான் கற்பனை. அதன்படி அது உருவாகிறது. விளைவுகள் ஏற்படுகின்றன. சித்திரங்கள்போல் நிகழ்ச்சிகள் திரள்கின்றன.

கனவும் கற்பனையைப் போலவே ஆற்றல் படைத்தது. அப்போது ஒரு முழு விளையாட்டு நடைபெறுகிறது. இரவாயிருப் பனும் தடையில்லை. திரைச்சீலை போட்டு மறைப்பு இல்லை. அக்கனவில் நீதான் நடிகன். நீதான் இயக்குநர், நீயே கதாசிரியன், நீயே நாடக மேடை, நீதான் பார்ப்பவன். எல்லாம் நீயே. இது பற்றி கொஞ்சம் யோசித்துப் பார்.

**நா**ன் ஒரு பெண்மணியைச் சந்திக்க அழைக்கப்பட்டேன். அவள் ஒன்பது மாதங்களாக மயக்கத்தில் 'கோமா' நிலையில் இருந்தாள். அவள் இப்படியே மேலும் மூன்று – நான்கு ஆண்டுகள் இருக்க முடியும் என்று டாக்டர்கள் கூறினர். அவள் மகன் நான் போன சமயம் அங்கிருந்தான். அவன் என்னிடம்,"ஒரு விஷயம் உங்களிடம் கேட்க வேண்டும். எல்லோரிடமும் கேட்டேன். யாரும் பதில் சொல்லவில்லை. ஒருவேளை என் அம்மா கனவு கண்டுகொண்டிருக் கிறாள் என்றால் கடந்த ஒன்பது மாதமும் அது கனவுதான் என்பது அவருக்குத் தெரிந்திருக்காது, சரிதானே?"

அவன் கேட்ட கேள்வி ஆழமானது. நாம் தினமும் கனவு காண்கிறோம். நிஜமென நினைக்கிறோம். காலையில் விழித்ததும் 'அடேடே, இதெல்லாம் கனவு.' என்று அறிகிறோம். அந்தப் பெண்மணி ஒன்பது மாதமாக நினைவின்றி இருப்பதைக்

கனவுநிலையில் உள்ளாள் என வைத்துக்கொள்ளலாமா? அவள் இன்னும் விழித்தெழவில்லை என்று கருதலாமா? ஒன்பது மாதங்களாகக் கனவு நடைபெற்றுக்கொண்டிருக்கிறது. அதைப் பார்க்கும் அவள் அதை உண்மையென நினைத்துக்கொண்டிருப்பாள். இத்தனை மாதங்களில் அவள் கனவுதான் காண்பதாக ஒருமுறைகூட எண்ணியிருக்கமாட்டாள். மகன் சொன்னது சரிதான்.

உண்மை என்னவென்றால் நாம் கண்களைத் திறந்த பிறகும் கனவு முடிவடைவதில்லை. உள்ளே அது தொடர்ந்து நடைபெறுகிறது. கண்களை எப்பொழுது வேண்டுமானாலும் மூடிக்கொள். உள்ளே கொஞ்சம் ஆராய், தேடு. கனவு நடைபெற்றுக்கொண்டிருப்பது உனக்குத் தெரியவரும். அதாவது, பகற்கனவு ஆரம்பித்திருக்கிறது.

பகலில் சூரியன் வலம் வருகிறது. வானத்து நட்சத்திரங்கள் காணாமல் போகின்றன. அவை எங்கேயோ போய்விடுவதாகவா நீ நினைக்கிறாய்? அவை எங்கே போய்விட முடியும்? எங்கே இருந் தனவோ, அங்கேயே உள்ளன. பகலின் ஒளியால் மூடப்பட்டுள்ளன, அவ்வளவுதான். இரவு நெருங்கியதும் சூரியன் விடைபெற்றுச் சென்றுவிடுகிறான். நட்சத்திரங்கள் வெளிப்பட ஆரம்பிக்கின்றன. அவை அங்கேயே இருந்தவைதாம். சூரிய ஒளியால் மூடப்பட் டிருந்தன. அவ்வொளி மறைந்ததும் தென்படுகின்றன.

இவ்வாறே உனது கனவு பிரவாகமும் நடைபெறுகிறது. நீ கண்விழித்தபின் உலக நடவடிக்கைகளில் கனவை மறந்துவிடுகிறாய். ஆனால் மனத்துள் கனவோட்டம் நீடிக்கிறது. பிறகு கண்களை மூடிப்பார். உதாரணமாக, சாய்வு நாற்காலியில் சாய்ந்துகொள். கண்களை மூடு. சிறிது நேரத்தில் ஒரு கனவு நிகழ்வதைக் காண்பாய் – தேர்தலில் நிற்கிறாய். ஜெயித்தும்விட்டாய். பிரதம மந்திரி ஆகிவிட்டாய். பிரதமரானதும் யாரையெல்லாம் தாக்க விரும்பினாயோ அவர்களைத் தீர்த்துக்கட்டிவிட்டாய். பிடிக்காதவர்களைச் சிறையில் அடைத்தாய். வேண்டியவர்களை அமைச்சர்களாக்கினாய். அப்பொழுது மனைவியின் குரல் கேட்டது. "இந்தாங்க, டீ கொண்டு வந்திருக்கேன்." திடுக்கிட்டு நீ நேராக உட்காருகிறாய். டீ குடிக்கிறாய். 'கற்பனையில் எங்கேயே போய்விட்டோம்,' என்று நீ புரிந்து கொள்கிறாய். இவ்வாறு, விழித்தபிறகும் உள்ளே கனவு பிரவாகித்துக் கொண்டிருக்கிறது.

**நே**ருஜி ஒரு கிராமத்திற்குச் சென்றபோது அங்கிருந்த பைத்தியக்காரர் ஆஸ்பத்திரியைப் பார்வையிடச் சென்றார். இங்கு ஒரு விஷயம். அடிக்கடி நடப்பதுதான். சர்ச்சில் ஆட்சி அதிகாரத்தில் இருந்தபோது இங்கிலாந்தில் பைத்தியக்காரர் ஆஸ்பத்திரியில் தங்களை சர்ச்சில் என்று நாலைந்து பேராவது கூறிக்கொள்வது வழக்கம்.

நேருஜியின் விஷயத்திலும் அப்படித்தான் நடந்தது. அவர் உயிரோடு இருந்தபோது இந்தியாவில் பைத்தியக்காரர் ஆஸ்பத்திரி களில் சுமார் பத்து பேர் தங்களை பண்டித நேரு என்று கூறிக் கொள்வார்கள்.

நேரு விஜயம் செய்த கிராமத்து ஆஸ்பத்திரியில் ஒரு மன நோயாளி பூரணமாக குணமாகிவிட்டிருந்தான். நேரு வரும்நாள்தான் அவன் ஆஸ்பத்திரியிலிருந்து வெளியேறும் நாளாக இருந்தது. அதிகாரிகள் யோசித்தார்கள். ஒரு நிகழ்ச்சிபோல் நேருவே அவனுக்கு விடைகொடுத்து அனுப்புவதுபோல் வைக்கலாம் என்று கருதினர்.

நேரு அவர்களிடம் வினவினார், "இம்மாதிரி ஆஸ்பத்திரியில் உள்ள நோயாளிகள் எப்பொழுதாவது குணமடைவது உண்டா?"

"ஏனில்லை? இப்போதே ஒரு நோயாளி முழுமையாக குணம் பெற்றுள்ளான். உங்கள் மூலம் விடைகொடுத்து அனுப்பிவைப்பதற்காக அவனை அனுப்புவதைத் தாமதப்படுத்தியுள்ளோம்," என்று அதிகாரிகள் தெரிவித்தனர். அவனை நேருவிடம் அழைத்துவந்தனர். நேரு அவனுக்குப் பூங்கொத்து கொடுத்து வாழ்த்தினார். "நீ குணமடைந்துவிட்டதை அறிந்து மகிழ்கிறேன்," என்றார்.

"நீங்கள் யார்? உங்கள் பெயரென்ன?" என்று அவன் கேட்டான்.

"என் பெயர் பண்டிட் ஜவகர்லால் நேரு."

அவன் திடமாகச் சொன்னான்: "அப்படியா? பயப்பட வேண்டாம். நீங்கள் இங்கே மூன்று வருஷம் தங்கி சிகிச்சை பெற்றால் நீங்களும் குணமடைந்து விடுவீர்கள். எனக்கும் இதே பிரமை நோய் தான் இருந்தது. டாக்டர்கள் கருணைகாட்டி குணப்படுத்தி விட்டார்கள்."

அதாவது, அந்த மனிதன் முன்பு தன்னை பண்டிட் ஜவஹர்லால் நேரு என்றே நினைத்துக்கொண்டிருந்தான்!

உனக்குச் சிரிப்புவரலாம். ஆனால் நீ உன்னைப் பற்றி நினைத்துக்கொண்டிருப்பது மேற்கண்ட நிலையிலிருந்து அதிகம் வேறுபட்டதன்று. தன்னை அவ்வாறு நேருஜி என்று நினைத்துக் கொண்டவன் சிறிதளவாவது தைரியசாலியாக இருப்பான். நீ இத்துணை தைரியசாலி இல்லை. . அதனால் நீ வெளியில் சொல்வதில்லை. மனத்திற்குள்ளேயே உன்னைப் பெரிய தலைவராக நினைத்துக் கொண்டிருப்பாய். ஒவ்வொருவனும் தன்னைப் பெரிய மனிதனாகக் கற்பனை 'செய்கிறான். அந்தக் கற்பனையை ஊட்டி வளர்க்கின்றான். கற்பனையென்ற இந்த வலைத்திரை அகன்றதும் தர்மம். அவதாரமெடுக்கிறது.

'எனக்குத் தளைகளும் இல்லை: விடுவிப்பும் இல்லை. எதையும் சாராமல் இருந்ததால் என் பிரமை அடங்கிவிட்டது. ஆச்சரியம் என்னவென்றால், எனக்குள் அமைந்த உலகம் வாஸ்தவத்தில் எனக்குள் அமைந்திருக்கவில்லை.'

**ந மே பந்தோஅஸ்தி மோக்ஷோ**
**வா ப்ராந்தி: ஷாந்தா நிராஷ்ரயா |**
**அஹோ மயி ஸ்திதம் விஷ்வம்**
**வஸ்துதோ ந மயி ஸ்திதம் ||**

மே பந்த: வா மோக்ஷ: ந அஸ்தி – எனக்கு தளைகளோ, விடு படலோ இல்லை. ஜனகரின் இந்தக் கூற்று எவ்வளவு அற்புதமானது!

நீ உலகத்தைக் கட்டுத்தளை என்று கேள்விப்பட்டிருக்கிறாய். 'தளைகளை அறுத்தெறி. மோக்ஷத்தைத் தேடிப் பெறு,' என்றும் கேட்டுக்கொள்ளப்படுகிறாய். ஆனால் ஜனகர் என்ன சொன்னார் என்றும் கேட்டாயல்லவா? "எனக்குத் தளைகளும் இல்லை, முக்தியும் இல்லை.' என்கிறாரே. இவ்வாறு, தளையும் இல்லை, விடுபடலும் இல்லை: தளையும் கற்பனை, விடுதலையும் கற்பனை என்ற மனநிலையை அடைவதுதான் மோக்ஷம் என்பது.

இயேசுநாதரின் வாழ்க்கையிலிருந்து ஒரு கதை. அவர் ஒரு கிராமத்துக்குப் போனார். ஒரு மரத்தடியில் சிலர் உட்கார்ந்துள்ளதைப் பார்த்தார். அவர்கள் சோகமாக, கவலையுடன் இருந்தனர். தீனமாக, மெலிந்து தெரிந்தனர். இயேசு அவர்களிடம், " உங்களுக்கெல்லாம் என்னவாயிற்று? என்ன விபத்து நேரிட்டது?" என்று விசாரித்தார்.

"நாங்கள் மிகப் பெரிய அபாயத்தில் சிக்கிக் கொண்டுள்ளோம். நாங்கள் மிகவும் பயந்து போயிருக்கிறோம். பெரிய பாவங்கள் செய்துள்ளோம். நரகத்தை நினைத்து அஞ்சுகிறோம். வெடவெடவென்று நடுங்குகிறோம்," என்று அவர்கள் தெரிவித்தார்கள்.

ஆம். நரகம் ஆபத்தான இடம்தான். இந்து மதத்தினரின் நரகத்தைவிட மற்ற மதத்தவர்களின் நரகங்கள் கடுமையானவை. விதிகள் துல்லியமாகக் கடைப்பிடிக்கப்படும். லஞ்சம் கொடுத்து நரக நெருப்பிலிருந்து தப்புவதோ, சூட்டைக் குறைப்பதோ நடக்காது.

மரத்தடி மனிதர்கள் சொன்னார்கள்: "எங்களுக்கு பயமாக உள்ளது. நாங்கள் இறக்கும் நாள் நெருங்கிக்கொண்டிருக்கிறது. நாங்கள் நரகத்திலேயே கிடந்து அழுக நேரிடும். இதனால் நிம்மதியின்றித் தவிக்கிறோம்."

இயேசு முன்னேறிச் சென்றார். இன்னொரு மரத்தடியில் வேறு சிலரைக் கண்டார். அவர்கள் முகத்தில் நம்பிக்கை தெரிந்தது. ஆனால் அதில் பயமும் கலந்திருந்தது. அவர்கள் நிறையத் தவம் புரிந்தவர்கள். உபவாசம் மேற்கொண்டவர்கள், வெயிலில் உடம்பை வாட்டி வருத்தி விரதமிருந்து உலர்ந்து எலும்புக்கூடாக ஆனவர்கள். இயேசு அவர்களிடமும், "உங்களுக்கு என்ன ஆனது? என்ன கஷ்டம் மேலிட்டுள்ளது?" என்று கேட்டார்.

"ஐயனே, நாங்கள் சுவர்க்கம் செல்லத் தயாராகி கொண்டிருக்கிறோம். ஏனென்றால் நரகத்திடம் பயம். ஆகவே புண்ணியம் சேகரிக்கிறோம். ஆனாலும் வாய்ப்பு நழுவிவிடுமோ என்று பயம் உள்ளது. எல்லாவற்றையும் பணயம் வைத்துவிட்டோம். உயிரையும் பணயம் வைத்துவிட்டோம். சுவர்க்கம் பெற்றே தீருவோம். அங்கே கட்டாயம் போய்ச்சேருவோம். ஆனால் இந்தக் கவலையால் நாங்கள் தத்தளிக்கிறோம். மனத்திலும் இறுக்கம் நிறைந்துள்ளது." என்று கூட்டத்தினர் விளக்கினர்.

இயேசு மேலும் முன்னேறினார். மூன்றாவதாக அவரடைந்த மரத்தின் கீழே சிலரைக் கண்டார். அவர்கள் களிப்புடன் இருந்தனர். அவர்களின் நிலை மற்ற இரு கூட்டத்தினரிடமிருந்தும் முற்றிலும் மாறுபட்டதாயிருந்தது. நரகத்தை நினைத்து நடுங்கினவர்கள் போலவும் இவர்கள் இல்லை. சுவர்க்கத்திற்காகப் பேராசைப்படுபவர்கள் போலவும்

இவர்கள் காணப்படவில்லை. ஆனந்தமாக இருந்தார்கள். பாட்டுப் பாடுவதிலும் ஆடுவதிலும் ஆழ்ந்திருந்தார்கள். இயேசு கேட்டார்: "உங்களுக்கெல்லாம் என்ன ஆனது? இவ்வளவு சந்தோஷமாகத் தெரிகிறீர்கள். உங்களுக்கு எந்த சங்கடமும் கிடையாதா?" அவர்கள் பதிலளித்தார்கள்," எங்களுக்கு எந்த பிரச்சினையுமில்லை. ஏனென்றால் சுவர்க்கம் என்பதும் கிடையாது; நரகமும் கிடையாது; எல்லாம் மனத்தின் கண்ணாம்பூச்சி விளையாட்டு மட்டுமே என்பதை நாங்கள் அறிந்துள்ளோம்."

சுகம் — துக்கம் இரண்டும் மனத்தின் மதிப்பீடுகள். துக்கத்தின் உச்சகட்டம் நரகம்; சுகத்தின் உச்சகட்டம் சுவர்க்கம். சுகமும் துக்கமும் மனத்தில் உள்ளன. நரகமும் சுவர்க்கமும் இதேபோல் மனத்தில்தான் உள்ளன. எல்லா இழுபறி நிலைகளும் மனத்தளவில்தான் உள்ளன என்பதை அறிபவன் ஆன்ம விடுதலை பெறுகிறான்.

இந்த ஆன்ம விடுதலையின் எல்லையில்தான் ஜனகர், 'எனக்குத் தளைகளும் இல்லை, விடுபடலும் இல்லை,' என அறிவிக்கிறார். தளைகளும் பொய்யென்றால் மோக்ஷம் எப்படி? விடுபடல் இல்லை என்றால் மோக்ஷம் எப்படி? இரண்டும் பொய்யானவை.

'சார்ந்திருக்க எதுவுமில்லாமல் பிரமை உணர்வு அடங்கி விட்டது.'

எனக்கு அடைக்கலமாக யாருமில்லை. எதையும் நம்பி எதிர்பார்த்து அதன் உதவியால் வாழவில்லை. எதிர்பார்ப்பு இல்லாத இடத்தில் ஏமாற்றத்திற்கும் இடம் இருக்காது.

'அடைக்கலம் இன்மை என்ற நிலையில் பிரமை அடங்கிவிட்டது. ஆச்சரியமான விஷயம் என்னவென்றால் என்னுள் அமைந்துள்ள உலகம் வாஸ்தவத்தில் என்னில் நிலைபெற்றிருக்க வில்லை.'

உலகத் தொடர்பிருந்தும் நான் களங்கப்படவில்லை; நிரஞ்சனாக ஆனந்தமயமானவனாக இருக்கிறேன்; உலகைக் கடந்து நிற்கிறேன்.

**இ**ரண்டு பௌத்த பிட்சுக்கள் ஒரு நதியைக் கடக்கத் தொடங்கினர். அவர்களில் முதியவரான பிட்சு ஓர் இளம்பெண்

நதியைக் கடக்க விரும்புவதைக் கவனித்தார். அவர் பயந்துபோனார். நதி ஆழமானது. ஒருவேளை யுவதி அவரிடம், "என் கையைப் பிடித்து அழைத்துச் செல்லுங்கள்," என்று கூறலாம். அவளோ அழகானவளும்கூட. அவர் அவள் பக்கமாக நதியைக் கடந்தபோது யுவதி அவரிடம், "நான் நதியைக் கடக்க வேண்டும். நான் விழுந்து விடாமல் பிடித்துக் கொள்வீர்களா?" என்று கேட்டேவிட்டாள்.

பிட்சு சொன்னார்,"என்னை மன்னித்துவிடம்மா. நான் துறவி. பெண்ணைத் தொடலாகாது." சொல்லும்போதே அவர் உடல் நடுங்கியது. அவசரமாகத் தப்பித்து நதியைக் கடந்து சென்றுவிட்டார்.

முதியவர், பல்லாண்டுகளாக அமுக்கிவைக்கப்பட்ட காமம் — உள்ளிருந்து சீறியது. அந்தப் பெண்ணின் கையைப் பிடித்திருந்தால்.. இனிய எண்ணங்கள் தோன்றின. பிட்சு நதியைக் கடந்துவிட்டார். தப்பித்தோம் என்று கடவுளுக்கு நன்றி செலுத்தினார். ஒரு சங்கடமான நிலை வந்தது. நல்ல வேளையாக பாவக்குழியில் விழுவதிலிருந்து தப்பினோம் என நினைத்தார்.

பிறகு அவர் திரும்பிப் பார்த்தார். திடுக்கிட்டார். பொறாமையும் மனத்தில் நிறைந்தது. எரிச்சலும் தோன்றியது. என்ன விஷயம்? அவருடன் வந்த இளம்பிட்சு பின்னால் வந்துகொண்டிருந்தான். அந்த யுவதியைத் தன் தோளில் ஏற்றிக்கொண்டு அவள் நதியைக் கடக்க உதவிக்கொண்டிருந்தான்! கையைப் பிடித்து அல்ல, தோளில் சுமந்துகொண்டு! பெண்ணின் ஸ்பரிசம் கூட பிட்சுக்களுக்கு ஆகாதே. 'நானாவது கிழவன். இவனோ இளைஞன். இப்போதுதான் சமீபத்தில் தீட்சை பெற்றவன். இப்படி பாவம் செய்கிறானே!' என்று நினைத்தார் முதிய பிட்சு.

இரண்டு பிட்சுக்களும் இரண்டு மைல் நடந்து ஆசிரமத்தை அடைந்தனர். வழியில் முதியவர் பேசவே இல்லை. வெடிக்கும் அளவிற்குக் கோபமாக இருந்தார். அந்தக் கோபத்தில் பொறாமை இருந்தது; காமம் இருந்தது. தன்னை ஒழுக்கத்தில் உயர்ந்தவனாக, தர்மசீலனாகக் காட்டிக்கொள்ளும் அகந்தை இருந்தது. இளைய பிட்சுவை இழிந்தவனாக, தர்மத்தைக் கைவிட்டவனாக நினைக்கும் பரிதாப உணர்வும் இருந்தது.

ஆசிரமப் படிகளில் ஏறும் சமயம் முதியவரால் பொறுக்க முடியவில்லை. “இந்தாப்பா கேள். தலைமைக் குருவிடம் சென்று நான் உன்னைப் பற்றி சொல்லாமல் இருக்க முடியாது. ஏனெனில் நீ ஆசிரம விதிமுறைகளை மீறிவிட்டாய். நீ இளைஞன். பிட்சு. ஆனாலும் அந்தப் பெண்ணைத் தோளில் உட்காரவைத்திருந்தாய். அப்பெண் அழகானவளும் கூட.” என்று மிரட்டினார்.

இளைய பிட்சு பதிலளித்தான்: “தாங்கள் சொல்வது ஆச்சரியமாக இருக்கிறதே. நான் அந்தப் பெண்ணை எப்போதோ நதிக்கரையில் இறக்கி வைத்துவிட்டேன். தாங்கள் இன்னமுமா அவளை மனத்தோளில் சுமந்து கொண்டு வருகிறீர்கள்? இரண்டு மைல் முன்பாகவே முடிந்துபோன விஷயம். அதை இன்னமுமா இழுத்து வருகிறீர்கள்?”

நினைவில் வையுங்கள். இந்த உலகம் உங்களிடம் இருக்கிறது; உங்களில் நிலைபெற்றுள்ளது. நீங்கள் அதில் நிலைபெற்றுள்ளீர்கள். நீங்கள் உலகைத் தொடக்கூடாது என்றும், உலகமும் உங்கள்மேல் படக்கூடாது என்றும் நினைத்தால் இதுபோய் வாழ்க்கையா? வாழும் விதமா? தொட்டும் தொடாமலும், பட்டும் படாமலும் வாழ்க்கையைக் கழி. கறைபட விடாதே. இப்படி வாழ்க்கையை நடத்துவதே சாட்சி மனப்பான்மை.

‘உடல் உட்பட இந்த உலகம் எதுவுமில்லை. அதாவது, இது உண்மையுமில்லை, பொய்யுமில்லை. ஆத்மா என்பது பரிசுத்தமான தன்னுணர்வு (பிரக்ஞை) மட்டுமேயாகும். இதை நிச்சயமாக அறிந்த பிறகு எதன் மீது கற்பனையை நிறுவுவது? அதை எங்கு நாற்று நடுவது? சார்ந்தவை எல்லாம் சரிந்துவிட்டன. சுகம் வேண்டுமென்ற ஆசையும் இல்லை; துன்பம் விளையுமோ என்ற அச்சமும் இல்லை. எதுவாகவும் ஆகவேண்டியதில்லை, செய்யப்பட வேண்டியதில்லை, எங்கும் செல்ல வேண்டியதில்லை, எதிலிருந்தும் தப்ப வேண்டிய தில்லை. சார்ந்தவை எல்லாம் சரிந்துவிட்டால் கற்பனையை எதில் சார்த்துவது?

சிலர் கற்பனையைப் பணத்தைச் சார்ந்திருக்கச் செய்கிறார்கள். அவர்கள் எப்பொழுதும் பணக் கணக்கே போட்டுக் கொண்டிருப் பார்கள். கனவிலும் எவ்வளவு பணம் சேர்ந்திருக்கிறது என்று

எண்ணிக்கொண்டிருப்பார்கள். நாணயங்களின் ஒலிதான் அவர்களுக்கு சங்கீதம். வேறு சங்கீதம் தெரியாது.

சிலர் பதவிப் பித்து பிடித்தவர்களாக உள்ளனர். அவர்கள் அமரும் நாற்காலி உயர்ந்துகொண்டே செல்லவேண்டும் என்பதிலேயே ஆர்வமாக இருப்பார்கள். தூக்குமேடைக்குப் போகும் அளவிற்கு ஆபத்து வருமானாலும் சரி, பெரியதிலும் பெரிய ஆசனம் வேண்டு மென்பார்கள். நாற்காலிதான் அவர்கள் சார்ந்திருக்க விரும்புவது.

வேறு சிலர் சுவர்க்கத்திற்கு ஆசைப்படுபவர்களாக இருப்பார்கள். உட்கார்ந்தால் சுவர்க்கத்தில்தான் உட்கார வேண்டும். இந்த மண்ணுலகில் என்ன சிறப்பு இருக்கிறது? இவ்வுலகத்தில் இன்று நாற்காலிகள் கிடைக்கும்; நாளை பிடுங்கப்பட்டுவிடும். இங்கே உட்காருவதில் என்ன பயன் இருக்கிறது? சுவர்க்கத்தில் உட்காருவோம். கற்பகத் தருவின் கீழே அமர்ந்து எல்லா இன்பங்களையும் அனுபவிப்போம். அங்கே காலக் கட்டுப்பாடு இல்லை, கால எல்லையும் இல்லை – இன்பம் துய்க்க.

ஆனால் இவையெல்லாம் மனம் சார்ந்து நிற்கும் விஷயங்கள், மனத்தின் ஆதாரங்கள்.

'இப்படி நிச்சயித்தபின் எதன் மீது கற்பனையை நிறுவுவது?'

'இந்த உடல், சுவர்க்கம், நரகம், கட்டுத்தளைகள், மோட்சம், பயம் ஆகிய எல்லாம் கற்பனை மட்டுமே. அவற்றைப் பற்றி எனக்கென்ன அக்கறை? நான் பரிசுத்தமான தன்னுணர்வு மட்டுமே ஆவேன்.'

ஜனகருக்கு அருமையான முறையில் விழிப்புணர்வு ஏற்பட்டது. அஷ்டாவக்கிரரின் முன்னிலையில் சிந்தனையின் பிரதிபலிப்பை ஜனகர் உணர்ந்தார். அஷ்டாவக்கிரர் என்ற கண்ணாடியில் ஜனகர் தனது முகத்தைக் கண்டார். அவருக்கு ஆத்ம நினைவு உண்டானது. அதிசயமான சம்பவம் நிகழ்ந்தது.

பொருத்தமான குரு – பொருத்தமான சீடன் என்ற சம்பந்தம் ஏற்படுவது மிக அரிது. உலகில் சீடர்கள் ஏராளமாக உள்ளனர். குருமார்களும் ஏராளம். அஷ்டாவக்கிரர் போன்ற குருவும் ஜனகர் போன்ற சீடரும் சந்திப்பது என்பது எப்போதாவதுதான் நடக்கும்

நிகழ்ச்சி. இப்படிப் பொருத்தமான குருவும் சீடரும் சந்தித்தால் அங்கு சத்தியம் வெடித்து உதிக்கும். வேறு என்ன நடக்க முடியும்?

அத்தகைய பரிசுத்தமான கண்ணாடியின் முன்னால் கபடமற்ற இதயமுள்ள ஒருவன் பணிவு உணர்வுடன் தலை தாழ்த்தி நிற்கிறான். அவனுக்கு சத்திய தரிசனம் கிடைத்துவிடுகிறது. சிம்ம கர்ஜனை ஒலிக்கிறது. இதற்கு முன் பேசியிராத முறையில் அவன் புதுமையாகப் பேசுகிறான்; அஷ்டாவக்கிரர் போலவே அதே பாணியில் பேசுகிறான். அவன் மூலமாக அஷ்டாவக்கிரரே பேசுவதுபோல் உள்ளது. தன் மொழியை இழந்துவிட்ட அவனது புல்லாங்குழலில் அஷ்டாவக் கிரரின் கீதம் இசைப்பதுபோல் உள்ளது.

சீடன் தன்னை இழப்பதற்கு சம்மதித்தால் குரு அவனது உள்ளத்தின் ஆழத்திலிருந்து பேசத் தொடங்குகிறார். சீடன் பணிந்துபோக சம்மதித்தால், விநயமாக இருந்தால், குரு அவனது ஆழ்மனத்தில் தன்னை நிலைநாட்டிக் கொள்வார்.

அப்படித்தான் நடந்தது. அப்படித்தான் அந்த முக்கியமான சந்திப்பு நிகழ்ந்தது. அதைப் பற்றி சிந்தனை செய். அதன் மீது கருத்தூன்று. இம்மாதிரி சம்பவம் உன் வாழ்க்கையிலும் நிகழ முடியும். நிகழாதிருக்கத் தடையோ, காரணமோ இல்லை. உன்னிடம் குறையுமில்லை. உன் கற்பனையால் விரிந்த வலை, நீ பின்பற்றும் விதிமுறைகள், நீ ஏற்கும் மருந்துக்குவியல் – இவைதாம் நீ ஆரோக்கியம் பெற முடியாமல் தடுக்கின்றன.

நீ ஆரோக்கியமாகத்தான் இருக்கிறாய். அவ்வாறே எண்ணுக. நீ பரமாத்மா. அவ்வாறே எண்ணுக. நடந்தது, நடந்து முடிந்துவிட்டது. நீ உன் வீட்டில்தான் வீற்றிருக்கிறாய். நீ வீட்டிலிருந்து தொலைவில் வெளியே இருப்பதாக நினைப்பது உனது கற்பனையின் விளைவே. ஒரு நொடியில், நொடியின் ஒரு துளியில் நீ உன் இல்லத்திற்குத் திரும்பிவிட முடியும்.

**மு**ல்லா நஸ்ருத்தீன் தான் வழக்கமாகச் செல்லும் டாக்டரிடம் போனார். என்ன விஷயம் என்று டாக்டர் கேட்டதும் முல்லா, "டாக்டர், என்றாவது ஒருநாள் நான் இங்கே வந்து ஏன் பேண்ட் பையிலிருந்து ஏராளமாகப் பணத்தை வெளியே எடுத்து உங்கள் பழைய பாக்கிகளை

எல்லாம் ஒரே தவணையில் தீர்த்து வைத்தால் நீங்கள் என்ன நினைப்பீர்கள்?" என்று கேட்டார்.

"நீ வேறு யாருடைய பேன்ட்டையோ போட்டுக்கொண்டு வந்துவிட்டாய் என்றுதான் நினைப்பேன்," என்றார் டாக்டர்.

உனக்கு நம்பிக்கை ஏற்படாமல் போகலாம். நான் சொல்லியும், நீ கேட்டும், நீ ஜனகர் விஷயம் வேறு என்று சொல்லலாம். அந்த பேன்ட் என் பேன்ட் அன்று எனலாம். உன் பேன்ட்டில் கையை நுழைத்துப் பார்த்தால் பேன்ட்டின் பை காலியாக இருக்கும் என்கிறாய். நீ கையை நுழைத்துப் பார்க்கவில்லையே. பேன்ட் பையில் கைவிட்டுத் தேடாமல் அது காலிதான் என்று நீயாகவே ஒரு நம்பிக்கையை வளர்த்துக்கொண்டுவிட்டாய்.

நீ என்ன பார்க்கிறாய்? எங்கெல்லாம் ஆனந்தமோ அது மற்றவர்களுக்குத்தான் நேரிடுகிறது. என்கிறாய். புன்முறுவல்கள் மற்றவர்களிடம் தான் தெரிகிறது. என் விஷயம் கண்ணீர்க் கதை என்கிறாய். துக்கம் உனக்கே சொந்தம், சுகம் எல்லாம் மற்றவர்களுக்குப் போய்விடுகிறது என்கிறாய். அவர்கள் வாழ்க்கை இனிய பாடல்களாய் உள்ளது. அவர்கள் வாழ்க்கையில் அமுதமழை பொழிகிறது. அவர்கள் அதிர்ஷ்டம் செய்தவர்கள் என் வாழ்விலோ துக்கக் கண்ணீர் என்கிறாய். உன்னை நீயே நம்பவில்லை. மதிக்கவில்லை.

நான் சொல்வது — இந்த பேன்ட் உன்னுடையது. பையில் கைவிட்டுப் பார். நீ சொல்வது — கையை அடிக்கடிப் பையில் நுழைத்து என்ன பிரயோஜனம்? பையில் ஏதாவது இருந்தால்தானே. இல்லை, நீ பையில் கைபோடவே இல்லை; கையை நுழைத்துப் பார்க்காமலேயே நீ பையில் ஒன்றுமில்லை என்ற பிரமைக்கு ஆளாகியுள்ளாய். ஒருமுறை உனக்குள்ளேயே நீ எட்டிப் பார்.

**மு**ல்லா நஸ்ருத்தீன் வீட்டிற்கு ஒருவன் வந்திருந்தான். அவன் சுலபத்தில் கிளம்புகிறவனாயில்லை. ஆனாலும் அவன் அப்பாவி போல் கேட்டான், "உங்கள் வீட்டிற்கு வருகிற யாராவது ஒருவன் அப்படியே உட்கார்ந்துவிட்டால், கிளம்புகிற மாதிரித் தெரியாவிட்டால் நீங்கள் அவனைக் கிளம்பவைக்க என்ன உபாயம் செய்வீர்கள்?"

"என்னால் ஒன்றும் செய்ய முடிவதில்லை. ஆனால் என் மனைவி மிகவும் தந்திரசாலி. அம்மாதிரி சூழ்நிலைகளில் அவள் வந்து ஏதாவது சாக்குச் சொல்லி என்னை உள்ளே அழைத்துக்கொண்டு விடுவாள்,'' என்று முல்லா பதிலளித்தார்.

அந்த மனிதன் இன்னொரு கேள்வி கேட்க தயாராகிக் கொண்டிருந்தான். உள்பக்க படுதா (திரை) அகன்றது. ஒரு பெண்மணி உள்ளே வந்தாள். அவள் கேட்டாள், 'இது உங்களுக்கே நல்லா யிருக்கா? நாம சர்மா சார் வீட்டுக்கு ஆறு மணிக்கு போகணுமில்ல? நீங்க என்னடான்னா இன்னும் அரட்டையடிச்சுக் கிட்டிருக்கீங்களே.''

உன்னால் செய்ய முடியாமல் போனதை தான் செய்வதுதான் குருவின் வேலை. அதாவது, உனக்கு அதிர்ச்சி தருவது. 'ஆறு மணிக்கு சர்மா வீட்டுக்குப் போக வேண்டும். நீ அரட்டையடித்துக் கொண்டிருக்கிறாயே,' என்று வந்து சொல்வதுதான்.

குரு உன்னை எங்கும் இட்டுச்செல்வதில்லை. உன்னை எழுப்ப மட்டுமே செய்கிறார். 'அரட்டைப் பேச்சுகளைக் கைவிடு. ஏற்கெனவே நிறைய நேரத்தை வீணடித்துவிட்டாய். இதற்கு மேலும் நேரத்தை வீணடிக்காதே.' என்று எச்சரிக்கிறார்; கடமையை நினைவுபடுத்துகிறார்.

அஷ்டாவக்கிரர் முன்னிலையில் ஜனகருக்கும் இதே நிலைதான் ஏற்பட்டிருக்கும். அவரும் 'அரட்டைப் பேச்செல்லாம் வீண். அரசனானால் என்ன, ஆண்டியானால் என்ன: பணக்காரனா யிருந்தால் என்ன, பிச்சைக்காரனாக இருந்தால் என்ன: வெற்றி பெற்றவனாய் இருந்தால் என்ன, தோல்வியுற்றவனாய் இருந்தால் என்ன – எல்லாம் வீணான அரட்டைப் பேச்சுதான். எல்லாம் கற்பனைதான். நாம் இந்தக் கற்பனைகள் ஒன்றையொன்று சார்ந்திருக்கச் செய்கிறோம். இந்தக் கற்பனைகளில்தான் நாம் வாழ்கிறோம். இவை நாமே தயாரித்த நாடகங்கள்; நாமே ஏற்பாடு செய்த விளையாட்டுகள்.

ஒருவன் எதிலாவது வெற்றி பெற வேண்டுமென்றால் இன்னொருவன் தோல்வி அடையத்தான் நேரிடும். ஆகவே விளையாட்டில் வெற்றி – தோல்வி இரண்டுமே தேவை. எல்லோருமே வெற்றி பெற விரும்பினால் விளையாட்டு நின்றுவிடும். எல்லோருமே தோல்வி அடைந்தாலும் விளையாட்டு நின்றுவிடும்.

நாம் ஒரு விளையாட்டைப் படைத்திருக்கிறோம். அதில் ஒருவன் தோல்வியடைகிறான். ஒருவன் வெற்றி பெறுகிறான். ஒருவன் புத்திசாலியாக விளங்குகிறான். ஒருவன் முட்டாளாயிருக்கிறான்.

நாம் ஒரு விளையாட்டைப் படைத்திருக்கிறோம். அதில் கற்பனையாகப் பின்னப்பட்ட வலை அமைப்பும் உள்ளது; உறுதியான குடியிருப்பும் உள்ளது. நான் சொல்ல விரும்புவதெல்லாம் இதுதான்:

அருமையான நேரம் வாய்த்துள்ளது. எழுந்திரு. கண்ணாடி உன் எதிரே உள்ளது. அதில் உன் முகத்தைச் சற்று பார். உன் கையைப் பிடித்து நதிக்கரைக்கு அழைத்து வந்திருக்கிறேன். நீரில் எட்டிப் பார் – பிரதிபிம்பத்தை. சிம்ம கர்ஜனை எந்த நொடியிலும் முழங்கலாம்.

ஹரி ஓம் தத்ஸத்

முதல் கேள்வி:

**எனது இந்தக் கேள்விக்குக் கட்டாயம் பதில் சொல்லுங்கள். இது என் வேண்டுகோள். குரு தரிசனத்திற்கு நான் எப்படி வர வேண்டும்? சீடன் குருவிடம் போகும்போது எப்படிப் போகவேண்டும்? குருவிடம் எப்படிப் பழக வேண்டும்? என்னென்ன செய்யலாம்? என்னென்ன செய்யக்கூடாது?**

**சீ**டன் (சிஷ்யன்) என்பதற்குக் கற்றலில் அடக்க முடியாத பேராசை கொண்டவன் என்று பொருள். அவனது உள்ளத்தில் படிப்பு ஆசை தாகமாக எழும். கற்பித்தலில் மனம் சாதாரண நிலையில் இருக்கக்கூடும். ஆனால் கற்பதற்கான தாகம் சாதாரணமாக இருக்காது. அது விசேஷமான வேட்கையாக இருக்கும்.

ஒவ்வொருவனுமே குருவாக விளங்க விரும்புகிறான். ஆனால் சீடனாவது அரிதான செயல். குருவாக உன்னை நினைத்தால் — எந்த விஷயம் உனக்குத் தெரியாதோ, அது தெரியும்போலக் காட்டிக் கொள்கிறாய் இதனால் உன் மமதை உணர்வு திருப்தியடைகிறது. எந்தக் கேள்விகளுக்கு உனக்குப் பதில் தெரியாதோ அவற்றிற்கும் நீ பதிலளிக்கிறாய். ஏனென்றால் உனக்குப் பதில் தெரியாது என்று உன்னால் எப்படி ஒப்புக்கொள்ள முடியும்? நீ சொல்லும் சில யோசனைகளை ஒருவன் பின்பற்றினால் அவன் பள்ளத்தில்தான் விழ நேரிடும். ஏனெனில் உன் யோசனைகள் அனுபவத்தின் அடிப்படையில் உதித்தவை அல்ல. பிறருக்கு யோசனை சொல்வது உனக்குப் பிடித்தமான விளையாட்டாக இருக்கிறது.

மக்களைப் பார். பிறருக்கு உபதேசம் செய்வதில் இன்பம் காண்கிறார்கள். இந்த உபதேசிகளிடம் மாட்டிக்கொண்டால் போதும்.

உடனே ஆர்வத்துடன் ஆலோசனை தர ஆரம்பித்துவிடுவார்கள். எல்லோரும் எல்லா ஆலோசனைகளையும் ஏற்பதில்லை என்பது ஒரு நல்ல விஷயம். உலகில் அதிகமாகக் கிடைப்பது ஆலோசனை. உலகில் குறைவாக ஏற்றுக்கொள்ளப்படுவதும் ஆலோசனைதான். யார் காதால் கேட்பான் ஆலோசனையை? யார் ஏற்பான்? நல்லவேளையாக மக்கள் அந்த ஆலோசனைகளை ஏற்பதில்லை. அவற்றைப் பின்பற்றினால் புத்தி பேதலித்துவிடும். எனினும் ஆலோசனை கூறுபவர்கள், வழிகாட்டிகள் எண்ணிக்கையில் ஏராளமாக உள்ளனர்.

கற்றலில் விருப்பம் ஏற்படுவது அரிதானது. ஒருவர் கற்க ஆசைப்படுவதாகச் சொன்னால் என்ன அர்த்தம்? 'எனக்கு அந்த விஷயம் தெரியாது என்று ஒப்புக்கொள்கிறேன்; நான் அறிவு குறைந்தவன் என்று ஒப்புக்கொள்கிறேன்; அறிவைப் பெறுவதில் நான் என்னை சமர்ப்பித்துக் கொள்ள சம்மதிக்கிறேன்; நான் பிட்சை கேட்டுப் பையை விரிக்க சம்மதிக்கிறேன்.' இவ்வாறெல்லாம் அர்த்தமாகும். வெட்கம், தயக்கத்தைக் கைவிட்டு பிட்சை ஏந்தப் பையை விரிக்கும் தைரியமுள்ளவனே சீடனாக முடியும். பற்று, ஒட்டுதல், சங்கோஜம், வெட்கம் எல்லாவற்றையும் விட்டுத்தான் ஒருவன் சிஷ்யனாகலாம்.

சீடன் ஆவதன் அர்த்தம் என்ன? ஒருவன் 'என் கடந்த காலம் முழுவதும் பயனற்றது, தவறானது, இதை நான் ஒப்புக்கொள்கிறேன்' என்று கூறுவதுதான்.

ஒருமுறை இத்தாலிய யுவதி ஒருவள் சந்நியாசம் பெற்றுக் கொண்டாள். அங்குமிங்கும் அலைந்து, தடுமாறி இங்கே நாலு நாள் தங்குவதற்காக வந்தாள். நாடு முழுதும் சுற்றியிருக்கிறாள். பல ஆசிரமங்களுக்குச் சென்றிருக்கிறாள். நிறைய சத்சங்கங்களில் பங்கேற்றிருக்கிறாள். ஆனால் அலைச்சல்தான் பலன். யாரோ சொன்னதன் பேரில் இங்கு வந்துசேர்ந்தாள். இன்று அவள் திரும்பிச் செல்லத் திட்டமிட்டிருந்தாள். நேற்று அவள் இதயபூர்வமாக அழுதுவிட்டாள். தான் சங்கடத்தில் தத்தளிப்பதாகச் சொன்னாள். என்ன சங்கடம் என்று நான் கேட்டேன். அவள் சொன்னாள். "நான் தங்க உத்தேசித்திருந்த நாலு நாள்களில் நேற்று வரையிலான மூன்று நாள்கள் சங்கடமான நாள்களாகிவிட்டன. இங்கு வராமல் போயிருந்தால்

நன்றாக இருந்திருக்கும். இங்கிருந்த மூன்று நாளில் நான் அறிந்துகொண்டது என்னவென்றால் நான் இதுவரை அறிந்திருந்தது எல்லாமே தவறு: இதுவரை சரியென்று நான் நினைத்ததெல்லாம் முழுமையாகச் சரியில்லை வேறு ஏதோதான் சரியானது. இப்படி நான் நினைக்கும்படி நீங்கள் இப்போது என்னை சங்கடத்தில் தள்ளி விட்டீர்கள். நான் மறுபடியும் (இத்தாலியிலிருந்து) வரவேண்டி யிருக்கும். இப்போது புறப்பட்டுச் செல்கிறேன் – மறுபடியும் வருவதற்காகவே."

உண்மையான சிஷ்யத் தன்மை பிறந்துவிட்டது!

எந்த நொடியில் உன் கடந்த காலம் எல்லாம் வீணானது, குப்பைகூளமானது என்று உனக்குத் தெரியவருகிறதோ அக்கணமே நீ சீடனாகிறாய். இதை ஒப்புக்கொள்வது மிகவும் கடினமானது. ஏனெனில் கடந்த காலம் என்பது அகங்காரமான காலம். நீ இதுவரை செய்தது, யோசித்தது, புரிந்துகொண்டது ஆகியவற்றை அஸ்திவார மாகக் கொண்டு உன் அகங்காரம் நிற்கிறது. அவையெல்லாம் சரியென்றால் அகங்காரம் இருந்துவிடலாம். ஆனால் அவை எல்லாம் தவறாயிற்றே. எந்த நொடியில் உன் கடந்த காலம் முழுவதும் அடர்ந்த இரவுக்கு சமம் என்று உனக்குத் தோன்றுகிறதோ அக்கணமே நீ சீடனாக ஆகிவிடுகிறாய்.

இன்னொரு விஷயம் நினைவில் வை. கடந்த கால வாழ்க்கையில் சில நடவடிக்கைகள் தவறானவை என்று ஒப்புக் கொள்கிறாய். சில விஷயங்கள் சரியானவை என்று கருதுகிறாய். ஆகவே நீ சீடனாகிவிட முடியுமென நினைக்கிறாய். அப்படியெல்லாம் நடக்காது. ஒன்று, உன் கடந்த கால வாழ்க்கையில் எல்லாம் தவறு அல்லது எல்லாம் சரி என்ற நிலைமை மட்டுமே இருக்க முடியும். சில விஷயங்கள் தவறு, வேறு சில விஷயங்கள் சரி என்பதற்கு வாய்ப்பில்லை.

சத்தியத்தைத் தேடிச் செல்லும் முயற்சியில் சமரசத்திற்கு, விட்டுக் கொடுத்தலுக்கு இடமில்லை. சத்தியம் என்பது உடன்படிக்கை இல்லை விட்டுக்கொடுக்க. அதில் சரியென்றால் முழுதும் சரி. தவறென்றால் முழுதும் தவறு. அகங்காரம் மேலோங்கியிருந்தால் என்ன சொல்வாய் தெரியுமா? "என் வாழ்க்கையில் சில விஷயங்கள் தவறுதான்.

அவற்றைச் சரிசெய்துவிடலாம். மற்றபடி வாழ்க்கையில் மீதி எல்லாம் சரியாகத்தான் இருந்தது.'' என்பாய்.

அப்படியானால் உன் வாழ்க்கையில் ஒருபொழுதும் புரட்சி ஏற்படாது. சீர்திருத்தம் அல்லது செப்பம் ஏற்படலாம். ஆனால் சீடன் தீவிரமாக விழைவது சீர்திருத்தம் அன்று. அவன் மாபெரும் புரட்சி நிகழப் பேராசைப்படுகிறான். சிஷ்யன் சொல்கிறான்: ''நான் என் கடந்த காலம் முழுவதிலுமிருந்து என்னைப் பிரித்து விலகி நிற்க விரும்புகிறேன். மறுபடியும் முதலிலிருந்து வாழ்க்கையை ஆரம்பிக்க விரும்புகிறேன். அ–ஆ–இ என்று மீண்டும் தொடங்க விரும்புகிறேன். நான் மீண்டும் பிறவி எடுக்க விரும்புகிறேன்.'' இதெல்லாம்தான் சீடனின் பெருவிருப்பமாக இருக்கும். அவன் கூறுவான். ''அன்னை – தந்தை மூலம் நான் ஒரு பிறவி எடுத்தேன். இப்போது சத்குருவின் மூலம் புதுப்பிறவி எடுக்க ஆசைப்படுகிறேன். உடலால் ஒரு பிறவி எடுத்தாகிவிட்டது. இப்போது நான் என் ஆத்மாவின் பிறப்பு ஏற்பட வேண்டுமென விரும்புகிறேன்.''

இந்த அளவிற்கு ஒப்புக்கொள்ளக்கூட மிகுந்த தைரியம் வேண்டும். என்னிடம் வருபவர்கள், ''ஆம், எங்கள் வாழ்க்கையின் சில அம்சங்கள் தவறென உணர்கிறோம். ஆனால் எல்லா விஷயங்களும் தவறானவை அல்ல,'' என்றுதான் நிறுத்திக்கொள்கிறார்கள்.

இதைப் பற்றி நீ மறுபடியும் யோசி. உன் கண்ணோட்டம் தவறானால் உன் வாழ்க்கையின் சில அம்சங்கள் மட்டுமே தவறாக இருக்க முடியாது. எல்லாமே தவறாகத்தான் இருக்கும். உன்னிட மிருந்து, உன் சுவாசத்திலிருந்து வெளியானவை, ஏற்பட்டவை சரியானவை என்று தற்செயலாகத் தோன்றலாம். உண்மையில் அவை சரியானவையாக இருக்க முடியாது.

நீ தானதர்மம் செய்யலாம். ஆனால் அந்த தானத்தில் பேராசை மறைந்திருக்கும். நீ சொல்லுவாய். ''ஆமாம், பேராசை பொதுவாக ஒரு கெட்ட குணம் தான். ஆனால் நான் கட்டியதோ கோயில் அல்லது மசூதி அல்லது குருத்வாரா. ஆகவே என் பேராசை கெடுதலாகக் கருதப்படுவதிற்கில்லை.''

ஆனால் நான் சொல்லுவேன். ''நீ கோயில், மசூதி, குருத்வாரா எதை வேண்டுமானாலும் நிர்மாணி. ஆனால் அடிப்படையில் நீ

லோபியானால் உன் கோயிலிலும் அந்தப் பேராசையே இருக்கும். பரலோகம் அடைய வேண்டும், சுவர்க்கம் கிடைக்க வேண்டும் என்பதற்காக நீ கோயில் கட்டியிருக்கலாம். ஆனால் அது பேராசை என்ற கெட்ட குணம்தான். லோப குணம் உள்ளவன் தானியாக, வள்ளலாக ஆக முடியாது. பேராசைக்காரன் ஓரிடத்தில் தானம் செய்தால் அதன் எதிர்க்கரையில் ஆயிரம் மடங்காகத் திரும்பக் கிடைக்க வேண்டும் என்ற எதிர்பார்ப்புடன்தான் செய்வான். இதற்குப் பெயரா தானம்? இது வெறும் பேர வியாபாரம்தானே.

"தானம் என்பதற்கு நாம் நிபந்தனை ஏதுமின்றி ஒன்றைக் கொடுக்கிறோம் என்று அர்த்தம். கொடுப்பதில் ஒருவகை இன்பம் உணர்ந்து கொடுத்தலே தானம். இங்கேயே, இப்பொழுதே அந்த இன்பம் உணரலாம் என்பதால் கொடுத்தலே தானம். எதிர்காலத்துடன் சம்பந்தப்படாமல், எந்த பிரதிபலனையும் எதிர்பார்க்காமல், எந்தப் பரிசுக்கும் ஆசைப்படாமல், 'கொடுப்பதில் இன்பம் காண்பதால் கொடுக்கிறேன்' என்பது தானம். கொடுப்பதால் எதுவும் பலன் கிடைக்க வேண்டும் என்று எதிர்பார்த்தால் அங்கே பேராசை வந்து நிற்கிறது."

பேராசை என்றால் பலனை எதிர்பார்த்தல், பிரதிபலனுக்கு ஆசைப்படுதல் என்று பொருள். தானம் என்றால் பலனை எதிர்பாராமல், பிரதிபலனுக்கு ஆசைப்படாமல் கொடுத்தல் என்று பொருள். கொடுப்பதில் இன்பம். கொடுத்தல் ஆனந்தம்.

நீ யாருக்காவது எதையாவது கொடுத்து நன்றி என்ற சொல்லை எதிர்பார்த்தால்கூட உன் தானம் களங்கப்பட்டுவிடும். உன்னிடம் தானம் பெற்றவன் உனக்கு நன்றி சொல்கிறானா, இல்லையா என்று, நீ திரும்பிப் பார்த்தால், பிறகு எப்பொழுதாவது நீ நன்றிகூட சொல்லாத, தகுதியற்றவனாகிய இவனுக்கு தானம் கொடுத்தேனே என்று யோசித்தால், நீ கொடுத்த தானம் மதிப்பை இழக்கும்.

**ஜென்** துறவி ஒருவரிடம் ஒருவன் ஆயிரம் பொற்காசுகள் கொண்டு வந்தான். தானமாகக் கொடுப்பது மற்றவர்களுக்குத் தெரிய வேண்டுமென்பதற்காக ஓசையுடன் பொற்காசுப் பையைத் தரையில் போட்டான். துறவி அமர்ந்திருந்த ஆலயம் முழுவதிலும் அந்த ஓசை

எதிரொலித்தது. கணகணவென்று கேட்டது. மக்கள் அப்படித்தானே தெரியும்படி தானம் செய்கிறார்கள்.

"ஏம்பா, பையை கொஞ்சம் மெதுவாக வைக்கக்கூடாதா?" துறவி கேட்டார்.

அந்த மனிதன் திகைத்துப்போனான். ஏனென்றால் அவன் ஒரு கோடீஸ்வரன். அந்த கிராமத்தில் எல்லோரையும் விட பணக்காரன். இவரோ பக்கிரி சாமியார், பரம ஏழை. அவன் கொடுப்பதற்கல்லவா வந்திருக்கிறான். இவரோ பையை மெதுவாக வைக்கக் கூடாதா என்று துணிச்சலாகக் கேட்கிறாரே! ஆனாலும் அவன் சொன்னான், "சுவாமி, தங்களுக்கு அளிப்பதற்காக லட்சக் கணக்கில் பணம் கொண்டு வந்திருக்கிறேன்."

துறவி சொன்னார், "சரிதான்!"

இவர் நன்றி என்றுகூட சொல்லவில்லையே என்று அந்தப் பணக்காரன் சங்கடப்பட்டான். "சுவாமி, ஏதாவது சொல்லுங்களேன்," என்றான்.

துறவி: "இன்னும் என்ன சொல்ல வேண்டும்? எனக்கு நன்றி சொல்லிவிட்டு புறப்பட்டுப் போ."

பணக்காரன் சொன்னான்: "சுவாமி, இது கொஞ்சம் வழக்கத்திற்கு விரோதமாகத் தெரிகிறதே. நானா உங்களுக்கு நன்றி சொல்லிவிட்டுப் போகவேண்டும்? தங்கள் பேச்சு புரியவில்லையே."

துறவி விளக்கினார்: "நீ கொடுத்த தானத்தை ஏற்றுக் கொண்டேன். அதற்காக எனக்கு நீ தட்சிணை கொடுக்கவில்லையே. நீ எனக்கு நன்றி தெரிவிக்கவில்லையே. நீ கொடுத்த தானத்தை நான் ஏற்க மறுத்திருக்கவும் முடியும். நான் மறுத்திருந்தால் நீ என்ன செய்திருப்பாய்? இப்போதாவது எனக்கு நன்றி சொல்லு. இல்லாவிடில் பணப்பையை எடுத்துக்கொண்டு போ. உன் வீட்டிற்குத் திரும்பிச் செல். மறுபடியும் இந்தப் பக்கம் வராதே."

தானம் என்பதன் அர்த்தம் இதுதான். நீ பார்த்திருப்பாயே, இந்துக்கள் தானம் கொடுத்தபின் அதை ஏற்பவருக்கு தட்சிணையும் தருகின்றனர். தட்சிணை என்பது ஒருவர் தானத்தை ஏற்றுக் கொண்டதற்

காக நன்றி தெரிவிப்பதன் அடையாளம்தான். தட்சிணையின்றி தானம் அரைகுறையாகக் கருதப்படும். பேராசை காரணமாக எதையும் அளிப்பது தானமாகாது. அந்த தானம் பேராசையின் விரிவாக்கம் மட்டுமேயாகும்.

உன் பார்வை தவறாக இருந்தால் நீ செய்வதெல்லாம் தவறாகத்தான் முடியும். நீ கோயிலுக்குச் செல்வது தப்பு. நீ செய்யும் பூஜை தப்பு. உன் பிரார்த்தனை தப்பு. உன்னிடமிருந்து உருவாகும் நடவடிக்கைகள் எப்படிச் சரியானவையாக இருக்க முடியும்? நீ சரியானவனாக இருந்தால் உன் செய்கைகளும் சரியாகவே அமையும்.

ஆகவே கிருஷ்ணன் அர்ஜுனனிடம் சொல்கிறார். "நீ போரிடு. நீ உள்ளே சரியானவனாக இருந்தால் போதும். நீ உள்ளே பரமாத்மாவுடன் இணை. 'நான்' இல்லை; எல்லாம் 'அவன்' என்று உள்ளே அனுபவம் பெறு. அப்புறம் நீ வெட்டு. கவலையின்றி வெட்டித் தள்ளு. இந்த ஹிம்சையில் பாவம் கிடையாது."

இதைப் புரிந்துகொள். கிருஷ்ணன் சொல்கிறார், "நீ உன்னை பரமாத்மாவிற்கு சமர்ப்பித்துவிட்டு ஹிம்சைச் செயல்கள் புரிந்தாலும் பாவமாகாது." நான் சொல்வது: "பேராசை காரணமாக நீ தான புண்ணியம் செய்தாலும் அது பாவமேயாகும். உன் பிரார்த்தனையில் பிரதிபலனாக ஏதேனும் கோரிக்கை இருந்தால் அது பாவமாகிவிடும். உனது பிரார்த்தனை உன்னத உணர்வின் வெளிப்பாடாக மட்டும் இருந்தால் அது புண்ணியச் செயலாகிவிடும்."

நீ கேட்டாயல்லவா – குருவை தரிசிக்கச் சீடன் எப்படிப் போவது? குருவிடம் எப்படி நடந்துகொள்வது? அவன் என்னென்ன செய்யலாம்? என்னென்ன செய்யக்கூடாது? முதலில் செய்ய வேண்டியது – நீ ஆழ்மனத்தில் சிஷ்யத் தன்மை தோன்றவிடு. நான் சொல்வதைக் காது கொடுத்துக் கேட்டு கற்பது. அதை அறிவாக்கிக் கொள்வது. அதன் மூலம் உன் நினைவாற்றலைப் பெருக்கிக்கொள்வது – இவை மட்டுமே சிஷ்யத் தன்மை ஆகா. இதனால் நீ மாண வனாகலாம், சீடனாகமாட்டாய்.

மாணவனுக்கும் சீடனுக்கும் இடையே உள்ள வேறுபாட்டைப் புரிந்துகொள். மாணவன் ஏட்டுக் கல்வி கற்கிறான். சொல்லித்

தருபவற்றைச் சேகரித்து வைத்துக்கொள்கிறான். நினைவுப் பெட்டியில் போட்டுவைக்கிறான். அதை மனப்பாடம் செய்கிறான். தகவல்கள் சேகரிக்கிறான். அவனது அறிவு வளம் பெறுகிறது. நினைவாற்றல் பரிபூரணமடைகிறது. ஒவ்வொரு கேள்விக்கான பதிலையும் மூளைக்குள் திரட்டி வைக்கிறான். அவனைத் திரட்டாளன் எனலாம். சிலர் பணம் சேகரிப்பதுபோல் இவன் ஞானம் சேர்க்கிறான்.

சீடன், மாணாக்கன் மாதிரியானவன் இல்லை. அவன் ஆத்மாவை அறிவதில் ஈடுபடுகிறான். அவன் சத்தியத்தைத் தேடுவதில் ஈடுபடுகிறான். அவன் தனது ஞாபக சக்தி திரண்டு வளர்ந்திருக்கிறதா, மூளையில் தகவல்கள் குவிந்துள்ளனவா என அறிவதில் நாட்டம் கொள்வதில்லை. இதை அறிந்து அவனுக்குப் பயன் ஒன்றும் இல்லை. உலகியல் தகவலறிவு அமைந்திருப்பதோ, இல்லாமல் போவதோ முக்கியமில்லை என்றும், தன் ஆத்மா வெளிப்படுவதுதான் முக்கியம் என்றும் அவன் கருதுகிறான். 'நான் சூன்யமாகி, வெற்றாளாகிப் போனாலும் பரவாயில்லை. என் ஆத்மா மலர்வதுதான் அவசியம்' என்று அவன் நினைக்கிறான்.

ஆங்கிலத்தில் பார்த்தால் இருத்தல், அறிதல் (பீயிங், நாலெஜ்) என இரு சொற்கள். மாணவனின் விருப்பம் நாலெஜ் – அறிவுபெறுதல். சீடனின் விருப்பம் இருத்தலுடன், ஆத்மாவுடன் சம்பந்தப்பட்டது. 'நான் இன்னும் ஆழத்தில் பிரவேசிக்க வேண்டும். மகாபெரியவனாக வேண்டும். விரிந்து பரவ வேண்டும். என் எல்லைகள் அழிந்துபோகட்டும். நான் வானில் பறக்க வேண்டும். எங்கும் நிறைந்த பரம்பொருளில் கலந்துவிட வேண்டும்,' என்றெல்லாம் ஆசைப்படுவான்.

மாணவன் பரம்பொருள் பற்றி அறிய மட்டும் விரும்புவான். ஆனால் சீடன் அதற்கு மேலும் விரும்புவான் – எப்படி பரமாத்மாவின் அம்சமாக ஆகிவிடுவது; எப்படி இறைவனில் ஆழ்ந்து மூழ்குவது; எப்படி இறை உணர்வில் தன்னையே இழப்பது; கலகலவென ஓடும் சிற்றோடையாகிய நான் எப்படி மாகடலில் கலந்து மறைந்து போவது? என்றெல்லாம் சிந்திப்பான்.

மாணவன் ஒன்றைப் பெற வருகிறான். சீடன் ஒன்றை இழக்க வருகிறான். மாணவன் குப்பை விஷயங்களைத் திரட்டி, பொட்டலம்

கட்டி, எடுத்துச் செல்கிறான். சீடனோ எதுவும் மிஞ்சாமல் வெறுமை யாகிவிட்டதை உணர்வான். கையில் இருந்ததும் நீங்கிவிட்டதெனில் எதைப் பொட்டலம் கட்டுவது? மாணவன் நிரம்பிய உணர்வுடன் திரும்புவான். சிஷ்யன் காலியாகிப்போன உணர்வுடன் திரும்புவான். மாணவன் உலகமென்னும் சந்தையில் விற்பதற்கு ஏற்றதான ஒன்றை எடுத்துச்செல்வான், சம்பாதிப்பான். சீடன் முற்றிலும் வெறுமை நிலையை அடைந்து வெறுங்கையுடன் திரும்புவான். சீடத்தன்மையை அடைவது என்பது இந்த வெறுமை நிலையை அடைவதற்கான தயாரிப்புதான். இது மிகவும் கடினமான விஷயம். இந்திக் கவிஞர் ரஹீம் மொழிகிறார்:

**சங்கடமான நிலைமை இது. இரண்டு வேலையும் மகாகடினம்,**
**உண்மையைத் தேடினால் உலகம் இல்லை.**
**பொய்வழி நடந்தால் பரமாத்மா இல்லை.**

சீடன் இந்த சங்கடமான நிலையில்தான் அகப்பட்டுக் கொள்கிறான்.

ஒருவன் தன்னை இழந்தான் எனில் அவனுக்கு பரமாத்மா கிடைத்துவிடுகிறார். ஆனால் தன்னை இழக்கும்போது உலகம் சம்பந்தப்பட்ட எல்லாவற்றையும் அல்லவா இழக்க நேரிடுகிறது.

ஒருவன் தன்னை இழந்தால் (தன்னுணர்வு அகன்றால்) சத்திய தரிசனம் கிட்டுகிறது. ஆனால் தன்னை இழக்கும்போது எக்காரணத்தால் அவன் சத்தியத்தைத் தேடி அடையக் கிளம்பினானோ அதை முழுமையாக அல்லவா இழக்க நேரிடுகிறது.

நீ முதல் முறையாக சத்தியத்தைத் தேடிப் புறப்பட்டது சத்தியம் உன் உள்ளங்கைக்குள் வசமாகிவிட வேண்டும் என்றுதானே. நீ பரமாத்மாவைத் தேடிக் கிளம்புகிறாயே எதற்காக? 'மற்ற எல்லாவற்றையும் பெற்றுவிட்டோம். பரமாத்மாவை மட்டும் ஏன் விட்டுவைக்க வேண்டும்? அவரையும் பெற்றுவிடலாமே. மிஞ்சியுள்ள இந்த சவாலை ஏன் காலியாக விட வேண்டும்' இப்படியெல்லாம் யோசித்துத்தானே?

**ச**மண மதம் நிறுவிய வர்த்தமான மகாவீரர் ஓர் ஊர் வழியாகச் சென்றுகொண்டிருந்தார். அவ்வூர் அரசன் அவரை தரிசிக்க வந்தான்.

அவன் பெயர் பிரசேனஜித். அவன் சொன்னான்: "சுவாமி, என்னிடம் எல்லாம் உள்ளன. ஆனால் நீங்கள் தியானம் செய்வதை வலியுறுத்தி சங்கடம் ஏற்படுத்தி விட்டீர்கள். என்னிடம் எல்லாம் இருந்தும் இந்த தியானம் மட்டும்தான் இல்லை. ஆகவே என் வாழ்க்கையிலேயே ஏதோ குறைபாடு உள்ளதாகத் தோன்றுகிறது. அது நீங்க அந்த தியானம் எனக்கு வேண்டும். அதை நான் பெறுவதற்கான விலையாக நீங்கள் எவ்வளவு அளிக்கச் சொன்னாலும், நான் தருவதற்கு சம்மதிக்கிறேன்."

மகாவீரர் அந்த ஊருக்கு வந்திருப்பதால், எங்கும் தியானத்தைப் பற்றிப் பேச்சாக இருந்ததால் அரசன் பிரசேனஜித்தும் கேள்விப் பட்டிருப்பான். இதனால் பதற்றமடைந்திருப்பான். அவனிடம் எல்லாம் இருந்தன. பொக்கிஷப்பட்டியலில் பாதுகாப்பாக வைக்கப்பட்டிருந்தன. பணம், பதவி, சமூக மதிப்பு எல்லாம் அவனிடம் இருந்தன. அவன் இருப்புப் பதிவேட்டைத் திறந்து பட்டியல் பார்த்தான். அதில் தியானம் மட்டும் இல்லை. ஏன் இப்படி? மக்கள் தியானம் பற்றி பேசுகிறார்கள். சிலர் தியானமும் செய்ய ஆரம்பித்துவிட்டனர். தியானத்தால் கிடைத்த மிடுக்குடன் சிலர் காணப்பட்டனர். சிலரின் கண்களில் தியானம் செய்கிறோம் என்ற போதை தெரிந்தது. தன் விஷயம் மட்டும் வித்தியாசமாய் .. ஏன் இப்படி? அரசன் அமைதியிழந்தான். அவன் மகாவீரரிடம் சொன்னான்; "என் வாழ்விலும் தியானம் இடம்பெற நான் எதையும் செய்யத் தயாராக இருக்கிறேன். அதற்குரிய விலைமதிப்பு எதுவானாலும் கட்டுகிறேன்."

மகாவீரருக்குச் சிறிது சங்கடமேற்பட்டது. இந்த பிரஸேனஜித் உளறுகிறானே. என்ன பதில் சொல்வது? தியானம் என்பது விலைகொடுத்து வாங்கக் கூடிய பொருளல்லவே. பதில் சொல்லக் கொஞ்சம் தயக்கமாக இருந்தது. தன் பதிலைக் கேட்டு மன்னன் வருந்துவானே என்று யோசித்தார். அவன் கேட்பது முட்டாள்தனமான கேள்வி. ஆனால் மகாராஜாவாயிற்றே.

அவர் தயங்குவதைக் கண்டு பிரஸேனஜித், "சுவாமி, நீங்கள் கூச்சப்படாதீர்கள். ஒரு லட்சம், இரண்டு லட்சம் என்ன, பத்து லட்சம் தங்கக் காசுகள்கூட தர தயாராக உள்ளேன். வாய்க்கு வந்த தொகை கேளுங்கள். ஊரில் பலர் தியானம் பற்றி பேசுகிறார்கள். என்னிடம்

மட்டும் தியானம் இல்லை என்பது உறுத்தலாக உள்ளது." என்று ஏக்கத்துடன் சொன்னான்.

மகாவீரருக்கு ஒரு வேடிக்கை தோன்றியது. அவர் ஊரில் ஓரிடத்தைக் குறிப்பிட்டு, "நீ அங்கே போ. அங்கே ஓர் ஏழை வசிக்கிறான். அவனுக்கு தியானம் வசப்பட்டுவிட்டது. நீ அவனிடம் விலைக்கு வாங்கிக்கொள்," என்று ஆலோசனை கூறினார்.

"நீங்கள் சரியாகச் சொன்னீர்கள். இதோ கிளம்பிவிட்டேன்," என்று மன்னன் புறப்பட்டான். தேரில் சவாரி செய்து ஏழையின் குடிசையை அடைந்தான். அரசனைப் பார்த்து ஏழை அரண்டு போய்விட்டான். வாசலுக்கு வந்து அரசன் கால்களில் விழுந்தான்.

அரசன் தட்டிக்கொடுத்தான். "பயப்படாதே. தியானம் என்று சொல்கிறார்களே. அப்படியென்றால் என்ன? உனக்கு அது கிட்டிவிட்டதாக மகாவீரர் சொன்னார். அதை நீ எனக்குக் கொடு. நீ வாயில் வந்த விலையைச் சொல்லு. எவ்வளவானாலும் தந்து விடுகிறேன்," என்று உறுதியளித்தான்.

அந்த மனிதன் பதில் சொன்னான், "ஆமாம், அரசர் பெருமானே. அது எனக்குக் கிடைத்துவிட்டது உண்மைதான். அதை நான் தங்களுக்கு அளிக்கவும் சித்தமாக உள்ளேன். ஆனால் நீங்கள்தான் அதை ஏற்றுக்கொள்ளத் தயாராக இல்லை."

அரசன் கோபத்துடன், "ஏ பைத்தியம், நல்ல நினைவோடுதான் பேசுகிறாயா? நான் எவ்வளவு பணம் வேண்டுமானாலும் தர தயாராக இருக்கிறேன். ஆனால் நான் பெற்றுக்கொள்ள தயாராக இல்லை என்று உளறுகிறாயே," என்றான்.

ஏழை மனிதன் விளக்கினான்.

"அரசர் பெருமானே! இதனால்தான் நீங்கள் எடுத்துக்கொள்ளத் தயாராக இல்லை என்று கூறுகிறேன். நீங்கள் தியானத்தை ஏதோ விலை உயர்ந்த பொருளென நினைக்கிறீர்கள். அது என்ன தனிப்பொருளா நான் எடுத்துக் கொடுப்பதற்கு? என் கையிலிருந்து உங்கள் கைக்கு அதை மாற்றித் தரவா முடியும்? அதைப் பெறுவதற்கு நீங்கள் முதலில் மாற வேண்டும். அது பணம் கொடுத்தால் கிடைக்காது. இதற்காக

ஆத்மாவையே முழுமையாக சமர்ப்பிக்க வேண்டும். அதன்பின் நீங்கள் இப்போது இருப்பதைப்போலன்றி மாறிப்போயிருப்பீர்கள். உங்களுக்குள் ஒரு புதிய ஞானம்; புதிய பிரக்ஞை, புதிய வீர்யம் பிறக்கும். நீங்கள் என் உயிரைக் கேளுங்கள்; தந்துவிடுகிறேன். தியானம் தரும்படி கேட்காதீர்கள். அதை நான் எப்படி எடுத்துத் தர முடியும்? கத்தியால் நான் குத்திக்கொண்டால் இங்கே, இப்போதே இறப்பேன். நீங்கள் அரசர், நாட்டின் எஜமானர். நான் ஏழை மனிதன். எப்போதும் உங்கள் சேவையில் ஈடுபட்டுள்ளேன். உங்களுக்காக என் உயிரையும் தியாகம் செய்வேன். ஆனால் தியானத்தை எப்படி நான் கொடுக்க இயலும்?"

உடலில் கத்தியைச் செருகினால் உயிர் போய்விடும். ஆனால் தியானத்தைக் கத்தியால் குத்த உபாயம் எதுவும் கிடையாதே. கிருஷ்ணன் சொல்வதுபோல் அதை ஆயுதம் பிளக்காது (நைநம் சிந்தந்தி ஸஸ்த்ராணி). நெருப்பு அதை எரிக்க முடியாது. அந்நிலையைத் தேடுவதற்கு நீங்கள் புறப்பட்டபோது எதைத் தேடக் கிளம்பியுள்ளீர்கள் என்று ஆரம்பத்தில் உங்களுக்குச் சரியாகத் தெரியவில்லை. மற்ற பொருள்களைத் தேடிச் செல்வதுபோல் தியானத்தையும் தேடிப்பெறக் கிளம்பியுள்ளீர்கள். அதுவும் ஒருவகைப் பேராசைதான். குருவின் ஸத்ஸங்கம் கிடைத்தால்தான், பேராசையைக் கைவிட்டால்தான் தியானம் என்பது வசமாகும் என்பதை அனுபவபூர்வமாக அறிந்துகொள்வீர்கள். தியானம் என்பது பேராசையின் ஓர் அங்கமாக இருக்க முடியாது. பேராசை காரணமாக வருகிறீர்கள். பிறகுதான் கொஞ்சம் கொஞ்சமாக அந்த காரணம் தவறு என்று தெரியவருகிறது.

சீடன் சங்கடமான நிலையில் இருக்கிறான். ஒருபுறம் குரு கூப்பிடுகிறார். தொலைவிலுள்ள சிகரங்களின் அழைப்பு, எல்லையற்ற வானின் கவர்ச்சி, சின்னஞ்சிறு ஆன்மீகத் தோற்றங்கள் ஆத்மரஸத்தின் சில துளிகள் சொட்டுகின்றன. கொஞ்சம் அளவில் மழைத்தூறல். இன்னொரு புறம் உலகம் அழைக்கிறது. ஜென்ம ஜென்மங்களாகச் சேர்ந்துவிட்ட வினைப் பயன்களின் இழுப்பு, வலிந்து கூப்பிடும் காம உணர்வு, திமிரேற்றும் இறுமாப்பு – இவையெல்லாம் மனிதனை வேறெங்கே போகிறாய்?' என்று தடுத்துக் கூவித் தம்மிடம் அழைக்கின்றன. சீடன் திரிசங்கு நிலையில் ஊசலாடுகிறான்.

நீ என்னிடம், "குரு தரிசனத்திற்கு எப்படிப் போவது?" என்று விசாரிக்கிறாய்.

குரு தரிசனத்திற்கு வருவது என்பதற்குத் தன்னையே கரைந்துபோகச் செய்தல் என்பதுதான் அர்த்தம். குருவை முழுமையாகப் பார்ப்பது உடலிலுள்ள கண்களால் முடியாத காரியம். சீடன் தேடி வரும்போது ஒருவகைப் பார்வையோடு வருகிறான். அப்போதுதானே நான் தென்படுவேன். மாணவன் வரும்போது அவனுடைய கண்கள் பார்க்கும் விதம் வேறு. அவனுக்கு நான் தெரிவதில்லை. அல்லது அக்கண்களுக்கு ஏற்றபடித் தெரிகிறேன் என்று சொல்லலாம். என்னைப் புரிந்துகொண்ட, பாசமும் அன்புமுள்ள நண்பர் வருகிறாரெனில் அவருக்கு வேறுவிதமாகத் தெரிவேன். என்னுடன் வலிய விவாதம் செய்ய, தன் சாஸ்திரங்களை நிரூபிக்க என எதிர்ப்பாளர் வருகிறாரெனில் அவருக்கு வேறொரு தோற்றத்தில் தெரிவேன். தோற்றம் என்பது பார்க்கும் கண்களைப் பொறுத்தது.

நீ சீடனாக வர விரும்பினால் உன்னை ஒன்றுமில்லாதவனாக, சூன்யமானவனாக ஆக்கிக்கொண்டு வா. என்னிடம் வரும்போது உன்னை வெளியே வைத்துவிட்டு வா. நீ உன்னையும் (தன்னுணர்வையும்) எடுத்துக்கொண்டு வருவாயானால் உனக்கு நீ மட்டுமேதான் காட்சியளிப்பாய். என்னை உன்னால் பார்க்க முடியாது. ஏனெனில் நீ என்னை மறைத்தபடி நிற்கிறாய். உன்னை வெளியே நிறுத்திவிட்டு, சூன்யத்தைப் போல வெறுமை ஆகி, எழுதப்படாத காகிதம் போல் இருந்து என்னிடம் வந்தாயானால் நீ என்னைப் பார்க்க இயலும். அப்போது நம் இருவரிடையே ஒரு பாலம் நிர்மாணிக்கப்பட்டுவிடும். குரு – சீடன் பொருந்தி இணையும் சம்பவம் நிகழும். நீ எனக்குள் நிரம்பும்போது, கவிஞர் ரஹீம் பாடிய 'காதலன் கட்டழகு கண்களில் குடியேறும்' என்ற நிலை உருவாகும். குரு – சீடன் சம்பந்தம் ஆழம் காண முடியாத அன்பு சம்பந்தம். இது ஞானத்தின் சம்பந்தமோ, புத்திவழி சம்பந்தமோ இல்லை. இது இதயங்களின் இணைப்பு.

உன்னுடைய கருத்துகள் என்னுடைய கருத்துகளுடன் ஒத்துப்போகின்றன என்று வைத்துக்கொண்டால் அதனால் நீ என் சீடனாகக் கருதப்பட மாட்டாய். கருத்து உடன்பாடு காரணமாக நீ என்னுடன் சேர்ந்து நிற்கிறாய், அவ்வளவுதான். நாளை உன்

கருத்துகளோடு நான் உடன்படாவிட்டால் என்ன ஆகும்? நீ என்னைவிட்டுப் பிரிந்து போய்விடுவாய் அல்லவா?

எத்தனையோ பேர் என்னிடம் வந்திருக்கின்றனர். ஏராளமான வர்கள் என்னைவிட்டுச் சென்றும் இருக்கின்றனர். வந்தவர்களுக்கு அவர்களின் கருத்துகளுடன் நான் ஒத்துப்போவதாகத் தோன்றியது. அதாவது, உண்மையில் அவர்கள் என்னுடன் இல்லை. நான் அவர்களுடன் இருப்பதாக அவர்களுக்குப் பட்டது. என் கருத்துகள் அவர்களுடன் உடன்படுவதாக நினைத்ததால் அவர்கள் மையத்தில் இருந்தனர். என் கருத்துகள் அவர்களை ஆமோதிப்பதாக நினைத்தனர். இதனால் களிப்படைந்தனர். பிறகு நாளடைவில் அவர் களுக்கு என் கருத்துகள் சிலவே அவர்களுடன் உடன்படுகின்றன, எல்லா கருத்துகளும் அல்ல என்பது தெரியவந்ததும் அவர்களுக்கு சங்கடமேற்பட்டது. அதன்பின் அவர்களால் என்னுடன் தங்க முடியவில்லை. பயந்துபோய் என்னைவிட்டு அகன்றுவிட்டனர்.

உன் கருத்துகள் என்னுடன் ஒத்துப்போவதால் நீ இங்கே இருக்கிறாய் எனில் உன்னை சீடன் என்று முடிவுகட்ட முடியாது. அதிகபட்சம் என்னைப் பின்பற்றுபவன் என்று சொல்லலாம். உண்மையில் சீடன் எவனோ அவன் சொல்லுவான்: "கருத்துகளைப் பற்றி அக்கறையில்லை. உள்ளம் உள்ளத்துடன் சேருகிறது. கருத்து அல்லது சிந்தனை மேலோட்டமான விஷயம். உள்ளங்கள் இணைவது உள்ளே நடக்கும் விஷயம். அப்போது ஆத்மாக்கள் சந்திக்கின்றன."

குருவுடன் தன் கருத்துகள் ஒத்துப்போகின்றன என்ற வகையில் சீடன் எண்ணமாட்டான். நான் குருவுடன் ஒத்துப்போகிறேன் என்றே சீடன் கருதுகிறான். என்றாவது தான் குருவுடன் உடன்படவில்லை என்றால் அதற்குரிய காரணத்தைச் சீடன் தனக்குள்ளேதான் தேடுவான். மீண்டும் ஒன்றுசேர்வதற்காக அவன் அந்த காரணங்களை விலக்கிவிடுவான்.

ஆனால் நான்தான் அவர்களுடன் ஒத்துப்போக வேண்டும் என்று எண்ணுபவர்கள், என்றாவது நான் வித்தியாசப்படுவதாகத் தெரிந்தால், என்னை உதறிவிடுவார்கள். எனக்கேற்றபடி தாங்கள் மாற வேண்டும் என்று அவர்கள் நினைத்ததில்லை. தாங்கள் சரியாகத்தான் இருப்பதாக நினைக்கிறார்கள். அவர்கள் என்னிடம் பாராட்டுச்

சான்றிதழ் பெறவே வந்தவர்கள். அல்லது ஒருவேளை எனக்கே பரீட்சை வைத்துச் சோதிக்க வந்திருக்கலாம். அல்லது தாங்கள் அறிந்த சத்தியத்தை எனக்குள் நிரப்ப வந்திருக்கலாம். அவர்கள் கண்டறிந்த சத்தியம் மேலும் உயர்ந்ததாகத் தெரிவதற்காக, அதற்கு என்னை ஒரு சாட்சியாகப் பயன்படுத்திக்கொள்ள வந்திருக்கலாம். அவர்கள் கண்ட சத்தியத்துடன் நான் என்றைக்கு உடன்படவில்லையோ அவர்களின் பாதை வேறாகப் பிரிந்துவிடுகிறது.

சீடன்—குரு இணைப்பிற்குப்பின் வழி ஏதும் பிரிவதில்லை.

காதலன் கட்டழகு கண்களில் குடியேறும் என்றபடி குரு தன் சீடனின் உள்ளத்தில் முழுமையாக வியாபித்துவிடுகிறார். சீடன் அவரது இயல்பில் லயித்துவிடுகிறான். அவரது இயல்பைப் பெற்றுவிடுகிறான். பிறகு அவன் மிஞ்சியிருப்பதில்லை. அவன் மூலம் குருதான் பேசுகிறார். குருதான் அவனாக நடனமாடுகிறார். அவன் மூலம் மென்குரலில் பாடுகிறார். சிறிது சிறிதாக, சீடன் காணாமல் போய்விடுகிறான். குருவின் இன்னொரு சிலைபோல் வந்து நிற்கிறது. கவிஞர் ரஹீம் பாடுகிறார், "சத்திரம் நிறைந்திருப்பது கண்டு வழிப்போக்கர்கள் திரும்பிப்போய்விட்டனரே."

ஆம், உன் இதயம் குருவால் நிரம்பியிருக்கும்போது வழிப்போக்கர்கள் நுழைய முடியாமல் திரும்பிவிடுகின்றனர். முன்பு சத்திரம் காலியாக இருந்தபோது ஆக்கிரமித்த வழிப்போக்கர்களை எவ்வளவோ உபாயம் செய்தும் வெளியேற்ற முடியவில்லை. சினத்தை, காமத்தை, பேராசையை எப்படி வெளியேற்றுவது என்று பல தடவை யோசித்தாய், முயன்றாய், எதுவும் பலிக்கவில்லை. உன் இதயம் குருவால் நிரம்பியதும், அங்கே விடாமல் தங்கியிருந்த பல விஷயங்கள் நீ முயற்சி செய்யாமலேயே அகன்றுவிடும், வீழ்ந்துவிடும்.

குருவின் அருகில் சென்று இருப்பது என்பதற்கு மரணத்தின் அருகே இருப்பது என்று பொருள். இறக்க தயாராக இருக்க வேண்டும். குரு கோபித்தாலும் அவரால் உண்மையில் கோபிக்க இயலாது எனச் சீடன் அறிவான். அது சாத்தியமில்லை. அதுவும் அவரது போதனா முறையில் ஒன்றாகத்தான் இருக்கும்.

குரு குர்ஜியேப் அப்படித்தான் செய்வார். காரணமே இல்லாமல் அவர் வெறிபிடித்தவர்போல் சீடர்களைக் கோபித்துக்கொள்வார்.

இதனால் பலர் அவரைவிட்டு விலகிச் சென்றுவிட்டனர். ஆனால் தைரியமாகத் தங்கியவர்களின் வாழ்வில் அவர் பெரும் புரட்சியை விளைவித்தார். அவர் ஏன் கோபப்படுகிறார் என்பதை நாளடைவில் அவர்கள் புரிந்துகொண்டனர். அவர் கோபத்தை வெளிப்படுத்தி உனக்கொரு சவால்விடுகிறார், சந்தர்ப்பம் தருகிறார். "இதோ பார், இப்போது எனக்குக் கோபம். இப்படிக் கோபிக்கிற குருவுடன் சேர்ந்து உன்னால் தங்க முடியுமா?" என்று கேட்கிறார். ஓர் அன்பர் இன்னோர் அன்பருடன் சேர்ந்து தங்குவதில் என்ன சிரமம் இருக்கப்போகிறது? ஓர் இனியவர் இன்னோர் இனியவருடன் சேர்ந்து தங்குவதில் என்ன தடை உள்ளது? குர்ஜியேப் மேலும் கேட்கிறார், "நான் கடுமையாக, கசப்பாகப் பழகினால் அப்போதும் நீ என்னுடன் தங்கியிருக்க முடியுமா? முடியுமென்றால் என்னுடன் இரு." குரு கடுமையானவராக இருந்தும் அவருடன் தங்கிவிடுபவன் மீது குருவின் அருள் அமுதமாகப் பொழியும்.

குருவின் அருகிலேயே இருப்பது ஒரு நிரந்தரமான யோக சாதனையாகும். உலகில் பல வகை சாதனைகள் உண்டு. ஆனால் குருவின் அருகில் இருப்பதைவிட வேறு பெரிய சாதனை இல்லை. ஆகவேதான் நான் சத்சங்கம் மிகவும் சிறப்பானது என்கிறேன். அதன் மகிமையின் அளவைக் கணக்கிட முடியாது.

சாஸ்திரங்கள் ஜீவன் இல்லாதவை. அவற்றை நீ லட்சக் கணக்கான முறை படித்தாலும் உனக்குப் பிடித்த விதமாகவே அர்த்தம் செய்துகொள்வாய். சாஸ்திரம் உன்னை மாற்ற முடியாமல் போகலாம். ஆனால் உன்னால் நிச்சயமாக சாஸ்திரத்தை மாற்ற முடியும். சாஸ்திரம் அதைத் தடுக்க என்ன செய்ய இயலும்? நீ உன் விருப்பப்படியே சாஸ்திரத்திற்கு அர்த்தம் எடுத்துக்கொள்வாய். நீ நினைக்கும் அர்த்தத்தை சாஸ்திரத்தின் மீது பதித்துவிடுவாய். உன் விளக்கம் சாஸ்திரத்தின் மேலேறி சவாரிசெய்யும். உயிருள்ள குருவின் உபதேசத்தின் மீது நீ உன் சொந்த விளக்கத்தைச் சுமத்த முடியாது. உயிருள்ள குரு பாதரசம் போன்றவர். நீ உள்ளங்கையில் ஏந்தியதும் பாதரசம் விலகிவிடும். அது என்றும் உன் உள்ளங்கைக்கு வசப்படாது. அது உன் பிடி நெகிழ வேண்டும், பிடிக்க முயலும் உன் பழக்கம் ஒழிய வேண்டும் என்பதற்கு ஏற்ப உருளுகிறது. உன் உள்ளங்கை மூடியிருக்கக்கூடாது, திறந்திருக்க வேண்டும் என எதிர்பார்க்கிறது.

பிடிப்பு, பற்று, ஆசை ஆகியவற்றால் உனக்குள்ள எல்லா இறுக்கமும் கரைந்துபோக வேண்டுமென்ன விரும்புகிறது. அது உன்னால் பிடிக்கப்படக்கூடிய பொருளாக இல்லை. உனக்கு ஆதாரமாக நீ சார்ந்திருக்கக்கூடிய பொருளாகவும் இல்லை. அடிக்கடி அது பிரிந்துவிடுகிறது. நீ அதை உனக்கு ஆதாரமென, பாதுகாப்பு என, நினைத்தாலும் அது திடீரென விலகிவிடுகிறது. இதனால் நீ தொப்பென்று தரையில் விழுந்துவிடுகிறாய். அது உன்னைப் பார்த்து, 'நான் உன்னை உன் சொந்தக் காலிலேயே நிற்கவைக்க விரும்பு கிறேன்; அதற்கான வலிமை உனக்குத் தர விரும்புகிறேன்," என்று சொல்வதுபோல் உள்ளது.

குரு கோபித்தாலும் சீடன் அவர் கோபமாக இருப்பதைக் கருதுவதில்லை.

குருவின் கோபம் கோபமாகாது
அதைக் கோபமென நீ நினைக்காதே
குருவின் இரக்கமின்மையும் கடுமையும்
உண்மையில் அவை அப்படி இல்லை
உனக்கு வேடிக்கைகாட்டி ஏமாற்றுவதற்கு
ஒரு போலி நடவடிக்கையாகக் கருது
இதுவும் குருவின் எழிலின் ஓர் அம்சம்.

நந்தலால் போஸ் என்ற பெயர் கேள்விப்பட்டிருப்பீர்கள். இந்தியாவில் சிறந்த ஓவியர்களில் ஒருவர். அவனீந்திரநாத் டாகுரின் சீடர். அவனீந்திரர், ரவீந்திரநாத் டாகுரின் சித்தப்பா. இந்த இருவரும் ஒருநாள் ஓரிடத்தில் உட்கார்ந்திருந்தபோது நந்தலால் வந்தார். அப்போது அவர் இளைஞர். தான் வரைந்த கிருஷ்ணன் ஓவியத்தைக் கொண்டுவந்திருந்தார். ரவீந்திரர் தன் நினைவுகளின் தொகுப்பு நூலில் இவ்வளவு அழகான கிருஷ்ண ஓவியம் தான் பார்த்ததே இல்லை என்று குறிப்பிட்டிருக்கிறார்.

ரவீந்திரர் மகாகவிஞர்; சிறந்த ஓவியரும் கூட. ஆகவே அவரது மதிப்பீடுபற்றி எந்த ஐயமும் எழ வாய்ப்பில்லை. அவர் எழுதுகிறார்:

நான் அந்த ஓவியத்தைப் பார்த்து மந்திரத்தால் கட்டுண்டவன் போல் ஆகிவிட்டேன். ஆனால் ஓர் அதிர்ச்சி ஏற்பட்டது. அவனீந்திரர்

அந்த ஓவியத்தை ஒரு பார்வை பார்த்தார்; உடனே அறைக்கு வெளியே வீசி எறிந்துவிட்டார். அவர் நந்தலாலிடம், "இதையா பார்க்கத் தகுந்த ஓவியம் என்று நீ நினைக்கிறாய்?" என்று சத்தம் போட்டார். "உன்னைவிட வங்காளத்து கூலி ஓவியர்கள் மேல். கோகுலாஷ்டமி சமயம் கிருஷ்ணன் படம் அருமையாக வரைந்து அவர்கள் இரண்டு பைசாக்களுக்கு விற்கிறார்கள். உன்னைவிட நன்றாக வரைகிறார்கள். அவர்களிடம் போய் கற்றுக்கொள்," என்றார்.

இது மிகவும் கடுமையான பேச்சு; இரக்கமற்ற பேச்சு. தன் சித்தப்பா மிகைப்படுத்திக் குறை கூறுகிறார்; அதைத் தடுக்க வேண்டுமென ரவீந்திரருக்குத் தோன்றியது. 'சித்தப்பா எல்லை மீறிப் பேசுகிறார். நான் இவ்வளவு அழகாக வேறு யாரும் வரைந்த ஓவியம் பார்த்ததில்லை. அவனீந்திரரும் கிருஷ்ணன் சித்திரம் தீட்டியிருக்கிறார். அது நந்தலாலின் படத்திற்கு முன் எடுபடாது என்று சொல்ல தயாராக இருந்தேன். அவனீந்திரரின் ஓவியங்கள் பொதுவாகவே எடுப்பாக இல்லை என்று சொல்ல விரும்பினேன். ஆனால் குரு – சீடன் பிரச்சினையில் குறுக்கிடுவது சரியில்லை. அவர்களே சமாளித்துக் கொள்ளட்டும்.' இவ்வாறு நினைத்துச் சுதாரித்துக் கொண்டு ரவீந்திரர் வாய் திறவாமல் உட்கார்ந்திருந்தார்.

அவனீந்திரரின் காலைத் தொட்டு வணங்கிவிட்டு நந்தலால் வெளியேறினார். அடுத்த மூன்று வருடங்களுக்கு அவரைப் பற்றி செய்தி ஏதும் கிடைக்கவில்லை. அவனீந்திரர் மிகுந்த கவலையுடன் அவரை எதிர்பார்த்தார். செய்திகள் அனுப்பினார். பலரிடம் நந்தலால் எங்கே போனார் என்று விசாரித்தார். ரவீந்திரர் அவரிடம் பல முறை சொன்னார், "நீங்கள் நந்தலாலை அளவுக்கு மீறிக் கடிந்து கொண்டு விட்டீர்கள். எல்லை மீறிவிட்டீர்கள். அவர் இதயத்தைப் புண்படுத்தி விட்டீர்கள்." அவனீந்திரரும் அவன் எங்கு சென்றானோ என அழுதார்.

மூன்று ஆண்டுகளுக்குப் பிறகு நந்தலால் திரும்பிவந்தார். அவரது தோற்றத்தில் ஏழைமை தெரிந்தது. ஆடைகள் கிழிந்திருந்தன. அவரை அடையாளம் காண்பது சிரமமாகிவிட்டது. உருவம் கறுத்து மாறிப்போயிருந்தது. அவர் தான் வரைந்த சில சித்திரங்களைக் கொண்டுவந்திருந்தார். அவர் அவனீந்திரரின் கால் தொட்டு வணங்கினார். "நீங்கள் மிகச் சரியாகச் சொன்னீர்கள். நான் போன

மூன்று வருஷங்களைக் கூலி ஓவியர்களுடன் கழித்தேன். அவர்களிட மிருந்து கற்றுக்கொள்ள அவ்வளவு விஷயமிருந்தது. புகழ்பெற்ற ஓவியர்கள் தற்பெருமைக்காக வரைகிறார்கள். ஆனால் சாதாரண நிலையிலுள்ள ஓவியர்களின் படைப்புகளில் அப்பாவித்தனம், இயல்பான தன்மை காணப்படுகிறது. அதைக் கற்றுக்கொள்ள முடிந்தது. என் நன்மைக்காகவே நீங்கள் என்னை வெளியேற்றினீர்கள். என்னிடம் மிகுந்த கருணை, இரக்கம் காட்டியிருக்கிறீர்கள்," என்று நெகிழ்ந்து கூறினார்.

ரவீந்திரநாதர் இதுதான் சந்தர்ப்பம் என்று கேட்டார், "சித்தப்பா, அன்று என்ன பிரச்சினை என்று தெரிந்துகொள்ளலாமா? அப்போது காட்டிய படமேகூட நன்றாக இருந்ததாகவே எனக்குத் தோன்றியது."

அவனீந்திரர் பதிலளித்தார். "அன்று காட்டிய ஓவியம் எனக்கும் பிடித்திருந்தது. ஓர் உண்மையைச் சொல்கிறேன். நானும் படங்கள் வரைந்திருக்கிறேன். ஆனால் அவை அந்த கிருஷ்ணன் படத்திற்கு முன்னால் எடுபடாது. ஆனாலும் அந்தப் படத்தை வீசி எறிந்தேன். அதைத் தவிர்க்க முடியவில்லை. ஏனெனில் நான் நந்தலாலிடம் இன்னும் நிறைய எதிர்பார்த்தேன். அன்று அவனிடம் 'நீ வரைந்த படம் சரியாக, அழகாக உள்ளது" என்று நான் கூறியிருந்தால் அவன் அந்த அளவிலேயே நின்றிருப்பான். குரு எதையும் சரியாக, அழகாக உள்ளது, நிறைவடைந்துவிட்டது என்று கூறினால் சீடனின் வளர்ச்சி அத்துடன் நின்றுவிடும். அடிப்படையில் நந்தலாலிடம் பேராற்றல் இல்லாமல் போயிருந்தால் அப்போதே அவனுக்குப் பரிசு கொடுத்து அனுப்பியிருப்பேன். ஆனால் அவனுக்குள் கூடுதலான திறமை மறைந்திருப்பதை நான் அறிந்திருந்தேன். அதை வெளிக்கொண்டுவர முடியும், புலப்படாத சிகரங்கள் காட்சி தரக்கூடும் என உணர்ந்தேன்." ஆகவே

**குருவின் கோபம் கோபமாகாது**
**அதைக் கோபமென நீ நினைக்காதே**
**உனக்கு வேடிக்கை காட்டி ஏமாற்றுவதற்கு**
**ஒரு போலி நடவடிக்கையாகக் கருது**

இந்தப் பாடத்தை குருவிடமிருந்து கொஞ்சம் கொஞ்சமாகக் கற்றபிறகு அதே பாடம் பரமாத்மாவின் விஷயத்திலும் பொருந்தி

வருவதைக் காண்பாய். பிறகு பரமாத்மா உனக்கு கஷ்டம் கொடுத்தாலும்..

**உனக்கு வேடிக்கை காட்டி ஏமாற்றுவதற்கு**
**ஒரு போலி நடவடிக்கையாகக் கருது**

பிறகு பரமாத்மா உனக்கு கஷ்டம் கொடுத்தாலும் அதை உனக்கு மெருகேற்றி ஒளிவிடச் செய்வதற்கான உபாயமென நினைத்துக்கொள். பரமாத்மா உனக்கு மரணம் அளித்தால் அதைப் புதிய வாழ்க்கைக்கான ஆரம்பம் என்று அர்த்தம் எடுத்துக்கொள்.

குருவின் அருகில் இருக்கும்போது எது நடந்தாலும் அதைச் சிரித்த முகத்துடன் ஏற்றுக்கொள்ளும் கலையே சீடத்தன்மை என்பது. மனம் ஒப்பாமல், சோகத்துடன், வேறு வழியின்றி எதையும் குரு அருகில் ஏற்றுக்கொண்டால் எல்லா சந்தோஷமும் போய்விடும். எது நடந்தாலும் ஆனந்தபூர்ணமாக சுவீகரிக்க வேண்டும்.

**என் விதிப்படி கிடையாதெனில், தோல்வியே இருந்து விடட்டும்**
**பகல் என்பது கிடையாதெனில், இரவாகவே இருக்கட்டும்**
**நம்மால் எத்துணை அளவு சாத்தியமோ**
**தோல்வியை சிரித்தபடி ஏற்றிடுவோம்**
**எத்தகைய இருட்டிலும் ஒரு மின்னல் போதும்**
**எந்த நிலையிலும் சிரிப்போம் நாம், பாடுவோம் நாம்**

குருவுடன் இருக்கும் சூழ்நிலையில் இரவு எவ்வளவு இருண்டதாய் இருப்பினும் இடையிடையே மின்னுகின்ற மின்னலேகூட போதுமானது என்று கருது. இருளில் மின்னல் மின்னும்போது அதை அதிர்ஷ்டமாகக் கருது. மின்னல் ஒளிவீச இருட்டான இரவு வேண்டும். பகலில் மின்னினால் அது மகிழ்ச்சியானது அன்று. ரோஜாப் புதரில் பூக்களுக்கு முள்ளும் தேவைப்படுகிறது.

குருவின் அருகில் இருண்ட சூழ்நிலையில் நீண்ட காலம் இருக்க நேரிடலாம். எத்துணைக் காலம் என்று கணக்குப் போடாதே. எப்போதாவது உன்னை வருடினால் ஆனந்தமாக ஆடு, நன்றி தெரிவித்துப் பாடு.

சீடன் என்பதற்கு யாரோ ஒருவரிடம் பரமாத்மாவை தரிசிக்க ஆரம்பித்து விட்டான் என்று பொருள். இது அரிதான அனுபவம்.

ஆகவே மற்றவர்கள் இது மிகவும் கடினமான முயற்சி என்று கருதுகிறார்கள்.

நீ அறிந்திருப்பாய், நீ யாராவது பெண் மீது காதல் கொண்டால் அவள் உனக்கு உலகப் பேரழகியாகத் தோன்றுவாள். கிளியோபேட்ரா, மர்லின் மன்றோ, மற்றும் உலகின் தலைசிறந்த அழகியர் உன் காதலியின் அழகுடன் ஒப்பிடுகையில் துளிக்கூட எடுபடமாட்டார்கள். கடந்த காலத்தில் சாரமில்லை. எதிர்காலத்தில் சாரமில்லை. காதலியாகிய ஒரே ஒருபெண் வாழ்க்கையின் மையமாக அமைந்துவிடுகிறாள். உன் அழகு உணர்ச்சி அவளிடம் தெய்வீகத்தை மேலெழச் செய்கிறது, வெளிப்படுத்துகிறது.

அன்பின் காரணமாகத்தான் அழகைக் கற்பனை செய்கிறோம் என்றில்லை. உண்மையிலேயே ஒவ்வொருவரும் அழகுதான். அதைக் காதலன் அல்லது காதலியே பார்க்க முடிகிறது; மற்றவர்களால் முடிவதில்லை. ஒருவரைப் பார்த்து அவர் உன் குரு என்று உணர்வு ஏற்பட்டால், உனக்கு ஒரு புதிய பார்வை கிடைத்து விட்டதாகப் பொருள். அந்த நபர் உனக்கு பரமாத்மா ஆகிவிடுகிறார். நீ இதை மற்றவர்கள் எதிரே நிரூபிக்க முடியாது. நிரூபிக்க முயலவும் கூடாது. இது நிரூபிக்கப்பட வேண்டிய விஷயமும் இல்லை.

ஒரு காதலனிடம், "உன் காதலிதான் உலகில் பேரழகி என்பதை நிரூபி" என நாம் சொல்வதில்லை. அவனிடம் நாம், "உன் காதலிதான் பேரழகி என்று ஏன் அறிக்கை விடுகிறாய்? அறிவியல்பூர்வமாக, தர்க்கபூர்வமாக சான்றுகள் திரட்டி நிரூபி," என்று சொல்வதில்லை. அவன் ஒரு பைத்தியம், காதல் பைத்தியம் என்று மட்டும் சொல்கிறோம்.

சீடன் அன்புப் பைத்தியம். ஆணழகோ, பெண்ணழகோ அற்பாயுள் உடையது. சீடன் திளைத்திருக்கும் அன்பு அற்பாயுள் கொண்டதன்று. அவனை ஆட்டிப்படைக்கும் அன்பு உணர்வு நிரந்தரத் தன்மை பெற்றது. அது கால ஓட்டத்தால் பாதிப்படைவதில்லை. காலம் வரும், போகும். சிஷ்யனிடம் உதிக்கும் சிரத்தை உருமாறுவதில்லை. அது ஸ்திரமானது. சிரத்தை உண்மையானால் அது வீழ்ச்சி அடைவதில்லை. வீழ்ச்சியடைந்தால் அது நீ நினைத்திருந்ததுபோல் சிரத்தையன்று. அது பிரமையாக, தோற்றமாக இருக்கும்.

யாரிடமாவது பரமாத்மாவின் பிரதிபலிப்பு இருப்பதாக ஒருவர் உணர்வது மிகஅரிய சம்பவமாகும். ஏனெனில் அவ்வாறு உணர முடியாதபடி அகங்காரம் தடைபோட்டுவிடும். நம்மைவிடச் சிறந்தவர் ஒருவர் இருக்க முடியும் என்பதை ஒப்புக்கொள்ள நமது மமதை இடங்கொடாது. எப்பொழுது நீ உன்னைவிடச் சிறந்தவன் உண்டு, உயர்ந்தவன் உண்டு, வல்லவன் உண்டு, தலைவன் உண்டு என அறிகிறாயோ, ஒப்புக்கொள்ள ஆரம்பிக்கிறாயோ அப்பொழுது உன் அகங்காரம் கரையத் தொடங்குகிறது. அகங்காரம் கரைந்துவிட்டால் முன்பு பரமாத்மாவை குருவில் தரிசித்ததைத் தொடர்ந்து இப்போது உனக்குள்ளேயும் அதே பரமாத்மாவைக் காண்பாய். இவ்வாறு குருவிடம் தொடங்கிய சம்பவம் சிஷ்யனிடத்தில் வந்து நிறை வடைகிறது.

இது மாபெரும் புரட்சி. இது நிகழ உணர்ச்சிமயமான உள்ளம் அமையப் பெற்றிருக்க வேண்டும்.

“குருவிடம் எப்படிச் செல்ல வேண்டும்? அவர் அருகில் எப்படி நடந்துகொள்ள வேண்டும்?” என்று கேட்டாயல்லவா?

உணர்ச்சிமயமான உள்ளத்துடன் செல்ல வேண்டும். ஒருவன் தன் காதலியை எப்படி அணுகுகிறான்? உணர்ச்சி மலர்களை உள்ளத்தில் சீராக அடுக்கிக் கொண்டல்லவா செல்கிறான். உள்ளத்தைத் தூயதாக்கிக் கொண்டல்லவா செல்கிறான். பாவியிலும் பாவிகூட காதல் வசப்பட்டால் அந்த காலகட்டத்தில் புண்ணிய ஆத்மாவாக விளங்குகிறான். கொலைகாரனில் கொலைகாரனும்கூட தன் காதலியைக் கொல்லமாட்டான். பக்காத்திருடனும் கூட மகனின் பணத்தைத் திருடமாட்டான்.

பார்த்தாயல்லவா அன்பு விளைவிக்கும் புரட்சியை? துஷ்டன் அருகேகூட அவன் காதலி கவலையின்றி இரவில் படுத்து உறங்க முடியும். அவன் இரவில் எழுந்து தன் கழுத்தை அறுத்துவிடுவானோ என்று அவள் கவலைப்படுவதில்லை. அவன் கொலைகாரனாக இருக்கலாம். ஆனால் நேசம் உள்ள இடத்தில் புனிதமான உணர்ச்சி வெளிப்பாடே நிகழ்கிறது.

திருடர்களில் ஒருவனை ஒருவன் ஏமாற்றமாட்டான். வழிப்பறிக்காரன் இன்னொரு வழிப்பறிக்காரனுடன் நேர்மையாக

நடந்துகொள்வான். அவன் சத்தியம் செய்துகொடுத்தால் அதை நிச்சயமாக நிறைவேற்றுவான். வணிகர்கள் இவ்வளவு நேர்மையாக இருப்பதில்லை. அவர்கள் வார்த்தையை முழுமையாக நம்ப முடியாது.

கெட்டவனிலும் கெட்டவன்கூட அன்பின் நிழல்பட்டு ஆளே மாறிவிடுகிறான். முன்பிருந்த நிலையிலிருந்து மாறிவிடுகிறான்.

ஆகவே குருவிடம் செல்லும்போது அன்பு, நெகிழ்ச்சி, உற்சாகம், ஆனந்தம் இவற்றால் நனைந்து நிறைந்து செல். சோகமாக, அழுதபடி போகக்கூடாது. கண்ணீருடன் சென்றாலும் புகார்க் கண்ணீராக இல்லாமல் அது ஆனந்தக் கண்ணீராக விளங்கட்டும்.

**என் கண்களிலிருந்து சொட்டும் நீர்**
**உன்னிடம் ஏதும் எதிர்பார்த்துச் சிந்தவில்லை.**
**வழிபாடும் செய்து ஒருவன் குறையும் கூறினால்**
**அந்த அன்பு, வெறும் பாசாங்கு.**
**வழிபாடு எங்கோ அங்கே குறை எப்படி இருக்கும்?**
**அந்த அன்பு, வெறும் பாசாங்கு**

குருவிடம் வழிபாட்டு உணர்வுடன் செல். முகம்மதியர்கள் மசூதியிலும், இந்துக்கள் கோயில்களிலும், சீக்கியர்கள் குருத்வாரா விலும் எப்படி பிரவேசிப்பார்களோ அப்படி குருவிடம் செல். மலர்களும் கனிகளும் ஏந்தி சாட்சாத் பரமாத்மாவிடம் செல்வதுபோல் குருவை அணுகு. பிறகு ஒரு புரட்சியே தோன்றிவிடும். எந்த சம்பவமும் உன் உணர்ச்சியின் காரணமாகவே நடைபெறுகிறது. உணர்ச்சி ஆழமானதாக இருந்தால் கற்சிலையின் தொடர்பாலும் மாறுதல் நிகழும். உணர்ச்சி வற்றிப்போயிருந்தால் உயிரோட்டமுள்ள பரமாத்மாவை நெருங்கினாலும் மாறுதல் ஏதும் உண்டாகாது.

குருவிடம் இருந்தால் எப்போதும் சுகம்தான் என்ற நிலை இல்லை. இது எனக்குத் தெரியும். அவரது சகவாச பாதிப்பால் நீ நிறைய விஷயங்களை உடைத்தெறிய நேரிடும். உடைத்தெறிவது என்பது வேதனையானதுதான். சிலவற்றை அழிக்க நேரிடும். அவ்வாறு அழிப்பது வலி தரும் விஷயம். நீ சிலவற்றிற்கு மெருகேற்ற வேண்டும், எரிக்க வேண்டும், நெருப்பின் வழியே பயணிக்க வேண்டும். இவை எல்லாம் சுகமான நிலைமைகள் அல்ல. ஆனால் சீடனுக்கு ஒரு பூரண நம்பிக்கை. அழிவு என்பது நிர்மாணத்தின் பாதையில் இட்டுச்

செல்கிறது; அழிந்துபோதல் என்பது புதிதாக உருவாவதற்கான தயாரிப்பு ஆகும் என்று அவன் நம்புகிறான்.

ஒரு பழைய வீட்டை இடித்துத் தள்ளும்போது நாம் மகிழ்ச்சியோடுதான் இருக்கிறோம். ஏனெனில் அங்கே நாம் ஒரு புதிய வீடு கட்டுவதற்காக இடம் தயார்செய்து கொண்டிருக்கிறோம். பழைய வீட்டை இடிக்கும்போது நீ கண்ணீர் பெருக்குவதில்லை. வசதியாகப் புதிய வீடு கட்டுவதற்கான வாய்ப்பு வந்துவிட்டது என்று மகிழ்ச்சியே கொள்கிறாய். ஆனால் இன்னொருவன் வந்து உன் வீட்டைத் தகர்த்தால் நீ சந்தோஷப்படமாட்டாய்; அதை நாசவேலை என்பாய்.

இந்த இரண்டு சூழ்நிலைகளிலும் நடைபெறும் சம்பவம் ஒன்றேதான். அதாவது, ஒரு வீடு இடிக்கப்படுகிறது. புதிதாக வீடு கட்டுவது எதிர்காலத்துடன் சம்பந்தப்பட்டது. கட்டப்படுமோ, இல்லையோ தெரியாது. நாளை என்பது உண்டா, இல்லையா என்றோ நாளை சூரியன் உதிக்குமோ, உதிக்காதோ என்று யாருக்குத் தெரியும்? வீடு கட்ட வாய்ப்புள்ளதாக இன்று தோன்றுகிறது. நாளை அந்த வாய்ப்புக்கு இடமில்லாமல் போகலாம். யாருக்குத் தெரியும்?

இடிந்து வீழ்தல் என்பது இரண்டு நிலைகளிலும் ஒன்றேதான் — அழிப்பதற்கும் ஆக்குவதற்கும் ஒரே வழி. ஆனால் ஒன்றில் நீ துக்கப்படுகிறாய், இன்னொன்றில் மகிழ்கிறாய். ஒன்றில் உன் இதயம் உற்சாகத்தால் நிரம்பிவழிகிறது. இன்னொன்றில் நீ பிணம்போல் உணர்ச்சியற்று நிற்கிறாய். எல்லாம் எதைப் பொறுத்தது என்றால் இடித்தல் அழிப்பதற்காகவா, புதிதாகப் படைப்பதற்காகவா என்று பார்க்க வேண்டும்.

குருவிடம் போய்த் தங்கினால் உன்னிடமுள்ள பழையது எல்லாம் அழிந்துவிடும். நீ மறுபடியும் சிதறி உருவாக்கப்படுவாய். நீ துண்டு துண்டாக வெட்டப்படுவாய். இதனால் வேறு விதமாக இணைத்து உன்னிடம் புதிய இசை தோன்றச் செய்ய முடியும். உனது வீணை தாறுமாறாக உள்ளது. கம்பிகள் முறை தவறிக் கட்டப்பட்டுள்ளன. இதனால் இனிய சங்கீதம் கேட்க வேண்டிய இடத்தில் துயர ஒலி வெளிப்படுகிறது. ஆனந்தம் தோன்ற வேண்டிய இடத்தில் நரகம்தான் எழுப்பப்பட்டு வருகிறது.

உன் நிலைமை உருக்குலைந்து சிதைந்துள்ளது. பொன்னில் மண் நிறையக் கலந்துவிட்டது; குப்பை கூளம் சேர்ந்துவிட்டது. பல பிறவிகளாகவே தங்கம் குப்பையில் கிடந்துவருகிறது. அது நெருப்பின் வழியே பரிசுத்தமாக வேண்டும். உன்னிடமுள்ள அவசியமற்றதெல்லாம் அந்நெருப்பில் பஸ்மமாகிவிடும். உன்னிட முள்ள உண்மையான அம்சங்களுடன் நீ மிஞ்சியிருப்பாய். அந்த அக்னி பரீட்சையில் தேறிச் சொக்கத் தங்கமாக வெளிவருவாய். ஆனால் நெருப்பு என்றால் சுடும்தான். புண்ணாகும். அது உடனடியாக ஆறாது. வலியின் முடிவை நீ இன்பத்தின் ஆரம்பமாகப் புரிந்துகொள். துன்பம் சிகரத்தைத் தொடுவதாக உனக்குத் தோன்றும் போது அங்குதான் அன்புவழி இன்பத்தின் ஆரம்பம் உள்ளதை நீ நினைவில் வை.

பொதுவாக, நாம் எல்லோரும் சுகம் பெறுவதற்கே ஆசைப்படு கிறோம். துக்கம் என்றால் பயந்து நடுங்குகிறோம். நமக்கு சுகத்தில் ஆர்வம். கிடைப்பதோ துன்பம். ஆர்வம் ஆர்வ அளவிலேயே நின்று விடுகிறது. தாகம் அப்படியே நீடிக்கிறது. திருப்தி ஏற்படவில்லை. துக்கத்தின் வழியாகப் பயணம்செய்ய சம்மதிப்பவர்களுக்கே சுகம் கிடைக்கிறது. இந்த கஷ்டமான பயணத்தின் பெயரே தவம்.

குருதேவரின் நிழலில் இருப்பது மரணத்தின் அருகே இருப்பதற்கு சமம். அதுவும் ஒருவகைத் தவம். அங்கே உனக்கு மெருகேற்றப்படும். உன்தோல் உரிக்கப்படும். நீ அழிக்கப்படுவாய். நீ துடைக்கப்படுவாய். உனக்குள் இருக்கும் வாய்ப்பு ஆற்றல்கள் எச்சரிக்கப்படும். அவற்றிற்கு சவால்விடப்படும். எல்லாம் சிரமமாக இருக்கும். தவம்போல் வருத்தும். எதைப் பெற்றால் வாழ்க்கையில் அமைதி கிடைக்குமோ அதை நீ இத்துணை சோதனைகளைக் கடந்துவந்த பிறகுதான் பெற முடியும். இந்த ஆன்மீக அமைதி கிடைத்துவிட்டால் வேறு எதையும் மேற்கொண்டு பெறுவதற்கு அலையும் அவசியம் நேராது.

குரு உனக்கு அரிதாகவேதான் வழிகாட்டுவார். அவர் முழு வழியையும் தெரிவித்தால் உனக்கு எளிதாக, வசதியாக அமையும். "இப்படிச் செய்," என்று மட்டுமாவது குறைந்தபட்சம் அவர் சொன்னாலே அது பெரிய விஷயம். ஆனால், "இப்படிச் செய்," என்று

குரு உனக்கு அவ்வப்போது சொல்லிக்கொண்டே மட்டும் இருந்தால், அவர் வெறும் பேச்சாளிதான். குரு உன்னைச் செயல்படவைப்பார். அவர் வழிகாட்டுவது மட்டுமில்லை, உன்னை உதைத்து அந்த வழியில் தள்ளிவிடுவார். வழிநடத்தவும் செய்வார். ஏனெனில் உன்னிடம் சுயமாக நடக்குமளவு பலமில்லை. நீ ஜடமாகிவிட்டாய். உன் அவயவங்களைப் பாரிசவாயு முடக்கிப்போட்டுள்ளது. உன்னிடம் எத்தனையோ முறை 'இதுதான் வழி. மேலே நட,'' என்று சொல்லப்பட்டிருக்கிறது.நீ அதைக் கேட்கவும் செய்தாய்; புரிந்தும்கொண்டாய். ஆனால் நடக்கவில்லை. காலெடுத்து வைக்கவில்லை.

புனித அகஸ்டின் சொன்னார்: "நான் என்ன செய்ய வேண்டும் என்பது எனக்குத் தெரியும்; ஆனால் அதை நான் செய்வதில்லை. நான் என்ன செய்யக்கூடாது என்பதும் நான் அறிவேன்; ஆனால் அதையேதான் நான் செய்கிறேன்."

உன் விஷயத்திற்கு வருவோம். எது சரி என்று உனக்கும்தான் தெரியுமே. பிறகு உனக்கு வழியென்ன சொல்வது? எது சரி என்று அறிந்திராத மனிதன் எவனையும் உன்னால் காட்ட முடியுமா? எது சரி, எது தவறு என்று எல்லோருக்குமே தெரியும்தான். ஆனால் இதனால் என்ன பிரயோஜனம்? வழி எது என்று சொல்வதால் என்ன ஆகிவிடப்போகிறது? உன்னை நடக்கவைக்க யாராவது தேவை யாயிற்றே.

**அன்பின் இலக்கை அடையும் வழி**<br>
**உனக்கு எதுவும் தெரியாதே**<br>
**அந்த வழியைக் காட்டுபவனை**<br>
**நிஜமான வழிகாட்டியாக நினையாதே**

தொலைவில் நின்றுகொண்டு 'அதோ பாதை தெரியுது பார்' என்று சுட்டிக்காட்ட மட்டும் செய்பவனை உன் வழிகாட்டியாக நினைத்துவிடாதே. உண்மையான வழிகாட்டி உன்னோடு சேர்ந்து நடப்பான். உனக்குப் பின்னாலும், முன்னாலும், கிழக்காலே, மேற்காலே சேர்ந்து வருவான். தேவைப்பட்டால் உன்னைத் தரதரவென்று இழுப்பான், உதைப்பான், ஓடவிரட்டுவான். வழிகாட்டி நீ உள்ள இடம் (அடைந்த தகுதிநிலை) வரை வருவான். பிறகு நீ சேரவேண்டிய இடம்வரை கூட்டிச்செல்வான். அவனது அணுகுமுறை ஒரு தந்தை தன் மகனைக் கைப்பிடித்து அழைத்துச்செல்வதுபோல் இருக்கும்.

வழியைக் காட்டமட்டுமே செய்வதானால் அதை மைல் கற்களில் வரையப்பட்டுள்ள அம்புக்குறி அடையாளமே சொல்லி விடுமே. மனித வழிகாட்டிக்கு என்ன தேவை? வழிகாட்டினால் போது மென்றால் சாஸ்திரங்கள் வழிகாட்ட உள்ளனவே. சாஸ்திரிகளுக்கு என்ன தேவை? பிறகு சாஸ்திரத்திற்கும் சாஸ்திரிக்கும் இடையே என்ன வித்தியாசம் இருக்கும்? கைநீட்டி வழியைக் காட்டினால் போதும் என்றால் கீதைக்கும் கிருஷ்ணனுக்கும் இடையே என்ன வேறுபாடு?

கிருஷ்ணன் அர்ஜுனனுக்கு வழி எது என்று கைகாட்டி மட்டும் விட்டுவிட்டாரா? அவர் அவனை அறியாமை இருட்டிலிருந்து பலவந்தமாக வெளியே இழுத்துவந்தார். அஞ்ஞானத் துயிலிலிருந்து தட்டி எழுப்பினார். பலமுறை அவரிடமிருந்து தப்பித்து ஓட அர்ஜுனன் முயன்றான். கிருஷ்ணன் அவன் நழுவ முடியாதபடி எல்லாக் கதவுகளையும் மூடிவிட்டார். அவன் நிறையக் கேள்விகள் கேட்டான்; நிறைய சந்தேகங்கள் கிளப்பினான். அவை எல்லா வற்றிற்கும் அவர் திருப்திகரமான பதில் தந்தார். இதன் விளைவாக கிருஷ்ணனை சுவீகரிப்பதைத் தவிர, அவருடன் சேர்ந்து நடப்பதைத் தவிர, வேறு வழியில்லை என்ற நிலைக்கு அவனைக் கொண்டுவந்து நிறுத்தினார்.

வாழ்க்கையில் சில நேரங்களில் ஏமாற்றம், சில நேரங்களில் துன்பம், வலி, விஷ்ணு சைதன்யா (ஓஷோவின் சீடன்) அம்மாதிரி நேரங்களை அனுபவித்துவருகிறான். அப்போது தடுமாறியிருக்கிறான் தர்மசங்கடத்தில் சிக்கியிருக்கிறான். இதற்காக பயப்பட வேண்டிய தில்லை. எல்லோருமே இப்படித்தான் வாழ்க்கை நடத்தி வருகிறார்கள். இது இயற்கையானதுதான். இதில் விசேஷம் எதுவுமில்லை. எல்லோருமே அவ்வப்போது தடுமாறுகிறார்கள். எல்லோரும் ஆயிரக் கணக்கான கவலைகளால், சந்தேகங்களால் பாதிக்கப்பட்டுள்ளனர். இப்படி அலைக்கழிக்கப்பட்ட பிறகு கொஞ்சம் கொஞ்சமாக மெருகேறுகிறது.

**இந்த வேதனை, விரிந்து பரந்த வாழ்வாக ஆகும்.**
**உனக்கு ஏமாற்றம் உள்ளது எனினும்**
**அதிலிருந்து ஒரு வல்லமை பெறுவாய்**
**ஸ்பரிச சுகத்தால் மனப்புண்களை**
**மலர்களாய் நட்சத்திரங்களாய் மாற்றுகின்ற**

**விரல்களின் முன்னே தலை வணங்கு.**
**மேஜைகளின் விளிம்பின்மேல்**
**நெற்றியை அழுத்தி நொந்துகொள்வோரே,**
**ஒவ்வொரு வலி - வேதனையும்**
**புதியதோர் அர்த்தம் பெறுகின்றவரை**
**நிலைத்து நீடிக்க விட்டுவிடுங்கள்**

வலி அடிப்படையில் துன்பமன்று. அது புதியதோர் அர்த்தம் புரியத்தொடங்குவதன் அடையாளம். இது பெண்களுக்குக் குழந்தை பிறக்கும் சமயம் ஏற்படுகின்ற பிரசவ வேதனைக்கு சமம். வலிக்கு பயந்தால் பிரசவம் எப்படி நடைபெறும்? சில ஆண்டுகள் முன் இங்கிலாந்தில் ஒரு பெரிய வழக்கு பரபரப்பேற்படுத்தியது. மருந்து தயாரிக்கும் நிறுவனம் ஒன்று ஒரு புதிய மருந்தை அறிமுகப் படுத்தியது. அது வலி நீக்கி மருந்து. பிரசவ வலியை நீக்க வல்லது. வலி தெரியாமல் குழந்தை பிறக்க உதவுவது. ஆனால் அம்மருந்தால் விபரீதமான விளைவுகள் ஏற்பட்டன. மருந்தின் பாதிப்பின் காரணமாகக் குழந்தைகள் அங்கம் குறைந்தவர்களாக, பார்வை யற்றவர்களாக, முடமானவர்களாகப் பிறந்துவிட்டனர்: நூற்றுக் கணக்கான தாய்மார்கள் இந்த மருந்தை உபயோகித்தனர். விளைவு? அந்த மருந்து நிறுவனத்தின் மீது நூற்றுக் கணக்கான வழக்குகள் தொடரப்பட்டன. தாய்க்கு பிரசவ நேர வலி ஏற்படவில்லைதான். ஆனால் தாயின் வலிக்கான மருந்து விஷம்போல் சிசுவை விகாரப்படுத்திவிட்டது.

பிரசவ சமயம் வலி உண்டாவது இயற்கையானது. அது அவசியமானது. அது ஏற்படத்தான் வேண்டும். அதைத் தடுப்பது ஆபத்தானது உலகிலேயே ஜப்பான் நாட்டில் மட்டும்தான் பிரசவ வலியைத் தடுக்க எந்த மருந்தும் உபயோகிக்கக் கூடாது என்று சட்டம் இயற்றப்பட்டது. இது நல்ல அறிவுபூர்வமான நடவடிக்கை. ஏனெனில் பிரசவ வலிதான் சிசுவின் வாழ்க்கை தொடங்குவதன் அறிகுறி. தாய்க்குத் தான் வலி என்றில்லை. சிசுவிற்கும் வலி ஏற்படுகிறது. ஆனால் அந்த வலியிலிருந்துதான் புதியதொரு வாழ்க்கை நிர்மாணிக்கப்படுகிறது.

**ஒ**ரு விவசாயிக்கு பரமாத்மாவுடன் பிரச்சினை! சில சமயம் மிகையான மழை, சில சமயம் ஆலங்கட்டிப்பொழிவு, சில சமயம்

பனிப்பொழிவு, சில சமயம் மழையின்மை, சில சமயம் கடும் வெப்பம் — இதனால் பயிர்கள் நாசமடைந்தன. போதாததற்கு சில சமயம் வெள்ளம், சில சமயம் வறட்சி. விவசாயி கடவுளிடம் "உமக்கு விவசாயம் பற்றி அறிவு போதவில்லை," என்று குறை கூறினான்.

கடவுளுக்கு வேடிக்கை செய்யத் தோன்றியது. "நான் என்ன செய்யவேண்டும் என்று நீ எண்ணுகிறாய்?" என்று அவர் திருப்பிக் கேட்டார். விவசாயி சொன்னான்: "ஒரு வருஷத்திற்குப் பருவ மாறுதல்கள் என் திட்டப்படி நடக்க எனக்கு வாய்ப்புக் கொடுங்கள். பிறகு பாருங்கள், நான் உலகத்தை தானியங்களால் நிரப்பி சுகமயமான இடமாக ஆக்கிக் காட்டுகிறேன்."

கடவுள் ஒப்புக்கொண்டார். "சரியப்பா, ஒரு வருஷம் உன் இஷ்டப்படியே பருவ மாறுதல்கள் ஏற்படும். நான் தலையிடாமல் விலகி நிற்பேன்," என்றார்.

விவசாயிக்கு இயற்கையாகவே பயிரிடும் அறிவும் அனுபவமும் இருந்தது. அவன் விரும்பியபோது வெயிலடித்தது: விரும்பியபோது மழை பெய்தது: ஒரு துளிகூட கூடுதலாகவோ, குறைவாகவோ இல்லாமல் அவன் கேட்ட அளவிற்கே மழை பெய்தது. விவசாயிக்கு மிகுந்த மகிழ்ச்சி. கோதுமைப் பயிர் மனிதன் உயரத்திற்கு அவனது வயலில் வளர்ந்திருந்தது. இவ்வளவு விளைச்சல் இதற்கு முன் ஏற்பட்டதில்லை. அவன் யோசித்தான் 'கடவுளுக்கு இப்போது விவசாயம் பற்றி புரிந்துபோயிருக்கும். தேவையில்லாமல் யுகங்களாக அவர் விவசாயிகளுக்குத் தொல்லை கொடுத்துவந்திருக்கிறார். யாராவது விவசாயியிடம் விசாரித்திருந்தால் சிக்கல் தீர்ந்திருக்கும். இப்போதாவது புரிந்துகொண்டார் என்றால் நல்லதுதான்.

விவசாயியின் வயலின் கோதுமைப் பயிர் மரம் உயரத்திற்கு வளர்ந்துவிட்டது. அவன் மகிழ்ச்சியில் திளைத்தான். ஆனால் அறுவடை செய்து பார்த்ததில் நெஞ்சில் அடித்துக்கொள்ள நேரிட்டது. தானியத்தின் உள்ளே கோதுமை மணியே இல்லை! நெற்று எல்லாம் வெறுமையாக இருந்தது. அதிர்ச்சியடைந்த விவசாயி, "கடவுளே, என்ன இப்படிச் செய்துவிட்டீர்களே," என்று கூக்குரலிட்டான்.

கடவுள் விளக்கினார்: "நீயே நன்கு யோசித்துப்பார். நீ வாழ்க்கைப் போராட்டத்திற்கு இடமே தரவில்லை. ஆலங்கட்டி

பொழிய வேண்டுமென நீ ஒருபொழுதும் கேட்கவில்லை. புயல்— சூறாவளி வீசவே நீ விடவில்லை. புயல், இடி, மின்னல் ஆகிய வற்றைப் பயிரின் உயிர் சேகரிக்க முடியவில்லை. இவை நன்றாக வளர்ந்துள்ளன. ஆனால் உள்ளே வெறுமையாக உள்ளன. ஏன் என்று புரிந்ததா?"

போராட்டம் மனிதனை மையமாக வைத்து அவனை நிரப்புகிறது. இல்லாவிடில் மனிதன் உள்ளே வெறுமையாக, காலியாக இருப்பான். இதனால்தான் பணக்காரர்களின் ம்கன்கள் சூன்யமாக இருக்கிறார்கள். வெயில் வேண்டும்போது வெயில் கிடைத்தது. மழை தேவைப்பட்டபோது மழைபெய்தது. புயல் – சூறாவளி கிடையாது. இதனால் பயிரின் உள்ளே கோதுமை மணி இல்லாமல் போய்விட்டது. இதேபோல்தான் பணக்காரக் குடும்பங்களில் திறமைசாலிகள், சாதனையாளர்கள் அதிகம் தோன்றுவதில்லை. வாழ்க்கையில் கொஞ்சமாவது போராட்டம் தேவை, சவால் தேவை.

புயல் உலுக்கும்போது மரம் தனது சுயமான வலிமையால் நீடித்து நிற்கிறது. சூறாவளிக் காற்றில் பயிர் தலைசாய்கிறது. பிறகு மீண்டும் நிமிர்கையில் ஒருவித வலிமையைப் பெற்றுவிடுகிறது. போராட்டத்தால் சக்தி உருவாகிறது. போராட்டமோ, எதிர்ப்போ இல்லையென்றால் சக்தி உறக்க நிலையிலேயே அசைவின்றிக் கிடக்கிறது.

பிரசவ வலி தாய்க்கும் உண்டு, சேய்க்கும் உண்டு. ஆனால் அந்த வலியில்தான் வாழ்க்கை ஆரம்பமாகிறது. அது சுபமான வலி. சுகமான வலி. இல்லாவிடில் சிசு உள்ளே சூன்யமாகப் பிறக்கும். அது பலகீனமாக இருக்கும். வலியின்றிக் குழந்தை பிறந்துவிட்டால் அதனிடம் தாய்க்கு இருக்கவேண்டிய பாசம் இல்லாது போய்விடும். ஏனெனில் எப்பொருளை அடைய நாம் கஷ்டப்படுகிறோமோ அதனிடம் நமக்கு இயற்கையாகவே பற்று ஏற்பட்டுவிடுகிறது.

எட்மண்ட் ஹிலேரி சிரமப்பட்டு இமயமலையை அடைந்த போது அவருக்கு ஏற்பட்ட ஆனந்தம் நீ ஹெலிகாப்டரில் அங்குபோய் இறங்கினால் கிடைக்கவே கிடைக்காது. அதில் சுவை இருக்காது. ஏனெனில் நீ உழைப்பேதும் செய்யவில்லை. வலியேதும் பொறுத்துக்கொள்ளவில்லை. பிறகு பரிசு எப்படிக் கிடைக்கும்?

மக்கள் போடும் தப்புக் கணக்கால்தான் வாழ்க்கை மதிப்பிழக்கிறது. சேரும் இடத்தைவிட போகும் வழியும் விதமுமே முக்கியம். நினைத்தமாத்திரத்தில் நீ ஓரிடத்திற்குப் போய்ச்சேர்ந்துவிட்டால் அதனால் துளியும் சந்தோஷம் விளையாது. வெற்றியைவிட முக்கிய மானது முயற்சி. அந்தப் பயணத்தில் போராட்டங்கள், எதிர்ப்புகள், வழித் துன்பங்கள், பயணம் முடியும் நாளை எதிர்நோக்கும் ஏக்கம், பயண முடிவை எதிர்பார்த்து விழித்திருக்கும் இரவுகள், சிரமம் தாங்காமல் உகுத்த கண்ணீர் இவை எல்லாம் கலந்து விளங்குகின்றன. இத்தகைய பயணம்தான் முடிவின்போது ஆனந்தம் அளிப்பதாக இருக்கிறது. ஆகவே ஒவ்வொரு வலியையும் புதிய அர்த்தம் தோன்றும் நிலைவரை செல்லவிடு.

விஷ்ணுசைதன்யா, உனக்கு வலி என்று எனக்குத் தெரியும். என்னிடம் வருவதற்கே நீ பயப்படுவதும் நான் அறிவேன். அஞ்சாதே. அருகில் வா. உன்னை (தன்னுணர்வை) வெளியில்விட்டுவிட்டு உள்ளே வா. என்னருகில் அமர். சூன்யமான, எதுவும் எழுதாத ஏடுபோல் இரு. அப்போது நான் உன் மீது ஏதும் எழுத வசதிப்படும். ஏற்கெனவே எழுதப்பட்டவனாக என்னிடம் வராதே. ஏற்கெனவே பச்சை குத்தப்பட்டவனாக என்னிடம் வராதே. அப்படி நீ வந்தால் உன் மீது நான் என்ன எழுத முடியும்? நான் எழுதக் கொஞ்சம் வாய்ப்புக் கொடு. காலியாக வா. அதனால் நான் உனக்குள் பொழிந்து உன்னை நிரப்புவேன். சாஸ்திரங்களை நிரப்பிக்கொண்டு வராதே. நீ சித்தாந்தங்கள், வாதவிவாதங்கள் என்ற வலையில் சிக்கிக்கொள்ளாதே. நான் உனக்குள் ஒரு புதிய சாஸ்திரத்தை நிரப்பத் தயாராக உள்ளேன். நீ அமைதியாக வா. இதய பூர்வமாக வா. உணர்ச்சிமயமாக வா. எனக்கு ஒரு வாய்ப்புக் கொடுத்தால் உனக்கு நான் மெருகேற்றுவேன். உன்னைப் புதிய சிலையாக வடிப்பேன்.

**இரண்டாம் கேள்வி:**

**'இலட்சக் கணக்கில் முயன்று தோற்றேன். ராம ரத்தினத்தைப் பெற்றேனில்லை. ஏன் அப்படி?'**

இப்படித்தான் நிலைமை உள்ளது. மனித முயற்சி பலனளிப்ப தில்லை. கூட்டிக் கழித்துப் பார்த்தால் கடவுளின் கருணைதான் காரியத்தை நடத்திக்கொடுக்கிறது. ஆனால் கடவுளின் கருணையைப்

பெற மனிதன் முயற்சிசெய்யத்தான் வேண்டும். இந்தக் கருத்துகள் முரண்படுவதுபோல் உள்ளனவாகத் தெரிகிறது.

புரிந்துகொள்ள முயலுங்கள். கடவுளின் கருணை கிடைக்கப் பெற்றவர்களுக்குத்தான் கடவுள் கிடைக்கிறார். ஆனால் சளைக்காமல் முயலுபவர்களே கடவுளின் அருளைப் பெறுகிறார்கள். பிரயத் தினத்தால் பிரபு கிடைப்பதில்லை. ஆனால் பிரபுவின் கிருபை பிரயத்தினத்தால் கிடைக்கிறது. பிறகு பிரபுவின் கிருபையால் பிரபுவே கிடைத்துவிடுகிறார்.

ஆக, உலகில் இருவகை மனிதர்கள். ஒருவகையினர், "எங்கள் முயற்சியால் எதையும் பெற்றே தீருவோம். உன்னுடைய தயவு தேவையில்லை," என்பார்கள். இவர்கள் மிகவும் திமிர்பிடித்தவர்கள். "நாங்கள் எதையும் கேட்டு வாங்கமாட்டோம். நாங்கள் யாசகர்கள் இல்லை. நாங்கள் உரிமையுடன் பிடுங்கி எடுத்துக்கொள்வோம்," என்பார்கள். இவர்கள் கடவுள்மீதேகூட தாக்குதல் நடத்துபவர்கள். கத்தியும் ஈட்டியும் ஏந்தித் தாக்குபவர்களைப்போல இவர்கள் பாண்டு வாத்தியமும் டமாரமும் தீவட்டிகளும் ஏந்திக் கடவுள்மீது படையெடுக்கிறார்கள். இவர்களுக்குக் கடவுள் ஒருகாலத்திலும் கிடைப்பதில்லை. ஆகவே இவர்கள் 'கடவுளே கிடையாது,' என்று அறிவித்துவிடுகிறார்கள். 'இருந்தால் கிடைத்திருப்பாரே' என்பார்கள். இது அறிவியல் வழி முயற்சி.

அறிவியலின் வழிமுறை, தாக்குதலும் திணித்தலும் ஆகும். அது பலவந்தமாக வாழ்க்கையின் ரகசியங்களைத் திறந்துகாட்ட விரும்புகிறது. அச்செயல், மொட்டை பலவந்தமாகத் திறந்து பூவாக்க முயலுவதற்கு சமம். அம்முயற்சியில் எல்லாம் அழிந்துபோகும். பூவின் அழகும் நாசமாகிவிடும்.

வாழ்க்கையின் ரகசியம் தானாகவே வெளிப்படுகிறது. நீ மௌனமாக அதை எதிர்பார்க்கும்போது, அதற்காக பிரார்த்தனை செய்யும்போது, அதை எண்ணி சாந்தமாக அமர்ந்துள்ளபோது, அது திறக்கட்டும் எனக் கடவுள் நினைக்க நீ வாய்ப்புத் தரும்போது அது நடைபெறுகிறது. நீ அதை அவசரப்படுத்தவில்லை. நீ வற்புறுத்த வில்லை. 'மிகவும் தாமதமாகிறது. நான் நிறைய முயன்றுவிட்டேன். இனியாவது திற,' என்று நீ கெஞ்சுவதில்லை, நீ நிபந்தனை எதையும்

முன்வைப்பதில்லை. நீ பேரம் பேசுவதில்லை. நீ சொல்வது – உனக்கு எப்போது விருப்பமோ திறந்துகொள். எனக்கு சம்மதம். நான் தயார். நான் என்னேரமும் காத்து நிற்பேன். இந்தப் பிறவியில் வாழ்க்கை ரகசியம் வெளிப்படுமானால் சரிதான். அது அடுத்த பிறவியில்தான் சாத்தியம் என்றால் அதற்கும் சரிதான். எனக்கு எத்தகைய அவசரமும் இல்லை.'

தாக்கும் மனப்பான்மை உள்ளவர்கள் தாங்கள் விரும்பியதைப் பெறுவதில்லை. இன்னொரு வகையினர் இன்னொரு துருவம்போல் தீவிரமாக உள்ளனர். அவர்கள் சொல்வது: 'முயன்றும் கிடைக்காத நிலையில் மேற்கொண்டு என்ன செய்வது? கிடைக்கும் நேரம் வரும்போது கிடைக்கட்டும்.' இவ்வாறு எண்ணி அவர்கள் ஒன்றும் செய்யாமல் உட்கார்ந்துவிடுகிறார்கள். அவர்கள் எதிர்பார்த்தல்கூட செய்வதில்லை. அவர்கள் சொல்வது – 'நாம் முயன்றும் பலன் எதுவும் இல்லை. எல்லாம் தலைவிதிப்படியே நடக்கும். அதற்குரிய நேரம் வரும்போது நடப்பது நடந்தே தீரும். கடவுள் கருணை காட்டும்போது காரியம் நடக்கும். அவரது ஆணையின்றி ஓர் இலையும் அசையாது. நம் கையில் என்ன உள்ளது?'

மேற்கண்ட இரண்டு வகையினருக்கும் புத்தி மட்டு. ஒருவகையினரிடமிருந்து தோன்றும் மிகையான சுறுசுறுப்பு நோயாக, சுரமாக வளர்ந்து ஒரு வெறியாக மாறிவிடுகிறது. இரண்டாம் வகை யினரின் செயலற்ற நிலையிலிருந்து மந்தமும் சோம்பேறித்தனமும் வளர்ந்து தாமச குணம் உருவாகிறது. சரியான பாதை இந்த இரண்டு வழிகளுக்கும் நடுவிலே அமைந்துள்ளது. அதாவது, நாம் முயற்சியும் செய்ய வேண்டும், பிரசாத பலனையும் யாசிக்க வேண்டும்.

தோல்வி ஏற்படலாம். ஆனால் பின்வாங்காதே. இலட்சக் கணக்கில் முயன்று தோற்றால் அது தோல்வியன்று. சிலர் முயல்வதே இல்லை. சும்மா உட்கார்ந்திருக்கிறார்கள். ஒருவகையில் அவர்களுக்குத் தோல்வி இல்லை எனலாம். அதில் பெருமை இல்லை. உன்னால் முடிந்த அளவிற்கு முயன்றுபார். முடிந்த அளவிற்கு நிறைவேற்று. முயன்றும் கிடைக்காவிடில் கலவரப்பட்டுக் கடவுள் இல்லை என்று சொல்லிவிடாதே. முயற்சிகளின் பலனாக சரியான வாய்ப்பு நெருங்கி வரும். சந்திக்கும் வேளை வந்துவிடும். ஆகவே பின்வாங்காதே.

எல்லா முயற்சியும் செய்துபார்த்துப் பிறகு நீ தோல்வியடைந்தால் .. தோற்றவனுக்கு ஹரியின் நாமம் என்றபடி — நீ ஹரியின் பெயரை ஓது. நீ பெற்ற படுதோல்வியில் மகாவெற்றி விளைவதைக் காண்பாய்.

ஆம், நீ தோற்றாய். தோல்வியின் பரிசாக ராமரத்தினம் என்னும் செல்வத்தைப் பெறுகிறாய். இப்பக்கம் தோல்வி. அப்பக்கம் வெற்றி. ஏனெனில் நீ தோல்வியுற்றதால் 'நீ' என்பது அழிந்துபோனது. நீ அழிந்ததும் இறையமுதம் உன் மீது பொழிந்தது. நீ மறைய வேண்டும் என்பதற்குத்தான் காலம் காத்திருக்கிறது. ஆனால் முயற்சி செய்யாமல் நீ தன்னுணர்வைப் போக்கிக்கொள்ள முடியாது.

இதில் முரண்பாடு உள்ளதுபோல் தோன்றுகிறது. ஒருவன் என்னிடம் கூறுகிறான்: "இரவில் எனக்குத் தூக்கம் வருவதில்லை. இதனால் நான் என்ன செய்வது?" நான் சொன்னேன்: "நீ ஒன்று செய். தினமும் மாலையில் ஐந்தாறு மைல் நடைப்பயிற்சி செய்." அவன் மறுத்து, "இதென்ன இப்படிச் சொல்கிறீர்களே. ஏற்கெனவே தூக்கம் வராமல் நான் அவதிப்படுகிறேன். ஐந்தாறு மைல் நடைப்பயிற்சியும் மேற்கொண்டால் பிறகு இரவு முழுவதும் தூக்கம் வராது." என்று கூறினான்.

நான் நம்பிக்கையூட்டுகிறேன். "நீ கவலைப்படாதே. நீ நாலைந்து மைல் உலாவு. தூக்கம் வருவதற்குக் கட்டாயமான தேவை தோல்வியடைதல், அதாவது களைத்துப்போதல்."

இக்காலத்தில் நிறையப் பேர் தூக்கம் வராமல் அவதிப்படு கின்றனர். கிழக்கத்திய நாடுகளில் இப்பிரச்சினை குறைவு. மேற்கு நாடுகளில் இப்பிரச்சினை அதிகம். விரைவிலேயே தூக்கமின்மை நோய் கிழக்கு நாடுகளிலும் பரவலாக ஆகிவிடும். ஏனெனில் இந் நாடுகளிலும் அறிவியல் மேலும் விருத்தியாகும். சுகமும் செல்வமும் அதிகரிக்கும். வறுமை குறைந்துவிடும். வேலைப் பளுவும் குறைந்துபோகும்.

மேற்கு நாடுகளில் வாரம் ஆறு நாள் உழைப்பு இருந்தது. பிறகு வேலைநாள் ஐந்தாகக் குறைந்தது. நாலு நாளாகக் குறையவும் வாய்ப்புள்ளது. இயந்திரங்களே வேலைகளை முடித்துவிடுகின்றன. மனிதனின் கையிலிருந்து வேலைகள் நழுவுகின்றன. வேலை எதுவும்

மீந்திராவிடில் ஓய்வெடுக்கும் தேவையே எழாது. சளைக்காமல் உழைத்திருந்தால்தான் ஓய்வெடுக்கும் தேவை உண்டாகும்.

ஓய்வு என்பது ஒரு தேவை. நீ உண்கிறாய், பருகுகிறாய். ஆனால் சும்மா உட்கார்ந்திருக்கிறாய். கை–கால் அசைத்து வேலை எதுவும் செய்வதில்லை. பிறகு பசி எப்படி எடுக்கும்? ஆகவே நீ ஜீரண மருந்துகள் சாப்பிடுகிறாய். பசியெடுப்பதற்காக பசி ஊக்கி மருந்து சாப்பிடுகிறாய். ஆனால் அதற்கு உண்மையில் நீ செய்ய வேண்டியதைச் செய்யாமல் குத்துக்கல்போல் உட்கார்ந்திருக்கிறாய். கொஞ்சமாவது கை–காலை அசை. நட–ஓடு. உணவு ஜீரணமாகட்டும். உடல் உழைப்பால் பசியெடுக்கும். உழைப்பின் விளைவாக ஓய்வு தேவைப்படும். பகல் முழுவதும் உழைப்பவன் இரவில் ஆனந்தமாகத் தூங்குவான்.

பிச்சைக்காரர்கள் சாலையோரம் தூங்குவதைப் பார்த்தால் மாமன்னர்களால் நம்ப முடிவதில்லை. அது ஓர் அதிசயம்போல் அவர்களுக்குத் தோன்றுகிறது. ஏனெனில் செல்வந்தர்களின் மாளிகைகளில் தூங்குவதற்குத் தனி அறை, மெத்தைகள், குளிர்ந்த காற்று. ஆகிய பல வசதிகள் இருந்தும் பணக்காரன் தூக்கமின்றி, இரவெல்லாம் படுக்கையில் புரள்கிறான்.

இந்தப் பிச்சைக்காரர்களோ சாலையோரம் படுத்திருக்கிறார்கள். அவர்களிடம் படுக்கை இல்லை. தலையணை இல்லை. புதர் நிழலில் படுத்துள்ளார்கள். புதர்களின் வேர்ப்பகுதியையே தலையணையாகக் கொண்டுள்ளனர். குறட்டைவிட்டுத் தூங்குகிறார்கள். சாலையில் போவோரும் வருவோருமாகக் கூட்டம். அதனால் பாதிக்கப்படாமல் பிச்சைக்காரர்கள் ஆழ்ந்து உறங்குகிறார்கள். ரயில் நிலையத்தில் பாருங்கள். ரயில்கள் போவதும் வருவதுமாக இருக்கும். ஆனால் பிளாட்பாரத்தில் ஆங்காங்கே நன்கு தூங்கிக்கொண்டிருப்பார்கள்.

பணக்காரர்கள் நினைப்பார்கள் – "வாழ்க்கை வசதிகளை எல்லாம் நாம் சேகரித்துவிட்டோம். ஆனால் தூங்க மட்டும் முடியவில்லையே. இது விசித்திரமாக இருக்கிறதே' ஆனால் உண்மையில் விசித்திரம் ஏதுமில்லை. வாழ்க்கைக் கணக்கு அவர்களுக்குப் புரியவில்லை என்றுதான் அர்த்தம்.

ஓய்வை அனுபவிக்க உழைப்பு தேவை. வெற்றி கிடைக்க முதலில் தோல்வி தேவை. வரமாகிய பிரசாதம் பெற பிரயத்தனம் தேவை. நீ லட்சம் முறை முயற்சிசெய்துவிட்டால் பிறகு நீ சொல்லலாம் – 'பிரபுவே! இனி நான் செய்வதற்கு எதுவும் பாக்கியில்லை. என்னால் முடிந்ததை எல்லாம் செய்து முடித்துவிட்டேன். என்னால் செய்ய முடிந்தது எதையும் விடவில்லை. நீதான் இனிமேல் என்னைப் பராமரிக்க வேண்டும். இவ்வாறு சொன்ன உடனேயே கடவுள் உன்னை வழிநடத்தும் பொறுப்பை ஏற்றுக்கொண்டுவிடுவார் இவ்வாறு ராமரத்தினச் செல்வம் கிடைத்துவிடுகிறது.

**அன்பின் பாதையிலிருந்து அகல விரும்புகிறேன்.**
**அழகின் ஆகர்ஷணம் அறிய விரும்புகிறேன்**

கடவுளின் ஆகர்ஷண சக்தி எவ்வளவு என அறிய ஆசைப்படுகிறேன். நான் அன்புசெய்வதை நிறுத்துகிறேன். நீயே என்னை உன்னை நோக்கி இழு. இதுவரை நான்தான் கவர்ந்திழுக்கப் பட்டேன். உன் விருப்பம் தெரியவில்லை. இதுவரை நான்தான் உன்னை நோக்கி ஓடிவந்தேன். நீ எனக்கு அகப்படவில்லை. ஆகவே நான் நிறுத்திவிடுகிறேன். உன் பொறுப்பில் விடுகிறேன். என்ன நடக்கிறது என்று பார்க்கலாம். இனி நீ என்னைத் தேடு. நான் உன்னை நிறையத் தேடியாகிவிட்டது.

நீ தேடும் முயற்சியில் தோல்வியை ஒப்புக்கொண்டு சோர்ந்து உட்கார்ந்ததும் திடீரென 'அவர்' உன் எதிரே நிற்பதைக் காண்பாய். கடவுள் எப்பொழுதுமே உன் எதிரில்தான் நிற்கிறார். நீயோ அவரை வேறெங்கோ தேடும் முயற்சியில் ஆழ்ந்திருந்தாய். தேடுதலிலேயே உன் கவனம் பதிந்திருந்ததால் அவரை நீ பார்க்கத் தவறிவிட்டாய். உனது கவனம் திசை மாறியதால்தான் உனது முன்னேற்றம் தடைப் பட்டது.

ஆகவே அஷ்டாவக்ரர் சடங்கைத் தடையாகக் கருதுகிறார். கடவுளை அடையச் சடங்கு வேண்டாம் என்று அர்த்தம் எடுத்துக் கொள்ளாதே.சடங்கு என்பது முயற்சியின் மறுபெயர்தான். முயற்சி லட்சக் கணக்கில் செய்ய வேண்டும். அவ்வளவு முயன்று நீ தோல்வி கண்டு துவண்டபின் கடவுள் சார்பில் அவர் ஒரு முயற்சி செய்தால் போதும். ஆனால் அவர் நடவடிக்கை எடுப்பதை நீ சம்பாதித்துப் பெற்றாய். அவரது அருளைப் பெற உன்னைத் தகுதியுள்ளவனாக

ஆக்கிக் கொண்டாய். நீ கடவுளை இலவசமாகப் பெற முடியாது. விலையாக நீ உன் வாழ்க்கையையே சமர்ப்பிக்க வேண்டும். எல்லாவிதத்திலும் உன் வாழ்க்கையை ஒரு புனித வேள்வியாக்கிக் கொள்ள வேண்டும்.

**விடியல் சிசுவின் ரோஜாக் கன்னத்தில்**
**தண்ணீர்த் துளிபோல் தாரகை உலர**
**கிரணக் கூட்டத்தின் பொன்னிற நீரில்**
**குளித்த மலர்கள் முத்தெனச் சிரிக்க.**
**பறவைக் குஞ்சுபோல் ஒலி ஏதுமின்றி**
**கனவுக் கூட்டில் உயிர் கிடந்த நாளில்**
**கிரண வடிவில் வந்தாய் நீ**
**தேனினுமினிய உன்னிசை கற்பிக்க.**
**சட்டெனக் கண்கள் திறக்கச் செய்தாய்**
**இதயத்தில் செலுத்தினாய் வேதனை அம்பை**
**அந்தோ! மறு நொடியில் மறைந்துபோனாய்.**

இவ்வாறு நிறையத் தடவை நிகழும். உன் முயற்சிகளில் தோல்வி காண்பாய். சலித்துப்போய் ஒரு நொடி உட்கார்ந்துவிடுவாய். திடீரென கிரணம் இறங்கி வரும். கிரணத்தின் குளியலில் நீ திளைப்பாய். உன்னைச் சுற்றிலும் கீதம் கேட்கும். வேறோர் உலகை நீ திடீரென அடைந்ததுபோல் உணர்வாய். திடீரென இறக்கைகள் கிடைத்ததுபோல் உணர்ந்து விண்ணில் பறக்கத் தொடங்குவாய் மண்ணின் தொடர்பு நீங்கி விண்ணுலகவாசியாவாய். ஆனால் மீண்டும் பழைய நிலைக்குத் திரும்புவாய்.

**உறக்கத்தில் புரியாத கனவாய் வந்து**
**உயிரை நீ கிளுகிளுக்கச் செய்கையில்**
**இயற்கையின் சிரிப்பின் ரகசியம் அறிந்தேன்.**
**விடியலில் கிரண ஸ்பரிசம் பெற்று**
**மொட்டுகள் முறுவலிப்பது ஏனென அறிந்தேன்.**
**காலைத் தென்றலால் வருடப்பெற்று**
**முன்னும் பின்னுமாய் அசைந்தாடி**
**இலைகள் நகைப்பது ஏனென அறிந்தேன்.**

ஒருமுறை கடவுளின் ஸ்பரிச சுகம் பெற்றுவிட்டால், நீ இந்த சிரிப்பின் ரகசியமெல்லாம் புரிந்துகொள்வாய். அதாவது — காலையில் சூரியனின் கிரணத்தால் தொடப்பட்டுப் பூக்கள் ஏன் சிரிக்கின்றன; ஏன்

உலகம் முழுவதும் வாழ்க்கையின் ஒரு புதிய ஒளியால், புதிய சக்தியால், புதிய இயக்கத்தால் நிரம்பி வழிகிறது; ஏன் எங்கும் புதிய விழிப்பு, புத்துணர்ச்சி தென்படுகிறது; இலைகளுடன் காற்று விளையாடும்போது இலைகள் ஏன் சிரிக்கின்றன, மகிழ்கின்றன ஆகியவற்றிற்கான காரணம் புரிந்துவிடும்.

கடவுளின் கிரணம் உன்மீது படும்போது இயற்கையில் நடைபெறும் இந்தக் கொண்டாட்டத்திற்கு அர்த்தம் என்ன என்றும், உன்னைச் சுற்றிலும் நடைபெறும் திருவிழா எதற்காக என்பதையும் நீ புரிந்துகொள்வாய். நாலா புறமும் இரவும் பகலும் ஒலித்துக் கொண்டிருக்கும் ஓங்கார நாதம் அப்போதுதான் உனக்குக் கேட்கும்.

ஆனால் அதற்கு முன்னால் உழைக்க வேண்டும். லட்சக் கணக்கான முறை முயலவேண்டும். நீ முயற்சியைத் தொடர்ந்துசெய். கடவுள் அதைத்தான் எதிர்பார்க்கிறார். உனது முயற்சி எனும் பாத்திரம் நிரம்பிடும்போது கடவுள் அருள்மழை பொழிகிறார். பிரசாத அருளை இலவசமாகத் தரும்படி கேட்காதே. நீ உன்னையே வேள்விப் பொருளாக சமர்ப்பிக்க வேண்டும். அப்போது நீ கேட்பது கிடைக்கும். உன்னையே சமர்ப்பிப்பதைத் தவிர வேறு எதையும் நீ கொடுத்தாலும் கடவுளின் பிரசாதம் கிடைக்காது.

கடவுளைக் கவர மனிதன் பல உபாயங்கள் செய்கிறான். செடிகளிலிருந்து பூக்களைப் பறித்துக் கோவிலில் அலங்காரத்திற்குக் கொடுக்கிறான். இது ஏமாற்று வேலைதானே? கடவுள் படைத்த செடிகளைத்தானே மலர்கள் அலங்கரிக்கின்றன. நீ அவற்றைச் செடிகளிலிருந்து பறித்துவிட்டாய். செடிகளில் அவை அதிக உயிரோட்டத்துடன் இருந்தன; கடவுளுடன் களித்துக்கொண்டிருந்தன. நீ அவற்றைக் கொன்றுவிட்டாய். செத்துப்போன பூக்களை சிலைமுன் வைத்தாய். கடவுளுக்கு சமர்ப்பித்துவிட்டதாக நினைத்தாய். அர்ச்சனை செய்தாகிவிட்டதாக, பிரார்த்தனை முடிந்துவிட்டதாக எண்ணினாய். ஓர் அகல்விளக்கை ஏற்றி வைத்துவிட்டு பிரகாசம் பரவிவிட்டதாகக் கருதினாய்.

இறைவழிபாடு இத்துணை மலிவானதன்று. உள்ளே உயிரெனும் தீபத்தை ஏற்றிவைக்க வேண்டும். சுயப்பிரக்ஞை (தன்னுணர்வு) என்னும் மலரை சமர்ப்பிக்க வேண்டும். உச்சந்தலையில் உள்ள ஸஹஸ்ர

ஆரமுள்ள கமலம் என்பதை நீ சமர்ப்பிக்கும் அன்று — அதாவது, சிரத்தையே சமர்ப்பிக்கும்போது — வழிபாடு நடப்பதாகச் சொல்லலாம்.

மனிதன் தந்திரசாலி. அவன் தேங்காயைத் தேர்ந்தெடுத்தான். அது மனிதனின் தலைபோல் காணப்படுகிறது. ஆகவே அதைக் கொப்பரை என்கிறார்கள். (கோப்பரா என்றால் இந்தியில் தலை என்றும் பொருள்) அதற்கும் இரண்டு கண்கள், தாடி, மீசை எல்லாம் உள்ளன. தன் தலைக்குப் பதிலாகத் தேங்காயைக் காணிக்கையாக்கினான். தனது ரத்தத்தை அர்ப்பணிக்காமல் குங்குமம் சிந்தூரத்தை சிலைக்குத் தடவச் செய்தான். ஸஹஸ்ரார கமலத்திற்கு (தலை உச்சியிலுள்ளது) பதில் பூ, தலைக்குப் பதில் தேங்காய், ரத்தத்திற்குப் பதில் சிந்தூரம். மனிதன் எப்படியெல்லாம் ஏமாற்றுகிறான்! தன்னையே அல்லவா அவன் அர்ப்பணிக்க வேண்டும்?

**கடைசிக்கேள்வி: ஜனகரின் வாழ்க்கையில் ஓர் அதிசயச் செயலாக பூமியிலிருந்து சீதை தோன்றினாள். அவள் வாழ்க்கை ராம்லீலாவாக நடிக்கப்படுகிறது. ராம்லீலாவின் உள் அர்த்தம் என்ன?**

அஷ்டாவக்ரரின் பார்வைப்படியும் என் பார்வையிலும் அந்தக் கதைக்கான அர்த்தம் தெளிவாக உள்ளது. சீதை மண்மகள், ராமன் விண்நாயகன். அவர்கள் இருவரும் இணைவது — மண்ணும் விண்ணும் இணைவது — இதுவே ராம்லீலா. நம் ஒவ்வொருவர் உள்ளேயும் ராம்லீலா நடைபெறுகிறது. உன் உடல் — சீதை. உன் ஆத்மா — ராமன். உனக்கு உள்ளே இருவரும் இணைகிறார்கள்; மண்ணும் விண்ணும் இணைகின்றன. மரணமும் அமிர்தமும் சேருகின்றன. உன் உள்ளே நடப்பதெல்லாம் ராம்லீலா.

ஆகவே ராமகதையை உனக்குள்ளே படி. ஒருநாள் நீ அறிந்துகொள்வாய் நீ ராமனும் இல்லை, நீ சீதையும் இல்லை. நீ ராம்லீலாவைப் பார்ப்பவன் மட்டுமே; நீ ஒரு சாட்சி மட்டுமே. இதை உணரும் தினம் ராம்லீலா முடிந்துபோகிறது. சீதையையும் ராமனையும் கடந்து நீ மேற்கொண்டு போக வேண்டும்.

ராம்லீலாவை மக்கள் மேலோட்டமாகப் பார்க்கச் செல்கிறார்கள். இதனால் அவர்களுக்கு என்ன கிடைத்துவிடப்போகிறது?

உனக்குள்ளே ராம்லீலா நிகழ்ச்சி நடைபெறுகிறது. அங்கே அமர்ந்து அதைப் பார். நீ பார்வையாளனாக ஆகிவிடு. ராம்லீலா பார்ப்பதால் புண்ணியம் கிடைக்கும் என்று மக்கள் சொல்கிறார்கள். நான் அதை ஒப்புக்கொள்கிறேன் – வேறு அர்த்தத்தில். உன் உள்ளே மேடை அமை. உன் உள்ளே ராமன் – சீதை இணைதல், விண்ணும் மண்ணும் இணைதல், திடப்பொருளும் ஞானமும் இணைதல் ஆகியவை நடைபெறட்டும். நீ பார்வையாளனாக ஆகிவிடு. சாட்சியாக ஆகிவிடு. சாட்சி நிலைக்கு வந்துவிட்டால் நீ லீலையைக் கடந்துவிட்டாய் எனலாம்.

வேறு எங்கேயும் வெளியில் ராம்லீலா பார்க்கப் போய்விடாதே. ஒவ்வொருவர் உள்ளத்திலும் ராம்லீலா நிகழ்கிறது. அது நடைபெறும் வரை உலகு சார்ந்த வாழ்க்கையும் நடக்கிறது. உன்னுள்ளே சாட்சி மனப்பான்மை முகிழ்த்ததும் ராம்லீலா நின்றுபோகிறது. உன் அனுபவத்தில் உலகம் மறைந்து போகிறது.

எத்தனையோ முறை, எத்தனையோ நாள் ராம்லீலா பார்த்தாகிவிட்டது. ஆனால் நீ எந்த விதத்தில் பார்த்தாயோ அதில் சிறிது கோளாறுள்ளது. நீ ராம்லீலா பார்ப்பதில் ஆழ்ந்துபோய் நீ வெறும் பார்வையாளன்தான் என்பதை மறந்துவிடுகிறாய். இது தினமும் நடக்கும் நிகழ்ச்சிதான். நீ சினிமா பார்க்கும்போது நீ பார்ப்பவன் மட்டுமே என்பதை மறந்துவிடுகிறாய். நீ சினிமாவின் ஓர் அங்கமாகவே அதனுள் கரைந்துபோகிறாய்.

லண்டன் நகரில் 3D திரைப்படம் முதல் முறையாக வெளிவந்த போது மக்கள் தங்களை எந்த அளவிற்குத் தங்களை மறந்துபோக முடியும் என்பது தெரியவந்தது. இவ்வகைத் திரைப்படத்தில் பாத்திரங்கள் நேரிடையாக வருவது போல் தோன்றும். ஒரு படத்தில் குதிரைவீரன் ஒருவன் கையில் ஈட்டியுடன் வருகிறான். திரையில் அவன் ஈட்டியை எறியும் காட்சி தெரிகிறது. அரங்கில் இருந்த அவ்வளவு பேரும் தலையைத் தாழ்த்திக்கொண்டனர்! பாதிப்பேர் இந்தப் பக்கமும் பாதிப்பேர் அந்தப் பக்கமுமாகக் குனிந்துகொண்டனர். – ஈட்டி வீச்சிலிருந்து தப்புவதற்காக! ஒரு நொடியில் பொய், உண்மையாகிவிட்டது. பொய், மெய்யாக மாறுவதன் பெயர்தான் மாயை.

**வ**ங்காளத்தில் ஈஸ்வர்சந்திர வித்தியாசாகர் என்ற புகழ்பெற்ற அறிஞர் இருந்தார். ஒரு நாள் ஏதோ நாடகம் பார்த்துக்கொண்டிருந்தார்.

எல்லா நாடகமும் ஒரு வகையில் ராம்லீலாதான். அதில் ஒரு காட்சியில் ஒருவன் பெண் ஒருவளை பலாத்காரம் செய்ய முயல்கிறான். அவன் மிகவும் கீழ்த்தரமாகவும் கடுமையாகவும் நடந்துகொள்வதைப் பார்த்த வித்தியாசாகர் அது வெறும் நாடகக் காட்சிதான் என்பதை மறந்துவிட்டார். செருப்பைக் கழட்டி எடுத்துக்கொண்டு மேடைமேல் ஏறி அந்த நடிகரை அடிக்க ஆரம்பித்துவிட்டார்.

அந்த நடிகன் கெட்டிக்காரன். அவன் பலமாகச் சிரித்தான். அவன் செருப்பைப் பரிசுப் பொருள்போல் நெஞ்சோடு அணைத்துக் கொண்டு மைக்கில் பேசினான்: "நான் மிகவும் பாக்கியசாலி. ஈஸ்வர்சந்திர வித்தியாசாகர் அவர்களே ஏமாறிப்போகும் அளவிற்கு தேர்ச்சிபெற்ற நடிகன் என்று என்னை நான் நினைத்ததில்லை. ஞானியான அவரே மயங்கிவிட்டார். இந்தச் செருப்பைத் திருப்பிக் கொடுக்கப் போவதில்லை. இது எனக்குப் பரிசுப் பொருளாகிவிட்டது. இதை நினைவுச் சின்னமாக வைத்துக்கொள்வேன். எனக்கு இதுவரை எத்தனையோ பாராட்டிதழ்களும் பதக்கங்களும் கிடைத்திருக்கின்றன. ஆனால் இந்தச் செருப்பைவிடப் பெரிய பரிசு இருக்க முடியாது."

ஈஸ்வர்சந்திர வித்தியாசாகர் வெட்கமடைந்தார். 'இதென்ன இப்படி நடந்துகொண்டு விட்டேனே' என்று அதிசயத்தார். அறிவாளியான அவரே நாடகம் பார்க்கையில் மெய்ம்மறந்துவிட்டார். எல்லா அறிவாளிகளும் இதே நிலைக்கு ஆளாகியுள்ளனர்.

நாடகம் நடக்கும்போது நீ வெறும் பார்வையாளன்தான் என்பது உனக்கு மறந்துபோகிறது. திரைப்படத் திரையில் நடைபெறும் கறுப்பும் வெள்ளையுமான நிகழ்ச்சிகளே உனக்கு எல்லாமும் ஆகிவிடுகின்றன. அதுபோல்தான் உனக்கு உள்ளேயும் நடைபெறுகிறது. ஆனால் நீ அங்கு நடைபெறும் ராம்லீலாவில் ராமன் – சீதை இணைதல், விண்ணும் மண்ணும் சேர்தல் ஆகியவற்றில் லயித்துவிட்டாய். உன்னை இழந்துவிட்டாய். நீ பார்வையாளன் மட்டுமே என்பதை மறந்துபோனாய்.

இனியாவது சுய உணர்வு பெறு. இப்போதாவது விழித்துக்கொள். ஞானவிழிப்பு ஏற்பட்டதுமே திரை சூன்யமாகிவிட்டதை நீ காண்பாய். அங்கே ராமனும் இல்லை, சீதையும் இல்லை. நாடகம் முடிந்துவிட்டது. நாடகத்தின் இந்த முடிவைத்தான் நாம் முக்தி, மோட்சம், நிர்வாணம் என்னும் பெயர்களால் அழைக்கிறோம்.

**ஹரி ஓம் தத்ஸத்!**

ஜனகர் மொழிகிறார்:

அஹோ ஜனஸமூஹேஅபி ந த்வைதம் பஸ்யதோ மம |
அரண்யமிவ ஸம்வ்ருத்தம் க்வ ரதிம் கரவாண்யஹம் || 41
நாஹம் தேஹோ ந மே தேஹோ ஜீவோ நாகமஹம் ஹி சித் |
அயமேவ ஹி மே பந்த ஆஸீதா ஜீவிதே ஸ்ப்ருஹா || 42
அஹோ புவன கல்லோலைர்விசித்ரைத்ரகி ஸமுத்திதம் |
மயநந்தமஹாம் போதௌ சித்தவாதே ஸமுத்யதே || 43
மயநந்த மஹாம் போதௌ சித்தவாதே ப்ரஷாம்யதி |
அபாக்யாஜீவவணிஜோ ஜகதபோதோ வினஸ்வர: || 44
மயநந்தமஹாம் போதாவாஸ்சர்ய ஜீவவீசய: |
உத்யந்தி த்வந்தி கேலந்தி ப்ரவிஷந்தி ஸ்வபாவத: || 45

**ஞா**னத்தில் இருவகை உண்டு. அவை மிகவும் வித்தியாச மானவை. ஒருவகை ஞானம் மலட்டுத்தன்மை கொண்டது. அதில் மலர்களோ, கனிகளோ உற்பத்தியாவதில்லை. இன்னொரு வகை ஞானத்தில் முக்தி என்னும் பழங்கள் உண்டாகின்றன; சச்சிதானந்த மலர்கள் பூக்கின்றன; சமாதி நிலை என்னும் நறுமணம் எழும்புகிறது.

சமாதி நிலை என்னும் நறுமணம் கமழாத ஞானம் உட்பொய்யானது, வீணானது என்பதை அறிவாயாக. அதிலிருந்து எவ்வளவு சீக்கிரம் விடுபடுகிறாயோ அந்த அளவிற்கு நல்லது. இல்லாவிடில் முக்திப் பாதையில் அது தடைக்கல்லாக அமையும். முக்தியை அடைவதற்கு சாதனையாக அமையாத எதுவுமே முட்டுக்கட்டைதான். பணம்கூட பெரியதடை இல்லை. ஏனெனில் அது மோட்ச வழிக்கான சாதனமே இல்லை. அதன் மூலம் மோட்சப் பயணத்திற்கு ஆதரவு எதுவும் கிடைக்காது. அது மோட்சத்துடன் சம்பந்தப்படாதது என்பது தெரிந்த விஷயமே.

ஆனால் போலி ஞானம் ஆபத்தானது. அது மோட்சத்திற்குத் தடையாகச் செயல்படும். சம்சாரம் எனப்படும் உலகப் பற்றுகூட அத்துணை பெரிய தடையன்று. ஆனால் சாஸ்திரங்களிலுள்ள சொற்களிலிருந்து சேகரிக்கப்பட்ட இரவல் ஞானம் உலகப்பற்றைவிடப் பெரிய தடையாக அமைய வாய்ப்புண்டு.

**அ**வந்திகா நகருக்கு வெளியே க்ஷிப்ரா நதிக்கப்பால் பேரறிஞர் ஒருவர் வாழ்ந்துவந்தார். அவரது புகழ் நெடுங்தொலைவுவரை பரவியிருந்தது. அவர் தினமும் படகுமூலம் நதியைக் கடந்துசென்று நகரத்தில் ஒரு பெரிய சேட்டிற்கு புராணக் கதை சொல்லிவிட்டு வருவார். ஒருநாள் தண்ணீரிலிருந்து ஒரு முதலை வெளிப்பட்டு அவரைத் திடுக்கிட வைத்தது.

முதலை சொன்னது: "அறிஞரே! எனக்கு வயதாகிவிட்டது. இனியாவது ஞானம் பெற ஆசைப்படுகிறேன். நீங்கள் நதியைக் கடக்கும்போது எனக்கும் கொஞ்சம் ஞான உபதேசம் செய்தருளுங்கள். இலவசமாக வேண்டாம்." அது வாயைத் திறந்துகாட்டியது. அதன் வாயில் அடக்கி வைக்கப்பட்டிருந்த வைரமாலை மின்னியது.

அதைப் பார்த்த அறிஞர் இதுவரை தான் கதை சொல்லிவந்த வணிகரை மறந்துவிட்டார். தினமும் முதலைக்கு புராணக் கதை சொல்லலானார். முதலை அவருக்கு தினமும் சன்மானம் வைரமாலை, முத்துமாலை, மாணிக்கமாலை என்று அளித்து வந்தது. சில நாள் கழித்து முதலை சொன்னது: "அறிஞரே! என் ஆயுள் முடியும் காலம் நெருங்கிக்கொண்டிருக்கிறது. என்னை எடுத்துச்சென்று திரிவேணியில் விடுங்கள். பரிசாக பானை நிறைய ரத்தினங்கள் தருகிறேன்."

அறிஞர் அவ்வாறே செய்தார். முதலையை திரிவேணியில் விட்டார். பரிசாகக் கிடைத்த பானையில் ரத்தினங்கள் உள்ளனவா என்று சரிபார்த்தார். அவர் விடைப்பெற்றுக் கிளம்பும்போது முதலை சிரித்தது. "என்ன விஷயம்? எதற்காகச் சிரிக்கிறாய்?" என்று அறிஞர் வினவினார்.

"நான் சொல்லமாட்டேன். நீர் காரணம் அறியவேண்டுமானால் அவந்திகாவில் மனோகர் என்ற சலவைக்காரரின் கழுதையிடம் விசாரியும்!" என்றது முதலை. இன்னொருவரிடம் கேட்டா எதையும்

தெரிந்துகொள்வது. அதுவும் ஒரு கழுதையிடம் கேட்டா என்று அறிஞருக்கு ஆழ்ந்த வருத்தம் ஏற்பட்டது. அதை ஊகித்த முதலை அவருக்கு ஆறுதல் கூறியது. "என் பேச்சைத் தப்பாக நினைக்காதே. கழுதை என் நீண்டகால நண்பன். சலவைக்காரர் துணி துவைக்கையில் அந்தக் கழுதை நதிக்கரையில் நின்றபடி சிந்தனையில் ஆழ்ந்திருக்கும். அது ஒரு ஞானி. அதனுடன் பழகியதால்தான் என் மனத்திலும் சிறிதளவு ஞானம் தோன்றியது. எனவே நீ திரும்பிச் செல்," என்றது முதலை.

அறிஞர் ஊர் திரும்பினார். கழுதையிடமா கேட்பது என்று வருத்தமாக இருந்தார். அமைதி இழந்தார். இரவில் தூக்கம் வரவில்லை. 'முதலை ஏன் சிரித்தது? சிரிப்பின் ரகசியம் கழுதைக்கு எப்படித் தெரியும்!' என்று குழம்பினார். பிறகு ஒருவாறாக மனத்தை திடப் படுத்திக்கொண்டு கழுதையிடம் சென்றார். "கழுதையாரே! முதலை ஏன் சிரித்தது? என்ன காரணம்? உன்னால் விளக்கிக் கூற முடியுமா?" என்று கேட்டார்.

கழுதையும் சிரித்தது. "சரி, கேள். நான் சென்ற பிறவியில் ஓர் அரசரின் அமைச்சராக இருந்தேன். ஒருநாள் அரசர் சொன்னார், 'எனக்கு மிகவும் வயதாகிவிட்டது. திரிவேணி சங்கமத் தலத்திற்குச் செல்வோம். அதற்கான ஏற்பாடுகளைச் செய்.' அந்த இடம் அரசரை மிகவும் கவர்ந்துவிட்டது. அவர் சொன்னார்; 'எனக்குத் திரும்பிச்செல்ல இஷ்டமில்லை. நீ விரும்பினால் என்னுடனேயே இந்தப் புனிதத் தலத்தில் வசி. திரும்பிச்செல்ல ஆசைப்பட்டால் கோடிப் பொற்காசுகள் நான் தருவதை எடுத்துக்கொண்டு போ.' பணத்தாசையால் நான் கோடிப் பொற்காசுகள் வாங்கிக்கொண்டு அவந்திகாவிற்குத் திரும்பினேன். இதனால் இப்பிறவியில் கழுதையாகப் பிறந்துள்ளேன். இப்படிப் பணத்தாசையின் விளைவை நினைத்துதான் (உன் அடுத்த பிறவியை நினைத்து) முதலை சிரித்தது" என்று கழுதை விளக்கம் சொன்னது.

அறிஞர்கள் நிறையப் பேர் உள்ளனர். அவர்களது அறிவு அவர்களுக்கே விடுதலை பெற்றுத்தருவதில்லை. அவர்களது அறிவு அவர்கள் வாழ்க்கையில் நறுமணம் எழும்பச்செய்வதில்லை. எது சரி என்று அவர்களுக்குத் தெரியும். தெரிந்தும் அவர்களது வாழ்க்கையில்

நல்விளைவு ஏற்படவில்லை. அவர்கள் சாஸ்திரங்கள் அறிந்தவர்கள். மொழி வல்லுநர்கள். அழகாக விவாதிப்பவர்கள். வாதத்தில் அவர்களை வெல்ல முடியாது. ஆனால் (ஆன்மீக) வாழ்க்கையில் தோற்று விடுகிறார்கள். அவர்கள் பெற்றுள்ள அறிவு அவர்களது வாழ்க்கைக்குப் பயன்படவில்லை.

முக்தி தராத ஞானம் ஞானமன்று. எது விடுவிக்கிறதோ அதுவே ஞானம். இயேசுநாதர் சொன்னார்: சத்தியம் என்பது உனக்கு முக்தி பெற்றுத்தரும். முக்தி பெற்றுத் தராவிடில் அது சத்தியமானதன்று என்று அறிக.

சித்தாந்தமும் (கோட்பாடும்) சத்தியமும் வெவ்வேறானவை. சித்தாந்தம் கடனில் வாங்கியது; திருட்டுப் பொருள் விற்பனைக் கடையில் வாங்கியது; இலவசமாகக் கிடைத்தது; வழியில் எங்கோ கிடந்தது; உழைத்துச் சம்பாதித்ததில்லை. சத்தியத்தைத் தேடிச் சம்பாதிக்க வேண்டும்; வாழ்க்கையையே அந்தத் தேடுதலில் அர்ப்பணித்தால் சத்தியம் கிடைக்கப்பெறுகிறது. வாழ்க்கையை வேள்வியாக்கிக் கொண்டால் சத்தியம் கிடைக்கிறது. சுயமான உழைப்பிலிருந்து, சுயமான அறிவிலிருந்து சத்தியம் கிடைக்கிறது வேறொருவன் உனக்கு சத்தியத்தை எடுத்துத் தர முடியாது.

இந்த விஷயத்தை எத்துணை ஆழமாக உன் உள்ளத்தில் பதித்துக் கொள்கிறாயோ அவ்வளவு நல்லது. நீதான் முயன்று சத்தியத்தைப் .பெற வேண்டும். உலகில் வேறு யாரும் உனக்கு சத்தியத்தை வழங்க முடியாது. எவனாவது கொண்டுவந்து கொடுப்பான் என்று நம்பியிருந்தாயானால் நீ சத்தியத்தைத் தேடிக்கொண்டே இருக்க வேண்டியதுதான். எச்சரிக்கையாக இல்லாவிடில் மேற்சொன்ன சலவைக்காரரின் கழுதையாகிவிடுவாய். திரிவேணிக்குப் போனாலும் சாதிக்கமாட்டாய். அங்கு சங்கம் எனப்படும் இடத்தை அடைந்தாலும் உனக்கு சமாதிநிலை வராது. லட்சியத்தை அடிக்கடி நெருங்குவாய். அங்கு நிலைக்காமல் மறுபடியும் அலைவாய்.

**ஒ**ரு பெண் சூஃபி துறவி. பெயர் ராபியா அல் அதாபியா. அவள் ஒரு சாலையில் சென்றபோது துறவி ஹஸன் என்பவர் ஒரு மசூதியின் எதிரில் கைகூப்பி நிற்பதைப் பார்த்தாள். ஹஸன் சத்தமாகப்

பிரார்த்தனையும் செய்தார். 'ஆண்டவரே! கதவைத் திறங்கள். நீண்ட நேரமாக உங்களைக் கூப்பிடுகிறேன். அருள் புரியுங்கள் இந்த ஏழை மீது இரக்கம் காட்டுங்கள். கதவைத் திறந்துவிடுங்கள்.'' என்று கெஞ்சினார்.

அவருடைய கண்களிலிருந்து கண்ணீர் வழிந்தது. ராபியா இதைக் கண்டும் கேட்டும் சிரித்துவிட்டாள் மேலும் அவள் சொன்னாள். ''என் சகோதரரே, கண்களைத் திறந்துபாருங்கள். கொஞ்சமாவது பாருங்கள். கதவு எங்கே மூடியுள்ளது? திறந்துதான் உள்ளது. நன்றாகப் பாருங்கள்.''

ஹஸன் சாஸ்திரங்கள் படித்திருப்பார். சாஸ்திரம் என்ன சொல்கிறது? 'கூக்குரலிடு, கூப்பிடு. உன் வேதனைக் குரல் கேட்டுக் கடவுளின் கதவு திறக்கும்,' என்றுதானே? இயேசுநாதர் கூறிய 'கேளுங்கள். கிடைக்கும். தட்டுங்கள், திறக்கும்,' என்னும் அறிவுரையையும் ஹஸன் கேள்விப்பட்டிருப்பார். ஆனால் ராபியா சாஸ்திரம் படித்தவளில்லை. கடவுளின் வீட்டுக் கதவு ஒருபொழுதும் மூடப்பட்டதே இல்லை என்றே அவள் அறிந்திருந்தாள். அவள் ஹஸனிடம் மேலும் சொன்னாள்: ''என் சகோதரரே! கண்களைத் திறந்து பாருங்களேன். வீணாக ஏன் கூப்பாடுபோடுகிறீர்கள்? கதவு எப்பொழுது மூடியிருந்தது? அது திறந்தேதானே இருக்கிறது. காணத்தான் கண்கள் வேண்டும்.''

இங்கே நாம் எல்லோரும் கடன் வாங்கிய கண்களால் வாழ்ந்து வருகிறோம். சாதாரண வாழ்க்கையில்கூட கடனாகக் கண்கள் பெற்று வாழ முடியாது. ஆனால் நாமோ முடிவற்ற அந்த ஆன்ம யாத்திரையைக் கடன் வாங்கிய கண்களுடன் மேற்கொண்டுள்ளோம்.

**ஒ**ரு கிழவனார். பார்வை இழந்துவிட்டார். டாக்டர்கள் ஆபரேஷன் செய்துகொண்டால் மீண்டும் பார்வையைப் பெறலாம் என்றார்கள். சிகிச்சைக்குப் பிறகு மூன்று மாதம் ஓய்வில் இருக்க வேண்டும் என்று தெரிவித்தார்கள். ஆனால் கிழவர் சொன்னார்: ''இதனால் என்ன பிரயோஜனம்? எனக்கு எண்பது வயது. இனி என்ன பார்க்க வேண்டும்? மேலும், என் வீட்டில் கண்களுக்குக் குறைச்சல் இல்லை. எனக்கு எட்டு பிள்ளைகள். அவர்களுக்குப் பதினாறு கண்கள்.

எனக்கு எட்டு மருமகள்கள். அவர்களுடைய கண்கள் பதினாறு. என் மனைவி இன்னும் உயிருடன் இருக்கிறாள். அவளுக்குக் கண்கள் இரண்டு. ஆக, என்னிடம் முப்பத்து நான்கு கண்கள் உள்ளன. எனக்குள்ள இரண்டு கண்களில் பார்வையில்லாமல் போனால் அதனாலென்ன பெரிய கேடு?"

கிழவரின் வாதம் கேட்பதற்கு நன்றாகத்தான் உள்ளது. அவருடைய கண்களையும் சேர்த்தால் முப்பத்து ஆறாகும். பார்வை இல்லாததால் இரண்டு கண்கள் குறைவதால் பெரிய பிரச்சினை இல்லையே. முப்பத்து நான்கு கண்கள் உதவிக்கு உள்ளனவே!

கிழவர் ஆபரேஷன் செய்துகொள்ள மறுத்துவிட்டார். விரைவில் ஒருநாள் இரவு அவர் வீட்டில் தீப்பிடித்துவிட்டது. முப்பத்து நான்கு கண்களும் தப்பி வெளியேறிவிட்டன! கிழவர் தட்டுத்தடுமாறினார். நெருப்பில் வாடினார். கூக்குரலிட்டார். தீப்பிடித்ததும் மனைவி, மகன்கள், மருமகள்கள் ஓடிவிட்டார்கள். தீ விபத்து சமயம் யாருக்கு யாரை நினைவில் இருக்கப்போகிறது? வெளியேறிய பிறகுதான் குடும்பத்தினருக்குக் கிழவர் ஞாபகம் வந்தது. இனி என்ன செய்வது? கிழவரை எப்படிக் காப்பாற்றுவது? தீ பிடித்ததும் கண்கள் கால்களின் உதவியுடன் வெளியே ஓடிவிட்டன! சங்கடமான சமயம் மற்றவர் நினைவு எப்படி வரும்? அதற்கு நேரம் எங்கே கிடைக்கிறது; வசதி எங்கே உள்ளது? தன் உயிருக்கு ஆபத்தான நேரத்தில் யார் யாரை நினைத்துப் பார்க்க முடியும்? கிழவருக்குத் தனது தவறுபுரிந்தது. தனது வாதத்தின் குறைபாடு புரிந்தது. இக்கட்டான நேரத்தில் நமது சொந்தக் கண்தான் உபயோக இருக்கும் என்பதையும் அறிந்துகொண்டார். ஆனால் காலம் கடந்த ஞானோதயம்.

நமது வாழ்க்கையெனும் மாளிகையிலும் தீப்பிடித்துள்ளது. இங்கே நாம் தினமும் எரிந்து கொண்டிருக்கிறோம். இங்கு நம் கண்கள்தான் நமக்கு உதவியாக இருக்கும்; மற்றவர்களின் கண் பயன்படாது. ஒருவேளை வெளியுலகில் இன்னொருவர் கண்ணால் நாம் பயனடைய முடியும் எனினும் உள்ளுலகில் வேறு யாரும் பிரவேசிக்க முடியாது. அங்கே நீ முழுமையாகத் தனியாக இருக்கிறாய். அங்கு நீ மட்டுமே உள்ளாய். அங்கே வெளியாள் யாரும் ஒருபொழுதும் நுழைந்ததில்லை; ஒருபொழுதும் நுழைய முடியாது.

அங்கே உன்னைத் தவிர வேறு யாரும் இயங்க முடியாது. அங்கே உன்னுடைய கண்களால் தான் நீ செயல்பட முடியும்.

ஆகவே ஞானம் வெவ்வேறு வகையானது. ஜனகருக்குக் கிடைத்தது உண்மையான ஞானம். அது வெறும் ஏட்டறிவன்று. அது ஆத்மஞானம். அது கிடைத்தால் விளக்கு ஏற்றப்பட்டுவிட்டதுபோல் ஒளிமயமான நிலை.

ஒரு சூஃபி மார்க்க கதை. ஓர் இளைஞன். சத்தியத்தைத் தேடுபவன். குருவிடம் சென்றான். "ஐயனே! என் மனத்தில் சாந்தி எப்படி ஏற்படும்? அதற்கு நான் என்ன செய்ய வேண்டும்? என் உள்ளத்தில் மண்டியுள்ள இருள் எப்படி விலகும்? என்னைக் கட்டிப்போட்டுள்ள அறியாமை மயக்கம் என்னும் வலை எப்படி அறுபடும்? எனக்கு ஏதாவது வழிகாட்டுங்கள்." என்று வேண்டினான்.

குரு சிறிது நேரம் அவனை உற்றுப்பார்த்தார். பிறகு தன்னருகிலிருந்த சூஃபி தத்துவ நூல் ஒன்றை அவனிடம் கொடுத்து, "இதைப் படி. ஆழ்ந்து படி. இதில் மூழ்கிவிடு. உன் மனம் அமைதி பெறும்," என்று கூறி அனுப்பி வைத்தார்.

இளைஞன் அந்நூலை ஆழ்ந்து பயின்றான். சில நாள் கழித்து குருவிடம் வந்தான். "ஐயனே! தாங்கள் சொன்னது சரிதான். ஆனால் முற்றிலும் சரி என்று சொல்லிவிட முடியாது. நான் நூல்கள் படிக்கிறேன். அவற்றில் ஆழ்கிறேன். என்னையே மறந்து விடுகிறேன். புனிதர்களின் உபதேசங்களைப் படிக்கையில் வேறு உலகிற்கே சென்றுவிட்டதுபோல் உணர்கிறேன். உள்ளத்தில் பெரிய – பெரிய விளக்குகள் ஜொலிக்கின்றன. விசாலமான தாமரைப் பூக்கள் மலர்கின்றன. ஆனால் புத்தகத்தை மூடியதும் எல்லாம் மூடப்பட்டு விடுகின்றன. தாமரைகள் விடைபெற்றுவிடுகின்றன. விளக்குகள் அணைந்துவிடுகின்றன. பிறகு அதே இருட்டு; அதே பழைய இருட்டு. அடிக்கடி எல்லாம் இழக்கப்பட்டு விடுகிறது. ஞானச் செல்வம் உருவாகவில்லை. அது ஒரு கனவென நினைக்கத் தோன்றுகிறது." என்று உருக்கமாகக் கூறினான்.

குரு சிரித்தார். அவர் சொன்னார்: "இரண்டு பேர் புனிதத் தல யாத்திரையாகக் கிளம்பினர். ஒருவன் கையில் லாந்தர் விளக்கு. இன்னொருவன் கையில் விளக்கில்லை. ஆனால் இருவருக்கும் ஒரு

விளக்கே போதுமானதாக இருந்தது. சில நாள் யாத்திரைக்குப்பின் விளக்கு வைத்திருந்தவன் வேறுவழியில் செல்ல வேண்டியிருந்தது. அவன் பிரிந்து சென்றுவிட்டான் – கவலை ஏதுமின்றி, அச்சமின்றி, அவனது விளக்கொளியால் பயன்பெற்ற இரண்டாவது பயணி திடீரென இருளால் சூழப்பட்டான் – பயந்தான், நடுங்கினான்."

குரு தொடர்ந்தார்: "சாஸ்திரப் படிப்பும் இதே போன்றதுதான். நீ சாஸ்திரம் படிக்கும்போது இன்னொருவர் காட்டும் விளக்கொளியில் சிறிது காலம் நடக்கிறாய். அந்த இரவல் ஒளியில் எல்லாம் தெளிவாகக் காட்சி தருகின்றன. ஆனால் இன்னொருவருடையதான பிரகாசம் உனக்கு நிரந்தரமாகச் சொந்தமாகிவிட முடியாது. பாதைகள் பிரிந்துவிடுகின்றன. சாஸ்திரம் ஒரு பாதையில் செல்கிறது. நீ வேறு பாதையில் நிற்கிறாய். பாதை மாறியதால் இதுவரை கிடைத்த ஒளி நீங்கி உன்னை இருட்டு சூழ்ந்துவிடுகிறது.

"சத்சங்கத்தில் (புனிதர்களின் தொடர்பில்) உனது உள்ளேயும் நிறையத் தடவை ஞான விளக்கு ஒளிர்கிறது. ஆனால் அது உனக்குச் சொந்தமான விளக்கில்லை. அதன் வெளியே சத்குருவின் விளக்கின் தோற்றம் தெரிகிறது. அது வெறும் பிரதிபிம்பம். சாஸ்திர நூல்களைப் படிக்கையில் உன் நாசி ஆன்மீக நறுமணத்தால் நிறையலாம். ஆனால் அது உனது மணமில்லை. அது வேறு ஒருவருக்குச் சொந்தமானது. அது வெளியிலிருந்து வந்த மணம். அது உள்ளே ஊறிக் கிளம்பவில்லை. அது சீக்கிரமே மறைந்துவிடும்."

நாம் பாதையில் நடந்து செல்கிறோம். இரவு நேரம். எதிரே ஒரு கார் வருகிறது. அதன் விளக்கொளியில் சுற்றுப்புறமெல்லாம் பிரகாசமாகத் தெரிகிறது. சில நொடிகள்தான். கார் கடந்து சென்றதும் முன்பிருந்ததை விட அதிக இருட்டாகத் தோன்றுகிறது. கண்களைத் திறக்க முடியாமல் கூசுகின்றன. முன்பாவது கண் எதிரே காட்சிகள் தெரிந்தது. விளக்கு ஒளி தோன்றி மறைந்ததும் கண்ணில் ஒரு காட்சியும் தெரியவில்லை.

அடிக்கடி அப்படித்தான் ஆகிறது. சாஸ்திரம் மூலமோ, அல்லது குருவின் உதவியாலோ சற்று நேரம் உள்ளத்தில் ஒளி வீசுகிறது. எல்லாம் தெளிவாகத் தெரிகிறது. பிறகு முன்பு எப்போதும் இருந்திராத அளவுக்கு அடர்த்தியாக இருள்மயமாகிவிடுகிறது.

ஃசூஃபி குரு தன் சீடனிடம் சொன்னார்: "நீ சாஸ்திரம் படித்தது போதும். முதல் பாடம் முடிந்துவிட்டது. அடுத்து, நீ உள்ளே விளக்கேற்று. உனக்குள்ளே ஜோதி உண்டு. அந்த ஜோதியை வெளிப்படச் செய். இன்னொருவரின் துணைகொண்டு சிறிது நேரம் நடக்கலாம். ஆனால் அதை எப்பொழுதும் உனக்குத் துணையாகக்கொள்ள முடியாது. அது நிலையான நிரந்தரப் பயணமாக இருக்காது. இன்னொருவரின் பிரகாசத்தால் நாம் சிறிது நேரம் ஒளிவிடலாம். ஆனால் சுயமான பிரகாசமே நமக்குத் தேவை."

ஆகவேதான் நான் ஞானத்திலும் வகைகள் உண்டு என்கிறேன். ஒருவகை ஞானம் உனக்குப் பிறரால் ஊட்டப்படுகிறது. அதையே கெட்டியாகப் பிடித்துக் கொண்டு உட்கார்ந்துவிடாதே. படகு கிடைத்து விட்டது. உலகக் கடலைக் கடந்து விடலாம் என நப்பாசை கொள்ளாதே. இன்னொரு வகையான ஞானம், உன் உள்ளத்தினுள்ள ஜோதி எரியத் தொடங்குவதால் கிடைக்கிறது. அதுவே உன்னை அக்கரைக்கு இட்டுச்செல்லும்.

ஜனகருக்கு அப்படித்தான் சேர்ந்தது. தாக்குதலுக்கு உள்ளானார். உள் இருள் உடைந்தது. சொந்த விளக்கு எரிந்தது. அது திடீரென ஒளிவீசத் தொடங்கியதை ஜனகராலேயே நம்ப முடியவில்லை. ஆகவே அவர் மீண்டும் – மீண்டும், "ஆச்சரியம், ஆச்சரியம், இப்போது என்ன நிகழ்ந்தது? எனக்கு என்ன ஆயிற்று?" என்று வியந்துரைத்தார். ஏதோ மாற்றம் உண்டானதை உணர்ந்தார். பழையதான எல்லாம் நீங்கிவிட்டது. எல்லாம் மறைந்துவிட்டது. எல்லாம் புதியதாக ஏற்பட்டுவிட்டது. கடந்த காலத்துடன் சம்பந்தப் பட்ட தொடர்புகள் எல்லாம் அறுந்துபோயின. இதுவரை மனத்தை வியாபித்திருந்த உலகம் – மன உலகம் – துண்டுதுண்டாகிவிட்டது. அப்போது ஏற்பட்ட இடைவெளியில் ஆகாயம் புலப்பட்டது. ஆனால் இந்த மாறுதல் எல்லாம் எதிர்பாராமல் நிகழ்ந்ததால் ஜனகர் அசந்துவிட்டார்; வாயடைத்துவிட்டது; திகைத்துப்போனார்.

முதல் சூத்திரம் கூறுவது இதுவே

**அஹோ ஜனஸமூஹேஅபி ந த்வைதம் பஷ்யதோ மம/**
**அரண்யமிவ ஸம்வ்ருத்தம் க்வ ரதிம் கரவாண்யஹம்//**

'என்ன விந்தை! எனக்கு எதுவும் இரண்டாக (இரட்டைத் தன்மை உடையதாகத்) தெரியவில்லை. மக்கள்கூட தனித்தனியாக இன்றி மொத்தமாக ஒரு காடுபோல் தெரிகின்றனர். இந்நிலையில் நான் மோகிப்பது எதை, எங்கே, எப்படி?' இன்னொன்று என ஒரு நபர் அல்லது பொருள் தெரிந்தால்தானே மோகிக்கலாம், சார்ந்து நிற்கலாம்.

நான் பார்வையற்றவனில்லை. எல்லாம் கண்ணுக்குத் தெளிவாகத் தெரிகிறது. இரண்டல்ல என்பதை உணர்ந்தபின் இதற்கு முன் இல்லாத அளவிற்கு பார்வை சிறப்பாக உள்ளது. முதல் முறையாகக் கண்கள் முழுமையாகத் திறந்திருப்பது போல் தோன்றுகிறது. எல்லாம் ஒன்றெனவே தோன்றுகிறது. ஒன்றிலிருந்து பரவும் அலைகள்; ஒரே சங்கீதத்தின் சுரங்கள்; ஒரே மரத்தின் கிளைகள், இலைகள் — எல்லாமே ஒன்றிலிருந்து பல. வாழ்க்கைப் பிரவாகமும் ஒன்றேதான். அது இரண்டாகப் பிரிந்து பாய்வதாகத் தெரியவில்லை.

ஆனால் மக்கள் பார்வையில் எல்லாம் இரண்டாக உள்ளது. அப்படித் தெரியக்கூடாது என்று நீ நினைக்கின்ற சமயங்களிலும் இரண்டாகவே தோன்றுகிறது. உனக்கு ஒருவரிடம் அன்பு, காதல். குறைந்த பட்சம் இந்த அன்புமயமான சூழ்நிலையிலாவது அத்துவைத உணர்வு (ஒன்றிய உணர்வு) மேலோங்கியிருக்க வேண்டுமென நீ எதிர்பார்க்கிறாய்.

அன்பின் துடிதுடிப்பு என்பது என்ன? அன்பின் வேதனை என்பது என்ன? யாருடன் ஒன்ற வேண்டுமோ, ஒன்றாக வேண்டுமோ, அவருக்கும் நமக்கும் இடையே கடக்க வேண்டிய இடைவெளி உள்ளது. எவ்வளவு நெருங்கினாலும், கட்டித்தழுவினாலும் அந்த இடைவெளி நீடிக்கிறது. இதுதான் அன்பின் வேதனை என்பதன் காரணம். எவ்வளவு நெருங்கியும் தொடமுடியவில்லை. ஆத்மாவிற்கு வேண்டியவராயினும் ஆத்ம மயமாகிவிடுவதில்லை.

குறைந்தபட்சம் ஒருவருடனாவது அத்துவைத நிலை எய்த வேண்டும் என்பதற்கு ஏங்கியே அன்புள்ளம் வேதனை காட்டுகிறது. இந்த அத்துவைத நிலையைப் பெற நம் உயிரில் பெருவிருப்பம் இருக்கிறது. இந்த ஆழத்திலும் ஆழமான விருப்பம் அன்பின் பெருவிருப்பம் என்பதை நீ ஆழ்ந்து ஆராயின் அது அத்துவைத நிலைக்கான விருப்பமே என்பதைப் புரிந்துகொள்வாய். எல்லோருட னும் இணைய முடியாமல் போனால் போகிறது. ஒருவருடனாவது

இணைந்தாலே போதும். இரட்டைத் தன்மை இல்லாத இடம் தேவை. இருவருக்கிடையே வெற்றிடம் இல்லாத நிலை தேவை. இருவரையும் சேர்க்கும் பாலம் கட்டப்படட்டும். அதன் மூலம் சந்திப்பும் இணைதலும் நிகழட்டும்.

அன்பின் விருப்பம் என்பது அத்துவைதத்தின் விருப்பம்தான். இதுபற்றி நீ இதுவரை பகுப்பாய்வு செய்திருக்கமாட்டாய். நீ ஆராய்ந்திருந்தால் எல்லா மதங்களும் அன்பின் விருப்பத்தால் தோன்றியவை என அறிந்து கொள்வாய்.

ஆனால் பரஸ்பரம் அன்புள்ளவர்களும் ஒரே அலகாக ஆக முடிவதில்லை. ஒன்றாக இணைய அன்பு மட்டும் போதாது; விருப்பம் மட்டும் போதாது. ஒன்றாகிவிடுவதற்கு ஒன்றெனப் பார்க்கும் ஆற்றல் தேவை. இரண்டெனப் பார்ப்பதற்கான ஆற்றல்தான் நமக்கு வாய்த்துள்ளது. நாம் எப்பொழுதும் இரண்டெனவே காண்கிறோம்; வேறுபடுவதைத்தான் காண்கிறோம். வேறுபாடு சட்டெனக் கண்ணுக்குப் புலப்பட்டுவிடுகிறது. ஒற்றுமை நம் கண்ணுக்குத் தெரிவதில்லை. வேற்றுமையின்மையைக் காணத் தேவையான ஆற்றலை நாம் தொலைத்துவிட்டோம். எல்லை இருப்பதுதான் தெரிகிறது. எல்லையற்றது தென்படவில்லை. அலைகள் தெரிகின்றன. கடல் தெரியவில்லை. நீ மற்றவர்களிடமிருந்து எதிலெல்லாம் வேறுபடுகிறாய் என்பதை அறிந்துள்ளாய். நீ மற்றவர்களிடமிருந்து வித்தியாசமானவன் இல்லை என்பதை அறிந்திருக்கவில்லை. இருவரை நிரந்தரமாகப் பாலம்போல் இணைக்கும் அம்சம் உள்ளதைப் புரிந்துகொண்டால்தான் அத்துவைதம் மலரும்.

ஜனகருக்கு இந்த அனுபவம் ஏற்பட்டிருந்தது. அவர் சொன்னார்: எனக்கு எதுவும் இரண்டெனத் தெரியவில்லை. இது என்ன விஷயம்? எனக்கு என்ன ஆயிற்று? திடீரென அத்துவைத உணர்வு மேலிட்டதால் சட்டென நம்ப முடியவில்லை. இந்த அனுபவம் படிப்படியாக நேரிட்டிருந்தால் ஆச்சரியம் விளைந்திருக்காது. ஆனால் இந்த ஞானம் நொடியிலும் நுண்ணிய நேரத்தில் அல்லவா கிடைத்திருக்கிறது.

புத்தரோ, மகாவீரரோ இந்த அனுபவத்தை ஆச்சரியம் என்று சொன்னதில்லை. ஏனெனில் அவர்களுக்கு அது மெதுவாகக்

கிடைத்தது; படிப்படியாகக் கிடைத்தது. கூரையைக் கிழித்துக்கொண்டு கொட்டவில்லை.

நீ ஒவ்வொரு பைசாவாகச் சேர்த்து, காலப்போக்கில் கோடி ரூபாய் சேர்த்துவிட்டால் ஆச்சரியம் உண்டாகாது. ஆனால் சாலை ஓரத்தில் கோடி ரூபாய் கிடந்து உனக்குக் கிடைத்தால் உன்னால் நம்ப முடியாது. உண்மையிலேயே எனக்கா பணம் கிடைத்தது அல்லது நான் கனவு காண்கிறேனோ என்று உன் கண்களைப் பலமுறை கசக்கிப் பார்ப்பாய். ஏனெனில் இதுவரையிலான உன் வாழ்க்கை முழுவதும் நீ எதைத் தொட்டாலும், பொன்னைத் தீண்டினாலும், அது மண்ணாகிப்போனது என்பதே உன் அனுபவமாக இருந்து வந்திருக்கிறது. ஆனால் இன்றோ நடக்க முடியாதது நிகழ்ந்துள்ளது – மண், பொன்னாகி இருக்கிறது! உனக்கு உன்மீதே நம்பிக்கை ஏற்படுவது சிரமம்தான். உன்னால் சட்டென்று ஒப்புக்கொள்ள முடியாத நிகழ்ச்சி இது.

ஞானம் ஒரு கிரமமாக, படிப்படியாகக் கிடைத்தால் – சூரிய கிரணங்கள் ஒவ்வொன்றாக இறங்கிவந்தால் – அதாவது முதலில் ஒரு கிரணம், அடுத்து இரண்டாவது, பிறகு மூன்றாவது என இறங்கினால் – நீ ஒரு கிரணத்தை உனக்குள் அடக்கிக் கொண்டு, இரண்டாவதற்கு தயார்படுத்திக்கொள்ள முடியும். ஆனால் ஜனகருக்கு ஏற்பட்ட அனுபவம் நள்ளிரவின் கும்மிருட்டில் திடீரென சூரியன் உதித்தது போன்றது. பழைய பிறவிகளின் அனுபவங்களெல்லாம் தவறானவை எனப் புரிந்தது. எப்பொழுதும் காலையில் உதித்துக் கிளம்பும் சூரியன் திடீரென நள்ளிரவே உதித்துவிட்டது போலிருந்தது. அல்லது ஆயிரம் சூரியன்கள் ஒரே சமயம் உதித்ததுபோல் இந்த அனுபவம் இருந்ததாக நம்பலாம். ஆனால் முதலில் மனத்தில் தோன்றும் எண்ணம் தனக்குப் பைத்தியம் பிடித்துவிட்டதா என்பதுதான்.

ஆகவே இத்தகைய அபூர்வமான அனுபவம் நிகழும்போது குருவின் அருகில் இருப்பது அவசியமாகும். இல்லாவிடில் அனுபவம் பெற்றவன் பைத்தியமாகிவிடுவான். ஜனகருக்குப் பைத்தியம் பிடிக்கவில்லை. ஏனெனில் அருகில் அஷ்டாவக்கிரர் இருந்தார். அவர் நம்பிக்கையூட்டக்கூடியவர், ஆறுதல் தரக்கூடியவர். எனினும் அவர் அமைதியாக ஜனகரின் பேச்சைக் கேட்டுக்கொண்டிருந்தார். தான் ஒரு வார்த்தைகூட சொல்லவில்லை. ஜனகரின் வியப்பு சொற்களின் வழியே

வடிந்துபோகட்டும் என்றும், அதுவரை அவரைப் பேசவிடுவோம் என்றும் அஷ்டாவக்கிரர் மௌனமாக இருந்துவிட்டார்.

ஒருவன் எதற்கோ துக்கமாக இருக்கிறான். அவன் தன் கஷ்டத்தை வாய்விட்டுச் சொன்னால் மனம் இலேசாகும். ஆனால் ஜனகரின் அனுபவம் உனக்குக் கிடைத்ததில்லை. ஆகவே சுகம் கிடைத்தாலும் வாய்விட்டுச் சொன்னால் மனம் இலேசாகும். என்பதை நீ அறிந்திருக்கவில்லை; அனுபவித்ததும் இல்லை.

உலகில் பெரிய சாஸ்திர நூல்கள் எழுதப்பட்டிருக்கின்றன. அவை எப்படித் தோன்றின? ஆனந்தமான ஆத்ம அனுபவம் ஏற்பட்டவர்களுக்கு அதைச் சொல்லாமல் இருக்க முடியவில்லை. சொல்லத்தான் நேர்ந்தது. அதை வெளியிட்டபின் மனம் இலகுவாகியது. நாலு பேருக்குச் சொன்னபின் பாரம் குறைந்தது. துன்பத்தில் மட்டுமன்று, சுகத்திலும் அடர்ந்த வேதனை ஏற்படுகிறது. ஆனால் மதுரமான வேதனை. அம்பு வருடியது போன்ற உணர்வு. இனிமையாக முணுமுணுக்க, பாட, ஆட வேண்டும் என்று துடிப்பு ஏற்படுகிறது. ஆகவேதான் மீராபாய் பாதங்களில் சதங்கை அணிந்து சுழன்றாடினார். ஆடித்தான் தீரவேண்டும். உள்மனத்தில் ஏற்பட்ட அனுபவம் வலுவானது; அது உன்னை உலுக்காவிட்டால் அந்த அனுபவம் உண்மையில் ஏற்பட்டிருக்காது. உன்னைக் கூத்தாட வைக்காவிட்டால் அந்த அனுபவம் முழுமையானதன்று. உன்னைக் குலுங்கவைக்காவிட்டால் அது சந்தேகத்திற்குரியது.

புயலடிக்கையில் இலை ஒடுங்குவதுபோல், ஆடுவதுபோல், ஜனகர் அதிர்ந்து போயிருப்பார். "என்ன ஆச்சரியம்! எதுவும் இரண்டாகத் தெரியவில்லையே. என் கண்களுக்கு என்ன ஆயிற்று? இதுவரை எப்பொழுதும் இரண்டாகத்தானே பார்த்து வந்தேன். அநேகம் என்று பார்த்ததெல்லாம் இப்போது ஏகம் என்றாகிவிட்டது. ஒவ்வொருவனும் இன்னொருவனுக்குள் இணைந்துவிட்டதுபோல் தோன்றுகிறது. எல்லோருடைய எல்லைகளும் ஒன்றில் ஒன்றாகக் கலந்துவிட்டன. ஒன்று இன்னொன்றுக்குள் பிரவேசித்திருப்பதுபோல் காணப்படுகிறது இப்படி ஏன் ஆயிற்று?"

இதோ நீ இங்கே உட்கார்ந்துள்ளாய். ஜனகருக்கு ஏற்பட்ட அனுபவம் உனக்கும் ஏற்பட்டால் நீ என்ன காண்பாய் தெரியுமா?

இங்கே இத்தனை பேர் உட்கார்ந்திருக்கிறார்கள் என்பதையல்ல. என்ன விஷயம் என்பதைத்தான் காண்பாய். திடீரென இத்தனை பேரும் காணாமல் போய்விட்டதுபோன்ற உணர்வு. உருவங்கள் நிலையாக உள்ளன. ஆனால் ஒருவரது ஆத்மா இன்னொருவருக்குள் பிரவாகித்துக்கொண்டிருக்க, எல்லோரும் ஒருவருக்குள் ஒருவர் பிரவேசித்தபடி உள்ளனர். இங்கு என்ன நடந்தது? இந்த ஜனங்கள் ஏன் பிரிந்தார்கள்? ஏன் உடைந்தார்கள்? ஏன் ஒருவருக்குள் ஒருவராக இறங்குகிறார்கள்?

உன் கண்ணிற்குப் புலப்படாவிடிலும் இப்படித்தான் நடக்கிறது. உன் சுவாசம் இன்னொருவருக்குள் பிரவேசிக்க, அவரது சுவாசம் உனக்குள் நுழைகிறது. உன் உயிர்சக்தி இன்னொருவருக்குள் பிரவேசிக்க, அவரது உயிர்சக்தி உனக்குள் நுழைகிறது.

இவ்வாறு நாம் ஒருவருக்குள் ஒருவர் நுழைந்தபடி உள்ளோம் என்பதற்கு விஞ்ஞானபூர்வமான ஆதாரம் உண்டு. இதனால்தான் நீ சோகமான மனிதன் அருகே உட்கார்ந்தால் நீயும் சோகமாகி விடுகிறாய். அவனது உயிர்சோகம் உனக்குள் பாய்கிறது. நீ சந்தோஷமான, சிரித்துக்கொண்டிருக்கின்ற மனிதன் அருகில் அமர்ந்தால் அவனது மகிழ்ச்சி உன்னையும் ஸ்பரிசிக்கிறது; தொற்றிக் கொள்கிறது. சில சமயம் நீ உன் சந்தோஷத்திற்கான காரணம் தெரியாமல் ஆச்சரியப்படுவாய். மகிழ்ச்சிக்கான சூழ்நிலையும் இல்லையே என நினைப்பாய். காரணமற்ற உன் மகிழ்ச்சிக்குக் காரணம் மகிழ்ச்சியான மனிதன் ஒருவன் உனக்குள் பிரவேசித்திருக்கிறான் என்பதுதான்.

நீ ஒருவரை அன்புடன் பார்க்கும்போது உன் உள்ளிருந்து ஒருவித சக்தி அவரை நோக்கிப் பரவுகிறதென விஞ்ஞானிகள் கருது கிறார்கள். இந்த சக்தியை அளந்தறிவதற்கும் இப்போது வழிமுறைகள் உண்டு. மின்சாரம் பரவுவதைப்போன்றே உன்னிடமிருந்து ஒரு விசேஷமான வெப்பம், சூடு அவரை நோக்கி பிரவாகிக்கிறது.

ஆகவே உன்னை ஒருவர் அன்புடன் பார்த்தால் அந்த அன்பு நிறைந்த கண்ணை அவரால் மறைக்க முடியாது. நீ அதை அடையாளம் கண்டுகொள்வாய். உன்னை ஒருவர் வெறுப்புடன் பார்த்தால் அதையும் அவரால் மறைக்க முடியாது. ஏனெனில்

வெறுப்பான சூழ்நிலையில் அழிவேற்படுத்துகிற ஒரு சக்தி உண்டாகி உன்னை நோக்கி வந்து கத்திபோல் உன்னைத் துளைத்துவிடும்.

அன்பு உன்னை மலரச்செய்யும்; வளரச்செய்யும். வெறுப்பு உன்னைக் கொன்றுபோடும். வெறுப்பில் விஷமுள்ளது. அன்பு அமிர்தமயமானது.

ரஷ்யாவில் ஒரு பெண்மணி. அவளை விஞ்ஞானிகள் பரிசோதித்திருக்கின்றனர். அவள் எந்தப் பொருளையும் உற்றுநோக்கி அதை நகரவைக்கக் கூடிய ஆற்றல் பெற்றிருந்தாள். மேஜைமேல் பாத்திரம் வைத்து, பத்தடி தொலைவில் நின்றுகொண்டு பாத்திரத்தை ஐந்து நிமிடம் ஊன்றிப் பார்ப்பாள். கண்கள் பாத்திரத்திலேயே பதிந்திருக்கும். பார்வை வீச்சால் பாத்திரம் ஆடத் தொடங்கும். இடப்பக்கம் போ என்று அவள் சொன்னால் பாத்திரம் இடது பக்கமாக நகரும் வலப்பக்கம் போ என்றால் பாத்திரம் வலப்பக்கமாகச் சாயும்.

இதென்ன ரகசியம் என்று நிறைய ஆராய்ச்சி நடந்தது. இதைத் தவிர மேலும் ஒரு வியப்பூட்டும் விஷயம் தெரியவந்தது. அந்தப் பெண்மணி மேற்கண்ட முயற்சியில் ஐந்து நிமிடம் ஈடுபட்டால் அவளது எடை அரை கிலோ குறைவது அறியப்பட்டது. ஆகவே அவளிடமிருந்து நிச்சயமாக சக்தி வெளிப்பட்டிருக்க வேண்டும். அதாவது, அவள் சக்தியை இழந்திருக்கிறாள். ஐந்து நிமிட முயற்சியின் போது அவள் கணிசமான சக்தியை வெளியேற்றியிருக்கிறாள். அந்த சக்தி வந்து மோதியதால் அவள் விருப்பப்படி பாத்திரம் விலகியும், நகர்ந்தும், அசையாமலும் இருந்திருக்கிறது.

அறிந்தோ, அறியாமலோ, நாம் ஒவ்வொருவரும் இன்னொரு வருக்குள் பிரவாகித்துக் கொண்டிருக்கிறோம்.

சிலரது அருகாமையில் நீ அவர்களால் ஈர்க்கப்பட்டு இழுக்கப் படுவதை உணர்வாய். பெருக்கெடுத்தோடும் நதியில் இறங்கினதுபோல் உனக்குத் தோன்றும். அவர்களுடன் காலம் கழித்தால் புதிதாக மலர்ந்ததுபோல் உணர்வாய். அவர்களுடன் வசிக்கையில் வாழ்க்கை பிரவாகிப்பது, வேகமெடுப்பது புரியவரும்.

வேறு சிலருடன் நீ சம்பந்தப்பட்டால் நீ அமுக்கப்பட்டவனாக, அறையில் அடைக்கப்பட்டவன்போல் உணர்வாய். பிரவாகிக்க

முடிவதில்லை. தேக்கத்தினால் வாழ்க்கை நாறுவதுபோல் தோன்றும். எல்லாம் தடைப்பட்டுவிடும். எல்லாக் கதவுகளும் வாசல்களும் அடைக்கப்பட்டுவிடும். காற்று வராது. வெளிச்சம் கிடைக்காது.

நீ பொதுவாக சாது — மகாத்மாக்கள் என்று கூறுபவர்கள் இத்தகையவர்கள்தாம் என்பதை நீ அறிந்திருப்பாய், பார்த்துமிருப்பாய். அவர்கள் அருகில் சிறிது நேரம் மட்டும் அமர்ந்திருப்பாயானால் சரிதான். ஆனால் எந்த மகாத்மாவுடனும் இருபத்து நான்கு மணி நேரம் சேர்ந்திருப்பது மிகவும் கடினம். அவர் உன் உயிரைப் பிடுங்கியெடுத்து விடுவார்! அவருடன் இருக்கையில் நீ சத்தமாகச் சிரிக்க முடியாது. கிண்டல், வேடிக்கை செய்ய முடியாது. பாட்டை முணுமுணுக்க முடியாது. அவரே அடைபட்டுப் போனவர். உன்னையும் அடைத்துப்போடுவார். அவர் திமிருடன் வீற்றிருக்கிறார். உன்னிடமும் திமிர் காட்டுவார். அவர் தன்னைச் சுற்றிலுமுள்ள கதவுகள் — வாயில்களை மூடிக் கொண்டுவிட்டார். தனக்கு சமாதி கட்டி முடித்துவிட்டார். உனக்கும் சமாதி கட்டிவிடுவார்.

ஆகவேதான் மக்கள் சாது — மகாத்மாக்களை தரிசித்த உடனேயே ஓடிப்போய் விடுகிறார்கள். நமஸ்காரம், சுவாமி என்கிறார்கள் — ஓடிவிடுகிறார்கள். கால் தொட்டு வணங்குகிறார்கள் — ஓடிவிடுகிறார்கள். அவர்கள் செய்வது சரிதான். ஏதோ உள்ளுணர்வின் காரணமாகத்தான் அப்படிச் செய்கிறார்கள். மகாத்மாக்களை வழிபடுகிறார்கள்; ஆனால் நட்பு வைத்துக்கொள்வதில்லை. ஏனெனில் அவர்களது நட்பு — சத்சங்கம் — ஆபத்தானது!

சிலரது அருகில் இருக்கையில் உனக்குள்ளே ஏதோ பிரவாகிப்பதுபோல் தோன்றும். அவர்களால் உன் வாழ்க்கையில் துடிப்புத் தோன்றுகிறது. உனக்குள் ஏதோ அதிர்வு ஏற்படுகிறது. அசைவு தெரிகிறது; இயக்கம் பிறக்கிறது. இதன் அர்த்தம், அந்த மனிதர்கள் உனக்குள் தங்கள் உயிர்சக்தியைச் செலுத்துகிறார்கள் என்பதுதான். அவர்கள் உனக்கு ஏதோ அளிக்க தயாராயுள்ளனர். அவர்கள் கருமி அல்லர். உனக்குள் எதையோ செலுத்துபவர்கள், உன்னையும் அவ்வாறு பிறர்க்களிக்கத் தூண்டுவதில் ஈடுபடுத்து கிறார்கள். அவர்களால் உனக்குள் ஓர் எதிரொலி எழும்புகிறது. பிறருடன் ஒத்துணர்வு ஏற்படுகிறது.

மனிதன் எத்துணை அளவு பிரவாகிக்கிறானோ அந்த அளவு சுதந்திரமாக இருக்க முடியும். ஆனால் நம்மைச் சுதந்திரமாகப் பெருக்கெடுக்க விடாமல் தடுத்து நிறுத்துகிறோம். ஜனகருக்கு இது தெரியவந்தபோது இப்படித் தடுக்கும் முயற்சி வீணானது என உணர்ந்திருப்பார். வெளியே எவ்வளவு தடைபோட்டாலும் உள்ளே நாம் எல்லோரும் இணைந்தே இருக்கிறோம். கடல் மட்டத்திற்கு மேலாகத் தலையை நீட்டும் தீவுகள் அல்ல நாம். பரஸ்பரம் இணைந்து மொத்தமாக ஒரு கண்டமாக, பெருநிலமாக இருக்கிறோம். கடலின் மேல்மட்டத்தில் தெரியும் தீவும் ஆழத்தில், அடிமட்டத்தில் பூமியுடன், தரையுடன் சேர்ந்துள்ளது; அவ்வாறே நாம் இணைந்திருப்பது கண்டு ஜனகர் சொன்னார்.

"இத்தனை ஜனக் கூட்டத்தைப் பார்க்கிறேன். யாரும் இரண்டாகத் தெரியவில்லை. இந்த அனைவருள்ளும் மொத்தமாக ஒருவர்தான் வாழ்வதாக, சுவாசிப்பதாகத் தோன்றுகிறது. அனைவருள்ளும் ஒரே உயிர்தான் பிரவாகிக்கிறது. கண்ணெதிரே காணும் உலகம் எனக்குக் காடுபோல் காட்சியளிக்கிறது."

நீ எப்பொழுதாவது வழி தெரியாமல் காட்டில் அலைந்திருக் கிறாயா? ஒருவன் வழி தெரியாமல் காட்டில் சிக்கிக்கொண்டால் அவன் அங்கே வீடு கட்டி வசிக்கத் தொடங்குவதில்லை. எப்படி வெளியேறுவது என்று வழி தேடுவதில்தான் அவன் மும்முரமாக ஈடுபடுவான். சுற்றிலுமுள்ள அழகிய காட்சிகளை அவன் ரசித்துக் காண்பதில்லை. அவனுடைய கண்களில் பூக்களின் அழகு தெரிவ தில்லை. மரங்களின் செழுமையைக் கண்டு அவற்றை மோகிப்ப தில்லை.

ஜனகர் சொல்கிறார்: "எனக்கு இந்த உலகம் காடுபோல் தோன்றுகிறது. இந்தப் புதிய அறிவின் காரணமாக உலக நடவடிக் கைகள் எல்லாம் காட்டுக் குழப்பமாக இருக்கிறது. இதுவரை இந்த நடவடிக்கைகளில் ஈடுபட்டுச் சிக்கித்திரிந்தேன். இப்போது வெளியேற விரும்புகிறேன். வழி தெரியாமல் பிரமித்து அலைந்து கொண் டிருக்கும் இந்த சமயத்தில் இந்தக் காட்டில் எங்கே மோகிக்கப் போகிறேன்? எதை மோகிக்கப்போகிறேன்?"

ஜனகர் ஞானிகளுடன் நட்புறவு வைத்திருந்தவர். அறிஞர்களுடன் அளவளாவியவர். நற்குணங்களைப் பாராட்டிப் பின்பற்றியவர். அவரிடமும் பலர், "மோகத்தை விடு. மாயையில் மயங்காதே." என்று சொல்லியிருப்பார்கள். ஆனால் ஜனகர் சொல்கிறார்: "மோகத்தை மாயையை விலக்குவது என்பது வீணான முயற்சி. எப்படி விடுவது? விட விரும்பினாலும் அதற்கு ஓர் உபாயமும் இல்லையே. ஏனென்றால் இன்னொருவர் ஒருவர் இருந்தால்தானே அவரை நான் மோகிக்க முடியும்? ஆனால் ஒட்டுமொத்தமாக நான் ஒருவன்தானே மிஞ்சியுள்ளேன்.

"நான் உடலில்லை. எனக்கு உடல் இல்லை. நான் உயிர் இல்லை. நான் ஓர் உன்னத உணர்வு – தன்னுணர்வு – மட்டுமே ஆவேன். எனக்கு உயிர் வாழ்வதில் இருந்த விருப்பம்தான் எனக்குத் தளையாக அமைந்தது."

ஜனகர் சொன்னது ஒரு கோட்பாடு இல்லை. நேரடியாகப் பெற்ற அனுபவம். அது எதிரேயே நிகழ்ந்துகொண்டிருக்கிறது. தத்துவ இயல் கருத்துப்போல் ஜனகர் இங்கு பேசவில்லை. அவர் எப்படி உணர்ந்தாரோ அதற்கு அப்படியே சொல்வடிவம் தருகிறார்.

"உயிர் வாழும் விருப்பம் – அதுதான் என்னைக் கட்டி வைத்திருக்கிறது. ஆனால் இந்த விருப்பத்தையும் இனி எங்கே வைப்பது? யாரைக் கண்டு இச்சை கொள்வது? ஏனெனில் இப்பொழுது என் பார்வையில் படுவது நிரந்தரமான ஒன்று; ஆதியந்தமில்லாத ஒன்று. அது பிறப்பதும் இல்லை; இறப்பதும் இல்லை. பிறப்பதும் இறப்பதும் சரீரம் மட்டும்தான். இன்று உள்ளிழுத்தும் வெளியிட்டும் நடைபெறும் சுவாச இயக்கம் நாளை நின்று போகக்கூடும். இன்று அலைபாயும் மனது நாளை அடங்கிப்போய்விடும். உயிர் பிறக்கும், இறக்கும். ஆனால் இப்போது எனக்கு ஒரு விஷயம் நேராக, தெளிவாகத் தெரிகிறது. நான் தன்னுணர்வு – ஆன்ம உணர்வு – மட்டுமே, பார்வையாளன் – சாட்சி மட்டுமே என்பது நிச்சயமாகத் தெரிகிறது.

**வ**ங்காளத்தில் கோபால் பாண்ட் என்று ஒரு விதூஷகன் – சிரிக்கப் பேசுபவன் – இருந்தான். அவன் செய்த வேடிக்கைகள் பற்றி பல கதைகள் உண்டு. அவன் ஒரு நவாப்பின் தர்பாரில் விதூஷகனாய்

இருந்து எல்லோரையும் சிரிக்கவைத்துக் கொண்டிருந்தான். தர்பார் அலுவலர்களுக்கு அவன்மீது வயிற்றெரிச்சல். ஏனெனில் அவன் நவாப்பிற்கு பிரியமானவனாகிவிட்டான். சிரிக்கவைப்பவன் பிரியமானவனாக ஆகிவிடுவது இயற்கைதானே. அவன் சிறப்பான அறிவுமேதையாகவும் இருந்தான். இதனாலும் மற்றவர்களுக்கு அவன்மீது பொறாமை. அவனை வெல்ல எவ்வளவோ யோசித்துப் பார்த்தனர். ஆனால் ஓர் உபாயமும் கிடைக்கவில்லை.

ஒருநாள் தர்பார் அதிகாரிகள் சிலர் அவனைப் பிடித்து மிரட்டினார்கள். "உன் மேதைத் தனத்தின் ரகசியத்தை நீ இப்போது வெளியிட்டுத்தான் ஆக வேண்டும். ஊரில் உன்னைப் பற்றி ஒரு வதந்தி பரவியுள்ளது. நீ ஏதோ சித்து வேலை செய்து சுகதா மணிக்கல்லைப் பெற்றுவிட்டாய் என்கிறார்கள். அதன் மூலம் நீயும் சுகமாக உள்ளாய், மற்றவர்களையும் சந்தோஷப்படுத்துகிறாய். இதுதான் உன் வியப்பூட்டும் செயல்களுக்கும் செல்வாக்கிற்கும் காரணம். அந்த சுகதாமணியை எங்களுக்குக் கொடுத்துவிடு. இல்லாவிட்டால் உனக்கு நல்லதில்லை," என்றனர்.

அதிகாரிகள் அவனை அடித்து உதைக்க ஆரம்பித்தனர். கோபால் சொன்னான்: "பொறுங்கள். நீங்கள் சொல்வது சரிதான். அந்த வதந்தி உண்மைதான். ஆம், என்னிடம் சுகதாம்ணி உள்ளது. ஆனால் யாராவது திருடிவிடக்கூடாது, பிடுங்கிக்கொள்ளக் கூடாது என்பதற்காக அதைக் காட்டில் புதைத்து வைத்திருக்கிறேன். நான் இடம் சொல்கிறேன். நீங்கள் தோண்டி எடுத்துக் கொள்ளுங்கள்.

பௌர்ணமி இரவு கோபால் அதிகாரிகளை அழைத்துக்கொண்டு காட்டிற்குள் போனான். ஒரு மரத்தின் கீழே உட்கார்ந்தான். "எங்கே புதைத்துள்ளாய்?" என்று மற்றவர்கள் கேட்டனர்.

அவன் சொன்னான்: "அதைத் தெரிந்துகொள்ள ஒரு சூத்திரம் உள்ளது. எந்த இடத்தில் நின்றுகொண்டால் சந்திரன் உங்கள் தலைக்கு நேர் மேலே பிரகாசிக்குமோ அங்குதான் அந்த மணி புதைந்துள்ளது."

அதிகாரிகள் அங்குமிங்குமாக ஓடினார்கள். இடத்தைத் தேடினார்கள். பௌர்ணமியாதலால் ஒவ்வோர் அதிகாரியும் தன் தலைக்கு நேர் மேலேதான் சந்திரன் இருப்பதைப்போல் உணர்ந்தான். ஆகவே அவர்கள் ஆங்காங்கே தோண்டத் தொடங்கினார்கள். இரவு

முழுவதும் பல இடங்களில் தோண்டினார்கள். அந்த நேரத்தில் கோபால் நன்றாகத் தூங்கினான்.

காலையில் அதிகாரிகள் எழுப்பி, "நீ எங்களை ஏமாற்றி விட்டாய். நாங்கள் அக்கம்பக்கம் அனைத்து இடங்களிலும் தோண்டி விட்டோம். இரவு முழுதும் தோண்டிக் களைத்துவிட்டோம். அந்த சுகதாமணி எங்கும் கிடைக்கவில்லை," என்று சத்தம் போட்டனர்.

கோபால் சிரித்தான் "எங்கே தலை மீது சந்திரன் பிரகாசிக் கிறதோ அங்குதான் சுகதாமணி புதைந்திருப்பதாகச் சொன்னேன். பூமிக்குள் புதைந்து கிடப்பதாகவா சொன்னேன்? சந்திரனின் ஒளி உங்கள் தலையில் பட்டது. அங்கு மூளை உள்ளது. சுகதாமணி அதற்குள்தான் புதைந்துள்ளது," என்று விளக்கினான்.

ஆம், அது உங்கள் ஆன்ம உணர்வில் புதைந்துள்ளது. சாட்சி மனப்பான்மையில் அமைந்துள்ளது. சாட்சிபோல் இருப்பவன் சுகமாக உணர்வான்.

இதைத்தான் ஜனகரும் சொன்னார்: நான் உடலில்லை. எனக்கு உடல் இல்லை. நான் உயிர் இல்லை. நிச்சயமாக நான் தன்னுணர்வு மட்டுமே ஆவேன். வாழ்வதில் இருந்த விருப்பம்தான் எனக்குத் தளை ஆயிற்று.

வாழ்க்கையில் ஒரே கட்டுத்தளை நாம் வாழ விரும்புகிறோம் என்பதுதான். இது மிகவும் வியப்பூட்டும் விஷயம். நீ பார்த்திருப் பாயே, பிச்சைக்காரன் ஒருவன். கை – கால் முடமானவன், மரணத்தை நெருங்கிவிட்டவன். உடலைத் தரையில் தேய்த்துக்கொண்டு சாலையில் பிச்சையெடுக்கிறான். ஆனாலும் உயிர்வாழ விரும்புகிறான். நீ அவன் இடத்தில் இருந்தால் தற்கொலை செய்துகொண்டிருப்பாய் என நினைக்காதே. அது அவ்வளவு சுலபமன்று. உயிர் வாழும் ஆசை மிகவும் ஆழமானது. எப்படிப்பட்ட சூழ்நிலையிலும் மனிதன் உயிருடன் இருக்கவே விரும்புகிறான். அதற்காக அவன் எந்த சூழ்நிலையுடனும் ஒத்துப்போகத் தயாராக உள்ளான்.

'சிலர் தற்கொலை செய்துகொள்கிறார்களே, அது எப்படி?' என்று நீ கேட்க நினைக்கலாம். தற்கொலை செய்துகொள்வோரும் உயிர் வாழும் ஆசையால்தான் அப்படிச் செய்கிறார்கள். சாக வேண்டுமென்று

யாரும் தற்கொலை செய்துகொள்வதில்லை. மக்கள் உயிர்வாழ சில நிபந்தனைகள் வைத்திருக்கிறார்கள். ஒருவன் சொல்வான், "என்னிடம் கோடி ரூபாயாவது இருந்தால்தான் உயிர்வாழ்வேன்," என்று. ஆனால் அவன் திவால் ஆகிவிட்டான். கோடி ரூபாய் கையிலிருந்து நழுவிவிட்டது. இனி வாழ்வதில் என்ன அர்த்தம் இருக்கிறது என்று அவன் கூறுகிறான். அவன் உயிர்வாழ்வதற்கான நிபந்தனையாக, அடிப்படை காரணமாக இருந்த விஷயம் முறிந்துவிட்டது. அவன் வாழ்வதற்குத் தனிப்பட்ட வகையைத் தேர்ந்தெடுத்திருந்தான். அது சாத்தியப்படவில்லை. 'சரி, இறந்துபோய் விடலாம்,' என அவன் முடிவெடுக்கிறான். வாழ்வதற்கான ஒரு தனிப்பட்ட நிபந்தனையின் காரணமாக அவன் இறக்கிறான்.

"ஒரு குறிப்பிட்ட பெண்ணுடன் சேர்ந்து வாழ முடியுமானால் மட்டும் உயிருடன் இருப்பேன், இல்லாவிடில் இறந்துபோவேன்," என்கிறான் ஒருவன். அதேபோல் ஒரு பெண், ஒரு குறிப்பிட்ட ஆணை அடைவதானால் உயிருடன் இருப்பேன், இல்லாவிடில் இறப்பேன் என்று கூறலாம். ஆனால் இவை மரணச் செய்திகள் இல்லை. உயிர் வாழ வேண்டுமென்பதற்கான வாக்கு மூலம் இவை. வாழ விரும்பும் விதத்தில் வாழ முடியாவிடில் மக்கள் இறப்பதற்கு தயாராகிவிடுகிறார்கள். சுருக்கமாக, வாழ்வதற்காக மக்கள் இறக்கக்கூட தயாரரக உள்ளனர்.

தற்கொலை என்பது உண்மையாகவே நடைபெறுமானால் அது புத்தர், மகாவீரர், அஷ்டாவக்கிரர், ஜனகர் போன்றோருடன் சம்பந்தப் பட்டிருக்கும். அவர்கள்தான் சரியாகத் தற்கொலை செய்துகொள்ளக் கூடியவர்கள். ஏனெனில் அவர்களுக்கு மறுபிறவி கிடையாது. வாழ்வதற்காக இறப்பது ஒரு புறம் இருக்கட்டும்; அவர்கள் வாழ்வதற்காக வாழக்கூட விரும்பவில்லை. வாழும் ஆசையே ஓர் ஏமாற்றுவேலை என்பதை அவர்கள் அறிந்திருந்தனர்.

இதைச் சரியாகப் புரிந்துகொள்ள வேண்டும். சமாதி நிலை என்ற கண்ணோட்டத்துடன், தியானம் என்ற கண்ணோட்டத்துடன் பார்த்தால் வாழ்க்கை என்பது இருக்கத்தான் செய்கிறது. அது ஒருபொழுதும் இல்லாமல் போனதில்லை. நீ ஏற்கெனவே என்னவாக ஆகியுள்ளாயோ அவ்வாறு இனிமேல்தான் ஆக நினைப்பது பைத்தியக்காரத்தனமான விஷயம் அல்லவா? இது ஏற்கெனவே உன்னிடம் பணமிருந்தும்

பணம் வேண்டும் என்று சொல்வதுபோல் அல்லவா உள்ளது. உன்னிடம் பணம் ஏற்கெனவே இருந்தும் நீ பிட்சை கேட்டு வீடு வீடாக அலைவதுபோல் அல்லவா உள்ளது. என்றைக்கு வாழ்க்கையின் யதார்த்தம் புரியவருகிறதோ அக்கணமே உயிர்வாழும் ஆசை மறைந்துவிடும். நீ உன் வாழ்க்கையைப் பொருத்தமில்லாத ஒன்றுடன் சேர்த்தால், உதாரணமாக, உடலுடன் சேர்த்தால், உன்னை உடல் என்று சொன்னால் ஆன்மீக முன்னேற்றத்திற்கு இடையூறு வரும். ஏனென்றால் உடல் நாளையேகூட இறந்துபோகலாம். உடலுக்கு ஏற்படக்கூடிய மரணம் நமக்கு பயமூட்டி உயிர்வாழும் ஆசையைத் தோன்றச்செய்யும்.

ஒரு பழைமையான திபெத்திய கதை. இரண்டு ஆந்தைகள் எங்கிருந்தோ வந்து ஒரு மரக்கிளையில் அமர்ந்தன. ஒன்றின் வாயில் பாம்பு. இன்னொன்றின் வாயில் எலி. அந்த ஆந்தைகளின் காலை உணவு தயார்! எலியைப் பார்த்த பாம்பு தான் ஆந்தையின் வாயில் இருப்பதையும், மரணத்தை நெருங்கிவிட்டதையும் மறந்துபோனது. பாம்பின் வாயில் எலியைப் பார்த்து நீர் ஊறியது. உயிராசை சாவு அபாயத்தை மறக்கடித்துவிட்டது.

இன்னொரு புறம் எலி பாம்பைப் பார்த்ததும் நடுங்கிவிட்டது. தான் ஏற்கெனவே ஆந்தையின் வாயில், மரணத்தின் பிடியில் இருப்பதை மறந்துவிட்டது. ஆந்தைகள் திகைத்துப்போயின. ஓர் ஆந்தை இன்னொன்றிடம் இதென்ன விசித்திரமாக இருக்கிறதே என்றது. இரண்டாம் ஆந்தை பதிலளித்தது: "எனக்கு இந்த ரகசியம் புரிகிறது. நாக்கின் ருசி பார்க்கும் ஆசை மிகவும் தீவிரமானது. எதிரே மரணம் காத்திருந்தாலும் அதில் கவனம் செல்வதில்லை. இரண்டாவதாக, பயம் என்பது சாவு பயத்தைவிட வலிமையானது. ஆந்தை மூலமாக நேரவுள்ள சாவிடம் எலிக்கு பயமில்லை. ஆனால் பாம்பு தன்னைத் தாக்குமோ என்னும் பயத்தினால் அது பயந்து நடுங்குகிறது. நாமும் சாவை பற்றி அஞ்சுவதைவிட பய உணர்வால்தான் அதிகம் நடுங்குகிறோம். நாக்கு ருசி, இதர புலன்களின் வேட்கை காரணமாக நமது உயிர்வாழும் ஆசை வலுப்பெற்று விளங்குகிறது. ஆகவே சாவு இருபத்து நான்கு மணி நேரமும் நம் எதிரேதான் நின்றுகொண்டிருக்கிறது எனினும் அது நம் கண்களில் படுவதில்லை. அந்த அளவிற்கு நாம் பார்வை இழந்துவிட்டோம்.

உடலுடன் தன்னைக் கட்டிப் போடுபவனுக்குத் தடைகள் பல ஏற்படும். நீ உன்னை லட்சம் தடவை ஏமாற்றிக்கொண்டாலும் சரி, அறிவுறுத்திக்கொண்டாலும் சரி, உடம்பு ஒருநாள் இறந்துதான்போகும் என்பதை மாற்ற முடியாது. தினமும் யாராவது இறந்துதான் போகிறான். கண்ணை மூடிக்கொண்டால் இந்த யதார்த்தத்திலிருந்து தப்பிவிட முடியுமா? தினமும் சிதை மூட்டப்பட்டு எரிகிறது. தினமும் 'ராமன் நாமமே சத்தியம்' என்று முழங்கியபடி உடல் எடுத்துச் செல்லப் படுகிறது. சாவைப் பற்றி நமக்கு அதிகம் தெரியாமலிருப்பதற்காக நாம் எல்லா உபாயமும் செய்து வைத்துள்ளோம். இதனால்தான் மயானத்தை ஊருக்கு வெளியே அமைத்திருக்கிறோம். உண்மையில் ஊருக்கு நடுவே அல்லவா மயானம் இருக்க வேண்டும்! அப்போது தானே ஒரு பிணம் எரிந்தால் ஊர் மொத்தத்திற்கும் தெரியவரும். பெண்களோ குழந்தைகளை வீட்டிற்குள்ளே விரட்டுகின்றனர். "தெருவில் பிணம் போகிறது. யாரோ செத்துவிட்டார். குழந்தைகளே, அதைப் பார்க்காதீர்கள். உள்ளே வந்துவிடுங்கள்," என்று மிரட்டிக் கதவை மூடிவிடுகிறார்கள்.

சாவு பற்றி நாம் அதிகமாகப் பேசுவதில்லை. அதைப் பற்றி குறிப்பிடுவதும் இல்லை. மயானத்திற்கு உடலை எடுத்துச் செல்பவர் களும் உடன் வருபவர்களும் கூட வேறு விஷயங்களைத்தான் அலசுகிறார்கள். ஒருபுறம் பிணம் எரிகிறது. மறுபுறம் மயானத்திற்கு வந்தவர்கள் என்ன பேசுகிறார்கள் இப்பொழுது என்ன சினிமா படம் நடைபெறுகிறது? தேர்தலில் எந்தத் தலைவர் வெற்றிபெற வாய்ப்பு அதிகம்? தோற்கப்போவது யார்? தேர்தல் நடக்குமா, நடக்காதா? இன்னும் எத்தனையோ விஷயங்களைப் பேசுகிறார்கள். இதெல்லாம் உபாயங்கள்தான். இப்பேச்செல்லாம் ஒரு திரையைப்போல. 'எவனோ இறந்துபோனான். இறந்தவர்கள் நாம் இல்லையே' என்னும் எண்ணத் திரை அது.

ஒருவர் இறந்துபோனால் நாம் அனுதாபம் தெரிவிக்கிறோம். அதுவும் ஓர் உபாயமே. யாருக்கப்பா அனுதாபம் தெரிவிக்கிறாய்? அதே 'கியூ'வில்தான் நீயும் நிற்கிறாய். அதோ ஒருத்தன் அகன்றான், 'கியூ' கொஞ்சம் முன்னேறியது. மரணம் உன்னை மேலும் நெருங்கியது. உன் வரிசை எண் நெருங்கிக்கொண்டிருக்கிறது. டிக்கட் ஜன்னலை நீ விரைவில் அடைந்துவிடுவாய்!

ஆனால் நம் பேச்சு வேறு விதமாக உள்ளது. "கெடுதலான சம்பவம் நிகழ்ந்துவிட்டது. பாவம், அந்த ஆள் செத்துப்போனார்." என்கிறோம். நாம் ஒரு பிரமையில் உள்ளதையே இப்பேச்சு காட்டுகிறது. 'மற்ற யாரோதான் தினமும் இறக்கிறார்கள். நான் இறந்துபோகின்றவன் இல்லை' என்னும் பிரமையில் ஆழ்ந்துள்ளனர்.

ஆனால் எத்தனை உபாயம் செய்தாலும் உயிர் நிரந்தரமாக உடலுடன் ஒட்டிக்கொண்டிருக்காது. ஆயுளை நூறு வருஷம், இருநூறு வருஷம் என்று நீட்டிக்கொண்டே போனாலும் அடிப்படையில் மாறுதல் இல்லை. ஆயுளை நீட்ட விஞ்ஞானம் எப்படியும் ஏற்பாடு செய்யும். இதனால் என்ன மாறுதல் ஏற்படும்? சாவைக் கொஞ்சம் தள்ளிப்போகச் செய்யலாம். ஆனால் அது காத்துக்கொண்டுதான் இருக்கும். அதைச் சிறிது தூரம் இடித்துத் தள்ளலாம். ஆனால் அது போய்விடாமல் நின்றுகொண்டிருக்கும்.

உயிர் போய்விடுமோ, உடல் போய்விடுமோ என்று பயந்து, நாம் நிலைத்துநிற்க வேண்டும், அதற்கு உயிர்வாழ வேண்டும் என்று ஆசைப்படுகிறோம். இந்த ஆசை காரணமாக நாம் செல்வம் சேகரிக்கிறோம், நல்ல பதவியை வசப்படுத்திக்கொள்கிறோம். 'மற்றவர்கள்தான் இறப்பார்கள், நாம் இறக்கமாட்டேன்' என்று ஒரு போலி நம்பிக்கையை நிறுவிக்கொள்கிறோம். இப்படிப் பல விதமாக பந்தோபஸ்து செய்துகொள்கிறோம். ஆனாலும் சாவு வரத்தான் செய்கிறது.

ஒருவன் தன் உடலுடன் தன்னை இணைத்துப் பார்ப்பது தன்னையே ஏமாற்றிக்கொள்வதேயன்றி வேறில்லை. இந்த சுய ஏமாற்றுவேலை என்ற படுதாவை அவ்வப்போது ஒதுக்கிச் சாவு காட்சி தந்தபடி இருக்கும். சாவை உணரும் அதே அளவிற்கு உயிர்வாழும் ஆசையும் உண்டாகும். அதே அளவிற்கு மனிதன் பயத்தின் காரணமாக வாழ்க்கையைக் கெட்டியாகப் பிடித்துக்கொள்கிறான். அது நழுவிப்போய்விடுமோ என்று கவலைப்படுகிறான்.

ஜனகருக்கு வேறு விதமாகத் தோன்றியது. 'இதென்ன வேடிக்கை. நாம் இறக்கவே முடியாது. நாம் அமிர்தத்தின் மைந்தர்கள். நாமும் நம் உடலும் ஒன்று, நாமும் உயிரும் ஒன்று, நாமும் மனமும் ஒன்று என்றெல்லாம் நினைத்ததால்தான் சாவு பயம். இவற்றையெல்லாம்

கடந்து நாம் நம்மைப் பார்க்க முடிந்தால் பிறகு சாவு எப்படி ஏற்படும்? சாட்சிக்கு சாடுவது? தன்னுணர்வுக்குச் சாவேது? ஆக, நம்மைக் கட்டிப்போடுவது உயிர் வாழ்வதில் உள்ள விருப்பம்தான்

அஹம் தேஹஹ ந — நான் உடல் அல்லன்
**மே தேஹஹ ந** — உடல் என்னுடையது அன்று

**அஹம் ஜீவஹ ந** — நான் ஜீவன் அல்லன். உயிரென்று சொல்லப்படுகிற ஒன்று நானல்லன்.

**அஹம் ஹி சித்** — நான் நிச்சயமாகத் தன்னுணர்வு, மெய்யுணர்வு ஆவேன்.

**மே ஏவ பந்த யா ஜீவிதே ஸ்ப்ருஹா ஆஸித** — உயிர்வாழ வேண்டும் என்ற ஒரு வேட்கைதான் என்னைக் கட்டுப்படுத்திய தளை: நானேதான் ஜீவன் என்பதை இப்போது நான் அறிந்துகொண்டேன். இந்நிலையில் தனியாகப் பிரிந்து உயிர் வாழும் ஆசை என்பது பைத்தியக்காரத்தனம்தான். நான் மன்னாதி மன்னன் வீணாக நான் பிச்சைக்காரனாக விளங்கியிருந்தேன்.

எல்லையற்ற கடல்போன்ற என்னிடமிருந்து மனம் என்னும் காற்றடித்து, உலகம் எனப்படும் விசித்திர அலைகள் உற்பத்தி யாகின்றன. காற்று வீச்சால் அமைதியான ஏரியிலும்கூட அலைகள் எழும்புகின்றன. அது போலவே மனமென்னும் காற்று சாந்தமான என் ஆத்மாவில் ஆயிரமாயிரம் அலைகளை எழச்செய்கிறது. அந்த அலைகள் என்னுடையவை அல்ல.

நமக்கு எத்தனையோ விசித்திரக் கனவுகள் தோன்றுகின்றன. எவ்வளவு மாயை, மோகம், பேராசை நம் வாழ்வில் பரவியுள்ளது! எத்தகைய வலைகளெல்லாம் நம்மைச் சிக்கவைக்கப் பின்னப்படு கின்றன. இந்த வலைகளில் மாட்டிக்கொள்வது வழக்கமாகிவிட்டால் பிறகு நாம் இவற்றிலிருந்து வெளியேற முடியாது.

கிரேக்க நாட்டில் இசைக் கலைஞர் ஒருவர். யாராவது அவரிடம் இசை பயில வந்தால் அவர், “நீ இதற்குமுன் வேறெங்காவது சங்கீதம் கற்றது உண்டா? சங்கீதம் பற்றி உனக்கு ஏற்கெனவே என்ன தெரியும்?” என்று விசாரிப்பார்.

வந்தவன் அவரிடம், சங்கீதம் பற்றி தனக்கு ஒன்றுமே தெரியாது என்றால் கலைஞர் அவனுக்குச் சொல்லித்தர அரைக் கட்டணம் வாங்குவார். வந்தவன் தனக்குக் கொஞ்சம் சங்கீதம் தெரியும் என்றால், இரண்டு மடங்குக் கட்டணம் கேட்பார். அவ்வாறு அவரிடம் இருவர் வந்தனர். ஒருவர் இசை பற்றி ஒன்றுமே அறியாதவர். இன்னொருவர் ஏற்கெனவே புகழ்பெற்ற இசைக் கலைஞர். குரு அவர்களிடம் கட்டண விவரம் தெரிவித்தார். சங்கீதம் தெரியாதவனுக்குக் கட்டணச் சலுகை ஏன்? அவனுக்குச் சொல்லித்தர கஷ்டப்படவேண்டும். சங்கீதம் தெரிந்தவனுக்கு பயிற்சி தருவது சுலபம். அவனிடம் இரண்டு மடங்கு கட்டணமா வசூலிப்பது? அநியாயமாக இருக்கிறதே என்று கேட்டனர் வந்த இருவரும்.

குரு விளக்கினார். "நான் சொல்வது சரியாகத்தான் உள்ளது. ஒன்றும் தெரியாதவனுக்குக் கற்றுக்கொடுப்பது மட்டும்தான் வேலை. ஏற்கெனவே இசை தெரிந்தவரை அவர் கற்ற பாணியை மறக்கடிக்கச்செய்ய வேண்டும். இது முதல் வேலை. அப்பொழுதுதான் அவர் என்னிடம் புதிதாகக் கற்க முடியும்."

பொதுவான தினசரி வாழ்க்கையிலும் இந்த ஒரு பிரச்சினையே நம்மை எதிர்நோக்கி உள்ளது. நாம் கடந்த பல பிறவிகளில் ஒருவிதமாகக் கற்றுக் கொண்டு வந்துள்ளோம். சில தவறான விஷயங்களை ஆழமாகப் பயின்று விட்டோம். அவற்றை எப்படி மறப்பது என்பதுதான் தற்போதையப் பிறவியில் நமக்குள்ள பிரச்சினை. உதாரணமாக, நாம் என்பது நம் உடல் என்று அழுத்தம்திருத்தமாக நம் மனத்தில் பதிந்துவிட்டது. மொழி, சமூகம், இனம், பழக்க வழக்கங்கள் ஆகியவை இந்தக் கண்ணோட்டத்துடன் சம்பந்தப்படுகின்றன.

பசிக்கிறது என்பதை நீ எப்படிச் சொல்கிறாய்? "எனக்குப் பசிக்கிறது." என்கிறாய். சற்று யோசி. மாற்றி யோசி. 'உடம்புக்குப் பசியெடுக்கிறது என்று உணர்கிறேன்." என்று சொல்லிப்பார். இப்படிச் சொல்வது முதலில் சொல்லிய விதத்திலிருந்து வித்தியாசப்படுகிறது என்பதைப் புரிந்துகொள்வாய். "எனக்குப் பசிக்கிறது" என்று சொல்லும் போது நீ உன்னை உடலென்று அறிவிக்கிறாய். 'உடம்பிற்குப் பசிக்கிறது' என்னும்போது, அந்த விதமாக நீ அறியும்போது, அதற்கு அர்த்தம், 'உடல் என்னிலிருந்து வேறுபட்டது. நான் அறிபவன். காண்பவன், சாட்சி' என்று நீ கூறுவதாகக் கொள்ள வேண்டும்.

ஒருவன் உன்னைத் திட்டுகிறான். உன் மனத்தில் கோப அலைகள் எழுகின்றன. 'எனக்குக் கோபம் பொங்கிவருகிறது.' என்கிறாய். இவ்வாறு கூறுவது தவறு. நீ சொல்ல வேண்டியது என்ன – 'மனத்தில் கோபம் மூண்டுள்ளது' என்று மட்டும்தான். நீ என்பது மனமில்லை. உண்மையில் நீ பார்ப்பவன் மட்டுமே. நீதான் மனம் என்றால் உனக்குக் கோபம் என்பதைப் பிரித்து அறிந்திருக்க முடியாதே. மனத்துக்குக் கோபம் என்றால் நீ அறிவாய். உனக்குக் கோபம் என்றால் அறிபவன் யார்?

நீ உடல் மாத்திரமே எனில் உனக்குப் பசி எடுப்பது ஒருபொழுதும் தெரிந்திருக்காது. ஏனெனில் இதனால் நீயும் பசியும் ஒன்றென ஆவதால் பசி எடுப்பதைத் தெரிந்துகொள்வது யார்? இந்த வேறுபாட்டைப் புரிந்துகொள்ள இடைவெளி தேவை. உடம்புக்குப் பசி எனில் உனக்குத் தெரியவருகிறது. உடம்பில் பசி எனில் உன்னில் உணர்கிறாய். நீ அறிபவன், உணர்பவன் மாத்திரமே.

சரியாக விளக்க நமது மொழி அறிவியல்படி அமைந்திருந்தால், நம்முடைய வினைகள் தன்னுணர்வுடன் சம்பந்தப்பட்டிருந்தால், பெரிய இடையூறுகள் குறைந்து போயிருக்கும்.

'எல்லையற்ற சமுத்திரம் போன்ற என்னில், மனமென்னும் காற்று சாந்தமாகிவிட்டால், ஜீவன் என்னும் வணிகனுக்கு துர்பாக்கியம் ஏற்பட்டு உலகமென்னும் படகு அழிந்துபோய் விடுகிறது.'

மனமென்னும் காற்று அமைதிப்பட்டுவிட்டால் அலைகள் காணாமல் போய்விடுகின்றன. சிந்தனை ஏரி மௌனமாகிவிடுகிறது. ஆகவே பிறகு ஜீவன் என்னும் வணிகனுடைய படகு அழிந்து போகிறது. 'ஜகத்போதஹ வினஸ்வரஹ' உலகமென்னும் படகு உடனே நாசமாகிறது. அப்படி உலகுப் படகு இருந்ததுகூட கனவோ, வெறும் எண்ணமோ, பிரமையோ என்று அதிசயிக்கும்படி அது மறைந்துபோகிறது. ஆகவே நாம் செய்ய வேண்டிய ஒரே வேலை மனமென்னும் காற்று சாந்தப்படச் செய்ய வேண்டும் என்பதே.

இந்த விஷயத்தில் அஷ்டாவக்கிரரும் ஜனகரும் புரட்சிகரமான கருத்துக் கொண்டிருந்தனர். இதை நான் அடிக்கடி சுட்டிக்காட்டி யிருக்கிறேன். பரம்பரையான யோகமும் மனத்தில் வீசும் காற்றை

கொந்தளிப்பை அமைதிப்படுத்தவே சொல்கிறது. ஆனால் வழிமுறை வேறு: 'சித்தவ்ருத்தி நிரோதஹ' என்கிறது. மனத்தின் போக்கை அடக்கு என்று இதற்குப் பொருள். அது எப்படி? அதற்குத்தான் யம–நியம–ஸம்யம் – ஆஸனம் – பிராணாயமம் –பிரத்யாஹாரம்–தாரணை–தியானம்–சமாதி முறையை மேற்கொள்ளுமாறு பரம்பரை யோகம் சொல்கிறது. இதனால் மன அலைகள் அடங்கிவிடும் என்கிறது.

இந்த விஷயத்தில் அஷ்டாவக்கிரரும் ஜனகரும் ஆச்சரியமான கருத்து தெரிவிக்கின்றனர். நீ ஏதாவது செய்து மனத்தை அடக்கு என்று அவர்கள் சொல்லவில்லை. மாறாக, ஏதாவது செய்தால் மனத்தின் அலைகள் மேலும் உயரே எழும்பும்; ஏதாவது செய்தால் புதிய உபத்திரவம் தோன்றும்; அலைகள் வேகமாக அசையும். நீ எதுவும் செய்ய வேண்டும் என்பதே இல்லை. நீ பார்த்தபடி இருந்தால் போதும். எதுவும் செய்துவிடாதே என்கிறார்கள் அந்த ஞானிகள்.

'எல்லையற்ற சமுத்திரமாகிய என்னில் ஜீவர்கள் என்னும் அலைகள் தமது சுபாவப்படி எழுகின்றன; பரஸ்பரம் மோதுகின்றன; தமக்குள் களிக்கின்றன; பிறகு மீண்டும் கடலில் லயித்து விடுகின்றன.'

தத்தம் சுபாவப்படி இதெல்லாம் நடைபெறுகிறது என்பதுதான் ரகசியத்தின் திறவுகோல். நீ இதை அமைதிப்படுத்த முடியாது. இதில் குழப்பம் உண்டாக்கவும் முடியாது. நீ குறுக்கே வராமலே இரேன். நீ நடப்பதை நடைபெறவிடு. நீ நினைவில் வைக்கவேண்டியது நீ ஒரு சாட்சி என்பது மட்டுமே.

நீ சினிமா பார்க்கப் போகிறாய். இருக்கையில் உட்கார்ந்து விட்டாய். விளக்குகளை அணைத்துவிட்டார்கள். இருள் சூழ்ந்தது. வெள்ளைத் திரை உயிர்பெற்றது. அதில் படக்காட்சிகள் ஓடுகின்றன. நீ நினைவில் கொள்ள வேண்டியது 'நான் சாட்சி மட்டுமே. திரையில் தெரியும் காட்சிகள் கறுப்பும் வெளுப்பும் நடத்தும் விளையாட்டுதான்' என்பதே. அப்படிச் செய்தால் திரைப்படத்தின் கதை உன்னைத் துளிக்கூட பாதிக்காது. திரையில் ஒருவர் கொல்லப்படும் காட்சி வந்தாலும் நீ அதிர்ந்துபோக மாட்டாய்.

ஆனால் அதே காட்சியைப் பார்க்கும் மற்றவர்கள் உடனே நேராக நிமிர்ந்து உட்காருகிறார்கள். உண்மையிலேயே ஒரு கொலை

நடப்பதைக் காண்பதைப்போல் உணர்கிறார்கள். பலருடைய கண்கள் ஈரமாகிவிடுகின்றன. கைக்குட்டையை எடுக்கிறார்கள், கண்ணீரைத் துடைத்துக்கொள்ள. நல்லவேளையாக, யாரும் பார்க்க முடியாதபடி இருட்டாக உள்ளது. அவசரமாகக் கண்களைத் துடைத்துவிட்டுக் கைக்குட்டையை மறைத்துக்கொள்ளலாம். திரையரங்குகளில் மக்களின் கைக்குட்டைகள் ஈரமாகிவிடுகின்றன. அப்படி ஈரமாகாவிடில் அவர்கள் பார்த்த திரைப்படம் நன்றாக இல்லை என்று பொருளாம். அழவைத்தால்தான் அருமையான சம்பவம் வந்துள்ளது என்று அர்த்தம். இதேபோல் மக்கள் சிரிக்கவும் செய்கிறார்கள்.

திரையில் நிழல்கள் மட்டும்தான் இயங்குகின்றன என்பதை நீ பார்த்தாய். திரைச்சீலையில் ஒன்றுமே கிடையாது. ஆனால் அதில் தெரியும் நிழலுருவம் உன்னைப் பிடித்தாட்டுகிறது. அதனுடன் சேர்ந்து நீயும் இயங்கத் தொடங்குகிறாய். படம் பார்க்கையில் உன் மனத்தில் கோபம், அன்பு, காமம், ஆசை, கிளர்ச்சி உண்டாகலாம்; எது வேண்டுமானாலும் ஏற்படலாம். ஆனால் திரையில் ஒன்றுமில்லை! இதை நீ மறந்தே விடுகிறாய்.

உன்னுடைய இந்த மறதியைத்தான் சரிசெய்ய வேண்டும். வேறு ஒன்றும் செய்ய வேண்டியதில்லை. அதற்காக நீ முன்புறமாகத் திரையை நோக்கி ஓடி அதைக் கிழிக்க வேண்டியதில்லை. அல்லது பின்பக்கம் ஓடி புரொஜக்டரை உடைக்க வேண்டியதில்லை. அதை இயக்குபவரைப் பார்த்து, “ இதென்ன தமாஷ்? கறுப்பும் வெள்ளையுமாக நிழல்களைக் காட்டி மக்களை வேதனைப்படுத்துகிறாயே. இத்தனை பேர் அநியாயமாக அழுகிறார்களே. வாழ்க்கையிலேயே போதுமான அழுகை இருக்கிறதே. போதும் நிறுத்து.” என்று மிரட்ட வேண்டியதில்லை.

நீ அழுவதில்லைதான். அழவேண்டிய தேவையுமில்லை. அழ விரும்புகிறவர்களுக்குத் திரைச்சீலை இருந்துவிட்டுப்போகட்டும். சிலருக்குப் படம் பார்த்து அழுவது பிடிக்கும். அழுவதற்காகவே பணம் கொடுத்து உள்ளே வந்திருக்கிறார்கள். அவர்களுக்கு அதனால் கிடைக்கும் திருப்தியைத் தடைசெய்யாதே. நீ சாட்சி மட்டுமே என்பதை நினைவில்வைத்தால் போதும். மற்றபடி உன்னைச் சுற்றிலும் நடைபெறுபவை மேலோட்டமானவை.

**ஆச்சர்யம் மயி அனந்த மஹாம்போதி ஜீவவீசய: உத்யந்தி |**
**தவந்தி ச கேலந்தி ச ஸ்வபாவத: ப்ரவிஷந்தி ||**

அலைகள் அசைந்தாடி களிக்கட்டும். உயரே எழும்பித் தணியட்டும். கூத்தாடட்டும். சுபாவமாகப் பொங்கிய இவை சுபாவமாகத் தணிந்துபோகும். நீ கரையில் உட்கார்ந்திரு. சாட்சியாகப் பார்த்துக்கொண்டிரு.

இதற்காகத் தனியாக யோகா இல்லை. அஷ்டாவக்கிரரின் பார்வையில், விசேஷமாக எதுவும் செய்யவேண்டாம். நேரடியாகத் தீர்வுக்குத் தாவிவிடுகிறார். நீ சும்மா பார்த்துக்கொண்டிரு. கோபம் எழுகிறதா, இது இயற்கைதான் என்று சொல். காமம் தலைதூக்குகிறதா, இது இயற்கைதான் என்று சொல். நீ பார்வையாளனாக மட்டும் தொடர்ந்து இரு. அந்நிலையிலிருந்து அசைந்துகொடுக்காதே. சாட்சி நிலையிலுள்ள நீ எதற்கும் நடுங்காதே. மற்றவர்கள் உணர்ச்சி வசப்படட்டும். மொத்த உலகமே புயலில் தத்தளிக்கட்டும். நீ புயலின் நடுவிலும் சாட்சியாக நிலைத்திரு.

**மு**ல்லா நஸ்ருத்தீன் கடற்பிரயாணம் செய்துகொண்டிருந்தார். புயலடித்துக் கப்பல் கவிழத் தொடங்கியது. சக பயணிகள் அங்குமிங்குமாக ஓடினர். பெண்கள் புலம்ப ஆரம்பித்தனர். நாய்கள் குரைத்தன. குழந்தைகள் மயக்கமடைந்தனர். எல்லோரும் ஒரு மூலையில் திரண்டனர். கப்பலின் சொந்தக்காரன், கேப்டன் உரக்கக் கட்டளையிட்டுக்கொண்டிருந்தார்கள். நிலைமையைச் சமாளிக்க முயல்கின்றனர். மாலுமிகள் தப்பிக்கும் ஏற்பாடுகளில் மும்முரமாய் ஈடுபடுகிறார்கள். எங்கும் குழப்பம், ஆரவாரம். முல்லா நஸ்ருத்தீன் மட்டும் அமைதியாக நின்றுகொண்டு மக்கள் பரபரப்படைவதைப் பார்த்தபடி இருக்கிறார். இதைக் கவனித்து எரிச்சலடைந்த ஒருவன் அவரிடம் சென்றான். "முல்லா நஸ்ருத்தீன், நீர் மனிதர்தானா, கற்சிலையா? உமக்கு எல்லாம் விளையாட்டாக இருக்கிறதா? கப்பல் மூழ்கிக் கொண்டிருக்கிறது. நாமெல்லாம் செத்துப்போகப் போகிறோம்."

முல்லா சொன்னார்: அதனால் எனக்கென்ன நல்லது – கெட்டது வந்தது? இது என் அப்பன் கப்பலா என்ன?

அவர் சொன்னது சரிதான். எதுவும் நம்மை ஏன் பாதிக்க வேண்டும்? நீ எல்லாவற்றையும் கடந்து நில். சாட்சியாக இரு. அப்போது நீ புயல் சூழ்நிலையிலும் அமைதியான நிலையை அடைந்துவிடுவாய். நீ உன் மையத்திற்கு வந்துவிடுவாய்.

அஷ்டாவக்கிரரும் ஜனகரும் சொன்னது புதுமையான கருத்து. அவர்கள் சொல்வது – நீ கரையிலேயே உட்கார்ந்திரு. நதியில் நிறைய அலைகள் எழும்புகின்றன. அலை தாமாகவே சாந்தப்பட்டுவிடும். நதியில் நிறைய அழுக்குத் திரள்கிறது. அது தானாகவே அமைதியடைந்துவிடும். நீ நதியில் குதித்து அமைதியை நிலைநாட்ட முயன்றால் மேற்கொண்டு புதிதாக நிறைய அலைகள் எழும்பும். நீ கவனித்திருப்பாய். நீ உன்னை அமைதிப்படுத்திக்கொள்ள அதிக முயற்சி எடுத்தபோதெல்லாம் முன்பைவிட அதிகமாக சஞ்சலத்திற்குள்ளாகி இருப்பாய்.

என்னைச் சந்திக்கப் பலர் வருகிறார்கள். நான் அனுபவத்தில் உணர்ந்தபடி அவர்களில் உலகப்பற்றுள்ளவர்கள் (லௌகீகர்கள்) எனப்படுவோர், ஆன்மீக நாட்டம் உடையவர்களைவிட அதிக அளவில் சாந்தமாக உள்ளனர். லௌகீகர்களுக்கு (சம்சாரிகளுக்கு) எத்தனையோ வகையில் அமைதி குறைகிறது. ஆனால் ஆன்மீகர்களுக்குக் கூடுதலாக ஒரு கவலை, புதுக் கவலை, தனக்கு அமைதி கிடைக்க வேண்டுமே என்ற கவலை. மற்ற கவலைகளும் இருக்கவேதான் செய்கின்றன. மேலும் பல உபத்திரவங்களும் உண்டு. வீடு, குடும்பம், வியாபாரம், தொழில், வெற்றி – தோல்வி எல்லாமும் உண்டு. அவற்றுடன் இவர்களுக்கு ஏற்பட்டுள்ள புதிய நோய் எப்படி சாந்தமாக இருப்பது என்பதும்தான். லௌகீக மனிதன் இந்தக் கவலைக்கு ஆளாவதில்லை. வாழ்க்கை என்றால் குழப்பமும் இருப்பது வழக்கம்தான் என்று அவன் சாதாரணமாகச் சொல்லிவிடுவான். ஆகவே அவன் தான் அமைதி இழப்பதை, ஆன்மீக மனிதன் போல், பயங்கரமான விஷயமாகக் கருதுவதில்லை. ஆன்மீக மனிதன் அமைதிபெறத் தனியாகவும் முயற்சிசெய்வது அவசியமெனநினைக்கிறான்.

உதாரணமாக, நீ கோயிலுக்குப் போகிறாய், பூஜை செய்ய அமர்கிறாய், பிரார்த்தனையும் ,தியானமும் செய்கிறாய். ஆனால் அந்த சமயம்தான் நீ அதிகம் படபடப்பாகவும் கொந்தளிப்புடனும்

காணப்படுகிறாய். கடையிலும், கடைத்தெருவிலும்கூட நீ இந்த அளவிற்கு அமைதி இழப்பதில்லை. என்ன நடந்தது? தடுத்தும் நீ நதியில் குதித்தாய். அலைகளை அமைதிப்படுத்த முயன்றாய். ஆனால் விபரீதமான விளைவு ஏற்படும்; முன்பைவிட அதிக அலைகள் எழும்பும். தயவுசெய்து கரையிலேயே உட்கார்ந்திரு.

**பு**த்தரின் வாழ்க்கையில் எனக்குப் பிடித்த ஒரு சம்பவம். புத்தர் மலைப்பகுதி வழியாக ஒருமுறை சென்று கொண்டிருந்தார். கடும் வெயில். தாகமெடுத்தது. சீடர் ஆனந்தரைக் கூப்பிட்டு, "நீ வந்த வழியே திரும்பிச்செல். இரண்டு மைல் பின்னால் ஓர் அருவியைப் பார்த்தோம். அங்கிருந்து நீ தண்ணீர் நிரப்பி வா," என்று கூறினார். பிறகு ஒரு மரத்தின் கீழ் ஓய்வாக உட்கார்ந்திருந்தார்.

ஆனந்தர் பாத்திரத்துடன் அருவியை அடைந்தார். அதே சமயம் தேங்கியிருந்த அருவி நீரின் வழியாக மாட்டுவண்டிகள் சில சென்றன. இதனால் தண்ணீர் முழுதும் குப்பை பரவிவிட்டது. அடிமட்டத்திலிருந்த சகதி மேலே எழும்பி வந்துவிட்டது. உலர்ந்த இலைகள், அழுகிய இலைகள் மிதக்கத் தொடங்கின. அந்தத் தண்ணீர் குடிக்க லாயக்கில்லாமல் கலங்கிப்போயிருந்தது.

ஆனந்தர் புத்தரிடம் வந்து சொன்னார்: "அந்த அருவிநீர் பருகுவதற்கு லாயக்காக இல்லை. மேற்கொண்டு நாலைந்து மைலில் நதி உள்ளது. அங்கிருந்து புதுத் தண்ணீர் எடுத்து வருகிறேன். நீங்கள் ஓய்வெடுங்கள். அல்லது என்னுடன் வருவதானால் பயணத்தைத் தொடரலாம்."

புத்தரோ பிடிவாதமாக இருந்தார். திரும்பிப்போய் அருவி நீரையே கொண்டுவரவும் என்று கூறினார். ஆனந்தரால் மறுக்க முடியவில்லை. அந்தத் தண்ணீர் எதற்கும் உதவாதே என்று தயங்கியபடியே சென்றார். அவர் அருவிக்கரையை அடைந்தபோது தண்ணீர் சுத்தமாகிவிட்டிருந்தது. ஆனந்தர் இரண்டிரண்டு மைல் போகவர ஆன நேரத்தில் தூசியெல்லாம் அடிமட்டத்திற்கு இறங்கிவிட்டது. ஆனந்தர் திகைத்துப்போனார்.

அப்பொழுதுதான் அவருக்கு புத்தரின் பிடிவாதத்தின் அர்த்தம் புரிந்தது. தண்ணீர் எடுத்துக்கொண்டு மகிழ்ச்சியுடன் கூத்தாடியபடியே

அவர் திரும்பினார். புத்தரின் திருவடிகளைத் தலைவணங்கி பாத்திரத்தைக் கீழே வைத்தார். அவர் சொன்னார்.

"நீங்கள் சரியான உபதேசம் செய்துள்ளீர்கள். என்னை அருவிகரைக்குத் திருப்பி அனுப்பியது நல்லதாகப் போயிற்று. நான் என்ன செய்வது என்று வழியெல்லாம் யோசித்துக்கொண்டே போனேன். தண்ணீர் சுத்தமாக இல்லாவிடில் அதில் இறங்கி, குப்பை கூளத்தை அகற்றி, முடிந்த அளவு நல்ல தண்ணீர் மொண்டுவரலாம் என்று நினைத்தேன். அப்படி நான் இறங்கியிருந்தால் தண்ணீர் மறுபடியும் அழுக்காகியிருக்கும். மாட்டுவண்டிகள் அதில் இறங்கியதால்தானே தண்ணீர் அசுத்தமடைந்தது. நான் கரையிலேயே இருந்தேன். கலங்கிய நீர் அமைதிப்பட்டது, தெளிவடைந்தது. யாரும் அதை வலிந்து அமைதிப்படுத்தவில்லை. தானாகவே அது சாந்தப் பட்டு விட்டது.'

'ஸ்வபாவதஹ ப்ரவிஷந்தி' தத்தம் சுபாவப்படியே எல்லாம் உண்டாகின்றன, அழிகின்றன, தொலைந்து மறைகின்றன. நீ சாட்சியாக தூரத்தில் இரு. அங்கே நின்றுகொண்டு பார்த்தபடி இரு.

**ஓ**ர் ஊரில் ஒரு பௌராணிகர் (உபன்னியாசகர்) புராணச் சொற்பொழிவு நிகழ்த்தினார். அப்போது அவர் கூடியிருந்த மக்களிடம், 'பாபத்திடம் பயப்படுங்கள். பாபம்செய்வதைத் தவிர்த்திடுங்கள். பாபத்துடன் போராடுங்கள்' என்று கேட்டுக்கொண்டார். ஆன்மீகத் தலைவர்கள் எனப்படும் அனைவரும் அப்படித்தானே சொல்கிறார்கள்.

சொற்பொழிவு நடந்த இடத்தில் கிறுக்கு மாதிரித் தோற்றமளித்த ஒரு சந்நியாசி இருந்தார். அவர் சட்டென எழுந்து உரத்த குரலில், "வாயை மூடு. உன் உளறலை நிறுத்து. எல்லோரும் பாபத்தில் மூழ்கி மரித்துப்போங்கள்," என்று கூக்குரலிட்டார். உடனே அவர் வெளியேறிச் சென்றுவிட்டார். ஆன்மீகச் சொற்பொழிவாளர் திகைத்துப்போனார்.

மக்கள் அவருக்கு ஆறுதல் கூறினர். "நீங்கள் கவலைப்படாதீர்கள். மேற்கொண்டு புராணக் கதையைச் சொல்லுங்கள். அந்த மனுஷனுக்குக் கிறுக்கு. அவரை எங்களுக்குத் தெரியும். அவர் சொன்னதைத் துளிக்கூட பொருட்படுத்த வேண்டாம்," என்றனர்.

'பாபத்தில் மூழ்கி மரித்துப்போ' என்று துறவி சொன்னது சொற்பொழிவாளருக்குப் பலத்த அடி கிடைத்தது போலிருந்தது. துறவியிடம் அலைவீச்சைப்போல் ஏதோ இயக்கம் இருக்கிறது; மின்னல்போல் துடிப்பு இருக்கிறது; ஒரு தேஜஸ் இருக்கிறது என்று சொற்பொழிவாளர் உணர்ந்தார். அந்த ஆள் பைத்தியம் இல்லை, பரமஹம்ஸராக இருப்பாரென்று முடிவுகட்டினார்.

பௌராணிகர் கதை சொல்வதை அப்படியே நிறுத்திவிட்டுத் துறவியின் பின்னால் ஓடினார். சுமார் இரண்டு மைல் தூரம் ஓடி ஒரு காட்டில் ஒரு மரத்தின் கீழ் உட்கார்ந்திருந்த துறவியைப் பிடித்துக் கொண்டார். "சுவாமி! கொஞ்சம் விளக்கமாகச் சொல்லுங்கள். பாவத்தில் மூழ்கி மரித்துப் போ என்று சூத்திர வாக்கியமாகச் சொல்லிவிட்டீர்கள். இதற்கு விளக்கமான அர்த்தம் சொல்லுங்கள். உங்கள் கட்டளை வாக்கியம் என்னை சங்கடத்தில் ஆழ்த்திவிட்டது." என்றார் பௌராணிகர்.

கிறுக்குபோல் தெரிந்த துறவி சொன்னார்: "கேளப்பா, ஒருவன் ஒரு குருவிடம் சென்று 'நான் அமைதிபெற வேண்டும், வழி சொல்லுங்கள்' என வேண்டினான். குரு ஒரு மந்திரம் சொல்லித் தந்தார். அதை தினமும் ஐந்து முறை ஓதினால் மூன்று நாளில் மனம் அமைதியுறும் என்றார். ஆனால் ஒரு நிபந்தனை – மந்திரம் ஓதும்போது குரங்கு ஞாபகம் வரக்கூடாது.

மூன்று நாளில் மனம்அமைதியாகிவிடும் என்றார் அந்த குரு. மூன்று ஆண்டுகள் கடந்துவிட்டன. அந்த மனிதன் மனத்துடன் இன்னமும் போராடிக்கொண்டிருந்தான். அவன் குரு கொடுத்த மந்திரத்தை ஓதியபோதெல்லாம் ஒன்று இரண்டல்ல, பல குரங்குகள் அவன் மனத்தை ஆக்கிரமித்தன.

இதைச் சொன்ன துறவி, பௌராணிகரைப் பார்த்து, "கதை முடிந்துவிட்டது. ஓடிப்போ இங்கிருந்து," என்று விரட்டிவிட்டார்.

ஊர் திரும்பிய பௌராணிகர் கதை சொல்வதைத் தொடர்ந்தார். புதுமையாக ஒரு விஷயம் சொன்னார் – பாபத்துடன் போராடாதே; பாபத்திலிருந்து ஓடாதே, பாபத்திலிருந்து தப்பிக்காதே – நடப்பவற்றைப் பார்ப்பதுடன் நிறுத்திக்கொள்.

மேற்படி கதையில் மனிதன் தன் சிந்தனையில் குரங்கு வரக்கூடாது என்று குரங்குடன்தான் போராடுவதைப்போல, எதனுடன் நீ போராடுகிறாயோ அதுவே தொடர்ந்துவரும். நீ போராடுவதே உனக்குக் கவர்ச்சியான விஷயமாகத் தோன்றிவிடும். காமத்துடன் போராடினால் மனத்தில் காமம் அதிகமாகப் பரவிவிடும். பேராசையுடன் மோதினால் பேராசையும், கோபத்துடன் மோதினால் கோபமும் உன் மனத்தை ஆக்கிரமிக்கும். ஏனெனில் எதனுடன் நீ போராடுகிறாயோ அதன் நினைவுதான் உனக்கு எப்பொழுதும் இருக்கும்.

நீ அனுபவத்தில் அறிந்திருப்பாய் – எதை நீ மறக்க விரும்புகிறாயோ அதை உன்னால் மறக்க முடிவதில்லை. ஏனென்றால் ஒன்றை மறப்பதற்கும்கூட அதை மீண்டும் – மீண்டும் நினைவிற்குக் கொண்டுவர வேண்டியிருக்கிறது. மறக்கும் முயற்சியில் ஞாபக சக்தி கூடுதலாக வலிமை பெற்றுவிடுகிறது. மறக்க முயன்ற யாரும் எதையாவது மறந்தது உண்டா? போராட்டம் நிகழும்வரை வெற்றி உண்டா? வாழ்க்கையின் இந்த முரண்பாட்டு நிலைமையைச் சரியாகப் புரிந்துகொள். யாருடன் போராடுகிறாயோ அவரிடம்தான் நீ தோற்பாய்! எனவே போராடாதே. வெற்றிக்கு மந்திரம் போராட்டம் அன்று. நீ சாட்சி. உட்கார்ந்தபடி வேடிக்கை பார்.

குரங்குகள் குதித்துக் கூத்தாடுகின்றன. அவை இஷ்டப்படி ஆடட்டும். நீ தலையிடாதே. சுபாவமாக அவை சிறிது நேரம் ஆடிவிட்டுப் போய்விடும். நீ ஆர்வம் காட்டாவிடில் அவை மீண்டும் – மீண்டும் உன் வாசலுக்கு வராது. அவற்றை ஆதரித்தோ, எதிர்த்தோ நீ ஆர்வம் காட்டினால் அவை உன்னோடு நட்பு ஏற்படுத்திக் கொண்டுவிடும்.

மேலே கூறிய உதாரணத்தில் வரும் மனிதன் குரங்கின் நினைவு எழக்கூடாது என்று குரங்கையே நினைத்தபடி மந்திரம் ஓதுகிறான்! ஆனால் மந்திரத்தைக் கற்றுக்கொள்ளும்முன் அவனுக்குக் குரங்கு ஞாபகமே வந்திருக்காது. நீயும்கூட குரங்கைப் பற்றிய நினைவு இல்லாமலிருப்பாய். நீ 'ராம்,ராம்' போன்ற ஒரு மந்திரத்தைத் தேர்ந்தெடு. அதை ஜெபிக்கும்போது குரங்கு நினைவு வரக்கூடாது என்று முடிவெடு. முயற்சிசெய். என்ன நடக்கிறது என்று பார். குரங்குகள் மட்டுமல்ல, அவற்றின் பின்னால் ஹனுமாரும் கூட உன் மனத்தில்

நுழைந்துவிடுவார்கள்! குரங்குப் பட்டாளமே உன் மனத்தை முற்றுகையிடும். இப்படியான அனுபவம் உனக்கு இதுவரை ஏற்பட்டிருக்க முடியாது.

உனது எதிர்ப்பு ஒரு விதத்தில் விருப்பத்தின் அறிவிப்புதான். நீ எதிர்த்துப் போரிடாதே. எதிர்த்தால் தோல்வியடைவாய்.

இந்த சூத்திரத்தின் மேன்மையை, மகிமையை, சிறப்பைப் புரிந்துகொள். நடப்பது அதன் போக்கில் நடைபெற்றுக் கொண்டிருக் கிறது. உன்னிடம் கேட்டுவிட்டு அது ஆரம்பிக்கவில்லை. உன்னிடம் கேட்ட பிறகுதான் நிறுத்தவேண்டும் என்றும் காரணம் இல்லை. அது நடைபெற்றே தீரும். நீ அதைப் பார்த்துக்கொண்டு மட்டும் இரு. இதனால் உன் எதிர்ப்பு உணர்வு தணிந்துவிடும்.

உலகில் இரு வகை மனிதர்கள்: போகி, யோகி. போகி சொல்லுவான், 'என்ன நடக்கிறதோ அது இன்னும் ஆர்ப்பாட்டமாக நடைபெறட்டும்,' என்று. யோகி சொல்லுவான், 'என்ன நடைபெறு கிறதோ அது முழுமையாக நின்றுபோகட்டும்,' என்று. இருவருக்கு மிடையே போராட்டம். யோகி ஒரு சம்பவம் நிகழக்கூடாது என்கிறானே, அவன் வசத்திலா அது இருக்கிறது? அவனைக் கேட்டா அது ஆரம்பமானது? அவ்ன் கையிலா எதுவும் உள்ளது அதைத் தடுக்க?

போகி சொல்வதென்ன — பிரமாதமாக நடைபெறட்டும், அதிக அளவில் நிகழட்டும். நூறாண்டு வாழ்வேன், இருநூறு ஆண்டு வாழவிரும்புகிறேன். மனைவியாக ஒரு பெண் கிடைத்துள்ளாள். ஆயிரம் பெண்கள் கிடைக்கட்டுமே. என்னிடம் கோடி ரூபாய் உள்ளது. இருபது கோடி ரூபாய் சேரட்டுமே. அவனைக் கேட்டா எதுவும் நடக்கிறது? அவனிடம் அனுமதி பெற்றா எதுவும் நிகழ்கிறது?

இருவரும் ஒரேமாதிரியான பிரமையில் ஆழ்ந்துள்ளனர். ஆனால் ஒருவரை ஒருவர் எதிர்த்து நிற்கின்றனர். ஒருவருக்கொருவர் முதுகு காட்டுகின்றனர். இவர்களை ஒரே பிரமை ஆட்டுவிக்கிறது. அவர்களுடைய அனுமதியுடன்தான் உலகம் இயங்குவதாக இரு தரப்பினரும் நினைக்கின்றனர். எதையும் விருத்தி செய்யவோ, குறைக்கவோ தங்களால் முடியுமெனக் கருதுகின்றனர்.

முல்லா நஸ்ருத்தின் நூறு வயதை நிறைவு செய்தார். எங்கிருந்தெல்லாமோ பத்திரிகை நிருபர்கள் அவரைப் பேட்டி காண வந்தனர். அவரிடம் விசாரித்தனர்: "உங்கள் நீண்ட ஆயுளின் ரகசியமென்ன? நீங்கள் இந்த வயதிலும் நடமாடுகிறீர்கள். மகிழ்ச்சியாகத் தென்படுகிறீர்கள். உங்கள் உடலில் எந்த நோயும் இல்லை. இது எப்படி சாத்தியமாயிற்று?"

முல்லா பதிலளித்தார்: "என் ஆயுளின் ரகசியமா? நான் ஒருபோதும் மது அருந்தியதில்லை. புகை பிடித்ததில்லை. கட்டுப்பாடான வாழ்க்கை வாழ்ந்து வருகிறேன். உறங்குவதிலும் விழிப்பதிலும் ஒழுங்கு முறையைக் கடைப்பிடிக்கிறேன். புலனடக்கம் தான் என் வாழ்க்கையின், ஆரோக்கியத்தின் சூட்சுமம்."

இவ்வாறு அவர் கூறிக்கொண்டிருந்தபோது பக்கத்து அறையில் அலமாரியிலிருந்து சாமான்கள் விழும் சத்தம் கேட்டது. நிருபர்கள் திடுக்கிட்டார்கள். பக்கத்து அறையில் இருப்பவர் யார்; அங்கு என்ன நடக்கிறது என்று விசாரித்தார்கள்.

முல்லா அமைதியாகச் சொன்னார்: "அது என் அப்பாவின் அறை. அவர் மறுபடியும் குடித்துவிட்டுப் போதையுடன் வந்திருப்பார் போல் இருக்கிறது."

ஒருவன் நூறாண்டு வாழ்ந்துவிடுகிறான். அவன் மது குடித்ததில்லை. ஆகவே அவன் குடிப்பழக்கம் இல்லாததால்தான் நூறாண்டு உயிர் வாழ முடிந்ததாக நினைக்கிறான். அவன் அப்பா அவனைவிட இருபது ஆண்டுகளுக்கு மேல் மூத்தவராக இருப்பார். அவரோ குடித்துவிட்டு வந்து அலமாரி சாமான்களைக் கீழே விழச்செய்யும் அளவு போதையிலுள்ளார்.

யாராவது ஜைனர் (சமண மதத்தவர்) நீண்ட ஆயுள் பெற்றுவிட்டால் அவர் தான் கடைப்பிடிக்கும் தாவர உணவு (சைவ உணவு) காரணமாக அப்படி ஏற்பட்டதாக நினைக்கிறார். அசைவ உணவு உண்பவர் நீண்ட காலம் வாழ்ந்தால் அதை அசைவ உணவின் நற்பலன் என்று கருதுகிறார். புகைபிடிக்காதவர் நெடுங்காலம் வாழ்வார் என்பதைப்போல் புகைபிடிப்பவரும் நீண்ட காலம் வாழ்வதுண்டு. சமைக்காத காய் — இலை மட்டும் உண்டும் நீண்டநாள் வாழ்பவர்

உண்டு. சத்தான இவ்வுணவு கிடைக்காதோரும் நீண்ட நாள் வாழமுடிந்திருக்கிறது. ஒருவன் எந்த விதமாக வாழ்க்கை நடத்துகிறானோ அந்த விதமாக வாழ்க்கையை தான் நெறிப்படுத்தியதால் தான், தனது புலனடக்கத்தால்தான் நீண்ட ஆயுள் பெற்றதாக நினைக்கிறேன்.

ஆனால் உனது நடவடிக்கையால் எதுவும் நடைபெறுவதில்லை. நீ கர்த்தா இல்லை. நீ முயன்று எதுவும் நடைபெறவில்லை. நடைபெற்றுக் கொண்டிருக்கவில்லை, நடைபெறாது. பூனைக்கு அதிர்ஷ்டம் இருந்தால் அதன் முன்னிலையில் உறி உடையக்கூடும் என்பதுபோல், சில சமயம், தற்செயலாக, எதிர்பாராத விதமாக, நீ விரும்பிய வண்ணமே நிகழலாம். நீ விரும்பாவிடிலும் அந்த நிகழ்ச்சி நடைபெற்றுத்தான் இருக்கும். நீ நினைத்தபோது அது நடந்ததே தவிர, நீ நினைத்ததால் அது நடைபெறவில்லை.

ஒரு கிராமத்தில் ஒரு கிழவி. அவளுக்கு எதனாலோ ஊர்க்காரர்கள் மீது கோபம். அவர்களிடம் அவள், "நீங்கள் எல்லோரும் இனிமேல் எப்போதும் இருட்டிலேயே அலைந்து திரிவீர்களாக" என்று சாபம்போல் கூறினாள். "இதற்கு என்ன அர்த்தம்?" என்று அவர்கள் கேட்டார்கள். அவள் விளக்கினாள்: "நான் என் சேவல் கோழியை எடுத்துக்கொண்டு பக்கத்து கிராமத்திற்குச் சென்று குடியேறப்போகிறேன். சேவல் இல்லாவிடில் அதன் கூவலும் இல்லை. ஆகவே சூரியன் உதிக்காது. இருட்டில் எல்லோரும் செத்துப்போவீர்கள். இதுவரை என் சேவல் கூவியதால்தான் சூரியனும் உதித்தது!"

ஆனால் சேவல் கூவாத இடத்திலும் சூரியன் உதிக்கிறது. சேவல்கள் கூவுவதால் சூரியன் உதிப்பதில்லை. சூரியன் உதிப்பதால் தான் சேவல்கள் கூவுகின்றன.

அந்தக் கிழவி கோபத்தில் சேவலை எடுத்துக்கொண்டு பக்கத்து கிராமத்திற்குப் போய்விட்டாள். அங்கு அந்தச் சேவல் கூவுகிறது. சூரியன் அங்கு உதிப்பது தன் சேவலின் கூவலால்தான் என்று அவள் நினைக்கிறாள். சூரியன் இங்கு வந்துவிட்டதால் முன்பு இருந்த கிராமத்தில் வசிப்பவர்கள் இருட்டில் அவதிப்படுவார்கள் என்று கிழவி சந்தோஷப்பட்டாள்.

உண்மை என்ன? உன் காரணமாக உலகம் இயங்கவில்லை. நீ உலகிற்கு எஜமானன் இல்லை. நீ கர்த்தா இல்லை. இதெல்லாம் மமதை. பிரமை.

போகியும் மமதை உடையவன். யோகியும் அஹங்காரி. இந்த இருவரையும், இந்த இருநிலைகளையும் கடந்து நிற்பவன் எவனோ அவன்தான் ஆன்மீகத்தின் சுவையறிந்தவன். அவன் யோகியுமில்லை, போகியுமில்லை.

'எல்லையற்ற சமுத்திரமாகிய என்னில் ஜீவர்கள் என்னும் அலைகள் தமது சுபாவப்படி எழுகின்றன; பரஸ்பரம் மோதுகின்றன; தமக்குள் களிக்கின்றன; பிறகு மீண்டும் கடலில் லயித்துவிடுகின்றன.'

இதை நான் பார்க்கிறேன். பார்த்தபடி உள்ளேன். பார்வை யாளனாக மட்டும் இருக்கிறேன்.

தேன்போல் இனிய
எழிலுடன் திகழும்
இதய மொட்டில்
வண்ணங்களற்ற
கனவோவியங்கள்
பற்பல காண்கிறேன் நான்

காற்றாக மாறி
நூறு - நூறு கொஞ்சல்களால்
நீதான் திறந்தாய்
இதயக் கதவை.

பிறகொரு க்ஷணமும்
காத்திருக்காமல்
ரகசியமாக நறுமணபாரம்
சிதறச்செய்தாய் நாற்புறமும்.

தீனக் கண்களின் விழிநீர் விண்ணப்பம்
பாதையில் பரவிக் கிடக்கிறது
அது என் ஊமை உயிரின்
கலங்கிய கூவல்.

உலக வீணையில் என் வாழ்க்கைத் தந்தி
மீட்டப்படாமல் மௌனமாக
தனித்திருந்து கிடக்கிறது;

அதை அதிரச் செய்து
ஒலியெழுப்ப இயலாமல்
நூறு - நூறு தென்றல்கள்
சலித்துக் களைத்துப் போயின.

பாட்டுப் பாடி புதிய இசையை
நீதான் படைக்கிறாய் எப்போதாவது.

ஆனால் இம்முறை ஏனோ தந்திகளை
முரட்டுத் தனமாய் உரசச்செய்து
அபஸ்வர ஒலியைக் கிளறிவிட்டாய்.

எல்லாம் அதனதன் சுபாவப்படி நடைபெறுகிறது என்று சொல்லு. அல்லது, எல்லாம் கடவுள்தான் செய்கிறார் — செய்விக்கிறார் என்று சொல்லு.

பக்தனுடைய மொழியில், .கடவுள் எல்லாம் செய்கிறார். ஞானியின் மொழியில், எல்லாம் அதனதன் இயல்புப்படி நடைபெறுகிறது. இந்த இரண்டில் எந்த மொழிநடை உனக்குப் பிடிக்கிறதோ அதைத் தேர்ந்தெடுத்துக்கொள். சொல்லும் விதம்தான் வித்தியாசப்படுகிறது. ஒன்று மட்டும் நிச்சயம் — நீ கர்த்தா இல்லை; செய்பவனில்லை. சுபாவப்படியோ, கடவுளாலோ நிகழ்ச்சிகள் நடக்கின்றன. நீ காண்பவன் மட்டுமே; பார்வையாளன் மட்டுமே.

உயிரின் கசப்பை அளவிடும் தராசு இது
அமைதி அளிக்கும் கற்பனையின் மதிப்பு இது
ஒளிமய பூமியின் சமதளக் கரை இது
தேன் போன்ற இனிமையின் கரைசல் இது
அதே.சத்யம், சுந்தரம், ஆனந்தம் இது
அந்தப் பரமப் பேரொளியின் புனித விளக்கு
வைரமாலை, வைஜயந்தி மாலைபோல்
இதயத்தில் தவழும் மாலை இது
வாழ்க்கையில் மதுரமான சாரல் பருவம்
தீரமும் வீரமும் வழங்கும் அபய வாசல்

**பரம ஸத்யத்தின் பிரதிபிம்பத் தோற்றம்
பரந்து விளங்கும் விராட புருஷனை
அடையாளம் காண்பதற்காக
இதயத்தில் எழும் முதல் துடிப்பு
நான், இவ்வுடல், உனது, எனது
என்றெலாம் சூழ்ந்த இரவிற்கு விடியல்,**

கொஞ்சமாக தரிசனம், கொஞ்சம் பார்வை, மேற்கொண்டு ஓரளவு சாட்சியாக மாறு. என்ன நடக்கிறதெனக் கொஞ்சமாகப் பார். அவற்றைச் சிறிதளவுகூட பிரித்துப் ஆராய ஆர்வம் கொள்ளாதே. இப்படி நடக்கட்டும், அப்படி நடக்கட்டும் என்றெல்லாம் சொல்லாதே. எதுவும் வேண்டுமென்று கேட்காதே. எதற்கும் ஆசைப்படாதே. எப்படி ஒன்று இருக்கிறதோ அதை அப்படியே காண். 'தட் விச் இஸ்' என்று ஜே. கிருஷ்ணமூர்த்தி கூறுவது இதுவே.

காலைப் பொழுது, விடியல்தான் சாட்சி நிலைமை. செய்வதும் அனுபவிப்பதுமான நிலைமையே இரவு. 'செய்பவன் நான், அனுப விப்பவன் நான்' என்ற எண்ணம் உன் மனத்தில் இருக்கும்வரை நீ இருட்டில் அலைந்தபடி இருப்பாய். எந்த நொடியில் விழித்தாயோ, எந்த நொடியில் தன்னை விழிப்புறச் செய்தாயோ, எந்த நொடியில் உள்ளொளியாகிய சாட்சி இயல்பை அழைத்தாயோ அக்கணமே உன்னில் ஆன்மீகப் புரட்சி ஏற்பட்டது; உனக்கு விடியல் உண்டானது.

**ஹரி ஓம் தத்ஸத்**

**முதல் கேள்வி:**

**மனத்தத்துவ நிபுணரான ஸிக்மண்ட் ஃப்ராய்ட் சாவு-ஆசை பற்றி கூறியுள்ளார். நீங்களும் வாழும் ஆசை (ஈரோஸ்) பற்றி குறிப்பிட்டுள் ளீர்கள். ஃப்ராய்டின் கோட்பாட்டை நீங்கள் நவீன யுகத்திற்கேற்ற ஆன்மிக உருமாற்றம் எனக் கருதுகிறீர்களா? தயவுசெய்து விளக்குங்கள்.**

**வா**ழ்க்கை போராட்டமயமானது. இங்குள்ள ஒவ்வொன்றுக்கும் எதிர்த் தரப்பும் உண்டு; சாதகத்திற்குப் பாதகமுண்டு. அன்பிருக்கும் இடத்தில் எதிர்ப்பாக வெறுப்பு. ஒளிக்கு எதிர்ப்பாக இருட்டு. கடவுளுக்கு எதிராகப் பொருள்மய உலகம். ஆகவே வாழும் ஆசையின் உள்ளே சாவு விருப்பமும் மறைந்திருக்கும் வாய்ப்பு உண்டு.

ஃப்ராய்டின் கோட்பாடு நவீன யுகத்திற்கேற்ற ஆன்மிக உருமாற்றம் அன்று. அவர் செய்துள்ள ஆராய்ச்சி ஆழமானது. வாழ்வில் விருப்பம் என்னும் கோட்பாடு எப்பொழுதுமே பேசப்பட்டு வருகிறது. ஃப்ராய்ட் உலக அறிவின் வளர்ச்சிக்கு வழங்கிய கொடையில் சாவு விருப்பக கோட்பாடும் கலந்துள்ளது. மனிதன் உயிருடன் இருக்கவே விரும்புகிறான் என்பது உண்மை. ஆனால் சில சமயங்களில், சில சூழ்நிலைகளில் அவன் இறந்துவிடவே விரும்புகிறான் என்பதும் அதே அளவிற்கு உண்மை.

யோசித்துப் பார். நீ இளைஞனாக இருந்தாய். வாழவே விரும்பினாய். பிறகு ஒரு காலத்தில் வயோதிகன் ஆனாய். உடல் தளர்ந்தது. உறுப்புகள் களைத்துப் போயின. வாழ்க்கையில் அறிய

வேண்டியதை அறிந்தாகி விட்டது. செய்ய வேண்டியதைச் செய்து முடித்தாகி விட்டது. அனுபவிக்க வேண்டியதை அனுபவித்தாகி விட்டது. இவ்வயதில் எல்லாம் சாரமற்றுப் போனது. எவ்விஷயத்திலும் ஆர்வம் தோன்றுவதில்லை. எல்லாமே ஏற்கெனவே செய்தாகி விட்டதாக உணர்கிறாய் சலிப்புப் பிறக்கிறது. இந்நிலையில் நீ இறப்பதை விரும்ப மாட்டாயா? உன் ஆழ்மனத்தின் ஆழத்திலிருந்து குரல் கேட்கும், 'போதுமப்பா. இதற்கு மேல் தாங்க முடியாது. நாடகம் முடிகிறது. திரை இறங்க ஆரம்பிக்கட்டும்.'

கிழக்கத்திய நாடுகளில் வாழ்ந்த ஞானிகள் கூறிய வைராக்கியம் என்னும் கண்ணோட்டத்தில் சாவு விருப்பத்தின் சாயல் தெரிகிற. புத்தர் உபதேசித்த நிர்வாணக் கோட்பாடும் சாவு விருப்பத்தின் எல்லையைத் தொடும்.

நிர்வாணம் என்பது என்ன? வேறுவிதமாக நம் நாட்டில் பிறப்பு இறப்பிலிருந்து விடுதலை என்கிறோமே அதன் அர்த்தம் என்ன? கூறுகிறேன். வாழ்க்கை அனுபவித்துத் திகட்டிவிட்டது. மீண்டும் உலகிற்குத் திரும்பிவர விரும்பவில்லை. எல்லாவற்றிற்கும் எல்லை உண்டு. அயர்ந்து போய் விட்டோம். முழுமையாக ஓய்வெடுக்க விரும்புகிறோம். இதைத்தான் ஃப்ராய்ட் சாவு விருப்பம் என்கிறார். இந்த வார்த்தைகளால் பயப்படாதீர்கள். வாழும் ஆசை பற்றுதலையும், சாவு ஆசை வைராக்கியத்தையும் தூண்டிவிடும். வாழும் ஆசை உன்னை மாயையில் பிணைத்து வைத்திருக்கிறது. சாவு ஆசை உன்னை மாயையிலிருந்து விடுவிக்கும். ஃப்ராய்டுக்கும்கூட தான் ஆராய்ந்து கண்டுபிடித்த உண்மையின் முழு அர்த்தமும் என்ன என்று தெரிந்திருக்காது. சாவு விருப்ப ஆராய்ச்சியை அவர் தமது வாழ்க்கையின் கடைசி காலத்தில் மேற்கொண்டிருந்தார். ஒருவேளை அவரது மனமேகூட அச்சமயம் சாவு விருப்பத்தால் நிரம்பிப் போயிருக்கும். அவரே தொடர்ச்சியான ஆராய்ச்சிகளின் காரணமாகக் குழம்பிப் போயிருப்பார். அவர் வாழ்க்கை முழுதும் காமம், பாலுணர்ச்சி உந்துதல், வாழ்வாசை, உணர்வுகளின் கிளர்ச்சி ஆகியவை குறித்த ஆராய்ச்சியில் ஈடுபட்டிருந்தார். வாழ்க்கையின் இறுதி நேரத்தில் சாவாசை பற்றி கண்டு பிடித்தார். அந்தக் கண்டுபிடிப்பு அவரைத் திகைக்கச் செய்திருக்கும். ஏனெனில் அவர் எதையும் தர்க்க அடிப்படையில் காண்பவர். தான் வாழ்க்கை முழுவதும் ஆராய்ந்து

கண்டுபிடித்தவற்றிற்கு முரண்பாடாக அல்லவா தன் புதிய கண்டுபிடிப்பு அமைந்துள்ளது என்று அவருக்குக் கலவரம் உண்டானது. அவர் இதுநாள்வரை எப்பொழுதும் சொல்லி வந்தது என்னவென்றால், மனிதன் உயிர்வாழ வேண்டும் என்கிற வெறியுடன் வாழ்ந்து வருகிறான். மேலும் காம உணர்வு (ஈரோஸ்) ஒன்றே வாழ்க்கையின் அடிப்படை. ஆனால் இப்போது இறக்கும் தறுவாயில் மனிதனுக்குச் சாவிலும் பெருவிருப்பம் இருக்கக்கூடும் என்று புலனாகியது. அப்படியானால் சிற்றின்ப உணர்வின் நிலை என்ன? வாழும் விருப்பம் என்ன ஆனது?

ஃப்ராய்ட், ஞானி லாவோத்ஸூவைப் பின்பற்றியவரில்லை. அரிஸ்டாட்டிலைப் பின்பற்றியவர். தர்க்கவாதி. புதிய கண்டுபிடிப்பு முன்பு கூறியவற்றுடன் முரண்பட்டதால் அதை ஏற்பது சங்கடமாக இருந்தது. அவர் அறிவியல் கண்ணோட்டம் உள்ளவர். இறுதியில் ஏதாவது கண்டுபிடித்து, தான் இதுவரையில் கண்டுபிடித்தவற்றில் உள்ள பூர்த்தியாகாத சிக்கல்களைச் சரிசெய்து விடலாமென நினைத்திருந்தார். ஆனால் அவரது கடைசிக் கண்டுபிடிப்பு வாழ்க்கை முழுவதும் கண்டுபிடித்ததற்கு எதிர்மாறாக அமைந்து விட்டது. வாதத்திற்கு பிரதிவாதம் போல் முரண்பாடாக அமைந்து விட்டது. ஆனால் ஃப்ராய்டு நேர்மையானவர். அவர் எதையும் மறைக்கவில்லை. நேர்மை குறைந்த மனிதனாயிருந்தால் தனது இந்தக் கண்டுபிடிப்பை மறைத்திருப்பான். அதுபற்றி பேச்சே எடுத்திருக்க மாட்டான். வாழ்க்கையின் கடைசி நேரத்தில் எவன் தன் வாழ்க்கையின் சாதனைகளை மெழுகிப்பூசி மறைப்பான்? நாற்பது ஆண்டுகளாக உழைப்பின் அடிப்படையில் தான் நிருபித்த, நிலைநாட்டிய கோட்பாடுகளுக்கு விரோதமாக ஒரு புதிய கோட்பாட்டை நிறுவுவது என்பது இதுவரையில் நம்பிய சிந்தனைகளை எல்லாம் தாறுமாறாக்கி விடுவதற்கு சமம் அல்லவா? நேர்மை குறைந்தவனாக இருந்தால், நிருபிப்பதில் சிறு குறைபாடு இருந்தால், புதிய கோட்பாட்டை வெளியிடுவதைத் தள்ளிப் போட்டிருப்பான். வெளியிட வேண்டிய கட்டாயம்தான் என்ன? யாரிடமும் சொல்லாமல் வாயை மூடிக்கொண்டு உட்கார்ந்திருக்கலாமே. ஃப்ராய்ட் அப்படிப்பட்டவரல்லர், கண்ணியமானவர். அவர் புதிய கண்டுபிடிப்பின் விளைவு பற்றி கவலைப்படவில்லை. அவர் நினைத்தார், 'இதுவரையிலான என் முழு வாழ்க்கையின் கண்ணோட்டம் சரிந்து விழுந்தாலும் சரி; என்

வாக்குமூலத்தில் முரண்பாடுகள் வெளிப்பட்டாலும் சரி; எதைப் புதிதாக அறிந்தேனோ, கண்டேனோ, அதைச் சொல்லத்தான் போகிறேன்.' இவ்வாறு நினைத்து, முரண்பாடான கோட்பாடானதால் சற்றுத் தயக்கத்துடன் சாவை விரும்புதல் என்னும் கண்டுபிடிப்பை அவர் விவரித்தார்.

என் கண்ணோட்டத்தில், ஃப்ராய்டுக்கு இந்தக் கடைசிக் கோட்பாடு தோன்றாமல் போயிருந்தால் அவர் அதுவரை வாழ்க்கையில் ஆராய்ந்து கூறியவை எல்லாம் அரைகுறையாக உணரப்பட்டிருக்கும்.

நீ வாழும் ஆசை குறித்து ஆழமான ஆராய்ச்சி செய்தால் அதற்கு எதிரான அபிப்பிராயமும் அதிலேயே மறைந்திருப்பதை அறிந்து கொள்வாய். ஆகவேதான் பிறப்பு ஏற்படும் போதே மரணமும் சேர்ந்து தோன்றுகிறது என்று மக்கள் சொல்கிறார்கள். மரணத்தின் ஒலி வாழ்க்கையில் சன்னமாக மறைந்திருக்கிறது. ஒரு பொருள் உண்டானதும் அதன் தேய்வும் அழிவும் சேர்ந்து உண்டாகின்றன. உருவானதெல்லாம் ஒருநாள் உடையும். சேகரித்தது எல்லாம் ஒருநாள் சிதறும்.

ஆக, நமது வாழ்க்கை நடக்கும்போது சாவின் நிழலும் பின்தொடர்கிறது. ஒரு கால் வாழ்க்கை, இன்னொரு கால் மரணம் என்று நாம் கால்களை மாற்றி மாற்றி வைத்துச் சீராக நடக்கிறோம்.

ஃப்ராய்டு மட்டுமல்ல, பாரதமும் ஒன்று கண்டு பிடித்துள்ளது. அதன்படி நம் வாழ்வும் இல்லை, சாவும் இல்லை. அவை இரண்டும் நம் கால்கள் போன்றவை. மூன்றாவதாக ஒன்றை நம்மால் பார்க்க முடியாததால்தான் போராட்டமெல்லாம். மூன்றாவது தெரிந்துவிட்டால் பிரிந்திருப்பது எல்லாம் சேர்ந்து இணையும்.

ஈரோஸ் கோட்பாடு வாழ்வதில் விருப்பத்தைக் குறிப்பிடுகிறது. பிறகு தானாடோஸ், சாவில் விருப்பமெனும் கோட்பாடு. ஒன்று வாதமெனில் மற்றது பிரதிவாதம். இவ்வாறு இரண்டுதான் இருந்தால் விவாதம்தான் வரும். அதற்குத் தீர்வு காண்பது கடினமாகியிருக்கும்.

ஃப்ராய்ட் மேற்கொண்டு கூடுதல் காலம் உயிர் வாழ்ந்திருந்தால், மறுபிறவி எடுத்து ஆராய்ச்சி செய்திருந்தால், வாதம்—பிரதிவாதம்—

விவாதம் இவை கடந்த சம்வாதம்—ஸிந்தீஸிஸ், இணைப்பாக்கம்—வரை வந்திருப்பார். அடுத்து, சாட்சி நிலையையும் அறிந்து கொண்டிருப்பார். அவர் சரியான பாதையில்தான் முன்னேறிக் கொண்டிருந்தார். சேருமிடம் சற்றுத் தொலைவில் இருந்தது. போய்ச் சேரும் முன் வாழ்க்கை யாத்திரை முடிந்து விட்டது. வழி சரி, திசை சரி, ஆனால் வாழ்விலிருந்து மரணநிலையை அடைந்து விட்டார். ஒரே ஒரு உபாயம்தான் இந்நிலையில் உள்ளது. வாழ்வு, சாவு ஆகிய இரண்டின் கட்டுப்பாட்டையும் மீறிச் செல்ல வேண்டும்.

இவ்வாறு மீறி ஒருவன் அடையும் நிலையைத்தான் அஷ்டாவக்கிரர் சாட்சி மனப்பான்மை என்றழைக்கிறார். நீ வாழ்வும் இல்லை, சாவும் இல்லை. வாழ்வு, சாவு இரண்டுமே விளையாட்டுகள். நீ அவற்றில் சுயமாக ஒன்றைத் தேர்ந்தெடுத்தால் மற்றதும் கட்டாயமாகச் சேர்ந்துவரும். வாழ்வை விரும்பித் தேர்ந்தெடுப்பவன் சாவையும் தேர்ந்தெடுக்க நேரிடும். அன்பைத் தேர்ந்தெடுப்பவன் வெறுப்பும் சேர்ந்து வருவதைத் தடுக்க முடியாது. கௌரவத்துடன் அவமரியாதையையும், ஏற்க நேரிடும். சிரிப்பைத் தேர்ந்தெடுப்பவன் கண்ணீரிலிருந்து தப்ப முடியாது. ஒரு விளைவிற்கு மறுவிளைவு உண்டாவதில் தாமதம் ஏற்படலாம். ஆனால் முரண்படும் அவற்றிடையே போராட்டம் நிச்சயம் இருக்கும்.

ஒன்றைத் தெரிந்தெடுப்பதில் நீ ஈடுபட்டால் அதற்கு எதிரிடையான மற்றதும் தன்னைத் தானே தேர்ந்தெடுத்துக் கொள்ளும். உனக்கு விருப்பமா, விருப்பமில்லையா என்ற கேள்வியே எழாது. நீ நாணயத்தின் ஒரு பக்கத்தைத் தேர்ந்தெடுத்தால் இன்னொரு பக்கமும் தானாகவே உன் கைக்கு வந்திருக்கும். எத்தனை வருஷம் கழிந்தாலும் இதில் மாறுதல் கிடையாது.

ஆகவே தேர்ந்தெடுக்காதே. இரண்டிற்கும் சாட்சியாக இருந்துவிடு. அப்போது நீ இரண்டையும் கடந்து விடலாம். இறப்பு—மறுபிறப்பிலிருந்து விடுதலை, வாழ்வு—சாவிலிருந்து விடுதலை ஏற்படும். இந்த மூன்றாம் நிலையை, மகிமை மிக்க நிலையை, ஆராய்ந்து தேடிப் பெற வேண்டும்.

சாவில் விருப்பம் என்பது நவீன யுகத்திற்கேற்ற ஆன்மிக உருமாற்றமா என்று கேட்டாயல்லவா?

அப்படியல்ல, இன்றைய மொழிநடையில் சொல்வதானால் அது வைராக்கியத்தைத் தேடுதலாகும். வைராக்கியம் கொள்பவன் வைராகி எனப்படுகிறான். இதன் பொருளென்ன? வாழ்க்கையிலிருந்து விடைபெற விரும்புகிறவனே வைராகி. அவன் என்ன சொல்கிறான்: 'ஆசாபாசங்கள் நீங்கிவிட்டன. வீணையின் தந்திகள் முறுக்கிழந்து போயின. இப்போது நான் விடைபெற்றுச் செல்ல விரும்புகிறேன். இங்கே வீடு கட்டி வசிக்கப் பொருத்தமான இடம் இருப்பதாகத் தெரியவில்லை. என்னைப் போக விடுங்கள்' இவ்வாறு அவன் கூறுவதுதான் இறப்பில் விருப்பம் என்பது.

ஃப்ராய்டும் சரியாகப் புரிந்து கொள்ளவில்லை. அவர் தமது இந்தக் கண்டுபிடிப்பின் போது புத்தர் சாவு விருப்பத்தால் நிரம்பி யிருந்ததாக நினைத்தார். இது ஒருவகையில் சரி. ஏனெனில் வாழ்வதில் பற்று நீங்கிவிட்டது. வாழும் ஆசை அகன்றுவிட்டது. அந்த வேட்கை சென்றுவிட்டது. மேற்கொண்டு வாழ்வதில் பிடிப்பு இல்லை.

ஆகவே ஃப்ராய்ட் புத்தர் சாவு விருப்பத்தால் நிறைந்திருந்தார் என்றும், பௌத்த மதம் சாகின்றவர்களின் மதம் என்றும் நினைத்தார். மேலும் அம்மதம் ஏமாற்றம், சோகம், பச்சாதாபத்தால் நிறைந்த மக்களின் மதம் என்றும், அது எதிர்மறையானது என்றும் கருதினார். பௌத்தம் பற்றிய சிந்தனையில் அவர் சிறிது முன்னேற்றம் கண்டார். ஆனால் அதன் முழு பரிமாணமும் அவருக்குப் புலப்படவில்லை.

புத்தருடைய மதம் பற்றை ஆதரிக்கும் மதமன்று; பற்றின்மையின் மதமுமன்று. அது ராகம், விராகம் கடந்த வீதராக மதம். முதன்மையான பரம சந்நியாசி வீதராகியாக இருப்பான். வீதராகி என்பதன் அர்த்தம் வைராக்கியத்திலும் பற்றுதல் இல்லாதவன் என்பதாகும். அது ஆன்மிக அனுபூதியின் உன்னதமான கடைசி சிகரம். பற்றில் (ராகத்தில்) பற்றில்லாவிடில் விராகம் (வைராக்கியம்). அடுத்து, விராகத்திலும் பற்றில்லாவிடில் வீதராகம். குடும்பஸ்தன் உலகப் பற்று நீங்கினால் சந்நியாசி ஆகிறான்; சந்நியாசத்திலும் மேலான நிலைக்கு உயர்ந்தால் வீதராகியாவான்.

வைராக்கிய நிலையிலும் ஒரு வகையான பற்றிருக்கும். பணத்தில் பற்று வைப்பது ராகம். அதை வெறுத்து ஒருவன் வறுமையை ஆதரிப்பதும் ஒருவகை ராகமே. அவன் பணமில்லா

விட்டால் சுகம் என்பான். இங்கே சுகத்தில் பற்று தெரிகிறது. ஒருவன் ஆடைகளில் பற்றுக் கொண்டிருப்பான். அவற்றில் பற்று நீங்கிய வைராகி நிர்வாணத்தில் பற்று கொண்டவனாக இருப்பான். ஒவ்வொருவர் சொல்லுவார்கள் – பெண் கிடைத்தால் சுகம், ஆண் கிடைத்தால் சுகம், அழகிய உடல் கிடைத்தால் சுகம். வேறு சிலர் மறுப்பார்கள் – அப்படியில்லை. பெண்களிடமிருந்து, ஆண்களிட மிருந்து, உடல் கவர்ச்சியிலிருந்து தூர விலகி, காட்டில், தனிமையில், எதுவுமற்ற இடத்தில் (பொட்டலில்) வசிப்பது சுகம். இக்கருத்துகள் முரண்படுவதுபோல் தெரிந்தாலும் இவை ஒரே நாணயத்தின் இரண்டு பக்கங்கள்; ஒன்றையொன்று அனுசரித்துச் செல்பவை.

வீதராகியின் நிலை வைராகியின் நிலைக்கு அடுத்த மேம்பட்ட நிலை. கையிலிருந்த காசை எறிந்துவிட்ட நிலை. ஜேகிருஷ்ணமூர்த்தி இந்நிலையை மாற்றில்லாத நிலை (சாய்ஸ்லெஸ்னஸ்) என்கிறார். மாற்று கிடையாது. தேர்ந்தெடுக்கும் தேவை எழாது. ஃப்ராய்ட் இந்த நிலை பற்றி ஏறத்தாழ அறிந்து கொண்டு விட்டார். அவர் அதிசயமான மனிதர். ஆனால் அவருக்கென்று சில எல்லைகள். கிழக்கத்திய மதங்கள் பற்றி அவர் சரியாக அறிந்திருக்கவில்லை. அவர் மனத்தை இந்த மதங்களுக்கு விரோதமாக கிறிஸ்தவ மதமும் யூத மதமும் ஆக்கிரமித்திருந்தன.

மேற்கூறிய இரு மதங்களும் ஆன்மிகத்தில் மிக உயர்ந்த வெளிப்பாடுகள் என்று கூற முடியாது. அவை சராசரி வெளிப் பாடுகளேயாகும். புத்தரின் அளவுவரைதான் இயேசுநாதரும் உயர்ந்திருக்கிறார். ஆனால் புத்தரின் சீடர்கள் புத்தருடைய சிந்தனையை எந்த அளவு உயரத்திற்குக் கொண்டு சென்றார்களோ அதை அளவிற்கு கிறிஸ்துவ மதம் உயர முடியவில்லை. பௌத்தத்தின் முழுமையான தூய்மையை, விவேகத்தை கிறிஸ்தவம் எட்டவில்லை. லாவோத்சு அளவிற்கு மோஸஸ் உயர்ந்து விளங்கினார். ஆனால் லாவோத்சுவின் சிஷ்யர்கள் அவரை எந்த உயரத்திற்குக் கொண்டு சென்றார்களோ அந்த அளவிற்கு யூதர்களால் மோஸஸை உயர்த்த முடியவில்லை. லாவோத்சுவின் சிந்தனைகள் ஆகாயத்தில் பரிசுத்தமான பந்தல் ஒன்று போட்டதுபோல் உயர்ந்து நின்றன.

ஃப்ராய்ட் இந்த இரண்டு மதங்கள் பற்றிதான் அறிந்திருந்தார். கிழக்கத்திய நாடுகளின் மதங்கள், உபநிஷதங்கள், தாவூ இஸம், ஜென்,

தந்திர சாஸ்திரம், ஞானி திலோபா, போதிதர்மர், நாகார்ஜுனர், வசுபந்து, தர்மகீர்த்தி முதலியவை குறித்து அவர் எதுவும் அறிந்திருக்கவில்லை. ஆன்மிக தடாகத்தில் மலர்ந்த அந்த கமலங்களைப் பற்றி அவருக்கு எதுவும் தெரியாது. அவருக்கமைந்த எல்லைகள் காரணமாக அவர் மேற்கத்திய மதங்களைத்தான் முடிவானவையாக நினைத்து விட்டார்.

மதம் பற்றிய ஆழமான அறிவு பெற வேண்டுமெனில் கிழக்கத்தியச் சிந்தனைகளில் மூழ்க வேண்டும். விஞ்ஞானத்தில் ஆழ்ந்த அறிவு தேவையெனில் மேற்கத்தியக் கோட்பாடுகளைப் பயில வேண்டும். மேற்கு நாடுகளின் சுயமான மேதைமை விஞ்ஞானத்தில் வெளிப்பட்டது. கிழக்கு நாடுகளின் மேதைமை சமயங்களில் வெளிப்பட்டது. கிழக்கு நாடுகளில் விஞ்ஞானி நடுத்தரத்தவனாக இருக்கிறான். அவனுக்கு அதிக மதிப்பில்லை. அவன் தொழில்நுட்பம் அறிந்தவன் (டெக்னிஷியன்) என்று மட்டும் கருதப்படுகிறான். அவன் கற்றதெல்லாம் ஐரோப்பாவிலிருந்து கடன் வாங்கியவைதாம். கிழக்கத்திய நாடுகளில் விஞ்ஞான மேதைமை நேரடியாக அமையவில்லை. ஏனெனில் விஞ்ஞான மேதைமைக்கு தர்க்கமும் கணிதமும் அடிப்படை. கிழக்கின் மேதைமை இலக்கியம், ஆன்மிக சூட்சுமம், சங்கீதம், தியானம் ஆகியவற்றின் மூலம் வெளிப்பட்டது.

எனவே மதம் பற்றி சரியாக அறிந்து கொள்ள வேண்டுமானால் கிழக்கத்திய நாடுகள் பற்றிய அறிவைப் பெற வேண்டும். விஞ்ஞானம் படிக்க வேண்டுமானால் ஆக்ஸ்ஃபோர்ட், கேம்ப்ரிஜ், ஹார்வர்ட்டுக்குப் போ. சமய அறிவு பெற வேண்டுமானால் கிழக்கு நாடுகளின் சந்து பொந்துகளில், மலைகளில், பள்ளத்தாக்குகளில், காடுகளில் அலைந்து திரி. விஞ்ஞானத்தைப் புரிந்து கொள்ள, மேற்கத்திய சிந்தனைப் பிரவாகத்தின் வழிச் செல். அது விஞ்ஞானத்தின் எல்லையையும், தர்க்கத்தின் எல்லையையும் அடையச் செய்யும். குதர்க்கம் செய்யாத இதயத்தின், ஆழ்மனத்தின் குரல் கேட்க விரும்பினால் கிழக்கின் மௌனத்தில் கேள். அந்த ரீங்காரம், நாதம் கிழக்கில் உள்ளது.

கிழக்கைப் பற்றி அறிந்திருக்கவில்லை என்பதுதான் ஃப்ராய்டின் எல்லை. கார்ல் மார்க்சுக்கும் இதே பிரச்சினை. இருவரும் மதத்திற்கு எதிராகப் பேசியிருக்கின்றனர். அவர்களின் மத எதிர்ப்புப் பேச்சுக்கு அதிக முக்கியத்துவம் கிடையாது. அவை மதம் பற்றி

சரியாக அறியாதவர்களின் பேச்சுகள். அவை அறிந்து கூறியவை அல்ல. மேலோட்டமான தகவல்களின் அடிப்படையில் பேசியிருக்கிறார்கள். கிழக்கத்திய ஞானத்தில் அவர்கள் ஆழ்ந்து அமிழ்ந்தவர்கள் இல்லை. முத்துக் குளித்தவர்கள் இல்லை. புத்தருடன் அவர்களுக்குத் தொடர்பு ஏற்பட்டதில்லை; லாவோத்சுவை நூல்கள் மூலம் சந்தித்ததில்லை. கிருஷ்ணனின் புல்லாங்குழல் ஒலி கேட்டதில்லை.

ஃப்ராய்டு சென்றடையாத எல்லைகள் இவை. இல்லாவிடில் அவர் வீதராகம் எனப்படும் சமரச நிலையைக் கண்டறிந்திருப்பார். எனினும் சாவில் விருப்பம் குறித்து அவர் கூறியவை உண்மையானவைதாம். நாம் அதை ஏற்கெனவே அறிந்து வந்திருக் கிறோம். ஆனால் அதற்குச் சாவில் விருப்பம் என்று ஒருபோதும் பெயர் சூட்டியதில்லை. நாம் அதை வைராக்கியத் தன்மை என்றே கூறுகிறோம்.

வைராக்கியத் தன்மை என்பதற்கு என்ன அர்த்தம் கிடைக்கிறது? ராகம் (பற்று) என்றால் வாழ்வதில் ஆசை. ஆகவே வைராக்கியம் என்பதற்கு அர்த்தம் வாழ்வதில் விருப்பமில்லை என்று கிடைக்கும். 'நிரம்பத்தான் வாழ்ந்து விட்டோம். போதுமய்யா போதும். புதிதாக எதற்கும் இடமில்லை. விடைபெற்றுக் கிளம்ப விரும்புகிறோம்.' என்பது வைராக்கியம் கூறும் செய்தி.

இல்லை, சாவு விருப்பக் கோட்பாடு நவீன யுகத்தில் மனத்தில் விளைந்த சீர்குலைவு இல்லை. முற்காலத்தில் நிலவிய வைராக்கியக் கோட்பாட்டிற்கு நவீனயுக விஞ்ஞான வழிமுறை கொடுத்த புதுப் பெயர்தான் இது. என் பார்வையில், ஃப்ராய்ட் கூறிய சாவில் விருப்பக் கோட்பாட்டு ஆழமான ஆராய்ச்சிக்குரியது. இதுவரை அது ஆழமாகப் பயிலப்பட வில்லை. சாவு நினைவைத் தவிர்த்து அலட்சியப் படுத்துவதுபோல சாவுக் கோட்பாட்டையும் நாம் அலட்சியம் செய்துவிட்டோம். ஃப்ராய்ட் முன்னிலைப்படுத்திய காம உணர்வு (லிபிடோ) கோட்பாடு நன்கு ஆராயப்பட்டிருக்கிறது. ஆனால் சாவு விருப்பக் கோட்பாடு ஓரளவுதான் ஆராயப்பட்டிருக்கிறது. ஆனால் அது மதிப்புமிக்க கோட்பாடு ஆகும். அக்கோட்பாட்டை அவர் தன் வாழ்க்கையின் இறுதிக் காலத்தில், மனமுதிர்ச்சி அடைந்து

விட்ட காலத்தில் அளித்தார். சாவின் விளிம்பில் அளிக்கப்பட்ட கோட்பாடாகையால் அதன் மதிப்பு பலமடங்கு அதிகம்.

வாழ்க்கையில் எல்லா விஷயங்களிலும் போராட்டம் உண்டு என்பதை நினைவில் வை. போராட்டம் மூலமாகத்தான் வாழ்க்கை இயங்கிக் கொண்டிருக்கிறது. இதை உணர்ந்து நீ போராட்டத்திலிருந்து விலகி நின்றால் வாழ்க்கை ஓட்டம் நின்றுபோகிறது. அப்பொழுது நீயும் ஜனகர் போலவே சொல்லுவாய் – 'நான் எத்தனையோ முறை பிறந்தேன், இறந்தேன்; ஒருபோதும் பிறந்ததில்லை, ஒருபோதும் இறந்ததில்லை. இது ஆச்சரியம் தருகிறது. என்னை நானே நமஸ்கரிக்கிறேன். எத்தனை–எத்தனை பிறப்புகளும் சாவுகளும் வந்துபோயின. அவை என் மீது ஒரு கோடுகூட சின்னமாக விட்டுப் போகவில்லை. எத்தனை–எத்தனை புண்ணியம்–பாபம் தொழில்–வியாபாரம் வந்து போயின. விட்டு விலகின. நடந்தவை கனவுபோல் மறைந்தன. காலடிச் சுவடுகூட விட்டுச் செல்லவில்லை. எவ்வளவு பரிசுத்தன் நான்! எத்துணை கறைபடாதவன்! ஆச்சரியமாக அல்லவா உள்ளது. நான் பாக்கியவான். என்னை நானே நமஸ்கரிக்கிறேன்.'

இதேபோல் உனக்குள்ளிருந்தும், உன் ஆழ்மனத்திலிருந்தும் ஒருநாள் சுகந்தம், ஆன்மிக மணம், வெளிப்படும்.

ஆனால் அதற்குப் போராட்டம் கடந்த நிலையை அடைய வேண்டும். போராட்டம் தென்படும் இடத்தில் நீ சாட்சியாக ஆகிவிடு. போராட்டம் மூண்டாலே அதை நீ சாட்சியாக மாறுவதற்கான வேளை வந்துவிட்டது என்பதன் எச்சரிக்கை அறிவிப்பாகக் கருது. அன்பும் வெறுப்பும் தென்படும் இடத்தில் எதையும் தேர்ந்தெடுக்காமல் சாட்சியாகிவிடு. இதேபோல், கோபம்–இரக்கம், ஆண்–பெண், மரியாதை–அவமதிப்பு, சுகம்–துக்கம் இவ்வாறு பரஸ்பரம் போராட்டம் நிகழும் இடத்தில் எந்த ஒன்றையும் சாராமல் சாட்சியாக மாறிவிடு.

பொன் போன்ற இந்த சூத்திரத்தை நீ பின்பற்றினால் வீதராக நிலை அதிகத் தொலைவில் இல்லை. துளித்துளியாகச் சேர்த்தால் குடமும் நிரம்பும். அதுபோல் சிறிது சிறிதாக நீ மாற்றுக் கருத்தற்ற தன்மையை, எதையும் சாராத இயல்பை வளர்த்துக் கொண்டால் உனது சமாதிநிலை என்னும் குடமும் நிரம்பும். பிறகு விளிம்பு கடந்து

மேற்கொண்டு பெருகுவாய். நீயும் சமாதிநிலை கைவரப் பெறுவதுடன், உன்னிடம் வருபவர்களுக்கும் சமாதிநிலையின் சுகந்தம் கிடைக்கும். அவர்களும் தெய்விக ஆனந்தத்தால் நிரம்புவார்கள்.

**இரண்டாம் கேள்வி:**

**உங்கள் கருத்துப்படியும், பௌத்தர்களின் கருத்துப்படியும் அகங்காரம் (மமதை) என்று தனியாக ஒன்று உள்ளதாயில்லை. ஆனால் மமதையின் முன்னிலையிலும் சாட்சித் தன்மை மேற்கொள்ளச் சொல்கிறீர்கள். இந்த புரியாத புதிரை எங்களுக்கு விளக்குங்கள்.**

**இ**தில் புரியாத ஒன்றுமில்லை. இது புதிருமன்று. நீ இருட்டைப் பார்க்கிறாய் அல்லவா? ஆனால் இருட்டு என்று தனியான வஸ்து எதுவுமில்லை. இருட்டு என்பது ஓர் இல்லாமையின் அடையாளம். நீ அதைப் பார்க்க முடிந்தது என்பதனால் இருட்டு தனி வஸ்துவாக உள்ளதாக ஆகிவிடாது. நீ இருட்டைக் காணும்போது நீ உண்மையில் காண்பது பிரகாசம் இன்மையைத்தான். இருட்டு என்று தனியாக ஒன்றும் இல்லை. வெட்டிப்பார், அதை வெட்ட முடியாது. கட்டிப் பார், தள்ளி இழுத்துப் பார், எரித்துப் பார், அழித்துப் பார். ஒரு பிரயோஜனமும் இல்லை. இருட்டு என்று தனியாக ஒன்று இருந்தால்தானே இதெல்லாம் சாத்தியம்? திடப் பொருளாக ஒன்று இருந்தால் அதற்கு நாம் பாதிப்பு ஏற்படுத்த முடியும். ஒன்று உளது என்பதற்குச் சான்று என்ன? அதை எந்த விதத்திலாவது பாதிக்க முடியும். ஒன்று இல்லை என்பதற்குச் சான்று என்ன? அதற்கு எந்த விதத்திலும் பாதிப்பு விளைவிக்க முடியாது.

உன் அறையில் இருட்டு சூழ்ந்திருக்கிறது. கத்தி எடுத்து வா. வெட்டித் தள்ளு. உதைத்து விரட்டு. பயில்வான்களை ஏவு. போரே நிகழ்த்து. நீதான் களைத்து விழுவாய். உனக்குத்தான் காயம் படும். இருட்டு பாதிப்படையாமல் அப்படியேதான் இருக்கும். அதை நீ ஒன்றும் செய்ய முடியாது. ஏனெனில் இருட்டு என்பதே (ஒளி) இல்லாமைதானே. இல்லாத ஒன்றை என்ன செய்ய இயலும்?

ஆனால் ஒளியை நீ ஏதாவது செய்ய முடியும். விளக்கு எரிகிறதா? ஊதி அணை. பிரகாசம் பறந்துவிட்டது. அணைந்த

விளக்கை ஏற்று. ஒளி வந்துவிட்டது. இந்த அறையில் ஒளி இல்லாவிடில் இன்னொரு அறையிலிருந்து கொண்டு வா. உன் வீட்டில் ஒளி இல்லாவிடில் பக்கத்து வீட்டிலிருந்து பெற்றுவா. ஒளியை வைத்து நீ நூற்றுக்கணக்கான வேலை செய்ய முடியும்.

யோசித்துப் பார்த்தாயா? இருட்டை ஏதாவது செய்ய வேண்டு மென்றாலும் அதற்கு ஒளியிடம்தான் உதவிபெற வேண்டும். இருட்டை நீக்க வேண்டுமானால் ஒளியை ஏற்று. இருட்டைக் கொண்டுவர வேண்டுமானால் ஒளியை அணை. ஆகவே நமது வேலையெல்லாம் ஒளியுடன்தான் நடைபெறுகிறது.

அகங்காரமும் அப்படித்தான். அதற்கென்று தனியாக உளதாம் தன்மை கிடையாது. அது ஆத்மா இல்லாமையைக் காட்டுகிறது. உனக்கு உனது நிஜம் தெரியவில்லை. ஆகவேதான் மமதை தெரிய வருகிறது. உனக்கு உன் சொரூபம் தெரிந்துவிட்ட நாளிலிருந்து அகங்காரம் காணாமல் போய்விடும். ஆத்ம உணர்வில் அகங்காரம் கலப்பதில்லை. ஆனால் உன்னை நீ மறந்துவிட்டாய். நீ அடிப்படையில் யார் என்று உனக்கு ஞாபகம் இல்லை.

ஆனால் உனக்கு ஓர் வடிவம் தேவைப்பட்டது. அஃதின்றி உனது வேலை எதுவும் நடக்காதெனத் தோன்றியது. ஆகவே நீ ஒரு கற்பனை வடிவத்தை உண்டு பண்ணிக் கொண்டாய். அந்த வடிவம் அகங்காரத்தினுடையது. அதாவது, 'நான், என் பெயர், என் தந்தையின் பெயர், வீட்டின் பெயர், என் வீட்டு விலாசம், வாங்கிய பட்டங்களும் சான்றிதழ்களும், என்னைப் பற்றி மக்கள் கருத்து' — இப்படியாக உன்னை மையமாக வைத்து ஒரு கோப்பு (ஃபைல்) தயாரித்து விட்டாய். இதன் மூலம் இந்த வாழ்க்கையில் உன்னைப் பற்றி ஒரு தோற்றத்தை உருவாக்கி விட்டாய். அதன் அடிப்படையில் உன் பணிகளை நிறைவேற்றிக் கொள்கிறாய். இல்லாவிட்டால் நீ இயங்குவதை கஷ்டமாக உணர்வாய்.

ஒருவர் உன்னிடம் நீ யார் என்று கேட்டால், அதற்கு நீ உண்மையான பதிலைச் சொல்ல விரும்பினால், அமைதியாக நின்றுகொண்டிரு. அவர் தொடர்ந்து, "தம்பி, நீ யார் என்பதை ஏன் சொல்ல மாட்டேன் என்கிறாய்?" என்று தொடர்ந்து கேட்டால், தோள்களைக் குலுக்கிக் கொள். அதுதான் உண்மையான பதிலாக

இருக்கும். ஏனெனில் உனக்கே நீ யாரென்று தெரியாதே! கேள்வி கேட்டவர் உன்னைக் கிறுக்கு என்று நினைத்துக் கொள்வார். நீ எங்கிருந்து வந்தாய் – இதற்கு உன்னால் பதிலளிக்க முடியவில்லை. ஏனெனில் நீ எங்கேயிருந்து வருகிறாய் என்பது உனக்கே தெரியாது தான். சரி, நீ எங்கே போகிறாய் – இதுவும் நீ அறிந்திருக்கவில்லை. உன்னைப் பைத்தியம் என்றுதானே கருதுவார்கள்?

இதேபோல் எல்லோரும் நடந்து கொண்டால் உலகம் விசித்திரமாகி விடும். எல்லோரும் தங்களைப் பற்றி ஏற்படுத்திக் கொண்டுள்ள பொய்யான மதிப்பபீடுகளைக் கைவிட்டால், மிகவும் சிரமமான சூழ்நிலை உருவாகும். போலியான இந்த சமூகத்தில் பொய்யான மதிப்பீடுகளே உபயோகமாக இருக்கின்றன. இந்த பொய்யான மாயை உலகத்தில் பொய்யான மதிப்பீடுகளே பயனளிக்கும். உலக நடவடிக்கைகள் நடைபெற இவை உபயோகப் படுகின்றன.

இதனால்தான் மக்கள் தங்கள் நிஜ சொரூபத்தைத் தேடுவதில் ஈடுபடும் போது பயமடைகிறார்கள். ஏனெனில் அவர்கள் இதுவரை நம்பியிருந்த மதிப்பீடுகளை நீக்கவேண்டி யிருக்கிறது. நெடுங்காலமாக நாம் நம்பிவந்த ‘இது என் பெயர், இது என் விலாசம், இது என் உடல், இது என் மனம், இவை என் எண்ணங்கள், இது என் மதம், இது என் நாடு’ ஆகிய மதிப்பீடுகளை இழக்க நேரிடுகிறது. இவற்றுடன் சேர்ந்து ‘நான்’ என்பதும் சிதற, உருக, மறைய ஆரம்பிக்கிறது. ஒரு கட்டத்தில் நீ சூன்ய நிலையில் சூழ்கிறாய். அப்போது நீ யார் என்று உனக்கே தெரிவதில்லை.

அந்த சூன்ய நேரம்தான் தவ நேரம் என்பது. அப்போது உன்னை உனக்கே தெரிவதில்லை. நீ எழுப்பிய மதிப்பீடுகளின் மாளிகை தரைமட்ட மாகும்போது நீ கும்மிருட்டில், சூன்யத்தில் நிற்கிறாய். ஒளிக்கிரணம் ஒன்றுகூடத் தென்படுவதில்லை. இதை கிறிஸ்தவத் துறவிகள் ஆத்மாவின் இருண்ட இரவு (டார்க் நைட் ஆஃப் தி ஸோல்) என்றழைக்கின்றனர். இத்தகைய இரவிற்குப் பிறகு காலைவேளை காத்திருக்கிறது. இந்த இரவைக் கடக்க அஞ்சுபவன் அந்த விடியலையும் ஒருபோதும் அடைய மாட்டான்.

முதல் நடவடிக்கையாக, பொய்யான மதிப்பீடுகளைக் கைவிட நேரிடும். அவற்றுடன் கொண்டிருக்கும் பொய்யான தொடர்பை விட

வேண்டும். அப்போதுதான் ஒரு கட்டத்தில் நீ யார் என்பது உனக்கே மறந்துபோகும். முழுக் கிறுக்கு போன்ற நிலைமை உண்டாகும். நீ துணிச்சலுடன் இருந்தால், இந்தக் கட்டத்தைக் கடந்துவிட்டால், சூரியோதயம் ஆனது போன்ற வேளை ஒன்று வரும். நீ யார் என்பது முதல் முறையாகத் தெரியவரும். இது தெரிந்துவிட்டால், யதார்த்தமாகவும் ஆன்மீகமாகவும் நீ யார் என்பதைப் புரிந்து கொண்டால், அகங்காரம் என்பது நடைமுறையளவில் மாத்திரமே உண்மை என உணர்வாய்.

இந்த விஷயத்தைப் புரிந்து கொள்ள வேண்டும். நடைமுறை உண்மைக்கும் நிஜமான, நிரந்தரமான உண்மைக்கும் இடையே உள்ள வேறுபாட்டை அறிந்து கொள்ள வேண்டும். ஒரு சாதாரண காகிதத் துண்டை உன்னிடம் கொடுத்து இது நூறு ரூபாய் நோட்டு என்று சொன்னால், இல்லை, அது வெற்றுக் காகிதம் என்பாய். நான் நூறு ரூபாய் நோட்டுக் கொடுத்து இது வெற்றுக் காகிதம் என்று சொன்னால், இல்லை, இது நூறு ரூபாய் நோட்டு என்பாய். இரண்டுமே காகிதத் துண்டுதான். நீ நூறு ரூபாய் நோட்டு என்னும் காகிதத் துண்டு நடைமுறை உண்மை; அடிப்படையில் உண்மை இல்லை; நிரந்தர உண்மை இல்லை. அரசாங்கம் மாறினால் அல்லது அரசாங்கத்தின் சிந்தனை மாறினால், அது இப்போதுள்ள நூறு ரூபாய் நோட்டு இனி செல்லாது என்று அறிவித்தால் அது உடனே வெற்றுக் காகிதத் துண்டாகிவிடும். மக்கள் அந்த நூறு ரூபாய் நோட்டுகளைக் குப்பையில் எறிந்து விடுவார்கள். வேறென்ன செய்வது? நேற்றுவரை இந்த நோட்டுகளைப் பத்திரமாக, பாதுகாப்பாக வைத்திருந்தார்கள். இப்போது அவற்றைக் குழந்தைகளிடம் கொடுத்து, படகு செய்து, தண்ணீரில் மிதக்கவிட்டு விளையாடச் சொல்வார்கள். காகிதத்திற்கு இதுவரை இருந்த மதிப்பு நடைமுறை சத்திய வகையானது; ஏற்றுக் கொண்டதால் சத்தியமானது; எல்லோரும் சேர்ந்து ஏற்றதால் சத்தியமானது. எல்லோரும் மறுத்தார்கள்; அவ்வளவுதான் அந்த சத்தியத்தின் ஆயுள் முடிந்துவிட்டது.

அகங்காரம் என்பது நடைமுறை உண்மை. மக்கள் ஏற்றால் காகிதத் துண்டு நூறு ரூபாய் நோட்டாகி விடுகிறது. இப்படி ஏற்பது வாழ்க்கை சுமுகமாக நடக்கத் தேவைப்படுகிறது. உன்னை அகங்காரத்தை விட்டொழித்து வாழ்க்கையில் குறுக்கீடாக, தொந்தரவாக

மாறு என்று உபதேசிக்கவில்லை. அகங்காரம் பற்றி விழிப்புடன், எச்சரிக்கையாக இரு என்று மட்டும்தான் சொல்கிறேன். அது ஒரு நடைமுறை சத்தியமே தவிர நிரந்தர சத்தியமில்லை என்பதைச் சரியாகப் புரிந்துகொள். அதை நன்றாகப் பயன்படுத்து. பயன் படுத்தியாக வேண்டும். ஆனால் அதை உண்மையானதாகக் கருதி விடாதே. உண்மையானதென ஏற்றால் பெரிய தொந்தரவாகிவிடும். ஏனெனில் எது எப்படியுள்ளது என நாம் நினைக்கிறோமோ அப்படித்தான் அது காட்சியளிக்கத் தொடங்குகிறது.

ஓர் ஆராய்ச்சி பற்றி படித்தேன். ஹார்வர்ட் பல்கலைக்கழக மனத்தத்துவத் துறை ஓர் ஆராய்ச்சியை மேற்கொண்டது. அத்துறையில் பணியாற்றிய உலகப் புகழ் பெற்ற மனத்தத்துவ வல்லுநர் ஒருவரை, துறை மேற்கொண்ட 'பரிசோதனைக்கு ஒத்துழைப்பு அளிக்கும்படி வேண்டினர்.

"ஒருவரைக் காட்டுகிறோம். அவர் மூளை கலங்கிப் போய் பைத்தியமாக உள்ளார். அவர் இன்னொரு பல்கலைக் கழகத்தில் பணியாற்றும் பிரபல மனத்தத்துவ அறிஞரின் பெயரைக் கூறி தாம்தான் அவர் என்கிறார். நீங்கள் அவருக்கு சிகிச்சையளிங்கள். நீங்கள் அவருடன் மருத்துவ ஆலோசனையில் ஈடுபடும்போது அதைக் குறும்படமாகப் பதிவு செய்வோம். பிறகு அதை நாங்கள் ஆராய்வோம்" என்றனர்.

பிறகு அவர்கள் அந்த இன்னொரு பல்கலைக்கழக மனத்தத்துவ அறிஞரிடம் சென்று, "ஹார்வர்டில் தன்னைச் சிறந்த மனத்தத்துவ நிபுணர் என்று நினைக்கும் ஒரு பைத்தியக்காரர் உள்ளார். நீங்கள் அவருக்கு சிகிச்சை செய்யுங்கள். 'அதைப் படம் எடுக்கிறோம்" என்றனர்.

பாவம்! அந்த உண்மையான மனத்தத்துவ நிபுணர்கள் இருவருமே ஒருவரை ஒருவர் பைத்தியம் என்றும், தன்னை மனத்தத்துவ அறிஞர் என்று கருதுவதாகவும் நினைத்து ஓர் அறையில் அமர்ந்து ஒருவரை ஒருவர் குணப்படுத்த முயன்றனர். "நீங்கள் யார்?" என்று பரஸ்பரம் கேட்டுக் கொண்ட போது சரியாகவே பதிலளித்தனர். அவர்கள் அளவில் அவர்கள் சொன்னது உண்மைதான். ஆனால்

ஒருவரை ஒருவர் பைத்தியம் என்று முடிவெடுத்தனர். ஒருவர் மற்றவரை பைத்தியம் என்று நினைத்ததுடன் நில்லாமல், 'என்னைக் குணப்படுத்தவும் அல்லவா முயலுகிறார்' என்று வியந்தனர்.

பத்து நிமிடங்கள் வரை இந்த விசித்திரமான நிலை நீடித்தது. திடீரென ஒருவர் யோசித்தார்: 'எதிரே உள்ள இந்த ஆளுடைய முகம் ஏற்கெனவே பரிச்சயம் ஆனதுபோல் தோன்றுகிறதே. செய்தித் தாள்களில் இவர் படத்தைப் பார்த்ததாக ஞாபகம் எழுகிறதே. இவரைப் பைத்தியம் என்று நான் சொல்வது சரியாக இருக்க முடியுமா? ஆம், எதிரிலிருப்பவர் மனத்தத்துவ அறிஞர்தாம். இவர் நூல்களை நான் வூாசித்துள்ளேன். அவர் இதுவரை பேசிய விதம் மனத்தத்துவ சிகிச்சையுடன் தொடர்புள்ளவைதான்.'

இதேபோல் மற்றவரும் நினைத்தார். இருவரும் திடுக்கிட்டனர். தாங்கள் எத்தகைய வலையில் வீழ்ந்தோமெனப் புரிந்து கொண்டனர். உண்மை நிலையை உணர்ந்ததும் இருவரும் சிரித்து விட்டனர். முடிவு? இருவரில் யாரும் பைத்தியமில்லை. ஆனால் கடந்துசென்ற பத்து நிமிடங்களும் அவர்கள் பைத்திய நிலையில் இருந்தனர். ஒருவரையொருவர் பைத்தியமென நினைத்தனர். அந்த பத்து நிமிட நிலை நடைமுறையில் உண்மையான நிலையாகும். அது உண்மை அர்த்தம் கொண்ட நிலையன்று. உண்மையின் நிஜ ஸ்வரூபம் உணரப் பட்டதும் அதன் போலியான நடைமுறை உருவம் மறைந்துவிடும்.

**நா**ன் இன்னொரு பரிசோதனை பற்றியும் படித்தேன். ஒரு பல்கலைக்கழக இசை நிகழ்ச்சிக்காக ஒரு கலைஞர் வந்திருந்தார். ஜெர்மானியர். ஜெர்மன் மொழி மட்டுமே அறிந்தவர். தட்டுத் தடுமாறிச் சிறிது ஆங்கிலம் பேசுவார். நிகழ்ச்சி தொடங்கும் முன் அவரின் சீடர் ஒருவர் ஆங்கிலத்தில் அறிமுக உரை நிகழ்த்தினார்:

"எங்கள் குரு அளிக்கவுள்ள இசை நிகழ்ச்சி உவமையற்றதாகும். மானிட வரலாற்றில் இப்படியொரு இன்னிசை படைக்கப்பட்ட தில்லை. இதை நிகழ்த்துகையில் இசைவாணர் கம்பீரமாகவே தோற்றமளிப்பார். ஆனால் இந்நிகழ்ச்சி முழுமையான நையாண்டி யாகும். பாவம், நீங்கள் ஜெர்மன் மொழி அறிந்திராத துரதிர்ஷ்ட சாலிகள். உங்களால் நிகழ்ச்சியின் ஆழத்திலுள்ள கிண்டலைப் புரிந்துகொள்ள முடியாது.

"ஜெர்மனியில் எங்கெல்லாம் இந்நிகழ்ச்சி நடைபெற்றதோ அதைக் கேட்டவர்கள் வயிறு குலுங்கச் சிரித்திருக்கிறார்கள். உருண்டு புரண்டு சிரித்திருக்கிறார்கள். ஆனால் இதை நடத்தும் எங்கள் குரு நிகழ்ச்சி முழுவதும் கம்பீரமாகவே தெரிவார். ஒரு புன்சிரிப்புகூட முகத்தில் தெரியாது. மக்கள் சிரிக்க – சிரிக்க மேன்மேலும் அவரது முகம் இறுக்கமாகி விடும். இதுவே அவரது சிறப்பு.

"இதைக் கண்டு மக்கள் மேலும் சிரிக்கத் தொடங்குவார்கள். குரு கோபநிலையைக்கூட அடைந்து, 'மடையர்களே, ஏன் சிரிக்கிறீர்கள்?' என்று கத்துவார். உண்மையில், அவர் இறுக்கமாகத் தெரிவதால்தான் அந்த நையாண்டி ஆழமாகவும், கூர்மையாகவும் அமைகிறது."

சீடர் பின்வாங்கியதும் இசைக்கலைஞர் வெளிப்பட்டார். மற்ற இசைக் கருவியாளர்களுடன் சேர்ந்து நிகழ்ச்சியைத் தொடங்கினார். மக்களுக்கு ஜெர்மன் மொழி தெரியாவிடிலும் சீடர் அவர்களது மனத்தைக் குறிப்பிட்ட வகையில் தயார் செய்து வைத்திருந்தார். யாரோ முதலில் நகைத்தனர். அடுத்து, பலர் சிரித்தனர். சிரிப்பலை பரவியது. மக்கள் திரை ஓரம் நின்றிருந்த சீடன் என்ன செய்கிறான் என நோக்கினர். அவன் சிரித்தபடி தெரிந்தான். சில சமயம் வயிற்றைப் பிடித்துக் கொண்டு சிரித்தான். அதைப் பார்த்து மக்களும் அதேபோல் செய்தனர். அவன் சிரிக்கிறான் என்றால் சிரிப்பதற்கு ஏதோ விஷயம் உள்ளது என்று நினைத்தனர். சுயமாகவும் நிறையச் சிரித்தனர்.

இதைக் கண்டு இசைக் கலைஞர் சினமடைந்தார். அவர் கூச்சலிடத் தொடங்கினார். மக்கள் முன்பைவிட அதிகமாகச் சிரித்தனர். குழப்பமுற்ற கலைஞர் தனக்குத் தெரிந்த ஆங்கிலத்தில், "இது என்ன முட்டாள்தனம்? நான் மிகவும் கம்பீரமான, கனமான இசையை உங்களுக்கு அறிமுகப்படுத்தி நடத்துகிறேன். உங்களுக்குத்தான் ஜெர்மன் மொழி தெரியாதே. ஆனால் நீங்கள் வயிறு புண்ணாகும்படி சிரிக்கிறீர்களே. உங்களுக்குப் பைத்தியமா பிடித்துவிட்டது?" என்று கத்தினார்.

மக்கள் சிலர் எழுந்து நின்று, "ஐயா, இது வேடிக்கையான நிகழ்ச்சி என்று உங்கள் சீடர் அறிமுக உரையில் கூறியிருந்தார்," என்று விளக்கம் தந்து இங்குமங்கும் பார்த்தனர். இதற்குள் சீடர் காணாமல் போயிருந்தார்! ஆம், பரிசோதனை முடிந்துவிட்டது. அந்த இசை

நிகழ்ச்சியில் நகைச்சுவை கிடையாது. கலைஞர் பாடியது உண்மையில் சோக கீதம். ஆனால் முன்கூட்டியே மனத்தில் ஓர் அபிப்பிராயம் வேரூன்றிவிட்டால் அதுவே நடைமுறையில் சத்தியம் என்று தோன்றுகிறது.

அகங்காரமும் ஒருவகையான அபிப்பிராயம், கண்ணோட்டம் ஆகும். அது எல்லோரிடமும் காணப்படுகிறது. ஆனால் அது ஒரு நடைமுறை உண்மை மட்டுமே ஆகும். அது நிச்சயமாக உபயோகமானது. ஆனால் அது உண்மையானதன்று. அதை நன்றாகப் பயன்படுத்திக் கொள். ஆனால் மறந்தும்கூட அதுவும் நீயும் ஒன்றென நினைக்காதே. அதை வேலைவாங்கு. ஆனால் அகங்காரத்துக்கு வசப்பட்டுவிடாதே. சாட்சி மனப்பான்மையுடன் கவனி. எது நடைமுறை உண்மை, எது கலப்படமற்ற நிரந்தர உண்மை, எது நிஜமாகவே உள்ளது, எது ஏற்கெனவே இருந்த அபிப்பிராயத்தால் உண்மைபோல் தெரிகிறது என்றெல்லாம் பிரித்துணர்.

**ஒ**ரு சூஃபி கதை. ஒரு மனிதனுக்குத் தனது நிழலின் மீது வெறுப்பு உண்டானது. அது மட்டுமல்லாமல் அவன் தன் காலடிச் சின்னங்களையும் வெறுத்தான். அடிப்படையில் அவனுக்குத் தன் மீதே வெறுப்பு இருந்தது. அவன் நிழல் மறைந்து அழிந்துபோக வேண்டுமென விரும்பினான். பூமியில் காலடிச் சின்னங்களை விட்டுச் செல்லக் கூடாது என்றும், தன் நினைவாக எதுவும் உலகில் மிஞ்சியிருக்கக் கூடாது என்றும் அவன் ஆசைப்பட்டான். இப்படி ஒருத்தன் பிறந்தான், வாழ்ந்தான் என்று தெரிய முடியாதபடி முழுமையாக தான் அழிய வேண்டும் என அவன் ஏங்கினான்.

ஆகவே அவன் தன் நிழலிடமிருந்தும், காலடிச் சுவடுகளிடமிருந்தும் தப்பிப்பதற்காக ஓட ஆரம்பித்தான். மைல் கணக்காக ஓடினான். அவன் எவ்வளவு ஓடினாலும் நிழலும் அவனுடன் சேர்ந்து வந்துகொண்டே இருந்தது. அவன் ஓட—ஓட காலடிச் சுவடுகளும் பதிவாகிக் கொண்டே வந்தன. அவனது மூளை சொன்னது. 'நீ சரியாக ஓடவில்லை, வேகமாக ஓடவில்லை. இப்படி ஓடினால் பிரயோஜனப்படாது. நீ ஓடும் வேகத்திலேயே நிழலும் பின் தொடர்கிறது. நிழலையும் மிஞ்சிய வேகத்தில் ஓடினால்தான் நீ அதைப்

பின்தள்ளி விட்டுத் தனியாக முன்னேற முடியும். அப்போதுதான் அதனுடனான தொடர்பு அறுந்து போகும்.'

பாவம், அந்த மனிதன் மேன்மேலும் வேகமாகி ஓடி ஓரிடத்தில் வீழ்ந்தவன் செத்தே போனான்.

சூஃபிகள் இந்தக் கதைக்கு விளக்கம் கூறியுள்ளனர். மனிதனின் நிலைமையே இப்படித்தான். சிலர், நிழலை நம்பி அதை நிரப்பு கின்றனர். அதை வைரத்தாலும் முத்துகளாலும் அலங்கரிக்கின்றனர். தங்கத்தால் போர்த்துகின்றனர். அவர்களைக் கேட்டால், 'இது எங்கள் நிழல். இதை அலங்கரிப்போம்; அழகாக்குவோம்; அத்தர் பூசுவோம்; இதற்கு வெல்வெட்டு கம்பளம் விரிப்போம். இது ஏழை அல்லது பிச்சைக்காரனின் கேவலமான நிழல் இல்லை. எங்கள் நிழல் கல்லும் முள்ளுமான பாதையில் செல்லாது. அது தங்கத்தாலான பாதைகளில் நடக்கும்; அரியணையில் அமரும்.' என்று பெருமைப்பட்டுக் கொள்வார்கள்.

மன்னர்கள் நடந்து செல்வதைப் பார்த்ததுண்டா? அவர்கள் நடக்க நேர்ந்தால் வெல்வெட்டுத் துணி விரிக்கப்படும். இவர்கள் மண்ணுலகில் சாதாரணமானவர்கள் அல்லர். சாதாரண தூசி மற்றவர்களின் கால்களில்தான் படியும். இப்படி நிழலைப் போற்றுவது ஒருவகையான கிறுக்குத்தனம்தான்.

இன்னொரு வகையான கிறுக்குத்தனமும் உண்டு. இதனால் பாதிக்கப்பட்டு ஓடுபவர்கள்தான் சாது சந்நியாசிகள் என்று சொல்லப்படுகின்றவர்கள். உலகப் பற்றுள்ள குடும்பஸ்தர்கள், நிழலை அலங்கரிப்பதில் ஈடுபட்டுள்ளனர். அதைக் குடிவைக்க மாளிகை கட்டுகின்றனர். உலகப் பற்று நீங்கியவர்கள் என நீ சொல்லும் வைராகிகள் தலைதெறிக்க ஓடுகிறார்கள். நிழலிலிருந்து விலகிச் செல்ல ஓடுகிறார்கள்.

நிழலை நீ அலங்கரித்தாலும் அது ஒருவகை பிரமை.' அதை விட்டுப்பிரிய ஓடுவதுதான் வழி என நீ நினைத்தாலும் அதுவும் ஒருவகை பிரமைதான். இந்த இரு நிலைகளிலும் நீ செத்துத்தான் போவாய். சிலர் நிழலுக்கு அலங்காரம் செய்து களைத்து விழுந்து மரிப்பார்கள். வேறு சிலர் ஓடி—ஓடி கீழே விழுவார்கள்.

சூஃபிக்கள் இது கண்டு பரிதாபப்படுகிறார்கள். 'கிறுக்குப் பிடித்தவர்களாக இந்த மனிதர்கள் உள்ளனரே. இவர்களுக்குச் சிறிதளவுகூட மூளை இல்லையா? ஒரு மரத்தின் நிழலில் உட்கார்ந்தால் போதுமே. உடனே தனது நிழல் மறைந்துவிடும் என்று இவர்களுக்குத் தெரியாதா? சூரியனுக்கு எதிர்ப்புறமாக நின்றால், வெயிலில் நின்றால் நிழல் உருவாகும். ஒளிவீச்சில் நின்றால் நிழல் விழும் என்றும் தெரியாதா?' எனத் திகைக்கிறார்கள்.

உன் அகங்காரம் வெளிப்படும்போது நிழல் உருவாகி விடுகிறது. 'என்னை உலகம் பார்த்துக் கொள்ளட்டும். என்னுடன் அறிமுகம் செய்து கொள்ளட்டும். உலக அளவிலான வெளிச்சம் என்மீது படட்டும்,' என்றெல்லாம் கூறுகிறாய். நீ கௌரவத்தை விரும்பினால், வெற்றியை விரும்பினால், உடனே நிழலும் உருவாகிவிடும்.

சூஃபிக்கள் நினைக்கிறார்கள், 'இந்தக் கிறுக்குகள் கூரையின் கீழ் உட்கார்ந்தால் போதுமே, நிழல் அகன்று விடுமே.'

கௌரவத்திற்கு ஏங்காதவர்கள், பதவி அந்தஸ்திற்கு ஆசைப்படாதவர்கள், புகழ் தேடாதவர்கள் – இவர்களின் நிழல் மறைந்துவிடும். நிழலிலேயே இவர்கள் உட்கார்ந்து விடுவதால் நிழல் எப்படித் தனியாக உருவாகும்? ஓடுவதால் காலடிச் சுவடுகள் ஏற்படாமல் போகுமா? இல்லை, தொடர்ந்து ஏற்படும், நிறைய எண்ணிக்கையில் பதிவாகும்.

இதனால்தான், சாதாரண குடும்பஸ்தர்களை மக்கள் மறந்து போனாலும் சாது சந்நியாசிகளை மறப்பதில்லை. சாதாரண மக்களின் காலடிச் சுவடுகள் விரைவிலேயே அழிந்து போகின்றன. ஏனென்னில் அவர்கள் பெருங்கூட்டமாக உள்ளனர். கோடிக் கணக்கில் வாழ்க்கைப் பாதையில் நடைபோடுகின்றனர். யாருடைய கால் சுவடுகளைப் பற்றி யாருக்கு அக்கறை ஏற்படப் போகிறது? நீ ஓரிடம்விட்டு அகல வதற்குள் உன் கால்தடங்கள் நசுக்கப்பட்டு அழிந்து போயிருக்கும்.

ஆனால் சாது சந்நியாசிகளின் கால்தடங்கள் நிலைத்து விளங்குகின்றன. அவ்வழியில் வேறு யாரும் செல்வதில்லை. அங்கு அதிகம் போராட்டமோ, போட்டியோ கிடையாது. சாது சந்நியாசிகள்

தனியாக, நீண்ட இடைவெளியில், செல்கின்றனர். அவர்களின் கால்தடங்கள் பல நூற்றாண்டுகளாக அழியாமல் இருக்கின்றன.

அஷ்டாவக்கிரரின் மொழிநடையில் சொல்வதானால் — ஓடுகின்ற அந்த மனிதன் தன்னறிவின் கீழ் அமைதியாக உட்கார்ந்திருந்தால், கால்தடங்கள் பதிவு பெற்றிருக்காது; பூமி மாசடைந்து விகாரமாகி யிருக்காது; நிழல் தோன்றியிருக்காது; நிழலிலிருந்து தப்புவதற்காக உபாயம் தேட நேர்ந்திருக்காது; மோசமான முறையில், நாயைப்போல செத்து விழுந்திருக்க மாட்டான்.

அகங்காரம் என்று தனியாக ஒன்றும் இல்லை. பிறகு எதிலிருந்து தப்பி ஓட வேண்டும்? விழிப்புணர்வு ஏற்பட்டால் அகங்காரம் ஒரு நிழல் மட்டுமே என்று காண்பாய். நீ அநாவசியமாகத் தப்பி ஓடுகிறாய். அநாவசியமாகக் கவலைப்படுகிறாய். உட்காரப்பா. நிழல் தனியாக இல்லை. அது நடைமுறைக்கு மட்டுமே தேவையான உண்மை. அதை அந்த அளவிற்கு உபயோகித்துக் கொள்.

நீ பேசும்போது 'நான்' என்பதைக் கூறத்தான் நேரிடும். நான் பேசும் போதும் 'நான்' என்கிறேன். புத்தரும் கிருஷ்ணரும்கூட 'நான்' என்றுதான் பேச்சின்போது கூறினார்கள். அந்த மாமனிதர்கள் 'நான்' என்று யாருமில்லை என அறிந்தே இருந்தனர். 'நான்' என்பதற்கு மொழி அடிப்படையிலான உபயோகம் மட்டுமே உண்டென அவர்களுக்குத் தெரியும். அதற்கு நடைமுறையிலான பயன் மட்டுமே உண்டு. பேச்சுவழக்கை அது சரளமாக்குகிறது. புரிதலுக்காக அதைச் சொல்லத்தான் வேண்டும். ஆனால் 'நான்' என்பது உண்மையில் இல்லை.

சாட்சி என்னும் கண்ணோட்டத்தை மேற்கொண்டு கவனமாகப் பார். எது இருக்கிறது, எது இல்லை என்பது புரிந்துவிடும். எது இருக் கிறதோ அதுதான் ஆத்மா. எது இல்லையோ அதுவே அகங்காரம்.

**மூன்றாம் கேள்வி:**

**அகங்காரம் அல்லது அஞ்ஞானம் என்பது கர்வ உணர்வா அல்லது பிரமையா? அகங்காரமும் அஞ்ஞானமும் பிரிக்க முடியாதபடி ஒன்றை யொன்று சார்ந்தே உள்ளனவா?**

இவை பெயர் மட்டுமே. ஒரே நோயின் வெவ்வேறு பெயர்கள். உனக்கு ஒரு நோய். ஆயுர்வேத மருத்துவரிடம் போகிறாய். அவர் உனக்குக் காசநோய் என்கிறார். அலோபதி மருத்துவரிடம் காண்பி. உனக்கு ஆஸ்துமா ` என்பார் உனக்கு இரண்டு நோய்கள் ஏற்பட்டுவிட்டதாகக் கவலைப்படாதே. காசநோய் ஒரு பக்கம், ஆஸ்துமா ஒரு பக்கம் ஏற்பட்டு விட்டதாக சங்கடப்படாதே. யுனானி மருத்துவர், ஹோமியோபதி மருத்துவரிடம் செல். ஆளுக்கொரு நோயின் பெயர் சொல்வார்கள். ஏனெனில் அவர்கள் வெவ்வேறு விதமான மருத்துவ மொழிநடை காரணமாக ஒரே நோயை வெவ்வேறு பெயர்களில் வரையறுக்கிறார்கள்.

மனிதனுக்கு ஏற்பட்டுள்ளது ஒரு நோய்தான். அதை அறியாமை, அகங்காரம், மாயை, பிரமை, மயக்கம், மனக்குழப்பம், பாவசிந்தனை, மறதி என்று எப்பெயரால் வேண்டுமானாலும் அழை. பெயர்தான் ஆயிரம், நோய் ஒன்றுதான்.

நீ நினைவில் வைக்க வேண்டிய முதல் விஷயம் உனக்கு ஏராளமான நோய்கள் இல்லை என்பதைத்தான். உனக்கு மொத்தமே ஒரு நோய்தான் உள்ளது என்பது புரிந்ததும் மனம் இலகுவாகிவிடும். நீ ஆயிரம் நோய்களுக்கான சிகிச்சையும் மேற்கொள்ள வேண்டிய தில்லை. அப்படி ஏதேனும் செய்தால், நோய் அப்படியே இருக்க சிகிச்சை உன்னைக் கொன்றுவிடும்; மருந்துகள் உன்னைக் கொன்றுவிடும்.

உனக்கு அதிக நோய்களில்லை. அறியாமை, பேராசை, காமம், குரோதம், மோகம் இவை உனக்குள்ளன. இவை பல நோய்களல்ல. ஒரே நோயை வெவ்வேறு விதமாக இவ்வாறு குறிப்பிடுகிறார்கள். இவை ஒரே நோயின் வெவ்வேறு நிறமுடைய, உருவமுடைய முகப்புக் கூறுகள்.

அகங்கார நோய் – எனக்கு பிரியமானது என்று ஒவ்வொரு வனும் கூறுவான். ஏனென்றால், இந்த 'நான்' என்ற உணர்வால்தான் எல்லாமே உற்பத்தியாகிறது. 'நான்' என்பதிலிருந்து 'என்னுடையது' என்ற உணர்வு தோன்றுகிற. 'என்னுடையது' என்பதிலிருந்து எல்லா மாயையும் மோகமும் உருவாகிறது. 'நான்' என்னும் தன்மையால் தனக்கு எதிர்ப்பான ஒவ்வொரு விஷயத்திற்கும் கோபம் மூள்கிறது.

இலேசாக அடிபட்டாலும் எரிச்சலாக உள்ளது. மற்றவர்களைத் திட்டத் தோன்றுகிறது. தன்னை உயர்த்தி, மற்றவர்களைத் தாழ்த்த ஆவலாக உள்ளது. 'நான்' உணர்வு போட்டி மனப்பான்மையை, ஒருவர் கழுத்தை மற்றவர் நெரிக்கத் தூண்டுகிறது. எல்லோரையும் குப்புறத் தள்ள வேண்டும்; தோற்கடிக்க வேண்டும்; வெற்றி பெற்று நான் யார் என்பதை அறிவிக்க வேண்டும். 'நான்' என்பதிலிருந்து போராட்டம், விரோதம், போர், வன்முறை ஆகிய எல்லாம் விளைகின்றன. இந்த 'நான்' என்பதில் எந்த அளவிற்கு நீ லயிக்கிறாயோ அதற்கேற்ப உன் மயக்கம் அதிகரிக்கிறது. இது ஆழமான போதையாகி விடுகிறது.

அகங்காரம் பிடித்தவன் எப்படி நடைபோடுகிறான் என்பதைப் பார்த்துள்ளாய் அல்லவா? கள் குடித்தவனைப் போலல்லவா அசைந்தாடி செல்கிறான். அதனால் அகங்காரத்தை 'மதம்' என்றும் அழைக்கிறோம். அவன் கால்கள் தரையில் படுவதில்லை. யாருடனாவது மோத அவன் துடிக்கிறான். அதற்கு வசதியாக யாராவது கிடைக்க மாட்டார்களா என்று தேடி அலைகிறான். அப்போதுதானே தனது அகங்காரத்தை மோதவிட முடியும். மோதல் மூலம்தான் அகங்காரம் இருப்பது தெரியவருகிறது. எத்துணை அளவிற்குப் பெரிய அல்ல சிறிய மோதலோ அதற்கேற்ற அளவில் அகங்காரம் வெளியாகிறது.

நீ ஏதோ ஓர் அம்சத்தில் மட்டுமல்ல, முற்றிலுமே தவறான வனாக உள்ளாய் என்கிறேன். அகங்காரம் அடிமனதுவரை வேரூன்றியுள்ள உணர்வு. அகங்காரம் நீ ஏதோ ஓரிரு அம்சத்தில் மட்டுமே குறைபாடுள்ளவன் என்கிறது. ஆனால் எல்லோரிடமுமே ஓரிரு விஷயங்களில் தப்பு உள்ளது. யாரிடம்தான் சிறிதளவாவது தப்பில்லை? சிறு குறைதான். சரிசெய்து கொள்ளலாம். இதனால் உன் வாழ்க்கையில் ஒரு சுத்திகரிப்புதான் நிகழ்கிறதே தவிர, பூரண புரட்சி விளைவதில்லை.

அகங்காரம் ஒரு சிறு பிரச்சினையைச் சுட்டிக்காட்டி அதைச் சரிசெய்தால் போதும் என்று கூறும். 'காரை பெயர்ந்து விட்டது. சிமிண்ட் பூசு. தரையில் குழி விழுந்துவிட்டது. நிரப்பி மூடு. சுவர் சாய்வாக உள்ளது. முட்டுக்கொடு. பளுதாங்க இன்னொரு கம்பம் நடு. புதிதாக ஓடு வேய். வீடு நன்றாகத்தான் உள்ளது. இங்குமங்குமாகச் சின்னஞ்சிறு குறைகள். அதையெல்லாம் சரிசெய்து கொண்டே செல்.

காலப்போக்கில் ஒருநாள் எல்லாம் சரியாகி விடும்.' இது அகங்காரம் கடைப்பிடிக்கும் தந்திரம். இது உண்மையில்லை. சிறு மராமத்து வேலைகளால் முழுமை கிடைத்துவிடாது.

நான் சொல்வது என்னவென்றால், உன்னிடம் அகங்காரம் இருக்கும்வரை எல்லாமே தப்புதான். ஓர் அறையில் மூலையில் மட்டும் பிரகாசம், மற்ற இடங்களிலெல்லம் இருட்டு என்று இருக்காது. அதேபோல், ஒரு மூலையில் மட்டும் இருட்டு மற்ற இடங்களில் ஒளி என்றும் இருக்காது. வெளிச்சமிருந்தால் முழு அறையிலும் பிரகாசிக்கும். வெளிச்சம் இல்லாவிடில் முழு அறையிலும் ஒளி இருக்காது.

சாட்சி மனப்பான்மை உள்ளவன் விழிக்கும்போது முழுமையாக விழிக்கிறான். பாதி தூங்குகிறான், பாதி விழித்திருக்கிறான் என்ற நிலை சாத்தியமில்லை. உனது தியானம் பழுக்கும்போது முழுமையான அளவில் பழுக்கிறது.

அகங்காரம் செய்யும் தந்திரத்திலிருந்து தப்பித்து இரு. இல்லாவிடில், நீ சீர்திருத்தவாதி என்ற அளவிலேயே நின்று விடுவாய். அஷ்டாவக்கிர கீதையில் ஜனகர் வாழ்க்கையில் நடந்ததாகக் கூறப்படுவது போன்ற மாபெரும் புரட்சி உன் வாழ்க்கையில் நிகழாது. ஜனகர் வாழ்வில் அப்புரட்சி ஒரு நொடியில் நடந்துமுடிந்து விட்டது. ஏனெனில் அவர் தன்னை முழு அளவில் தவறானவன் என்று கண்டு கொண்டார்.

ஆகவே மீண்டும் சொல்கிறேன் – நீ முழுமையாகத் தவறானவன் அல்லது முழுமையாகச் சரியானவன். நடுவில் தங்குமிடம் கிடையாது. தான் முழு அளவில் தவறானவன் என்று அகங்காரம் ஒருவனை ஒப்புக் கொள்ளவிடாது. அஹங்காரி சொல்வான், 'தவறு இருக்கலாம். ஆனால் சரியான அம்சங்களும் என்னிடம் உண்டுதானே. என் முழு வாழ்க்கையுமா தப்பாக இருக்கும்?' ஆனால் முழுதும் தவறென நினைக்கும் போதுதான் புரட்சி ஆரம்பமாகிறது.

**ஒ**ரு பிராமணர் மக்களுக்கு உபதேசிக்கையில் 'எல்லாம் பரமாத்மாதான் செய்கிறார், நாம் சாட்சி மட்டுமே, கர்த்தா வில்லை'

என்பார். கடவுள் அவரைச் சோதிக்க விரும்பினார். பசுவின் உருவத்தில் அவர் பிராமணரின் தோட்டத்தில் நுழைந்து செடிகொடிகளை நாசம் செய்தார்; பூக்களை மேய்ந்து விட்டார். புல்லைச் சேதப்படுத்தினார். தோட்டம் சிதைந்தது.

பிராமணர் பூஜையிலிருந்தார். அப்போது தியானம் செய்கையில், 'இறைவா, நீயே எல்லாம் செய்பவன். என்னிடம் எந்த சக்தியும் இல்லை. நான் பார்வையாளன் மட்டுமே,' என்று உருகினார். ஆனால் சத்தம் கேட்டு வந்து தோட்டத்தைப் பார்த்ததுமே எல்லாவற்றையும் மறந்து போனார். அவர் உழைத்து உருவாக்கிய தோட்டம் அது. அதன்மீது அவருக்கு கர்வம். மன்னரும்கூட பார்க்க வந்தார். அந்தத் தோட்டத்து மலர்களுக்கு ஈடே கிடையாது. பல போட்டிகளில் அவை வெற்றி பெற்றுள்ளன.

பிராமணர் பூஜையின் புனிதத்தை மறந்தார். சாட்சி உணர்வை மறந்தார். ஒரு கம்பெடுத்துப் பசுவை நையப்புடைத்தார். பலத்த அடி காரணமாக பசு விழுந்து இறந்தவிட்டது. பிராமணர் அரண்டுபோனார். 'நான் என்ன காரியம் செய்து விட்டேன்! பசுக் கொலை. அதுவும் பிராமணனாகிய என் கையால்! பிராமணர்களின் சாஸ்திரமாகிய மனுதர்ம சாஸ்திரம் பசுக்கொலையை மிகக் கொடிய பாவம் என்று சொல்கிறதே,' என்று பிராமணர் மனம் கலங்கினார்.

திடீரென அவரது ஞானம் விழித்துக் கொண்டது. அது உதவிக்கு வந்தது மனம் பேசியது. 'ஏ முட்டாளே! நீ எப்பொழுதும் நாம் சாட்சி மாத்திரம்தான் என்று சொல்லி வந்தாயே. ஆகவே இந்த சம்பவமும் கடவுளால் நிகழ்ந்ததே ஆகும். செய்பவர் அவர்தானே. நாமா செய்தோம்?' இவ்வாறு தர்க்கித்து அவர் தன்னை சமாதானப்படுத்திக் கொண்டார்.

அந்தப் பக்கம் வந்த கிராம மக்கள் பதறினார்கள். "பிராமண உத்தமரே, என்ன காரியம் செய்து விட்டீர்கள்!" என்ற அலறினார்கள்.

அவர் நிதானமாகச் சொன்னார், "நான் யார் எதையும் செய்வதற்கு? செய்பவன் கடவுள் மட்டுமே. அவன் விரும்பிய வண்ணமே நிகழ்ந்துள்ளது. பசு சாகும் நேரம் வந்துவிட்டது. அதைக் கொல்ல வேண்டியது அவசியமாகி விட்டது. நான் அதற்காகப் பயன்பட்ட கருவி மட்டுமே ஆவேன்."

கேட்பதற்கு ஞான விளக்கம்போல் இருக்கிறது. அந்த ஞானத்தின் பின்னால் அகங்காரம் மறைந்துள்ளது. ஞானத் திரையின் பின்புறம் அந்த பிராமணர் தன் பாவங்களை மறைத்து விட்டார். இதில் மயங்கி யாரும் அவரைக் கண்டிக்கக்கூட இல்லை. "சரிதான். இந்த பிராமணோத்தர் ஆரம்பத்திலிருந்தே நாம் சாட்சிகள் மட்டும்தான் என்றுதானே உபதேசித்து வந்திருக்கிறார். பசு விஷயத்திற்கும் இது பொருந்துகிறது. பாவம், அவர் எப்படித் தவறு செய்தவர் ஆவார்?" என்று பேசிக் கொண்டார்கள்.

கடவுள் மறுபடியும் மறுநாள் வந்தார். இம்முறை ஏழை பிராமணர் வடிவில் வந்தார். அவர் தோட்டக்கார பிராமணரைப் பாராட்டினார். "ஆஹா, உங்கள் தோட்டம் இவ்வளவு அழகாக இருக்கிறதே! பூக்கள் எவ்வளவு அழகு! யார் இந்தத் தோட்டத்தை உருவாக்கியவர்?"

"யார் உருவாக்கியவரா? நான்தான் ஐயா. இதை ஏற்படுத்தியவன்," என்று கூறியபடி தோட்டக்கார பிராமணர் கடவுளை தன்னுடன் அழைத்துச் சென்று தான் வளர்த்த மரங்களைக் காண்பித்துப் பெருமைப்பட்டுக் கொண்டார்.

கடவுள் அதை நம்பாதவர்போல், "நீங்களா தோட்டம் அமைத்தவர்? உண்மையாகத்தான் சொல்கிறீர்களா?" என்று மீண்டும் – மீண்டும் கேட்டார்.

பிராமணரும் சளைக்கவல்லை. "ஆமாம், நான்தான் இந்தத் தோட்டத்தை உண்டாக்கினேன். வேறு யார் உண்டாக்கியிருக்க முடியும்? இது என்னுடைய தோட்டம், புரிகிறதா?" என்றார்.

கடவுள் விடைபெறுகையில் சொன்னார், "புரிகிறது கசப்பு என்றால் நான். இனிப்பென்றால் நீ. அப்படித்தானே?"

"என்ன உளறுகிறாய்? இனிப்புக்கும் கசப்புக்கும் இங்கே என்ன வேலை?"

ஏழை பிராமணர் விளக்கினார். "நன்றாக யோசியுங்கள். பசு செத்தது. அதற்குக் காரணம் கடவுள் என்றும், நீங்கள் சாட்சி மட்டுமே என்றீர்கள். ஆனால் தோட்டம் பற்றிக் கேட்டால், நீங்கள்தான் ஏற்படுத்தியவர் என்றும் கடவுள் சும்மா பார்த்துக் கொண்டிருந்தார்

என்கிறீர்களே. உங்கள் வாதம் முன்னுக்குப் பின்னாக உள்ளதே,'' என்றார்.

அகங்காரம் தன்னை நியாயப்படுத்தப் பல வகையாகத் தந்திரம் செய்கிறது. ஆனால் புரட்சி எப்பொழுது ஏற்படுகிறது தெரியுமா? உன் சிந்தனை மாற வேண்டும். 'நான் எல்லா விதத்திலும் தவறு உள்ளவன். முழுமையாக நான் தவறானவன். எனது இதுவரையிலான வாழ்க்கையே தவறானது. அதில் ஒளிக்கிரணம் தென்படவில்லை. எங்கும் இருட்டு.' இப்படி சுய அறிவு உதிக்கப் பெற்றால் புரட்சி நிகழ்கிறது. எங்கும் ஒளி சூழ்கிறது.

நீ சீர்திருத்தவாதியாக மாற வேண்டாம். நீ சீர்திருத்த வாதியானால் உத்தமன் என்னும் நிலைவரையே உயர முடியும். நான் உன்னைப் புரட்சி வீரனாக உருவாக்க விரும்புகிறேன். புரட்சி உன்னை புனிதர் என்னும் சிகர நிலைக்கு இட்டுச் செல்லும். நீ காணும் புனிதர்கள் நல்லவர்களே தவிர அதிகப்படியாக ஒன்றுமில்லை. உண்மையான புனிதர் மாபெரும் புரட்சிக்காரராக இருப்பார். இப்புரட்சி சமூக சம்பந்தப்பட்டதன்று. இது தனது கடந்த காலத்துடனான புரட்சி. அவர் கடந்த காலத்திலிருந்து தன்னை விலக்கிக் கொள்கிறார். அந்தக் கடந்த காலத்துடன் தனக்கு இனி ஒரு தொடர்பும் இல்லை என்கிறார். "என் கடந்த காலம் முழுவதுமே தவறானது. இதுவரை உறக்கத்திலிருந்தேன். இப்போது விழித்துக் கொண்டேன்,'' என்கிறார்.

தூக்கநிலை போன்ற கடந்த காலத்தில் எல்லாமே தவறாகத்தான் இருந்தது. கனவில் காணும் சில விஷயங்கள் சரியானவை, சில தவறானவை என்றெல்லாம் இல்லை. கனவில் எல்லாமே கனவுப் பொருள்கள்தான். சிலவற்றைப் பாதுகாத்து நீ எடுத்துவர முடியும் என்பதோ, சில தொலைந்துபோய் விடும் என்பதோ சாத்தியமில்லை. கனவு முழுவதுமே நிஜமில்லைதான்.

அகங்காரம் ஒரு வகையான மூர்ச்சை நிலை. அது ஒரு கனவு நிலை. அது முழுவதுமே தவறானது என்று காண். எதையாவது சேமித்து வைக்க வேண்டும் என்று அகங்காரம் முயற்சி செய்யும். 'என் கண்ணோட்டம் ஓரளவாவது சரிதான். பல விஷயங்கள் நல்லவையாகத்தான் உள்ளன' என்று அகங்காரம் நினைக்கத் தூண்டும். அப்படி ஏதாவது செய்தால் முழு அகங்காரமும் கலையாமல்

தேங்கிவிடும். கனவில் எதையாவது சேமித்து அது உண்மையென நீ நினைத்தால் கனவு அப்படியே நீடிப்பதாகப் பொருள். கனவில் எதையும் நிஜமென நம்புபவன் இன்னும் விழித்தெழவில்லை என்றுதான் பொருள்.

ஆகவேதான் நீ முழுமையாகத் தவறாக உள்ளாய் என்று நான் அடிக்கடி வலியுறுத்திக் கூறுகிறேன். இதைக் கேட்டு நீ வருத்தப்படுகிறாய். 'நான் எப்படி முழுமையாகத் தவறானவன்' என்று நீ என்மீது சில சமயம் கோபம் கொள்ளலாம். ஆனால் நீ அகங்காரப்படுவதற்கு நான் துளியும் இடம் தரவில்லை என்பதே உண்மை. இதற்காக நீ சோகப்பட வேண்டாம். நான் இதனுடன் சேர்த்துச் சொல்லும் இன்னொரு விஷயம் உன் காதில் விழவில்லை போலும். நீ முழுமையாகச் சரியானவன் ஆக முடியும் என்பதையும் நான் சேர்த்தேதான் சொல்கிறேன். கொஞ்சம் சரி, கொஞ்சம் தவறு என்னும் மனநிலையில் நீ இருந்தால் நீ ஒருபொழுதும் முழுமையாகச் சரியானவன் ஆக முடியாது. உன் கடந்த காலத்தையும் இழுத்துக் கொண்டே வருவாய். கிச்சடி போன்ற நிலையில் இருப்பாய். அதில் என்ன சுகம் இருக்கப் போகிறது? மிஞ்சிப் போனவற்றின் கலப்பு மட்டும்தானே அது.

நீ சுத்தமானவன். நீ ஒளியால் நிரம்புவாயாக. ஒளியால் நிரம்புவதற்கு வழி என்னவெனில் நீ. எத்தகையவன் என்று உன்னைப் பற்றி இதுவரை நினைத்துக் கொண்டிருந்தாயோ அவன் அல்ல நீ. வேறு வகையானவன் நீ. உனக்குத் தெரியாத ஒருவன் உனக்குள்ளே மறைந்திருக்கிறான். உனக்குத் தெரியாத தாமரை ஒன்று உனக்குள்ளே மலர இசைவாக உள்ளது. உன் பார்வையை உள்நோக்கித் திருப்பு. அவசரம் வேண்டாம். நிதானி. நிழலில் அமர். வெயிலில் ஓடாதே. ஓய்வாக இரு. அந்த ஓய்வுநிலையில்தான் தியானமும் சமாதியும் இடம் பெறுகின்றன.

**நான்காம் கேள்வி:**

**உண்மையான சமயவாதி எப்பொழுதும் புரட்சி யாளனாக இருப்பான் என்று சொல்கிறீர்கள். ஆனால் புரட்சி செய்பவன் சகஜமானவனாகவும் இருக்க முடியுமா?**

**ஆம்**, சமயவாதி எப்பொழுதும் புரட்சியாளனாக இருப்பான் என்று நிச்சயமாகச் சொல்கிறேன். ஆனால் அனைத்துப் புரட்சியாளர்களும் மத நம்பிக்கை உடையவர்களாய் இருப்பார்களெனச் சொல்வதற்கில்லை. மத நம்பிக்கை இல்லாவிடினும் ஒருவன் புரட்சியாளனாக முடியும். ஆனால் புரட்சியாளன் ஆகாமல் ஒருவன் சமயவாதி ஆக முடியாது.

அப்படியானால், சாதாரணப் புரட்சியாளனுக்கும் சமயப் புரட்சியாளனுக்கும் என்ன வித்தியாசம்? சாதாரணப் புரட்சியாளன் அரசியலிலும் சமூகத்திலும் புரட்சி செய்வான். மத நம்பிக்கை இல்லாததால் அவன் சகஜமாக இருக்க மாட்டான். சமயம் குறித்து அவனுக்குப் பெரிய அளவில் இறுக்கம் இருக்கும். இருபத்து நான்கு மணி நேரமும் கவலையும் கலக்கமுமாகவே இருக்கும்.

சகஜமாக இருப்பது சமயப் புரட்சியாளன் என்பதற்கான அடையாளம். வேண்டுமென்றே அவன் புரட்சி செய்வதில்லை. தனி நபருக்கு எதிராகவும் அவனது புரட்சி அமையாது. தனது வாஸ்தவமான இயல்பில் ஆழ்ந்து உறைவதற்காகத்தான் சமயவாதி புரட்சி செய்கிறான். அவன் தன்னில், தனக்குள், லயிக்க விரும்புகிறான். அந்த முயற்சிக்குத் தடையாக எழுபவற்றை அவன் ஏற்பதில்லை. எதையும் உடைத்தெறிவதில் அவனுக்கு இஷ்டமில்லை. யாரோடும் எதிர்த்து மோதுவதை அவன் விரும்பவில்லை. அவன் ஆசைப்படுவதெல்லாம் தனது சுதந்திரத்தில் யாரும் குறுக்கிடக்கூடாது என்னும் எதிர்பார்ப்பு மட்டுமே. அவன் மற்றவர்களின் சுதந்திரத்திலும் குறுக்கிட முயலமாட்டான்.

சமயப் புரட்சியாளன் பிற்போக்குவாதியாக இருக்க மாட்டான். அவன் யாருக்கும் எதிரியாக இல்லாமல் தன்னையே சார்ந்திருக்கிறான். இதை நீ நினைவில் வை. அரசியல் புரட்சியாளன் தன்னைப் பற்றிய அறியாமையில் இருப்பான். யாரையாவது எதிர்த்தபடி இருப்பான். ஆள்பவரை எதிர்ப்பான். கையில் அதிகாரம் உள்ளவரை எதிர்ப்பான். ஏனெனில் அதிகாரம் தன் கையில்தான் இருக்க வேண்டும் என்றும், மற்றவர்கள் கையிலிருப்பது தவறென்றும் கருதுகிறான்.

அரசியல் புரட்சி அகங்காரத்தின் வெளிப்பாடு. சமயவாதியின் புரட்சி தன்னையே கரைத்துக் கொள்வது. அது இயல்பான முறையில்

வாழ்வதற்கான ஏற்பாடு. சமயவாதி காரணமின்றித் தடைகள் எழுப்புவான் என்று இதற்கு அர்த்தம் கொள்ளலாகாது. இடப்புறமாக நட என்று சொன்னால் அதை எதிர்த்து வலப்புறமாக நடப்பவன் அல்லன் அவன். இடப்புறமாகவோ, வலப்புறமாகவோ, எப்படி நடந்தால் என்ன, எல்லாம் சமமென்பான். இம்மாதிரி விஷயத்தில் தகராறு செய்ய மாட்டான். இதில் போய் சண்டை எதற்கு என்று கேட்பான்.

சமயப் புரட்சியாளன் வாழ்வில் நீ அநாவசியமான வம்புச் சண்டைகளைக் காண முடியாது. அவன் நூற்றுக்கு தொண்ணூற்று ஒன்பது சூழ்நிலைகளில் சமூகத்தின் பக்கமாகவே இருப்பான். இதற்கு அவன் சமூகத்திடம் பயப்படுகிறான் என்று அர்த்தமாகாது. சமூகத்தில் சில விஷயங்கள் சம்பிரதாயத்திற்காக, உபசாரத்திற்காகவே நிலவுவதை அவன் அறிவான். அர்த்தமில்லாத இவற்றை எதிர்த்து ஏன் சண்டைபோட வேண்டும் என்பான். ஆனால் ஆத்மா சம்பந்தமான விஷயங்களில் துளியும் விட்டுக்கொடுக்க மாட்டான். தன்னிடமுள்ள எல்லாவற்றையும் பணயம் வைத்து, ஆத்மா சம்பந்தமான விஷயங்களில் யாரையும் எதிர்த்து நிற்பான்.

வலமோ, இடமோ, சமூகம் சொல்லும் முறையில் நடப்பதில் அவனுக்கு சங்கடம் ஏதுமில்லை. சமூகக் கட்டுப்பாடுகளைப் பின்பற்றுவதிலும் அவனுக்குத் தயக்கமில்லை. ஆனால் ஆத்ம சுதந்திரத்திற்குக் கட்டுப்பாடு ஏற்படுத்தினால் அவன் புரட்சி செய்வான். இவ்விஷயத்தில் விட்டுக் கொடுத்தலுக்கு ஒப்ப மாட்டான். ஆத்மாவை விட்டுக் கொடுத்து வாழ்வதைவிட சாவதற்கே அவன் பிரியப்படுவான்.

சமயவாதியிடம் சகஜத் தன்மை இருக்கும். வேறு ஒருவருடன் நாம் மோதும் போதுதான் போராட்டம் ஏற்படுகிறது. சமயவாதிக்கு யாருடனும் மோதல் இல்லை. அவன் தன்னிலேயே லயித்தவனாக இருக்கிறான். அவன் தனது ஆத்மரசப் பிரவாகத்தில் வாழ விரும்புகிறான். அதில் யாரும் இடையூறு ஏற்படுத்துவது அவனுக்குப் பிடிப்பதில்லை. அதேபோல், அவனும் பிறர் வழியில் குறுக்கிடுவ தில்லை. அவன் அமைதியாகத் தனக்குள்ளேயே மூழ்கியிருப்பதை விரும்புகிறான். இதில் யாராவது குறுக்கிட்டால்தான் அவன் எதிர்த்து நிற்கிறான். தன் விருப்பப்படியே இருக்க அவன் கழுமரம் ஏறவும் தயாராக உள்ளான்.

ஆனால் உன் அந்தராத்மா விஷயத்தில் யாரும் குறுக்கிட மாட்டார்கள் என்பது உனக்கு ஆச்சரியம் தரலாம். பெரும்பான்மை யான மக்கள் மேலோட்டமாக வாழ்பவர்கள். அவர்களுக்கு அந்தராத்மா பற்றி எதுவும் தெரியாது. எனவே உன் ஆத்மலயிப்பில் அவர்கள் குறுக்கிடும் பேச்சே இல்லை.

ஒரு சம்பவம் சொல்கிறேன். ராமகிருஷ்ணரின் இளம்பிராயத்து சம்பவம். அவர் சிறுவயதிலிருந்தே பெரும்பக்தர். பஜனையில் லயித்து மயக்கம் போட்டு விடுவார். அப்போது அவர் பெயர் கதாதர். அவருடைய பெற்றோர் தங்கள் மகன் சராசரியிலிருந்து விலகி வித்தியாசமாக உள்ளானே என்று கவலையடைந்தனர். இந்த விஷயத்தில் எல்லா பெற்றோர்களையும் போல்தான் அவர்களும். கதாதர் நிலைமை கண்டு சிலர் அது வலிப்பு நோய் என்றனர். சிலர் இது மயக்கம் என்றனர். மிகச் சிலர் ஒருவேளை சமாதி நிலையாக இருக்குமென நினைத்தனர். ஒவ்வொருவர் விளக்கமும் வெவ்வேறாக இருந்தது. மற்ற சிறுவர்களுக்கு இயல்பான ஆசைகள் கங்காதரிடம் தென்படவில்லை. அவர் மற்ற சிறுவர்களுடன் சேர்ந்து விளையாட வில்லை. படிப்பதில், பள்ளிக்கூடம் செல்வதில் நாட்டம் கொள்ள வில்லை. இரண்டாம் வகுப்புவரைதான் படித்தார். காட்டுப் பக்கம் போய்விடுவார். குளம்—குட்டை—நதிக்கரையில் உட்கார்ந்து விடுவார்.

ஒருமுறை அவர் குளத்தங்கரையில் உட்கார்ந்திருந்தபோது கொக்குக் கூட்டம் ஒன்று ஓர் ஒழுங்குமுறையுடன் பறப்பதைக் கண்டு மெய்ம்மறந்தார். உடனே அவருக்கு சமாதிநிலை ஏற்பட்டுவிட்டது. கருமேகங்கள் நடுவில் பறந்த வெண்ணிறக் கொக்குகளின் வரிசை. ராமகிருஷ்ணருக்கு வேறோர் உலகு நினைவிற்கு வந்திருக்கும். ராமகிருஷ்ணரின் ஆத்ம ஹம்சமும் சேர்ந்து பறந்தது – ஆன்மிக மானசரோவரத்தை நோக்கி. உடலை பூமியிலேயே நழுவ விட்டார் போலிருந்தது. ஆன்மிக உலகில் பறந்தார். மணிக்கணக்கில் மயக்கமாக இருந்தார்.

மக்கள் இது கண்டு, "இவனுக்குத் திருமணம் செய்து விடுங்கள். எல்லாம் சரியாகிவிடும்," என்று உபாயம் தெரிவித்தனர். மக்களுக்கு இந்த ஓர் உபாயம்தான் தெரியும். ஒருவன் பிரச்சினைக்குரியவனாகத் தெரிந்தால் "கல்யாணம் பண்ணி விடுங்கள்" என்று சொல்வதே

மக்களுக்கு வழக்கமாகி விட்டது. எல்லா நோய்களுக்கும் ஒரே மருந்து கால்கட்டுப் போட்டுவிடுவது. மக்கள் சொன்னார்கள்: இவன் எந்தப் பொறுப்பும் இல்லாமல் உள்ளான். பள்ளிக்கூடம் போவதில்லை. அதற்குப் பதிலாக வேலைக்கும் போவதில்லை. பாட்டும், பஜனையும், சாமியார்கள் சிநேகமும்தான் எப்பொழுதும். இப்போதிருந்தே கெட்டுப் போகிறான் கல்யாணம் செய்துவைத்து ஆளைக் கட்டிப் போடுங்கள்.

கதாதரின் பெற்றோருக்கு சந்தேகம்தான் ஏற்பட்டது. கதாதரா திருமணம் செய்து கொள்வான்? திருமண வாழ்க்கையில் இவனுக்கு நாட்டமுள்ளதுபோல் தெரியவில்லையே என்று பெற்றோர் யோசித்தனர்.

தந்தை தயங்கியபடியே மகனிடம், "உனக்குத் திருமணம் செய்து வைக்கவா?" என்று கேட்டார். கதாதர், "நான் தயார்," என்றதும் தந்தை திடுக்கிட்டார். எதிர்பாராத பதிலாக இருக்கிறதே என்று அவர் குழம்பினார். மகன் திருமணம் செய்துகொள்ள மறுப்பான் என்றல்லவா அவர் நினைத்திருந்தார். மறுத்திருந்தாலும் அதிர்ச்சி ஏற்பட்டிருக்கும் தான். மகனைத் தன் விருப்பத்திற்கு இணங்கவைக்க முயன்றிருப்பார். கதாதர் மேலும், "யாரைக் கல்யாணம் செய்துகொள்ளச் சொல்கிறீர்கள்?" என்றும் கேட்டார்!

சீக்கிரமே திருமண முயற்சி தொடங்கியது. பெண்ணும் தேடி முடிவு செய்தார்கள். கதாதர் தன்னை மாப்பிள்ளைபோல் நன்றாக அலங்கரித்துக் கொண்டு பெண் பார்க்கப் புறப்பட்டார். மிகவும் சந்தோஷமாகத் தெரிந்தார். தாயார் துணி பர்சில் பதினோரு ரூபாய் வைத்துக் கொடுத்தார். கதாதர் அதை அடிக்கடித் திறந்து எண்ணிப் பார்த்து மகிழ்ந்தார். சிறு வயது. அப்போது அவருக்குப் பதினோரு வயதுக்கு மேலிராது.

பெண் பார்க்கும் நிகழ்ச்சியில் உணவுகளைப் பறிமாறப் பெண் வந்தாள். பெயர் சாரதா. ஏழு வயதுப் பிராயத்தினள். உணவை அவள் கொண்டு வந்து வைத்ததும் கதாதர் தன்னிடமிருந்த பதினோரு ரூபாயை அவள் பாதங்களில் வைத்துப் பாதங்களைத் தொட்டு வணங்கினார்!

அதிர்ந்துபோய் தந்தை கேட்டார், "உனக்கு அறிவு மழுங்கிவிட்டதா? என்ன காரியம் செய்தாய் நீ? திருமணத்திற்கு சம்மதம் என்றல்லவா முதலில் சொன்னாய்."

"இப்பெண் அன்னையின் சொரூபம்போல் தோன்றுகிறாள். இவள் என் தாய். ஆனாலும் இவளை மணந்து கொள்கிறேன்."

திருமணம் நடைபெற்றது. ஆனால் சாரதா தாயார் ஸ்தானத்திலேயே நீடித்தாள். இது சகஜமான நிலை. இதில் புரட்சி எதுவும் இல்லை. திருமணம் செய்து கொள்ள மறுக்கவில்லை. திருமணமும் செய்து கொண்டார். தாய் தந்தை மனம் மகிழச் செய்தார். கால்கட்டுப் போடுகிறீர்களா? நல்லது. போடுங்கள். கால்கட்டின் பாதம் தொட்டு வணங்கித் தாயாராக ஆக்கிக் கொண்டாகிவிட்டது. சிறையைக் கோயிலாக மாற்றியாகிவிட்டது. இத்தகைய கட்டுப்பாடே முக்திக்கு வழியாகி விட்டது.

சமயவாதி காரணமில்லாமல் பிரச்சினைகளில் சிக்கிக்கொள்ள மாட்டான். அரசியல்வாதி வெறிபிடித்தவனாக இருக்கிறான். அரசியலை நரம்புக் கோளாறுடன் ஒப்பிடலாம். அது ஒருவிதமான வெறி. அரசியல்வாதி சண்டையைத் தேடி அலைகிறான். சண்டைக்கான வாய்ப்பு இல்லாவிடில் இப்போது என்ன செய்வது என்று தவிக்கிறான்.

இந்தியாவில் நெருக்கடி நிலைமை பிரகடனப்படுத்தப் பட்டபோது அரசியல்வாதிகள் குழம்பிப்போய் விட்டார்கள். சிலர் சிறையில் தள்ளப்பட்டார்கள். அதனால்தான் தங்களால் ஒன்று செய்ய முடியாமல் போனது என்று தங்களை சமாதானப்படுத்திக் கொண்டார்கள். சிறைக்கு வெளியில் இருந்த அரசியல்வாதிகள் புழுக்கமாக உணர்ந்தார்கள். தமக்குள்ளேயே தடுமாறினார்கள். வேலை நிறுத்தம் செய்ய முடியவில்லை. கோஷம்போட முடியவில்லை. கொடியேற்றிப் பாட முடியவில்லை. வாழ்க்கை வீணாகிவிட்டதாகத் தோன்றியது. சூழ்நிலை மோசமாகத் தெரிந்தது. எதுவும் செய்ய முடியவில்லை. உபத்திரவம், கலவரம் உண்டாக்க முடியவில்லை. இந்த இரண்டும்தானே அவர்கள் வயிற்றை நிரப்புகிறது.

அரசியல்வாதி உபத்திரவம் செய்வதில்தான் சுவை காண்கிறான். உபத்திரவமூட்ட அவன் ஏதாவது சாக்கு, காரணம் தேடுகிறான்.

அழகான காரணங்கள் சொல்கிறான். வறுமையை விரட்ட, சுதந்திரம் காக்க, குடியரசை வலுப்படுத்த இப்படி ஏதாவது காரணம் போராட்டம் நடத்தத் தேடுகிறாள். போராட்டம் நடத்தாமல் அவனால் இருக்க முடியாது. அவன் அமைதியின்றித் தவிக்கிறான். இந்தத் தவிப்பு நீங்க அவனுக்கு வடிகால் தேவைப்படுகிறது.

சமயவாதி சகஜமான சாந்தி நிலையில் விளங்குவான். நூற்றுக்குத் தொண்ணூற்றொன்பது சந்தர்ப்பங்களில் அவன் எதிர்ப்புக் காட்ட மாட்டான். ஒரே ஒரு சந்தர்ப்பத்தில்தான் அவன் 'முடியாது' என்று கூறுவான்; கட்டாயம் கூறுவான். 'முடியாது' என்ற அவன் அறிவிப்பு எதையும் சார்ந்திருக்காது; எந்த நிபந்தனைக்கும் உட்பட்டிராது; அதை 'முடியும்' என மாற்ற ஓர் உபாயமும் கிடையாது.

நீ விஷம் கொடுத்து சாக்ரடீசைக் கொல்லலாம். நீ இயேசுநாதரைச் சிலுவையில் தொங்க விடலாம். நீ மன்சூரின் கழுத்தை வெட்டலாம். ஆனால் அத்தகையவன் குறிப்பிட்ட தருணத்தில் 'முடியாது' என்று சொல்லும்போது அந்த அறிவிப்பு நிரந்தரமான தாகும். அதை நீ 'சரி' என்று மாற்ற முடியாது. ஏனெனில் அவன் ஆத்மாவை இழக்க சம்மதப்படாத தருணத்தில் அல்லவா 'முடியாது' என்கிறான். அவன் இழப்பதற்கு அவனிடம் வேறொன்றும் இல்லை. மற்ற எல்லாம் அவனுக்கு விளையாட்டுதான்.

**ஐந்தாம் கேள்வி:**

**நீங்கள் எப்பொழுதும் கடவுட்பிரசாதம் வழங்கி வருகிறீர்கள். கடவுளின் கருணை மாரியாகப் பொழிகிறது. ஆனால் நாங்கள் பின்தங்கியே வருகிறோம். நாங்கள் எப்படி அருட்பிரசாதம் பெற உரியவர்களாவோம்?**

முல்லா நஸ்ருத்தீனிடம் உங்கள் வெற்றியின் ரகசியமென்ன என்று ஒருவர் கேட்டார். "சரியாக முடிவெடுத்துச் செயல்படுதல்," என்று முல்லா பதிலளித்தார். "ஆனால் சரியாக முடிவெடுப்பது எப்படி?" என் அடுத்த கேள்வி எழுந்தது. "அனுபவங்களின் அடிப்படையில்," என்றார் முல்லா. அந்த ஆள் விடவில்லை. "அனுபவங்கள் எப்படிக் கிடைக்கின்றன?" முல்லாவும் சளைக்கவில்லை. "தவறான முடிவு எடுத்துச் செயல்படுவதால்," என்றார்!

'சரியான முடிவெடுத்த பிறகு செயல்படலாம் என்று எதிர்பார்த்துக் காத்திராதே. சரியா—தப்பா என்பது பற்றித் தற்சமயம் கவலைப்படுவதை விட்டொழி. முடிவெடுத்த பிறகே செயல்படுவது என்றால் முடிவெடுக்கவே முடியாது போய்விடும். எதையாவது செய்ய ஆரம்பி. அதிலிருந்து ஒரு முடிவு பிறக்கும்.

என் உரையைக் கேட்டுக் கொண்டே சும்மா இருந்து விடாதே. உனக்கு எது பிடித்துள்ளதோ அதை சீக்கிரமாகச் செய். அதை வாழ்க்கையில் அமல்படுத்து. உனக்குக் கடலளவு நான் எதுவும் கொடுத்தாலும் எப்பயனும் இல்லை. ஒரு துளியை நீ கிரகித்து உபயோகித்தால் உன் செயல் வெற்றி பெறும். அந்த ஒரு துளியே உனக்கு சமுத்திரமாகி விடும். உபதேசம் கேட்டுக் கொண்டே சும்மா இருந்து விடாதே. கேட்போம், புரிந்து கொள்வோம், யோசிப்போம், விசாரிப்போம், ஒப்பிடுவோம், பிறகு முடிவெடுப்போம், அதை அனுபவத்திற்குக் கொணர்வோம் — இப்படியெல்லாம் நினைத்தால் நீ பின்தங்கி வாய்ப்பை இழந்து விடுவாய். மழை பெய்தும் உன்னை நனைக்காது, நிறைக்காது. நீ காலிக் குடமாகவே இருந்து விடுவாய். மேகங்கள் திரண்டு வந்தும் வெற்று வானம்போல் பயனற்ற நிலை ஏற்படும்.

சும்மாயிராதே. ஏதாவது செய். எதாவது கொஞ்சமாவது உனக்குப் பிடித்துப் போகட்டும். உன் புத்தி முதலில் தர்க்கப்படி உன் செயலை ஆமோதிக்காவிடில் பரவாயில்லை. முதல் கட்டமாக உனக்குப் பிடித்திருந்தால் போதும். அதன் விளைவாக உன் மனத்தில் மெல்லோசை பிறக்கட்டும்; குறுகுறுப்பு தோன்றட்டும்; நெகிழ்ச்சி ஏற்படட்டும். அச்செயலை நடத்து. அது சரியானதாக இருக்க வேண்டும் என்ற கட்டாயம் கிடையாது. அதனால் லாபம் விளையும் என்றே கூறுகிறேன். அச்செயல் சரியானதுதான் என்று தெரிய வந்தால் நீ அதை மேற்கொண்டு தொடரலாம். தவறெனத் தெரிய வந்தால் கைவிட்டு விடலாம். மறுபடியும் அவ்வழியில் செல்வதைத் தவிர்க்கலாம். எச்சூழ்நிலையாயினும் செயல் புரிவதே முடிவெடுக்க உதவும்.

நான் சாட்சி மனப்பான்மை பற்றிச் சொன்னது இங்கும் பொருந்தும். நான் சொன்னது — சாட்சியாகிவிடு. வாழ்க்கையை

கொஞ்சமாவது சாட்சி உணர்வை நோக்கிச் செல்லவிடு. ஜன்னலை சிறிதாவது திறந்துவை.

நீ ஏதாவது செய்தபடிதான் உள்ளாய். நீ எதுவும் செய்யவில்லை என்று சொல்ல முடியாது. ஆனால் செயலில் தவறிழைக்கிறாய். உதாரணமாக, நீ கோபமாக உள்ளாய். என் உரையைக் கேட்க வருகிறாய். கோபத்தை விரட்ட என் உரையில் ஏதாவது குறிப்பு கிடைக்கிறதா என்பதிலேயே கவனம் செலுத்துகிறாய். மீதி எதையும் நீ உள்வாங்குவதில்லை. அல்லது, உன் மனத்தில் அமைதி இல்லை என்றால் என் பேச்சில் அமைதி பெறுவது எப்படி என்பதற்கு ஏதாவது துப்பு கிடைக்கிறதா என்பதையே கவனிப்பாய். என் பேச்சின் மற்ற எல்லா விஷயங்களும் உன்னால் கேட்கப்படாமல் வீணாகிவிடும். முழுப் பேச்சையும் கவனமாகக் கேட்டால் நீ தேடுகின்ற கேள்விகளுக்கு விடை கிடைத்துவிடும்.

ஆனால் பேச்சை உனக்கு வசதியான அர்த்தத்தில் எடுத்துக் கொண்டால் அதன் உண்மையான அர்த்தம் சேதப்பட்டு விடும். நீ சாட்சியாக மாறிவிடு என்று நான் சொல்கிறேன். ஆனால் உன் அடிப்படையான ஆர்வம் சாட்சி ஆவதில் இல்லை. கோப குணத்திலிருந்து விடுதலை பெற்றால் போதுமென்று என் பேச்சைக் கவனிக்கிறாய். ஒருவேளை இதனால் கோபத்தை அடக்க முடிந்தாலும் முக்கிய விஷயமான சாட்சி ஆவது உன் கவனத்திலிருந்து நழுவி விடுகிறது.

ஒருவர் என்னைச் சந்தித்தபோது சொன்னார்: "நேற்று இரவு சர்க்கஸ் நிகழ்ச்சியின்போது எல்லோரும் ஓட்டம்பிடித்தனர். கூண்டிலிருந்து தப்பித்து ஒரு சிங்கம் வெளியே வந்து விட்டதுதான் காரணம். ஒருத்தன் பாக்கியில்லாம் ஓடி விட்டார்கள். ஆனால் ஒரு துறவி மட்டும் சிங்கத்தைப் பார்த்தபடி தைரியமாக அங்கேயே இருந்தார். துளிக்கூட பயப்படவில்லை!"

நான் கேட்டேன், "அப்படியா! அவர் என்ன செய்தார்?"

"சிங்கத்தின் கூண்டு காலியாக இருந்ததால் துறவி அதற்குள் பாய்ந்து சென்று உள்புறமாகக் கதவைப் பூட்டிக்கொண்டு உட்கார்ந்து விட்டார்."

நீ தப்பித்து ஓடினாலும் சரி, கூண்டிற்குள் சென்று உள்ளே பூட்டிக் கொண்டாலும் சரி, முரண்பாடாகத் தெரியும் இவை உண்மையில் முரண்பட்டிருக்கவில்லை. இரண்டு வகையினரில் துறவியே அதிகத் திறமைசாலியாகத் தெரிகிறார். ஏனெனில் ஒரு விஷயம் நிச்சயம். சிங்கம் வேறு எங்கு வேண்டுமானாலும் போகுமே தவிர கூண்டிற்குத் திரும்பாது. தானாக வரவே வராது. துறவி விஷயத்தில் எல்லா இடத்திலும் ஆபத்து உண்டு. கூண்டில் மட்டுமே அபாயம் இல்லை.

ஆனால் நான் உன்னை அத்தகைய சந்நியாசியாக ஆக்க விரும்பவில்லை. மக்கள் உலகத்திலிருந்து வெளியே ஓடி கூண்டுகளில் அடைபடுகின்றனர் கோயில், மசூதி, குருத்துவாரா முதலியவை கூண்டுகளே. அங்கே கம்பிகளின் பின்னால் உட்கார்ந்து கொள்கின்றனர். அங்கே சிங்கம் போன்றவை வருவதில்லை. ஆனால் அது ஒருவகை தற்காப்புதான். அங்கே புரட்சி கிடையாது; புறமுதுகு காட்டுதல்தான் உள்ளது.

நீ என் உபதேச உரையைச் செவிமடுக்கும்போது இசைக் கலைஞர் பாடுவதைக் கவனிப்பதுபோல் கேள்; கவிஞனது கவிதையைக் கேட்பதுபோல் கேள். பறவைகளின் ஒலியை, காற்று வீச்சால் மரங்கள் எழுப்பும் ஓசையை, பாயும் நீரின் முணுமுணுப்பை, மழைக் காலத்து இடி முழக்கத்தைக் கேட்பதுபோல் கேள். என் பேச்சைக் கேட்கும்போது அதில் உன் லாபநஷ்டக் கணக்கைச் சேர்க்காதே. ஆனந்தம் பெறுவதற்காகக் கேள். பேச்சின் ரஸத்தில் ஆழ்ந்துவிடு. கடையில் பொருள் வாங்கும் வாடிக்கைக்காரன்போல் இங்கே வராதே. அமர்ந்து பேச்சைக் கேட்டபடியே இதில் எதையெல்லாம் எடுத்துக் கொள்வது, என்னவெல்லாம் செய்வது, என்னவெல்லாம் செய்யக்கூடாது என்று மனத்தில் கணக்கப் போட்டுக் கொண்டிராதே. வெறும் ஆனந்த உணர்வு கொண்டு என் பிரசங்கத்தைக் கேள்.

ஆத்ம சுகத்திற்காகத்தான் துளசிதாசர் ராமாயணம் பாடியதாக 'ஸ்வாந்த: ஸுகாய துளசி ரகுநாத காதா' என்னும் வரியில் தெரிவிக்கிறார். நீயும் அத்தகைய சுகம் பெறும் நோக்கத்துடன் என் உரை கேள். அப்போது உரையில் எந்தெந்தப் பகுதிகள் உன்னை நெகிழச் செய்கின்றனவோ அவற்றில் கூடுதலாக ஆழ்ந்துவிடு. என்

பாட்டில் எந்த வரிகள் உனக்குப் பிடித்துள்ளனவோ அவற்றை மெல்லிய குரலில் பாடு. அதை உனக்கு மந்திரமாக ஆக்கிக்கொள். வாழ்க்கையில் பெரிதாக ஏதும் ஏற்பாடு செய்யாமல் எவ்வளவோ சம்பவங்கள் நிகழ்கின்றன என்பதைச் சிறிது சிறிதாக அறிந்து கொள்வாய்.

**காற்று எங்கிருந்தோ எழும்பி வீசியது**
**மேலோட்டமாகவே கடந்து சென்றது**
**பாதை அப்படியே தூங்கி வழிகிறது**
**சாலையோர மரங்கள் திடுக்கிடவில்லை**
**கிளைகள் துளியும் குலுங்கிடவில்லை**
**இலை ஒன்றுகூட வீழ்ந்திடவில்லை**
**காற்றின் ஈரப்பதம் துளியும்கூட**
**எதன் மீதும் படிந்திடவில்லை**

நான் உன் அக்கம் பக்கமாக எழுப்பும் காற்றை சுவீகரிப்ப தற்காக நீ கொஞ்சம் உயர்ந்து நில். நீ தாழ்ந்தே நின்றாய். இதனால் ஈரத்துளி உன்மீது பட்டுக் கசியாது. நீ தீண்டப்படாதவனாக இருந்து விடுவாய்.

**அடர்ந்த காட்டில்**
**நிமிர்ந்து நின்று**
**தம் உயரத்தில் லயித்துப்போன**
**நெட்டை தேவதாரு மரங்கள்**
**விழித்துச் சிலிர்த்தன**
**காற்றினூடே சலசலவென்று**
**ஒலியும் எழுப்பின**

கொஞ்சம் உயர்ந்த நில். நிமிர்ந்து நில். நான் கொண்டு வந்துள்ள செய்தியைக் கேட்க தேவதாருபோல் எழும்பி நில். தலையைத் தூக்கு. நேராக நில்.

**பெயர் தெரியாத ஒருவரின் குரல்**
**காற்றுடன் சேர்ந்து பாடியது**

நீ என்னுடன் சேர்ந்து மென்மையாகப் பாடு. அந்த யாரோ ஒருவரின் மென்குரல் ஒலி உனக்குள் எதிரொலி எழுப்பட்டும். அப்பொழுது உனக்கு ஒரு ஜன்னலைத் திறந்து விட்டதுபோல் தோன்றும். நீ இதுவரை ஏதோ எண்ணம் என நினைத்திருந்தது தியான

விஷயமாக மாறும். நீ எதை சித்தாந்தம் அல்லது சாஸ்திரம் மட்டுமே என நினைத்தாயோ அது சத்தியமாக மாறும்.

**எழுந்து நான் சன்னலைத் திறந்தேன்**
**மீண்டும் ஒருமுறை திடுக்கிட்டேன்**
**முதலில் உணர்ந்த நிசப்தம் இல்லை**
**சன்னலின் வெளியே மென்மையாகக்**
**கடவுள் பாடிக்கொண்டிருந்தார்!**

**காற்று எழும்பி வீசியது**
**மேலோட்டமாகக் கடந்து சென்றது**
**பாதை அப்படியே தூங்கி வழிந்தது**
**பாதையைப்போல் நீயும் உறங்கிவிடாதே**
**கற்களைப்போலத் தூக்கத்தில் கிடக்காதே**

எனவே கொஞ்சமாவது எழுந்திரு. கொஞ்சம் கண்விழி. கொஞ்சம் நிமிர். உன் அற்பக் கவலைகளைக் கைவிடு. என்னருகே அமர்ந்து உன் கவலைகளின் கணக்கைப் போட்டுக் கொண்டிராதே. என் பேச்சைப் பருகு. மலரின் அருகே மணம் நுகர்பவன்போல் என்னருகில் இரு.

என் உரையில் எது – எது உபயோகப்படும் அம்சங்கள் என்று அலசாதே. பயனுடைமைக்கும் கடவுளுக்கும் சம்பந்தமில்லை. உலக நோக்கில் கடவுளைவிட அதிகம் உபயோகமற்ற வேறு பொருள் அல்லதுத நபர் கிடையாது! அவரைக் கடைத் தெருவில் விற்க முடியாது. அவர் ஒன்றிற்கும் பிரயோஜனம் இல்லாதவர்! நீ என் உரையைப் பயன் கருதிக் கேட்டால் தோல்விதான் அடைவாய்.

நான் வழக்கமான ஆசிரியர் இல்லை. உன் அன்றாட வாழ்க்கைக்குப் பயன்படுகின்ற மாதிரியான விஷயங்கள் எதுவும் கற்றுத் தருபவனில்லை. நீ ஒன்றை தரிசிக்கச் செய்வதற்கு உதவ விரும்புகிறேன். தினப்படிக்கு இதனால் உபயோகமில்லை எனினும் நீ சச்சிதானந்த உணர்வால் நிரம்பி நிற்பாய். ஆனந்தத்தில் மூழ்குவாய். இனிய மயக்கத்தை உணர்வாய். அதற்கேற்ற காற்றை இங்கே நான் பரப்புகிறேன். விளைவு உன்னைப் பொறுத்து அமையும். நீ விரும்பினால் பாதையில் காணப்படும் கல்போல் கிடக்கலாம். காற்று வரும், போகும். நீ தீண்டப்படாமல் இருந்து விடுவாய். காதில் அதன் ஒலி விழாது. அல்லது சாலையோரச் செடிகள்போல் நீ இருந்து

விடலாம். அவற்றின் உச்சியை ஆகாயத்துக் காற்று தொடாமலே நீங்கிவிடும். ஒரு பனித்துளிகூட படாது. காற்று வந்தது போனதுகூட நீ அறியமாட்டாய்.

புத்தர் வந்தார். எத்தனை பேருக்குத் தெரிந்து பாதித்தது? ஆகாயத்தில் நிற்பது போலிருந்த, தமக்குள் லயித்துப்போன, சில தேவதாரு மரங்களின் உச்சியை மட்டுமே புத்தரெனும் காற்று ஸ்பரிசித்தது. கிருஷ்ணர் வந்தார். எத்தனை பேருக்குத் தெரியும்? அவரது புல்லாங்குழலின் ஒலி எல்லோரையும் சென்று அடைய வில்லை. அஷ்டாவக்ரர் உபதேசம் செய்தார். ஜனகர் போன்ற யாரோதான் கேட்டனர். தேவதாரு மரம்போல் உயரமானவர்கள் அவர்கள். நீயும் கொஞ்சம் நிமிர்ந்து நில்.

என் பேச்சைக் கேட்பதால் என்ன பிரயோஜனம் என்று யோசிக்காமல் கேள். லாபம் கருதிக் கேட்பவன் எப்பயனும் பெறாமல் தோல்வியடைவான். துளசிதாசர் மெய்ம்மறந்து ராமனைத் துதித்தது போல், என் பேச்சை, பயன் ஏதும் எதிர்பாராமல், ஆனந்தமாகக் கேட்பவன் முழுப்பலனை அடைவான். அவனது வாழ்க்கையில் படிப்படியாகப் புரட்சி ஏற்படத் தொடங்கி விடும்.

**கடைசிக்கேள்வி:**

**எனக்குப் பெண் மனசு. என்னால் துளிக்கூட உறுதியாக இருக்க முடியவில்லை. ஆன்மிக உலகில் தீர்மானமாக இருப்பது அவசியமா?**

**இ**ரும்பு மனம் தேவையில்லை. பக்திக்கு சமர்ப்பண உணர்வு போதுமானது. உன் உள்ளத்தின் நிலையை அடையாளம் கண்டுகொள். அதன் மீது எதையும் சுமத்துவது அவசியமில்லை. உன் உள்ளத்தின் இயல்பு எப்படி இருந்தாலும் அதன் மூலமே நீ கடவுளை அடைய முடியும்.

பெண்மனதாயினும், ஆண்மனதாயினும் யாரும் கடவுளை அடைய முடியும். எந்நிலையில் நீ உள்ளாயோ அங்கிருந்தே கடவுளை அடைய வழி உண்டு. உன்னை மாற்றிக் கொள்ளும் சிரமங்களில் அகப்பட்டுக் கொள்ளாதே. ஏனெனில் நீ அப்படி மாறமுடியாது. உன் மனம் உணர்ச்சிவசப் படக்கூடியது என்றால் எவ்வளவு முயன்றாலும்

அதில் உறுதியை நிரப்ப முடியாது. உன் மனம் இதயத்தை அதிகம் சார்ந்தது எனில் நீ புத்தியால் அதை நிரப்ப முடியாது. அதற்கான தேவையுமில்லை. மனத்தின் நிலை என்ன என்னும் சிக்கலில் விழாதே. தேவையற்ற முயற்சிகளால் மனத்தை மாற்றிக் கொள்ள முயன்றால், நீ விரும்பியதை அடைய முடியாது. இருப்பதையும் இழந்து விடுவாய்.

ரோஜாப்பூ கடவுளின் பாதங்களில் ரோஜாப்பூவாகவே சமர்ப்பிக்கப்படும். தாமரை விஷயமும் அவ்வாறே. நீ எப்படி உள்ளாயோ அப்படியே ஏற்றுக் கொள்ளப்படுவாய். ஏனெனில் நீ எப்படி உள்ளாயோ அப்படித்தான் உன்னைக் கடவுள் படைத்தார்; அப்படியேதான் அவர் உன்னை விரும்புகிறார். நீ வேறுவிதமாக மாற முயன்றால் விகாரமாகி விடுவாய். அப்படிச் சேதமாகிச் சிதைந்து விடாதே.

நீ சொல்லமாட்டாய்தான்
ஆனாலும் நான் கேட்டுவிடுவேன்
விடியலின் தூய முதல் கிரணம்
சொல்லிவிடும் எனக்கு அச்செய்தியை
கொட்டும் அருவி குழந்தையைப்போலதைத்
தன்னை அறியாமல் திருப்பிச் சொல்லும்

நத்தை ஒன்று ஈரமண்ணில்
அடையாளமிடும் மெல்ல-மெல்ல
இலைகளின் சலசல ஒலி
பரப்பும் அதை இங்கும் அங்கும்
பறவையின் சுறீர் கூக்குரல்
வானில் பாய்ந்து அதைத் தொங்கவிடும்

திடீரென வெளிப்படும் காலைப்பொழுது
அதனை அனைவரும் அறியச் செய்யும்

நீ சொல்லமாட்டாய்தான்
ஆனாலும் நான் கேட்டுவிடுவேன்
அதற்கான நம்பிக்கை என்னிடம் உண்டு
எனவே நான் தளர்ந்துவிட மாட்டேன்

செய்தியை நான் கேட்டுவிடுவேன்
என்பதற்கு சாட்சியம் அல்லது நிரூபணம்

வேறு என்ன நான் தரமுடியும்?
இப்போதிருந்து உன் கரத்தை
'அவன்' ஒருவன்தான் பிடிக்க முடியும்

பிரமையால் சுருங்கிய உறுப்புகளை
மென்மையாகக் குதூகலிக்கும்
அவனது ஒளியின் கிரணமே ஸ்பரிசிக்கும்

உனக்குத் தேவையான ரகசியங்களை
அவன் ஒருவன்தான் சொல்ல முடியும்

உனக்கு எப்படி எதை விளக்குகிறானோ
நீ அதே அளவில் அப்படிப் புரிந்துகொள்வாய்

உனக்குக் கிடைத்த அந்த வரம் தரும் கை
தனக்குப் பிடித்த லட்சியத்தின்படி
உன்னை எப்பக்கம் திருப்புகிறதோ
அப்பக்கமே உனது பாதையும் திரும்பி
அவன் வரையிலும் கொண்டுசெல்லும்

எத்துணை அளவு அவன் உன்னை ஏற்பானோ
அவ்வளவே நீயும் உனக்குப் பொருந்துவாய்

ஓ எனது ஆத்மாவே!
மணமகளாய் நீ வரிக்கப்பட்டாய்
மகாசூன்ய பதியுடன் சேர்ந்து
ஹோம அக்னியை வலம்வந்தாய்
சமர்ப்பணம் என்பதன் அர்த்தம் இதுவே

நீ ஆணோ, பெண்ணோ, உனக்குப் பெண் மனசு என்றால் அது சுபமானது. மங்களமானது. ஆண் மனத்திற்கு அடிப்படையில் மதிப்புக் கிடையாது. அதன் தரம் பெண் மனத்திற்குப் பிறகுதான்.

கடவுள் மன விஷயத்தில் பெண் மனது. ஆண் மனது என்ற இரண்டைத்தான் படைத்துள்ளார். ஆண் மனம் சங்கல்பம் (உறுதியான முடிவு எடுக்கும் மனநிலை என்றால், பெண் மனம் சமர்ப்பணமாகும் மனநிலை உடையது. நீ எந்த நிலையில் உள்ளாயோ அங்கிருந்தே முன்னேறிச் செல். நீ எப்படி உள்ளாயோ அவ்வாறே மேலே நட. நீ உள்ள விதமாகவே கடவுள் உன்னை ஏற்றுக் கொள்வார்.

ஹரி ஓம் தத்ஸத்

அஷ்டாவக்ரர் மொழிகிறார்

அவினாஸிநமாத்மானமேகம் விக்ஞாய தத்தவத: |
தவாத்மக்ஞஸ்ய தீரஸ்ய கதமர்தார்ஜனே ரதி: || 46

ஆத்மா அக்ஞானாதஹோ ப்ரீதிர்விஷய ப்ரமகோசரே |
ஸுக்தேரக்ஞானதோ லோபோ யதா ரஜதவிப்ரமே || 47

விஸ்வம் ஸ்புரதி யத்ரேதம் தரங்க இவ ஸாகரே |
ஸோஅஹமஸ்மீதி விக்ஞாய கிம் தீன இவ தாவஸி || 48

ஸ்ருத்வாஅபி ஸுத்த சைதன்யமாத்மானமதிசுந்தரம் |
உபஸ்தேஅத்யந்தஸம்ஸக்தோ மாலின்யமதிகச்சதி || 49

ஸர்வபூதேஷு சாத்மானம் ஸர்வபூதானி சாத்மனி |
முனேஜனித ஆச்சர்ய மமத்வமனுவர்தந்தே || 50

ஆஸ்தித: பரமாத்வைதம் மோட்சார்த்தே அபி வ்யவஸ்தித: |
ஆச்சர்யம் காமவசகோ விகல: கேலிஷிக்ஷயா || 51

உத்பூதம் ஞானதுர்மித்ரபவதார்யாதீ துர்பல: |
ஆச்சர்யம் காமமாகாக்ஷேத் காலமந்தமனுஸ்ரித: || 52

குரு என்பவர் ஆசிரியர் மட்டுமல்லவர், நெறிப்படுத்துபவரு மாவார், அவர் வாழ்க்கைக்கு ஒரு கட்டுப்பாடான வழி காண்பிக்கிறார். சொற்களை மட்டும் அறிமுகப்படுத்துபவர் ஆசிரியர். சுயக் கட்டுப்பாட்டையும் கற்றுத் தருபவர், நெறியாளர், குரு.

அஷ்டாவக்கிரர் சொற்களை மட்டும் வெளிப்படுத்தி திருப்தி பெறவில்லை. சொற்களால் உண்டாகக்கூடிய அபாயத்தையும் சுட்டிக் காட்டுகிறார். குருவின் வார்த்தைகளைக் கேட்பதால் மட்டுமே நீ பரவசமடைந்து விஷயத்தை முழுமையாகப் புரிந்து கொண்டு

விட்டதாக நினைக்கக்கூடும். வார்த்தைகள் கூறும் சத்தியத்தை உணர்வதற்குப் பதிலாக நீ வார்த்தைகளையே சத்தியமெனக் கருதக்கூடும்.

சத்குருவின் வாயிலிருந்து புறப்படும் சொற்களில் வலு இருக்கும், சக்தி இருக்கும். அந்த வலுவினாலும் சக்தியினாலும் நீ சூழப்பட்டுப் பாதிக்கப்படலாம்; மனமயக்கம் கொள்ளலாம். நீ ஞானியாகாமலே ஞானியாகி விட்டதாக நினைத்து விடுவாய். இது முதல் அபாயம்.

நீ கேட்கும் சொற்கள் பொருத்தமானவையாகத்தான் தோன்றுகின்றன. தர்க்கப்படியும் சரியாகத் தெரிகின்றன. உன் அறிவு ஏற்றுக் கொள்ளும் விதமாக அமைந்துள்ளன. இதயம் அவை கேட்டுக் குதூகலிக்கின்றது. சத்சங்கத்தின் விளைவாக நீ ஒருசமயம் இவ்வாறு உணரலாம். இதன் விளைவாக, நீ இதுவரை பெறாத ஆன்மிக அனுபவத்தைப் பெற்று விட்டதாகக் கருதலாம்.

குரு கண்டுபிடித்து விடுவார். அவர் பரீட்சித்துப் பார்ப்ப வருமாவார். நீ உன் ஆன்மிக அனுபவத்தை அவரிடம் சொல்கையில் அவர் அந்த அனுபவம் உண்மையாகவே உனக்குக் கிட்டியதா அல்லது நீ பிறர் கூறக்கேட்ட ஆன்மிகச் சொற்களை ஒப்பிக்கிறாயா என்பதைக் கண்டுபிடித்து விடுவார்.

அஷ்டாவக்கிரர் அறிவித்த மகாசத்தியத்தின், பேருண்மையின் பாதிப்பை ஜனகர் உடனடியாக உணர்ந்து எதிரொலித்தார். ஜனகரும் அதே உயர் சத்தியத்தைச் சொன்னார். மேலும் அவர் கூறினார்: “என்ன ஆச்சரியம், இதுவரை நான் உறக்கத்தில் இருந்தவன் போலல்லவா தோன்றுகிறது! நல்ல வேளையாக இப்பொழுது விழித்துக் கொண்டு விட்டேன். நான்தான் அனைத்தின் மையம் என்றும், நான்தான் எல்லாவற்றையும் நடத்தி வருகிறேன் என்பதையும் தெரிந்து கொண்டேன். ஆகவே நான் எனக்கே வணக்கம் செலுத்திக் கொள்கிறேன்.”

இத்தகைய மகிமையான விளைவு ஜனகரிடம் உதித்தது. அஷ்டாவக்கிரர் மௌனமாக இருந்து கொண்டு ஜனகர் பேசுவதைக் கேட்கிறார். பிறகு அவர் கேள்வி மேல் கேள்வி கேட்கிறார்;

சந்தேகங்களைக் கிளப்புகிறார். ஜனகர் என்ற பாத்திரத்தை (குடத்தை) ஆங்காங்கே சுண்டியும் தட்டியும் பார்க்கிறார். 'ஜனகர் பக்குவமடைந்து விட்டாரா; சுயமான அனுபவம் பெற்று விட்டாரா அல்லது காதால் கேட்டதைத் திருப்பிச் சொல்கிறாரா; ஏதோ பாதிப்பின் காரணமாக ஞான மொழி பேசுகிறாரா; நான் இங்கே இப்போது எதிரே உள்ளதால் இத்தகைய எண்ண அலைகள் எழுகின்றனவா; இவை அவருக்குச் சொந்தமான அலைகளா; ஜனகரின் உள்ளத்தில் உண்மையாகவே புரட்சி மூண்டுவிட்டதா; அறிவுஜீவியாகப் பேசுகிறாரா' — இப்படியெல்லாம் அஷ்டாவக்கிரர் பரிசோதித்தார்.

என்னிடம் பலவகையான மனிதர்கள் வருகிறார்கள். அவர்களில் பலர் ஜே.கிருஷ்ணமூர்த்தியின் பக்தர்கள். அவர்ள் சொல்கிறார்கள்: "நாங்கள் பல்லாண்டுகளாக ஜே.கே.யின் சொற்பொழிவு கேட்டு வருகிறோம். அவரது பேச்சு சரியென்றே தோன்றுகிறது. அதில் எங்களுக்கு சந்தேகமில்லை. அவருடைய கருத்துகளை நாங்கள் புரிந்தும் கொண்டோம். ஆனாலும் எங்கள் வாழ்க்கையில் ஒரு புரட்சியும் உண்டாகவில்லை. அவர் பேச்சை அறிவுபூர்வமாகப் புரிந்து கொண்டோம். ஆனால் எங்கள் ஆத்மா நிரம்பாமல் வெற்றிடம்போல் உள்ளது. மேலோட்டமாக எல்லாவற்றையும் அறிந்து விட்டோம். ஆனால் உள்ளத்தின் உள்ளே அப்படியேதான் இருக்கிறோம். அங்கே மாற்றம் ஏதும் நிகழவில்லை. நாங்கள் உள்ளத்தளவில் தொடப்படாதவர் களாகவே இருக்கிறோம். மழை பெய்தும் குடம் நிரம்பவில்லை!

மனிதன் பெரும் சிக்கலில் மாட்டிக் கொள்கிறான். அறிவு பூர்வமாக அவன் எல்லா ஆன்மிக விஷயங்களையும் புரிந்து கொள்கிறான். ஆனால் அதற்கு இணையாக அவன் வாழ்க்கையில் மாறுதல் எதுவும் ஏற்படுவதில்லை. அவனது தர்மசங்கடத்தை நீ புரிந்து கொள்ள முடியாது. கதவு எங்கேயுள்ளது என்று அவனுக்குத் தெரியும். ஆனால் அவன் சுவரேறி வெளியே செல்கிறான். கதவைப் பார்க்காதவன் விஷயம் வேறு. அவன் சுவரேறி வெளியேறினால் குறை சொல்ல முடியாது.

ஒரு மனிதனுக்குக் கதவு தென்படுகிறது. எங்கே உள்ளது என்று தெரிகிறது அப்படியும் சுவர் வழியே வெளியேற முயன்று தலையில் அடிபட்டுக் கொள்கிறான். அவனது வேதனையை உன்னால் உணர

முடியும். அவன் குழம்புகிறான் – 'எது சரி என்று எனக்குத் தெரிகிறது. ஆனால் நான் ஏன் தப்பாகச் செயல்படுகிறேன்? எங்கே போக வேண்டும் என்று எனக்குத் தெரியும். ஆனால் நான் ஏன் அதற்கு எதிர்திசையில் செல்கிறேன்?'

அவனுக்கு எல்லாம் தெரியும். இல்லை, அவனுக்கு ஒன்றும் தெரியாது.. எதையும் புதிதாகக் கற்கும் உள்ளார்ந்த ஆர்வமும் நீங்கிவிடுகிறது. சீடன் தன்மையும் மறைந்து போகிறது. தான் எல்லாம் அறிந்து கொண்டாகி விட்டது; புதிதாகக் கற்பதற்கு என்ன இருக்கிறது என்று நினைத்துக் கொள்கிறான். அவனது பணிவு தொலைந்து விடுகிறது. உள்வேதனை திரள்கிறது. அதில் குறைவு விளைவதில்லை.

இது எப்படியெனில், நீ வீட்டில் மருந்துகளைச் சேகரித்துக் கொண்டே வருவதால் உன் நோய் தீர்ந்து விடாது. அவற்றை உபயோகித்தால்தான் பலன் கிடைக்கும். நீ டாக்டர்கள் தரும் மருந்துச் சீட்டுகளைச் சேகரித்து ஒரு கோப்பு தயார் செய்யலாம். அவற்றினால் எப்பயனும் இல்லை. அவற்றின்படி வாழ்க்கையில் நடந்து கொள்வதுதான் முக்கியம். எல்லா நோய்களுக்கும் உன்னிடம் மருந்துகள் உள்ளதாக உனக்கு பிரமை ஏற்படலாம். உன்னிடம் மருந்துக் கடையே உள்ளதென நீ நினைக்கலாம். ஆனால் அவற்றைப் பயன்படுத்தாவிடில் நோய் தீர என்ன செய்வது? யாரிடம் செல்வது? யாரைக் கேட்பது?

ஆக, மனத்தில் ஒருவிதமான திமிர் உதிக்கிறது. ஏட்டறிவினால் கிடைத்த புத்தியில் 'எனக்கு எல்லாம் தெரியும்' என்ற அகங்காரம் மேலோங்குகிறது. ஆனால் உள்ளத்தின் ஆழத்தில், 'எனக்கு எதுவும் தெரியவில்லையே. நான் என்ன செய்வது?' என்ற வேதனைக் குரல் கேட்கிறது. நீ உண்மையென அறிவது உன் வாழ்க்கையை மாற்ற வேண்டும். அப்படி வாழ்க்கையில் மாறுதல் ஏற்படாவிடில் உன்னிடம் இருக்கும் உண்மையில் சாரம் இல்லை என அறியலாம்.

**சு**வாமி ராமதீர்த்தர் ஒரு கதை சொல்லுவார். ஆகாய கங்கை நதியின் கரையில் ஒருநாள் ஞானமும் மோகமும் வந்து அமர்ந்திருந்தன. கங்கை இருவரையும் பார்த்து, "வாருங்கள், என் நீரில் மூழ்கி எழுங்கள். நான் உங்களைத் தூய்மைப்படுத்தி விடுகிறேன். நீரில்

இறங்குங்கள். நீராடுங்கள். உங்களைப் புதியவர்களாக்கி விடுகிறேன். மீண்டும் இளமை பெறுவீர்கள். உங்கள்மீது படிந்துள்ள தூசியை யெல்லாம் துடைத்து நீக்கிவிடுவேன்." என்றது.

ஞானத்திற்குத் திமிர் அதிகம். ஆகவே அது "நீயா என்னைத் தூய்மையாக்குவாய்?" என்று கேட்டது. கங்கையின் பேச்சில் அதற்கு நம்பிக்கை வரவில்லை. வளைந்து கொடுக்கும் தன்மையை, சமர்ப்பணமாகும் கலையை அது எப்போதோ கைவிட்டிருந்தது. எப்படி சீடராக நடந்து கொள்வது என்பதை ஞானம் மறந்து விட்டிருந்தது. இன்னொருவர் மூலம் தனக்குக் கிடைக்கக்கூடியது எதுவும் இருக்கும் என்பதையும் மறந்து போயிருந்தது. ஞானம் நினைத்தது. 'நான் சுயமாகவே எல்லாவற்றையும் செய்து கொள்வேன். எனக்கு எந்த கங்கையும் தேவை இல்லை. எந்த புண்ணிய நீரும் அவசியமில்லை. குரு யாரும் வேண்டியதில்லை. வேறு யாருமேகூட எனக்குத் தேவையில்லை. 'கங்கை தன்னை நீராட, புனிதம் பெற அழைத்ததைக் குறித்து அது ஏளனப் புன்னகை செய்தது.

மோகத்தின் தன்மை வேறு. அது எதைக் கண்டும் மோகிக்கும். அதற்கு கங்கையின் பேச்சு பிடித்திருந்தது. பேராசையுடன் அது கங்கையில் இறங்கியது. கங்கை அதைக் குளிப்பாட்டியதும் அது சுத்தமடைந்தது. புனிதமடைந்தது. குறைபாடுகள் நீங்கப்பெற்றது. அது நீராடி வெளியே வந்ததும் தேவர்கள் அதைத் துதித்தனர்; அதற்கு ஆரத்தி எடுத்தனர். ஏனெனில் மோகம் இப்போது அன்பாக (பிரேமையாக) மாறிவிட்டது. பணிவின் காரணமாக இந்த விளைவு ஏற்பட்டது.

மோகம்தான் சுத்தமடைந்து அன்பாக உருவெடுக்கிறது. அன்பின் உயரிய நிலையில் அது துதிக்கப்படுகிறது. பிரார்த்தனையின் கடைசி முகாம்தான் இறைவனை அடையும் இடமாகிறது.

ஆனால் ஞானம் தன் வழியிலே முன்னேறிவிட்டது. அது திமிருடன் செல்கிறது. குறைகளை உணராமல் சுமந்து செல்கிறது. தலைக்கனம் மிகுந்திருக்கிறது. இதயமோ முழுமையாக வறண்ட, எதுவும் வளராத, பாலை நிலமாக உள்ளது.

ஜனகர் தான் ஞானம் பெற்றுவிட்டதாகச் சொன்னபோது அஷ்டவக்கிரர் தன் சூத்திரங்கள் மூலம் கேள்வி கேட்டு சோதிக்கிறார்.

"ஜனகரே, நிஜமாகவே அவ்வாறு உணர்கிறீர்களா? அல்லது வார்த்தை ஜாலங்களில் சிக்கிக் கொண்டு விட்டீர்களா? அல்லது என் பேச்சில் மயங்கி விட்டீர்களா?" பானை பக்குவப்பட்டுவிட்டதா என்று சுண்டிப் பார்ப்பதைப் போல் அஷ்டாவக்கிரர் ஜனகரை சோதிக்கிறார்.

**முதல் சூத்திரம்:** 'நீர் உம்மை, ஆத்மாவை, அடிப்படையில் ஒன்றெனவும், அழியாதது எனவும் தெரிந்து கொண்டுவிட்ட ஆத்மஞானி என்கிறீர். ஆனால் உங்களுக்கு இன்னும் செல்வத்தில் பற்று நீடிக்கவில்லையா?'

கேள்வி எழக் காரணம், ஜனகர் அரண்மனையைவிட்டு விடவில்லை. ஐஸ்வர்யத்தையும் உதறித் தள்ளவில்லை. முன்பு இருந்தபடியேதான் இப்போதும் உள்ளார்.

சீடன் அறியாமை காரணமாகக் கேள்வி கேட்பான். குரு ஞானத்தின் காரணமாக வினாத் தொடுப்பார். சீடனின் கேள்விக்குப் பதில் கூறுவது எளிது. குருவின் கேள்விக்கு வாழ்க்கையையே பதிலாகக் கொடுக்க நேரிடும். வேறு வழி இல்லை.

**தவாத்மஞஸ்ய தீரஸ்ய கதமர்த்தார்ஜனே ரதி:**– ஆத்மா பற்றி அறிந்துவிட்டதாக அறிவிப்பு செய்தபிறகு செல்வத்தில் விருப்பம் இருக்க முடியுமா? நாட்டில், பேரரசில், அரண்மனையில், பதவியில், கௌரவத்தில், அரியணையில் ஆசை இருக்கலாமா?

அஷ்டாவக்கிரரின் கேள்வியை மீண்டும் பார்ப்போம். அவர் கேட்பது 'ஜனகரே, உமக்கு நீரே கடவுள் என்ற உணர்வு, ஆத்ம ஞானம், ஏற்பட்டு விட்ட பிறகு, இனிமேலும் செல்வத்தைத் துரத்திக் கொண்டு நீர் ஓடலாமா? உன் உள்ளத்தைத் துருவி ஆராய்ந்து பார். பணத்தின்மீது பற்று இன்னும் மிஞ்சியுள்ளதா என்று பார்.'

ஏன் பணத்திற்கு முதலிடம் கொடுத்துக் கேள்வி எழுகிறது? ஏனெனில் வாழ்க்கையில் நாம் ஓடும் ஓட்டமெல்லாம், வெளிப்படுத்தும் வெறியெல்லாம் பணம் சம்பாதிக்கத்தான். நாம் உள்ளே காலியாக, வெற்றிடமாக, சூனியமாக இருக்கிறோம். இதைப் பணத்தால் நிரப்புகிறோம். வெறுமை நம்மைத் துன்புறுத்துகிறது. அத்தகைய நிலை சங்கடமாக இருக்கிறது. தன்னிடம் உள்ளதாக எதையாவது காட்ட வேண்டும். எப்படிக் காட்டுவது? பதவி, கௌரவம் ஆகியவைகூட

பணத்தின் உருவங்கள்தான். அவற்றால் நம்மை நிரப்பிக் கொள்கிறோம். அப்போதுதான் ஒருவன், 'நானும் கவனிக்கப்பட வேண்டியவன்தான். நான் காலி பாத்திரமில்லை. எவ்வளவு பணம் என்னிடமுள்ளது என்று பார்த்துக் கொள்ளுங்கள். நான் இருப்பதையும் காட்டிக்கொள்ள இது தேவைப்படுகிறது.' என்று கூற முடிகிறது.

அஷ்டாவக்கிரரின் கருத்தின்படி இப்படி வெளிப்புறமாக ஓடுபவனுக்குத் தனக்குள் கடவுள் வீற்றிருப்பது தெரியவில்லை. கடவுள் நமக்குள் இருப்பதை அறிந்தவன்தான் அவன்தான் செல்வம் பெறுகிறான். மீராவின் பாடல்படி அவனே ராம ரத்தினம் என்னும் செல்வத்தை அடைகிறான். பிறகு அவன் அடைவதற்கு மிச்சம் எதுவும் இல்லை. ஏனெனில் அவனுக்குத்தான் செல்வத்துள் செல்வம்—பரம ஐஸ்வர்யம்—கிடைத்து விட்டதே. பிறகு ஏன் அவன் சாதாரணப் பணத்தின் பின்னால் ஓடப்போகிறான்?

நீ சிறுவனாயிருந்தபோது பொம்மைகளை வைத்து விளையாடினாய். பொம்மை உடைந்தால் அழுதாய். யாராவது எடுத்தால் சண்டை போட்டாய். பிறகு வளர்ந்து இளைஞன் ஆனாய். உன் சிறுவயதுப் பொம்மைகளை மறந்தே போனாய். மூலையில் கிடந்த அவை தூசிபடிந்து பிறகு குப்பையில் தூக்கி எறியப்பட்டன. உனக்கு அவற்றின் நினைவுகூட இப்போது இல்லை. முன்பு அவற்றிற்காகச் சண்டையிட்டாய். அடிக்கவும் அடிவாங்கவும் தயாராக இருந்தாய். இப்போது யாராவது உன்னிடம் வந்து பொம்மைகளைப் பற்றிக் கேட்டால் சிரித்து விடுவாய், "நான் இப்போது ஒன்றும் குழந்தை இல்லையே. நான் இளைஞன். வயதுவந்தவன். உயிருள்ளவைபோல் முன்பு தோன்றிய அவை பொம்மை மாத்திரமே என்று இப்போது தெரிந்து கொண்டேன்," என்பாய்.

தனக்குள்ளே பரமாத்மா வீற்றிருப்பதை உணர்ந்ததும் இதுபோலவே மீண்டும் மனமுதிர்ச்சி ஏற்படுகிறது. சிறுவயதில் விளையாடிய பொம்மைகள் இளைஞன் ஆனபின் வீணானதுபோல, கடவுளின் ஞானம் பெற்றதும் பணம், பதவி, கௌரவம் முதலிய உலகப் பொம்மைகள் வீணானவை என்பது தெரிய வருகிறது. பிறகு அவற்றிற்காக நாம் போராட மாட்டோம்; போட்டி போட மாட்டோம்; ஒருவரையொருவர் முந்த முயலமாட்டோம்.

பணத்தின் பின்னால் ஓடுவது ஆத்மாவை உணராத மனிதன் மேற்கொள்ளும் ஓட்டமாகும். உள்ளத்தினுள் ஒரு மனிதன் எத்துணை ஏழையோ அத்துணை அளவு பணத்தால் தன்னை நிரப்பிக் கொள்ள முயலுகிறான். வெளியிலிருந்து வரும் பணம் உள்ளே நிலவும் வறுமையை மறப்பதற்காக முயலும் ஓர் ஏற்பாடாகும். உள்ளே அவன் எத்துணை ஏழையோ அதே விகிதத்திற்கு அவன் பணத்தின் பின்னால் ஓடுகிறான்.

இதனால்தான் உண்மையிலேயே முதலில் செல்வச் சீமான்களாக இருந்த புத்தரும் மகாவீரரும் எல்லாவற்றையும் உதறிவிட்டுக் கையேந்திகளானார்கள். எத்துணை வியப்பான சம்பவம் இது! சாதாரண உலகில் ஏழை, பணத்தைத் துரத்தியபடி ஓடுகிறான். ஆன்மிக உலகில் செல்வந்தன் பணத்தைத் துரத்தியடித்து விட்டு ஏழையாகி விடுகிறான். உள்ளே ஆன்மிகச் செல்வத்தால் நிரம்பியவன் வெளியுலக ஓட்டத்தைக் கைவிடுகிறான்.

அஷ்டாவக்கிரர் சொல்கிறார், "ஜனகரே, மறுபடி உள்மனத்தில் இறங்கித் தடவிப் பாருங்கள். எங்கேயாவது பண ஆசை ஒட்டிக் கொண்டிருக்கிறதா என்று கண்டுபிடியுங்கள். அப்படிப் பண ஆசை மிஞ்சியிருந்தால் நீர் உணர்ச்சியுடன் பேசியதெல்லாம் ஜம்பப் பேச்சு மட்டுமே. இதுதான் உரைகல். இப்போதும் நீர் பதவியில் நீடிக்க விரும்பவில்லையா? உமது நாட்டின் எல்லையை விரிவாக்க ஆசைப்படவில்லையா? உள்ளே எதன் மீதும் இச்சை மிஞ்சியிருக்க வில்லையா? உள்ளத்தில் பற்று இருக்கும்வரை நீர் ஆத்ம அனுபவம் பெற்றவராக மாட்டீர். இரண்டும் ஒரே சமயத்தில் இருக்க வாய்ப் பில்லை. இவை இரண்டின் இடையே எவ்வித ஒத்துழைப்பிற்கும்கூட வாய்ப்புக் கிடையாது. ஒளியும் இருட்டும், ஒரே இடத்தில் ஒரே சமயத்தில் இருக்க முடியாதல்லவா? ஒளியிருந்தால் இருளில்லை. இருளிருந்தால் அங்கே ஒளி இல்லை.

"ஜனகரே! நீர் ஒளியின் விஷயம் பேசுகிறீர். பெரிய வார்த்தைகளை உபயோகிக்கிறீர். இது திடீரென, விரைவாக ஏற்பட்ட மாறுதலான நிகழ்ச்சி. நீரே இதை உரைகல்லில் உரைத்துப் பார்க்கவும். இதைச் சற்று ஆராய்ச்சி செய்து பிரித்துப் பகுத்துப் பார்க்கவும். உள்ளத்தின் உள்ளே இறங்குக. அங்கே பணத்தாசை எஞ்சியுள்ளதா

என்று கவனிக்கவும். கொஞ்சம் ஆசை மிஞ்சியிருந்தாலும் நீர் பேசும் ஆத்மஞானம் பழையசோறுபோல. இதெல்லாம் கடன்வாங்கிய சொற்கள். இவற்றிற்கு அதிக மதிப்பில்லை. அதாவது, நீர் ஆத்மஞானம் பெறவில்லை என்று பொருள். ஆகவே நான் உம்மை மறுபடியும் எழுப்ப வேண்டும். நீர் மறுபடியும் அரிச்சுவடியிலிருந்து ஆன்மிகப் பாடம் கற்க ஆரம்பிக்க வேண்டும்.''

பணத்தில் இம்மியளவாவது ருசி உண்டா? வெளியிலிருந்து ஏதோ ஒன்று கிடைத்து விட்டால் நாம் சாதித்தவர்களாகி விடுவோம் என்னும் நினைப்பு இருக்கும்வரை நமக்குப் பணத்தாசை உள்ளது என்று அர்த்தம். ஒருவேளை நீ பணத்தாசையை தியாகம் செய்யலாம். உலகம் உன்னைத் தியாகி என அழைக்கும். மக்கள் உன்னைப் புகழ்வார்கள். பாதம் தொட்டு வணங்குவார்கள். ஆனால் அந்த தியாகத்திற்காக நீ பிரதிபலனாக எதையும் எதிர்பார்த்தால், பணத்தாசை நீங்கினாலும் நீ ஆத்மஞானம் பெறவில்லைதான். பணத்தாசைக்குப் பதிலாக தியாக ஆசை என்பது பண்டமாற்று மட்டுமேயாகும். ஆனால் உன் பணத்தாசையே மறைமுகமாக நீடிக்கிறது. பணத்தாசையின் ஆழத்தில் இன்னொரு ஆசையும் பதிந்துள்ளது. அதுதான் பணத்தை வைத்துக் கொண்டு சமூகத்தில் முக்கியமானவனாகிவிட வேண்டும் என்னும் ஆசை. பணம் ஒருவனை சமூக மதிப்பு பெறச் செய்கிறது என்பதுதான் பணத்தாசையின் உள் அர்த்தம்.

'ஆனால் என் மதிப்பீடு – அக மதிப்பீடு – உள்ளே நடைபெறுகிறது. நானும் என் மதிப்பும் ஒன்றே' என நினைப்பது சந்நியாச லட்சணம். இதற்கு மாறாக, 'எனக்கு மதிப்பு வெளியுலகத்தில் நிச்சயமாகிறது. மக்கள் என்ன சொல்கிறார்கள் என்பதை வைத்து எனக்கு மதிப்பு உருவாகிறது' என நினைப்பது பணத்தாசையின் லட்சணம்.

ஆகவே நீ காணும் நூறு தியாகிகளில் தொண்ணூற்று ஒன்பது பேர் பணத்தாசை கொண்டவர்கள். அவர்கள் பணத்தைத் தொடுவதை நிறுத்தியிருப்பார்கள்; கடைத் தெருவிற்குப் போவதை நிறுத்தி யிருப்பார்கள்; வணிகம் செய்வதைக் கைவிட்டிருப்பார்கள்; எல்லா வற்றையுமே கைவிட்டுக் கோயில்களிலேயே உட்கார்ந்திருப்பார்கள். ஆனால் அங்கே வருகின்றவர்கள் தங்களைக் கௌரவிக்க

வேண்டுமென எதிர்பார்க்கிறார்கள். அப்படி நடைபெறாவிடில் அதை அவமானமாகக் கருதுகிறார்கள். அந்த அவமானம் முள்ளாகக் குத்துவதாக உணர்கிறார்கள். ஆனால் நீ அவர்களைப் பாராட்டினால் நெகிழ்ச்சியடைகிறார்கள். மகாதியாகி எனப் புகழ்ந்தால் அவர்களின் உள்ளத்தில் தாமரைப் பூவைப்போல் மகிழ்ச்சி மலர்கிறது.

கடைக்காரர் காலையில் கடையைத் திறந்ததிலிருந்து நாள் முழுதும் வாடிக்கையாளர்களை எதிர்பார்ப்பதிலேயே நேரத்தைச் செலவிடுகிறார். அதேபோல் கோயிலில் உட்கார்ந்தபடி தியாகிகளும் பாராட்டுபவர்கள் வருவார்கள், தங்களை வழிபடுவார்கள், சன்மானம் தருவார்கள், கௌரவிப்பார்கள் என்று காலையிலிருந்து காத்திருக் கிறார்கள். பண ஆசை உருமாறி தியாக ஆசையாகி அது புகழாசை யாக மாறுகிறது. கடைதான் மாறுகிறது. கடை முதலாளி அடிப்படையில் மாறவில்லை.

என்றிலிருந்து உன் மனத்தில் பிறரிடமிருந்து கிடைக்கும் பாராட்டிற்கு நேர்மறையான அல்லது எதிர்மறையான மதிப்பு தரப்படுவதில்லையோ; பிறர் இழைக்கும் அவமானத்திற்கும் மதிப்பு ஒன்றுமில்லாமல் போகிறதோ; உன்னிடம் என்னென்ன உள்ளது என்பதை வைத்து உன் வலிமையை நீ அளந்துபார்க்கவில்லையோ; உன்னிடம் என்னென்ன இல்லை என்பதை வைத்து நீ உள்மனத்தில் குறைபாடு உள்தாக நினைக்க வில்லையோ; நீ எந்த நிபந்தனையுமின்றி பூரணம் அடைந்து விடுகிறாயோ; அந்த பூரண உணர்வு வெளிக் காரணத்தால் ஏற்படாமல் தானாகவே, காரணமின்றியே, ஏற்படுகிறதோ அன்றிலிருந்தே நீ ஞானம் பெற்றாய் என அறி. அதற்குமுன் மூளையில் இருந்ததெல்லாம் தகவல்கள் மட்டுமே. தகவல் அறிவு வேறு, ஞானம் வேறு.

சுவாமி விவேகானந்தர் அமெரிக்காவிலிருந்து இந்தியா திரும்பிய சமயம் வங்காளத்தில் பஞ்சம் நிலவியது. அவர் உடனே பஞ்சப் பகுதிகளில் சேவை செய்யச் சென்று விட்டார். டாக்கா நகருக்கு அவர் சென்றபோது அவ்வூர் வேதாந்த பண்டிதர்கள் சிலர் அவரை தரிசிக்க வந்தனர். அமெரிக்காவில் வேதாந்தக் கருத்துகளை அறிமுகம் செய்து வெற்றிக்கொடி நாட்டியவர் என்பதால் அவரிடம் வேதாந்தம் சம்பந்தமாகவே உரையாட அந்த பண்டிதர்கள் வந்திருந்தனர்.

ஆனால் இதென்ன! சுவாமிஜி வேதாந்தப் பேச்சே எடுக்கவில்லை. பிரம்மம் சம்பந்தமாகவும் பேசவில்லை. ஆன்மிகம், அத்துவைதம் ஆகியவை பற்றியும் பேச்சில் குறிப்பிடவில்லை. அவர் பஞ்சநிலைமை பற்றியே பேசினார். சுற்றிலும் நிலவிய சோக சூழ்நிலையால் அவரும் வேதனைக்குள்ளாகியிருந்தார். பேச்சின் நடுவில் அழத்தொடங்கிவிட்டார். கண்களிலிருந்து நீர் வழிந்தோடியது.

பண்டிதர்கள் ஒருவரை ஒருவர் பார்த்து முறுவலித்தனர். சாரமற்ற உலகிற்காக இந்த சந்நியாசி அழுகிறாரே என்று அதிசயித்தனர். பஞ்சத்தால் சாவுகள் ஏற்பட்ட போதிலும், இது மண்ணாலாகிய உடம்புதானே; இதற்குப்போய் அழுகின்ற இவரா ஞானி? என்று யோசித்தனர்.

பண்டிதர்களின் ஏளனச் சிரிப்பைப் பார்த்து விவேகானந்தருக்கு ஒன்றும் புரியவில்லை. "பண்டிதர்களே, ஏன் நகைக்கிறீர்கள்? என்ன விஷயம்?" என்று அவர் விசாரித்தார்.

பண்டிதர்கள் வெளிப்படையாகப் பேசினார்கள். ஒருவர் அவர்கள் சார்பில் சொன்னார்: "உங்களை பரமஞானி என்றல்லவா நாங்கள் நினைத்திருந்தோம். நீங்களே அழுகிறீர்களே! சாஸ்திரங்கள் தெளிவாகக் கூறுவது என்ன? நாம் என்பது உடலில்லை. நாம் ஆத்மாக்கள். நாமேதான் பிரம்மம். யாரும் இறப்பதுமில்லை, பிறப்பதுமில்லை. இதெல்லாம் தெரிந்தவராகிய நீங்கள் அழுகிறீர்களே! உங்களை பரமஞானி என்ற முறையில் தரிசிக்க வந்தோம். நீங்கள் அறியாமையில் மூழ்கியுள்ளீர்கள்."

விவேகானந்தர் தன் பக்கத்தில் எப்பொழுதும் ஒரு நீண்ட கழி வைத்திருப்பார். அதை எடுத்துக் கொண்டு அவர் தன்னிடம் பேசிய பண்டிதர் மீது பாய்ந்தார். கழியை அந்த மனிதரின் தலையில் வருடியபடி சுவாமிஜி சொன்னார்: "நீ உண்மையான ஞானியாக இருந்தால் அப்படியே உட்கார்ந்திரு. இந்தக் கழியால் ஓர் அடி கொடுக்கிறேன். நீ சலனப்படக் கூடாது. மனிதன் என்பவன் உடலல்ல என்று நீ சொன்னதை நினைவில் வைத்து அடியைப் பொறுத்துக் கொள்."

விவேகானந்தர் திடமான உடல் படைத்தவர். உடல் வலிமை மிகுந்தவர். அவர் கையிலோ பெரிய கம்பு. கேள்வி கேட்ட

பண்டிதருக்கு உயிர் போகும் அளவுக்கு பயமாகி விட்டது. அவர் நடுக்கத்துடன் கெஞ்சினார்: "சுவாமிஜி, நிறுத்துங்கள். இதென்ன இப்படிச் செய்கிறீர்கள். இதுவா ஞான விஷயம்? நாங்கள் தங்களது சத்சங்கம் நாடி இங்கே வந்தோம். நீங்கள் நடந்து கொள்ளும் முறை சரிதானா?"

இந்த சுவாமிஜி கொன்று விடுவார் போலிருக்கிறதே என்று அந்த பண்டிதர் அங்கிருந்து ஓடிவிட்டார். மற்ற பண்டிதர்களும் நழுவி விட்டனர். விவேகானந்தர் கருத்துச் சொன்னார்: "சாஸ்திரத்தைச் சரியாக ஒப்பித்தல் ஞானமாகி விடாது. ஏட்டறிவும் ஞானமாகி விடாது. மற்றவர்களுக்கு உபதேசிக்கும் கெட்டிக்காரர்கள் நிறையவே உள்ளனர்."

அந்த பண்டிதர் பேசிய விதம் சொன்னதைச் சொல்லும் கிளிப்பிள்ளை ரகம்தான். அப்பேச்சில் ஆத்ம அனுபவத்தின் பிரதிபலிப்பு தெரியவில்லை. சாஸ்திர வார்த்தையைத்தான் சொன்னார். சுயமான விஷயம் எதுவும் கூறவில்லை. சுயமாக இல்லாத அறிவு நாலுகாசு பெறாது. ஆகவேதான் அஷ்டாவக்கிரர் ஜனகரைப் பார்த்து, "ஆத்மஞானம் பெற்று விட்டதாகக் கூறும் உமக்குச் செல்வம் சேர்ப்பதில் கொஞ்சமாவது ஆர்வம் மிஞ்சியுள்ளதா?" என்று கேட்டுச் சோதிக்கிறார்.

குரு உருவத்தை பிரதிபலிக்கும் கண்ணாடி போன்றவர். குரு என்னும் கண்ணாடியின் எதிரில் சிஷ்யன் முழுமையாக நிர்வாணமாகி விட வேண்டும். தனது இதயத்தைத் திறந்து காட்ட வேண்டும். அப்போதுதான் புரட்சி நிகழ முடியும்.

**ப**ழைய ஜைன சாஸ்திர நூல்களில் மிதிலை நாட்டு மன்னர் நேமியைப் பற்றி ஒரு கதை உள்ளது. அவர் சாஸ்திரம் படித்த வரில்லை. ஆன்மிகத்தில் ஈடுபாடு கொண்டவரும் இல்லை. அதில் அவருக்குப் பிடிப்பு இல்லை. அந்த திசையில் பார்த்ததுகூட இல்லை. வயோதிகத்தில் அவர் கடுமையான காய்ச்சலுக்கு உள்ளானார். அவருடைய மனைவிகள் உடல் சூட்டைத் தணிக்க சந்தனமும் குங்குமப்பூவும் தடவினர். அவர்கள் பல தங்க வளையல்கள் அணிந்திருந்தனர். அவற்றில் வைரங்களும் ரத்தினங்களும் பதிக்கப் பட்டிருந்தன. ஆகவே ராணிகள் மன்னரின் உடலைத் தடவிக் கொடுத்தபோது வளையல்கள் கலகலவென்று ஒலித்தன. ஒரே

சமயத்தில் ஏராளமான வளையல்கள் ஒலித்த ஓசை மன்னர் நேமிக்கு எரிச்சலாக இருந்தது. அவர் ராணிகளைக் கோபித்தார். "இந்த வளையல்களைக் கழட்டி விடுங்கள். இந்த ஓசை நின்று போகட்டும். இது காதைத் துளைக்கிறது." என்றார்.

தங்களது சுமங்கலி நிலைக்காக ஒவ்வொரு கையிலும் ஒரு வளைபோக மற்ற வளைகளை ராணிகள் கழற்றி விட்டனர். வளையலோசை நின்று போனது. ராணிகள் மன்னரின் உடலில் தொடர்ந்து சந்தனம் தடவினர். மன்னர் நேமி தமக்குள் பெரும் புரட்சி உருவாவதை உணர்ந்தார். பத்துக்கு மேற்பட்ட வளையல்கள் இருந்தபோது பேரொலி கேட்டது. இப்போது ஒற்றை வளையலில் ஒலியே எழவில்லை. பன்மையில் ஆரவாரம், சப்தம். ஒருமையில் அமைதி, சாந்தி. ஆன்மிகத்தில் இதுவரை ஆர்வம் கொள்ளாத மன்னர் சட்டென்று எழுந்து உட்கார்ந்தார். மேலும் சொன்னார்: "என்னை எழுந்து போக விடுங்கள். எனக்கு ஏற்பட்டது கடும் காய்ச்சல் இல்லை. இது என் வாழ்க்கையில் புரட்சி ஏற்பட்டுள்ளதற்கான அறிவிப்பு. கடவுள் என்மீது கருணை காட்டியுள்ளார்."

மன்னரை எழவிடாமல் ராணிகள் பிடித்துக் கொண்டனர். காய்ச்சலின் தீவிரத்தால் மன்னரின் புத்தி பேதலித்து விட்டதாக அவர்கள் நினைத்தனர். மன்னரை போகி (இன்பநாட்டமுள்ளவர்) என்ற முறையிலேயே அவர்கள் அறிந்திருந்தனர். அவர் ஒருபோதும் யோகம் என்ற பேச்சே எடுத்ததில்லை. எந்த யோகியையும் தன்னருகே வரவிட்டதில்லை. அவரது வாழ்க்கை போகம் ஒன்றாலேயே நிரம்பியிருந்தது.

மன்னருக்கு ஜன்னி உண்டாகியிருக்குமோ என்று அரசியர் அஞ்சினர். மன்னர் விளக்கினார்: "பயப்படாதீர்கள். இது ஜன்னிக் காய்ச்சல் இல்லை. ஆம், இதுவரை காய்ச்சல் இருந்தது. இப்போது அது நீங்கிவிட்டது – உங்கள் வளையல்களின் கருணையால், திடீரென சூரியோதயம் ஏற்பட்டது. நீங்கள் நிறைய வளையல்கள் அணிந்திருந்த போது நிறைய ஓசை கேட்டது. ஒன்று மட்டுமே கையில் இருந்தபோது ஓசை அடங்கிவிட்டது. மனத்தில் ஆசைகளின், எதிர்பார்ப்புகள் அலைகளாக மோதும்போது ஆரவாரமாக இருக்கிறது. ஒரே ஓர் ஆசை அல்லது எதிர்பார்ப்பு மட்டுமே இருந்தால், ஒன்றின் மீது

மட்டுமே விருப்பம் இருந்தால், அது அந்த ஒன்றுடன் நின்றுவிடும். உலகில் நிலவுகின்ற ஆசைகள் ஏராளம். ஒன்றின் (இறைவனின்) மீது மட்டுமே கொள்ளும் ஆசை ஒன்று என்ற அளவில் இருக்கும்.

நேமி படுக்கையிலிருந்து எழுந்தார். காய்ச்சல் போய்விட்டது. காட்டை நோக்கிக் கிளம்பி விட்டார். சாஸ்திரங்கள் படித்தவரில்லை தான். ஆனால் சாஸ்திரம் கற்பதால் மட்டுமே இறையுணர்வு தோன்றி விடுமா? வாழ்க்கையென்னும் சாஸ்திரத்தைத்தான் உன்னிப்பாகக் கவனிக்க வேண்டும். வாழ்க்கைப் பிரவாகத்தில் திடீரென ஆன்மிகத் தூண்டுதல் ஏற்படலாம். எதிலிருந்தும் ஆன்மிக சமிக்ஞை கிடைக்கலாம்.

அப்படி இல்லாவிடில் வளையல்களுக்கும் சந்நியாசத்துக்கும் என்ன சம்பந்தம் இருக்க முடியும்? ஜோடிப் பொருத்தம் இல்லையே. ஆனால் புரிதல் நிலையில், விழிப்பு நிலையில், மௌன நிலையில் நடைபெறும் ஒரு சம்பவம் உன்னைத் தட்டியெழுப்புவதாக அமையக்கூடும். நீ தூங்கிக் கொண்டிருக்கிறாய். கடிகாரத்தின் அலாரம் அடிக்கிறது. பறவைகளின் கூவுதல் கேட்கிறது. காக்கைகள் கரைகின்றன. பால்காரர்கள் கூப்பிடுதலும் கேட்கிறது. தெரு வழியே செல்லும் லாரி சப்தம் எழுப்புகிறது. ரயில்வண்டி ஓடும் சப்தம் காதில் விழுகிறது. விமானம் ஒன்று மேலே பறக்கிறது. பக்கத்து வீட்டுக் காரரின் நாய் குரைக்கிறது.

இப்படித்தான் நாமும் தூங்கி வழிகிறோம். இதில் தடையேற்பட்டுத் திடீரென ஆன்மிக விழிப்பு நேர்கிறது. இந்த விழிப்பு வார்த்தைகளால் மட்டுமே ஏற்படுவதில்லை. அந்த விழிப்பின் அடிப்படையில் ஒலி உள்ளது. சாஸ்திரம் என்பது ஒலிகள் பதிவாகியுள்ள இசைத்தட்டு போன்றது. உன் படுக்கை அருகே அந்த ரிகார்டை வைத்துக் கொண்டு தூங்கினாலும் ஒரு பயனும் விளையாது. உன் மூளையின் நினைவு மடிப்புகளில் எத்தனை சாஸ்திரங்களை பதிந்து வைத்துக் கொண்டாலும் பலனில்லை.

ஜனகருக்கு அற்புதமான அனுபவம் ஏற்பட்டது. ஆனால் அஷ்டாவக்கிரர் தன் கேள்விகளென்ற உரைகல்லில் பரிசோதித்துப் பார்க்க விரும்புகிறார். மனத்தின் மூலையில் பணத்தாசை ஒட்டிக் கொண்டுள்ளதா என ஆராயச் சொல்கிறார். 'துளியாவது பண ஆசை

மிஞ்சியிருந்தால் பெரிய ஆன்மிக வார்த்தைகளை உதிர்க்காதே. உன் பாதங்கள் தரையில் படிந்துள்ளன. வானத்தில் பறப்பதுபோல் பேசாதே. பணம் நிலம் போன்றது. உன் பணத்தாசை வேர்போல் நிலத்தை ஊடுருவுகிறது. இந்நிலையில் உன்னால் சிறகுகளை விரித்து விண்ணில் எழும்ப முடியாது.'

**ஜை**ன சாஸ்திரங்களில் அமராவதி நகரத்து வணிகர் சுமேதர் கதை என ஒன்றுள்ளது. அவருடைய தந்தைதான் நகரத்திலேயே பெரிய பணக்காரர். அவர் காலமாகி விட்டார். எல்லாச் சடங்குகளும் முடிந்து உறவினர்கள் சென்றபின் வீட்டுக் கணக்குப்பிள்ளை சுமேதரிடம் வந்தார். கணக்கு விவரங்களை விளக்கினார். பல ஊர்களில் குடும்பத்திற்கு எத்தனை வீடுகள் உள்ளன; எந்த வீட்டில் எவ்வளவு செல்வம் உள்ளது; எத்தனை தொழில்கள் உள்ளன; எந்தத் தொழிலில் எவ்வளவு பணம் முதலீடு செய்யப்பட்டுள்ளது; நிலவறையில் எத்தனை பொக்கிஷப் பெட்டிகள் வைக்கப்பட்டுள்ளன என்றெல்லாம் விவரித்தார். அந்தப் பெட்டிகளின் சாவிகளை சுமேதரிடம் ஒப்படைத்தார். 'இனி நீங்கள்தான் எனக்கு எஜமானர்' என்று கைகூப்பி நின்றார்.

சுமேதர் கணக்குப் பதிவேடுகளை ஆராய்ந்தார். கோடிக் கணக்கில் தனக்குச் சொத்துள்ளதை அறிந்தார். நிலவறைக்குச் சென்று பொக்கிஷப் பெட்டிகளைப் பார்வையிட்டார். அவற்றில் விலை உயர்ந்த ரத்தினங்கள் நிறைந்து கிடந்தன. அவையும் பல கோடி பெறும். கணக்குப் பிள்ளைக்கு ஆச்சரியம். சுமேதர் எல்லாவற்றையும் தூரத்திலிருந்துதான் பார்க்கிறார். எதையும் தொடவில்லை. கண்களில் பேராசை தென்படவில்லை. மாறாக, கண்ணீர் நிறைந்து வழிந்தது.

குமாஸ்தா பதறிப் போனார். "ஐயா, உங்களுக்கு என்ன ஆனது? அழுகிறீர்களே. எனக்கு எதுவும் புரியவில்லையே. தற்சமயம் உலகத்திலுள்ள பெரும் செல்வந்தர்களுள் நீங்களும் ஒருவர். இவ்வளவு செல்வமும் உங்கள் முன்னோர்களால் பல தலைமுறைகளில் சேமிக்கப் பட்டதாகும். இதிலிருந்து எதுவும் எக்காலத்திலும் குறைந்ததில்லை. நீங்கள் மகிழ்ச்சியாக இருங்களேன்," என்றார்.

சுமேதா பதிலளித்தார்: "நான் ஒரு விஷயம் தெரிந்து கொள்ள விரும்புகிறேன். என் தாத்தா இறந்தபோது அவரால் இந்தச் செல்வத்தை

எடுத்துச் செல்ல முடியவில்லை. என் அப்பா இறந்தபோது அவராலும் எடுத்துச்செல்ல முடியவில்லை. ஆனால் நான் உலகைவிட்டுப் போகையில் என்னுடன் செல்வமனைத்தையும் எடுத்துக் கொண்டு போக விரும்புகிறேன். நீங்கள் அதற்கு ஏதாவது உபாயம் சொல்லுங்கள். தலைமுறைகளாக இச்செல்வம் நீடித்து வருவதாகக் கூறினீர்கள் அதன் அர்த்தம் என்ன? மக்கள் இறக்கிறார்கள். அப்போது எல்லாவற்றையும் இங்கேயே விட்டுச் செல்கிறார்கள்.

"நானும் இறந்தபின் இங்கேயே எதுவும் விட்டுச் செல்வதை விரும்பவில்லை. இங்கேயே செல்வப் பொருள்கள் தேங்கி விடுமானால் அவற்றில் என்ன சாரம் இருக்கிறது? நான் விடப்போவ தில்லை. எடுத்துச் செல்லத்தான் போகிறேன். நாளைக் காலைக்குள் அதற்கொரு வழி கண்டுபிடியுங்கள். இல்லாவிடில் நான் கண்டுபிடித்துக் கொள்கிறேன். நான் நிம்மதி இழந்துவிட்டேன். ஏனெனில் யாருக்கும், எனக்கும், மரணம் எப்பொழுது வேண்டுமானாலும் நிகழலாம். பிறகு இந்தப் பொக்கிஷச் சாவிகள் வேறு யார் கைக்கோ மாறும். நீங்களோ, அடுத்த குமாஸ்தாவோ வேறு ஒருவருக்கு இந்தச் சாவிகளைக் காட்டுவீர்கள். அவர் என் மகனாக இருக்கலாம். ஆனால் நானோ, என் மகனோ பொக்கிஷப் பொருள்களை எடுத்துச் செல்ல முடியாது. இந்தக் கணக்கை முடிவுக்குக் கொண்டுவர விரும்புகிறேன். நான் இவற்றை யெல்லாம் என்னோடு எடுத்துச் செல்லவே ஆசைப்படுகிறேன்."

கணக்குப்பிள்ளை ஆச்சரியத்துடன் சொன்னார், "அப்படி இதுவரை நிகழ்ந்ததே கிடையாது. இனியும் நடைபெற சாத்தியமில்லை. யாரும் இறந்தபின் தன்னுடன் எதையும் எடுத்துச் சென்றதில்லை."

சுமேதர் சிரித்தார், "நாளை காலைவரை காத்திராமல் பதில் கூறிவிட்டீர்கள். ஆகவே நான் ஓர் உபாயம் கண்டுபிடித்து விட்டேன்," என்று கூறிய அவர் உடனடியாகச் சொத்து முழுவதையும் தானம் செய்து விட்டார். சந்நியாசியாகி விட்டார்.

ஒரு புரட்சி நிகழ்ந்தது. வெளியில் ஒன்றைக் கைவிட்டால் உள்ளே ஒன்ற கிடைத்து விடுகிறது. மக்கள் பார்த்தது சுமேதர் வெளிச் செல்வத்தை எல்லாம் உதறி விட்டதைத்தான். நான் அதன் மறுபக்கத்தைக் காட்ட விரும்புகிறேன். அவர் வெளிச்செல்வத்தை இங்கே கைவிட்டார். அதற்குப் பதிலாக அங்கே ஒரு செல்வம்

கிடைக்கப் பெற்றார். அதை எடுத்துச் சென்றார். உள்ளே திரளும் செல்வம்தான் ஒருவருடன் சேர்ந்துவரும். வெளியுலக விவகாரங்களில் ஈடுபட்டிருப்பதால் உள்ளே இருப்பது கண்ணில் படவில்லை. உள்ளே இருக்கும் செல்வத்தை உணர்ந்து விட்டால் பிறகு வெளியே இருக்கும் செல்வத்தின் மீது பிடிப்பு நீங்கிவிடும்.

அஷ்டாவக்கிரர் சொல்கிறார்: 'ஆச்சரியம்! சிப்பி பற்றிய அறியாமையால் அதனுள் வெள்ளி இருப்பது போன்ற பிரமை தோன்றி அதை அடையும் பேராசை எழுகிறது. அதுபோலவே ஆத்மா பற்றிய அறியாமையால் புலன் இன்பம் உள்ளதுபோன்ற பிரமை உண்டாகி அதைப் பெறும் ஆசை உதிக்கிறது.'

பாதையில் கயிறு கிடப்பதைப் பார்த்து அதைப் பாம்பென நினைத்தால் பயம் உண்டாகிறது. பாம்பு இல்லாமலே பயம் ஏற்படுகிறது. பாம்பு பொய், பயம் மிகவும் உண்மை. நீ உடனே ஓட்டம் பிடிக்கிறாய். ஓடும்போது பயத்தால் நீ விழவும் நேரிடலாம். கை—கால் உடையலாம். பாம்பென்னும் பிரமை ஒருவனை இப்படி ஆட்டுவிக்கிறது.

அஷ்டாவக்கிரர் சொன்னதுபோல் சிப்பியில் சில சமயம் வெள்ளி இருப்பதுபோல் தோன்றும். சூரிய கிரணங்களின் ஒளிபடுவதால் சிப்பியில் வெள்ளி ஒளி தெரிகிறது. வெள்ளி என்று நினைத்ததுமே அதை எடுத்துக் கொண்டு தனதாக்கிக் கொள்ளும் ஆசை மூளுகிறது. வெள்ளியென்ற பிரமையிலிருந்து பேராசை பிறக்கிறது. பிரமையேகூட பேராசையைத் தூண்டுவது ஆச்சரியமான விஷயம்தான். இல்லாத ஒன்றைப் பெற்றுவிட ஆசைப்படுவது விந்தைதான்.

எங்கே ஒன்று கிடைக்க வாய்ப்பில்லையோ அங்கெல்லாம் தொட்டுத் தடவி அதைத் தேடுகிறோம். இவ்வுலகில் எத்தனையோ கோடி மனிதர்கள் பிறந்தார்கள். எண்ண முடியாத எண்ணிக்கையில் பிறந்தார்கள். எல்லோருமே பணத்தைத் தேடினார்கள். இறக்கும்போது கையில் ஒன்றுமில்லாத ஏழையாக இறந்தனர். எல்லோரும் பதவிக்கு, அந்தஸ்திற்கு ஆசைப்பட்டார்கள். எல்லோரும் கடைசியில் மண்ணாகிப் போனார்கள். பெரிய சக்ரவர்த்திகள் மண்ணாகி இந்த பூமியில் அமுங்கிக் கிடக்கிறார்கள்.

சுவாங்கத்சு என்ற சீன ஞானி ஒரு கிராமத்திற்குச் சென்று கொண்டிருந்தார். வழியில் மயானம். ஓரிடத்தில் கிடந்த மண்டையோடு அவரது காலை இடறிவிட்டது. அவர் உடனே அதைக் கையிலெடுத்து அதனிடம் மன்னிப்புக் கோரினார். சீடர்கள் ஆச்சரியப்பட்டு காரணம் கேட்டனர்.

சுவாங்கத்சு விளக்கினார். "உங்களுக்குத் தெரியாதா என்ன? இந்த இடம் அந்தஸ்தானவர்களுக்கான மயானபூமி. இங்கே மன்னர்கள். செல்வந்தர்கள். அரசியல் தலைவர்கள்தாம் புதைக்கப் படுகின்றனர். ஆகவே இது சாதாரண மனிதனின் அற்ப மண்டையோடாக இருக்காது. இது யாரோ அந்தஸ்தானவரின் மண்டையோடாகத்தான் இருக்க முடியும்."

சீடர்கள் சிரித்தார்கள்: "குருதேவரே. நல்ல தமாஷ் செய்கிறீர்கள். பெரிய மனிதரோ. சாதாரணமானவரோ. இறந்தபின் எல்லோரது மண்டையோடும் சமம்தானே. எது எப்படியாயினும் உயிரும் உணர்ச்சியுமற்ற மண்டை ஓட்டினிடம் எதற்காக மன்னிப்புக் கேட்க வேண்டும்?"

சுவாங்கத்சு மேலும் விளக்கினார்: "உங்களுக்குத் தெரியாதா என்ன? இதெல்லாம் காலத்தின் கோலம். சில காலம் முன் இந்த மனிதனின் தலையில் என் கால் பட்டிருந்தால் என் தலை தப்பியிருக்க முடியாது. கால இடைவெளி ஏற்பட்டுவிட்டாலும் தலையில் கால் பட்டுவிட்டால் மன்னிப்புக் கேட்கத்தான் வேண்டும். இன்னொரு விஷயத்தையும் யோசித்துப் பாருங்கள். சிறிது காலத்திற்குப் பிறகு எனது மண்டையோடும் எங்காவது ஒரு மயானத்தில் கிடக்கும். எத்தனையோ பேர் காலில் அது படும். யாரும் மன்னிப்புக் கேட்க மாட்டார்கள். அதற்கு என்ன செய்வீர்கள்? வாழ்வின் முடிவில் யாருக்கு என்ன கிடைத்திருக்கிறது? அதைக் கண்டுபிடியுங்கள்."

சுல்தான் மகமூதின் வாழ்க்கையில் நடந்த சம்பவம். அவர் தினமும் இரவில் மாறுவேஷம் தரித்து நகரத்தைப் பார்வையிடச் செல்வார். எங்கே என்ன நடக்கிறது; எங்கு எதற்கு ஏற்பாடு நடக்கிறது என்று ஆராய்வார். குறிப்பாக ஒரு மனிதன் தினமும் நதிக்கரையில் மணலை அலசிக் கொண்டிருப்பதைக் கண்டார். ஒன்றிரண்டு முறை

அவர் அவனிடம், "நள்ளிரவு வரை இங்கு ஏன் மண்ணை அளைந்து கொண்டிருக்கிறாய்?" என்று விசாரித்தார். அதற்கு அவன், "நான் மணலை அலசிக் கொண்டிருக்கிறேன். எப்போதாவது வெள்ளித் துகள் கிடைக்கும். அதைச் சேகரித்து விற்று வாழ்க்கை நடத்துகிறேன்," என்று பதிலளித்தான்.

இப்படிப் பல இரவுகள் அவனைப் பார்த்தபிறகு சுல்தான் இவ்வளவு பாடுபடும் இவனுக்கு எதுவும் கிடைப்பதில்லையே என வருந்தினார். ஓர் இரவு அவர் தான் புஜத்தில் அணிந்திருந்த நகையை மண்ணில் எறிந்துவிட்டுப் போனார். அன்றிரவு மணலை அளைந்த ஏழையின் கையில் அந்த நகை கிடைத்துவிட்டது.

மறுநாள் இரவு சுல்தான் நதிக்கரைக்குச் சென்றார். மணலை அளைபவன் இனி வரமாட்டான் என அவர் நினைத்திருந்தார். ஆனால் அவன் அங்கே இருந்தான்; மும்முரமாக மணலை அலசிக் கொண்டிருந்தான்! சுல்தான் சொன்னார்:

"நான் சுல்தான் மஹ்மூத். என் புஜத்திலிருந்த நகையைத்தான் இந்த மண்ணில் எறிந்தேன். மறைந்து கவனித்த சிப்பாய்கள் உனக்கு அது கிடைத்து விட்டதைத் தெரிவித்தார்கள். நீ அதை நகைக் கடையில் விற்று விட்டாய் என்பதும் அறிந்தேன். அந்த நகையின் மதிப்பு லட்சக் கணக்கான ரூபாயாக இருக்கும். அந்தத் தொகை நீயும், பிள்ளைகளும், குடும்பத்தினரும் வாழ்வதற்குப் போதுமானது. பிறகு நீ ஏன் இன்னும் மண்ணை நோண்டுகிறாய்?"

அந்த மனிதன் சொன்னான்: "மகாராஜா, மண்ணை அலசியதால்தான் புஜ நகை கிடைத்தது. இதுபோல் என்றாவது வேறு ஏதாவது கிடைக்கும். ஆகவே மணலை அலசுவதை நான் நிறுத்தப் போவதில்லை. இதுவே இனிமேலும் எனது வாழ்க்கையாக இருக்கும். எதிர்காலத்திலும் இந்த மணலில் விலையுயர்ந்த பொருள் கிடைக்குமாதலால் நான் என்னைத் தடுத்துக் கொள்ள இயலாது."

மஹ்மூத் தனது சுயசரிதையில் இந்த சம்பவத்தைக் குறிப்பிட்டு எழுதுகிறார், 'அந்த மனிதனின் கருத்து தர்க்கப்படி சரிதான். ஆனால் இந்த உலகில் யாருக்கும் எதுவும் கிடைக்காத நிலையில் நாம் எல்லோரும் எதைத் தேடிக் கொண்டிருக்கிறோம்? மண்ணைத்

துளாவிக் கொண்டிருக்கிறோம். யாருக்காவது எப்பொழுதாவது ஏதாவது கிடைத்ததுண்டா?'

நீ நிறையத் தடவை உபதேசம் கேட்டிருப்பாய். 'பேராசையை விடு மோகத்தை விடு. பற்றை விடு. கோபத்தை விடு. இப்படிச் செய்தால் ஆத்ம ஞானம் கிடைக்கும்' என்பார்கள். ஆனால் நிலைமை எதிர்மாறானது. முதலில் ஆத்மஞானம் வேண்டும். அப்போது பேராசை, மோகம், பற்று, கோபம் ஆகியவை தாமாகவே நீங்கிவிடும். ஒளியை ஏற்படுத்துவதற்காக முதலில் தனியாக இருட்டை நீக்குவது நடைமுறையில் இல்லை. ஒளி (விளக்கு) கொண்டு வா. இருட்டு அதுவாகவே நீங்கிவிடும்.

ஆகவே அஷ்டாவக்கிரர் அறிவுறுத்துகிறார், "ஜனகரே, உமது அறிவிப்பால் உமக்கு ஆத்மஞானம் கிடைத்து விட்டதுபோல் தோன்றுகிறது. எனினும் உள்ளத்தில் ஆராய்ந்து பற்றோ, பழைய பிரமைகளோ சற்றேனும் ஒட்டிக் கொண்டிருக்கிறதா என்று பாருங்கள்."

ஏனென்றால், நீ தினமும் கனவு கண்டு நிஜமென நம்பினாலும் காலையில் விழித்ததும் கனவைப் பொய் என்றே கூறுவாய். காலையில் இந்த விஷயத்தில் நீ ஞானியாகி விடுகிறாய். கண்ட கனவிற்கு அர்த்தம் எதுவும் கிடையாது என்கிறாய். அவ்வாறு சொன்னது நினைவிலிருப்பதில்லை. மறுபடியும் இரவு வரும். நீ தூங்குவாய். மறுபடியும் கனவு காண்பாய். காலையில் அதைப் பொய் என்பாய் தினமும் நடக்கும் கூத்து இது. இதுபோலவே ஆத்மஞானம் கிடைத்து விட்டதாக நினைப்பதும் அறிவிப்பதும் பிறகு பொய்யெனத் தெரிய வரலாம்.

ஒரு காதலன். அவனுக்கு மூன்றாம் முறையாகக் காதல் உண்டாகியிருக்கிறது! அதை அவன் தன் மூன்றாம் காதலியான மாலதியிடம் ஒப்புக் கொள்கிறான். "முன்பு எனக்கு ஏற்பட்ட காதல்களின் நினைவு உள்ளது. இதற்கு முன்பும் வேறு 'மாலதி'கள் வந்து ஏமாற்றிவிட்டுப் போயிருக்கிறார்கள். இப்போது மூன்றாவது காதல் பிரமை என் வாழ்க்கையில் குறுக்கிடுகிறது." என்கிறான்.

**என் இனிய மாலதி!**
**இது மூன்றாவது காதல் மோசடி!**
**நான் மீண்டும் இன்னொரு முறை**

**இந்த பிரமையின் வசப்பட்டுள்ளேன்**
**நான் தயங்கினேன், மிகவும் தயங்கினேன்**
**ஆனால் உன் அழகு என் கண்களில் பதிந்துவிட்டது**
**இந்த ஆசை ஒரு மோசடி என அறிவேன்**
**இதெல்லாம் பொய், இதெல்லாம் கனவு**
**என்பதும் நான் அறிந்துள்ளேன்**
**ஆனால் இந்த பிரமை தவிர**
**வேறொன்றும் எனக்கு ஆதாரமில்லை**
**கனவுகளின்றி வாழ்க்கையில்லை**
**உன்போல் அழகு தேவதையின்றி**
**காதல் பித்தன் நான் வாழ வழியில்லை**
**நான் மீண்டும் காதல் மோசடிக்காளானேன்**
**இது மூன்றாம் முறை ஏற்பட்டுள்ள பிரமை, மாலதி!**

மூன்றாவது என்ன, முப்பதாவது, முந்நூறாவது, மூவாயிரத்து முறையாக இந்த ஏமாற்று வேலை, பிரமை தொடர்கிறது.

ஜனகரை அஷ்டாவக்கிரர் குறுக்கு விசாரணை செய்கிறார். "நீர் ஞான விழிப்பு பெற்று விட்டதாகச் சொல்வது காலையில் விழிப்பவன் கனவில் கண்டது பொய் என்கிறானே அது போல் இல்லையே. நான் போனதும் மறுபடியும் தூங்கி விடுவீரா? இதுவரை தூங்கியதுதானே கடைசித் தூக்கம்? இப்போது ஏற்பட்டுள்ள விழிப்பு இறுதியாக நிரந்தரமானதுதானே? உமக்கு பிரமை நீங்கியதாகச் சொல்வதே ஒரு பிரமையாக இருக்குமோ? வெளியே நிலம் வெற்றிடமாக இருந்தாலும் ஆழத்தில் விதைகள் இருந்தால் ஒருநாள் தலைதூக்கிவிடும்.

காலையில் எழுந்த பிறகு கனவு கலைந்து விட்டதை உணர்கிறோம். ஆனால் கனவின் விதைகள் அழியவில்லை. பகலில் அவை மனவயலின் ஆழத்தில் கிடக்கின்றன. பருவ காலம் வந்து, மழை பெய்ததும் முளைக்கும் விதைகளைப் போல் இந்த விதைகளும் இரவானதும் கனவாக முளைக்கின்றன. காலையில் கனவு அழிவதால் பலனில்லை. கனவின் விதைகள் சூடாகி முற்றிலும் அழியவேண்டும்.

பணத்தாசை, பதவி மோகம், கௌரவம் பெற விருப்பம் என எத்தனையோ விதைகள். இவற்றை மனத்தினுள் எங்காவது புதைந்துள்ளனவா என்று தேட வேண்டும். இவை நுண்ணிய அளவில் இருந்தாலும் அலட்சியம் செய்யலாகாது. விதை சிறியதாகத்தான்

இருக்கும். அதிலிருந்து மரம் பெரிதாக வளர்கிறது. ஆகவே மரங்கள் கண்ணுக்குத் தெரிந்து விடுகின்றன. விதைகளையோ தேடித்தான் கண்டுபிடிக்கலாம். விதைகள் சூடாகி அழியாத வரையிலும் பிரமை யிலிருந்து வெளியேறி விட்டதாகப் புதிதாகப் பிரமை கொள்ளாதே.

'உலகம் என்ற அலைகள் மோதும் ஆத்மா என்னும் மாகடல் நான்தான். இதை அறிந்த பிறகும் நீ ஏன் பரிதாபத்துக்குரியவனைப் போல் அலைகிறாய்?'

மனித வாழ்க்கையில் பரிதாபத்துக்குரிய விஷயம் ஆசைப்படுதல். ஏனெனில் ஆசை மனிதனைப் பிச்சைக்காரனாக்கி விடுகிறது. ஆசைக்கு இரண்டு அர்த்தம். முதல் அர்த்தம் – 'என் பை காலியாக உள்ளது. அதை நிரப்புங்கள். யார் வேண்டுமானாலும் நிரப்புங்கள்.' இரண்டாம் அர்த்தம் – யாசிப்பது. 'நான் எப்படி உள்ளேனோ அது போதவில்லை. நான் எப்படி உள்ளேனோ அதில் எனக்கு பூரண திருப்தி ஏற்படவில்லை.'

**ஆ**க்ரா அருகே கிராமத்தில ஃபரீத் என்ற நல்ல மனிதர். அவ்வூர் மக்கள் அவரை அணுகி, "நீங்களும் அக்பரும் ஒருவரை ஒருவர் அறிந்துள்ளீர்கள். ஆகவே நீங்கள் அக்பரிடம் சென்று நம் ஊரில் ஒரு பள்ளிக்கூடம் கட்டித்தரச் சொல்லுங்கள். இப்பகுதி மக்கள் ஏழை யானதால் கட்ட முடியாது. ஊர்ப் பிள்ளைகளோ படிக்க ஆவலா யிருக்கிறார்கள்."

விந்தையான விஷயம் என்னவென்றால் ஃபரீத் அதுவரை அரண்மனைக்குச் சென்றதில்லை. அக்பர்தான் அவரைப் பார்க்க வருவது வழக்கம். ஆனால் நமக்கு ஒன்று வேண்டுமென்றால் அது கிடைக்கின்ற இடத்திற்கு நாம்தான் போக வேண்டும் என்றபடி ஃபரீத் அரண்மனைக்குச் சென்றார். அதிகாலையிலேயே அங்கு சென்றுவிட்டார். ஏனெனில் ஒருவரிடம் ஒன்றைக் கேட்டுப்பெற வேண்டுமானால் காலையிலேயே போய்க் கேட்டுவிட வேண்டும். தாமதித்தால் நேரம் ஆக ஆக மாலை நேரத்தை நெருங்குகையில் நாம் கேட்கவுள்ள மனிதன் கோபத்தாலும் கவலைகளாலும் நிரம்பி விடுவான். இந்நிலையில் கொடுக்கும் பேச்சு எங்கே எழும்? நம்மிடம் இருப்பதை அவன் பிடுங்கிக் கொள்ளாமல் இருந்தால் சரி. ஆகவே

தான் பிச்சைக்காரர்கள் அதிகாலையிலேயே கிளம்பி விடுகிறார்கள்! நீ பிச்சை போடுவாய் என எதிர்பார்க்கிறார்கள். காலையில் நீ புத்துணர்ச்சியுடன் இருப்பாய். இரவு ஓய்வுக்குப் பின் எழுந்திருக்கிறாய். விடியலின்போது வாழ்க்கை பாரமாக இருப்பதில்லை. கோபம் அதிகமாக மூள்வதில்லை. மாலை நேரத்தை நெருங்கும்போது நீ களைத்துப் போயிருப்பாய்.

ஃபரீத் அரண்மனையை அடைந்த போது அக்பர் தமது பிரத்தியேகமான மசூதியில் பிரார்த்தனையில் இருந்தார். ஃபரீத்து அக்பருக்கு வேண்டியவர் என்பதால் அவரை உள்ளே செல்ல விட்டார்கள். அவர் அக்பருக்குப் பின்னால் நின்று கொண்டார். நமாஸ் முடித்தபின் அக்பர் கைகளைத் தூக்கி விரித்து வரம் வேண்டினார், "ஆண்டவரே, எனக்கு மேலும் செல்வம் கொடுங்கள்; சொத்து கொடுங்கள்; என் பேரரசின் எல்லையை மேலும் விரிவாக்கி உதவுங்கள்."

அக்பரின் பரிதாபத் தோற்றம் கண்டு ஃபரீத்தின் கண்கள் குளமாயின. 'இவரா மாபெரும் சக்கரவர்த்தி? இவரைவிட நாமே தேவலையே. கடவுள் என்னிடம் பல குறைகள் கண்டுபிடிக்கலாம். ஆனால் அவரிடம் எதையும் யாசித்திருக்கிறேன் என்று என்மீது குற்றம்சாட்ட முடியாது.' இவ்வாறு நினைத்த ஃபரீத்திற்குப் பள்ளிக்கூடம் கட்ட அக்பரின் உதவி கேட்பது பற்றி ஞாபகம் வந்தது. ஆனால் பொருளுதவி கேட்டால் அக்பரை ஏழையாக்கி விடுவதாகுமே. அவரது செல்வம் கொஞ்சம் குறைந்துவிடுமே. சக்கரவர்த்தியாக இருந்தும் இப்படி பரிதாபமாக பரமஏழை போல் 'இது வேண்டும் – அது வேண்டும்' என்று கேட்கிறாரே! எல்லாம் இருந்தும் பயன்? பிச்சைக்கார மனம் சுலபத்தில் நீங்குவதில்லை.

உலகில் இரண்டு வகைப் பிச்சைக்காரர்கள் – ஏழைப் பிச்சைக் காரர்கள், பணக்காரப் பிச்சைக்காரர்கள்! ஏழைப் பிச்சைக்காரர்களை மன்னிக்கலாம். ஆனால் பணக்காரர்களும் பிச்சை கேட்டால் எப்படி மன்னிப்பது?'

ஃபரீத் திரும்பி நடந்தார். அக்பர் அவர் படியிறங்கிச் செல்வதைப் பார்த்து விட்டார். அவரை அழைத்து, "எப்போது வந்தீர்கள்? சொல்லிக் கொள்ளாமல் புறப்படுகின்றீர்களே. நீங்கள்

இப்பக்கம் வந்ததே கிடையாதே. வாருங்கள். அரண்மனைக்குள் விஜயம் செய்யுங்கள்'' என்றார்.

ஃபரீத் சொன்னார். "ஒரு விஷயமாக வந்தேன். அது தவறான எண்ணம் என்று தெரிந்து கொண்டேன். பிழை நேர்ந்து விட்டது. என் மீதுதான் தப்பு. உங்களைக் குறை கூற முடியாது.''

அக்பருக்குக் குழப்பமேற்பட்டது. "என்ன நடந்தது? நானும் விஷயத்தைத் தெரிந்து கொள்ள வேண்டாமா? விடுகதை மாதிரிப் பேசினால் எப்படிப் புரியும்?'' என்று அவர் பதறினார்.

ஃபரீத் விளக்கினார்: "என் ஊர் மக்கள் மடையர்கள். நீங்கள் பேரரசர் என்பதால் உங்களிடம் செல்வம் கொட்டிக் கிடப்பதாக நினைத்து என்னையும் பிரமையில் ஆழ்த்தி விட்டனர். அதை நம்பி நானும் இங்கே கிளம்பி வந்தேன். மடையர்களோடு நட்பு கூடாது. நான் உங்களிடம் ஒரு வேண்டுகோளை நிறைவேற்றித் தர வேண்டும் என்று கேட்க வந்தேன். உங்கள் மூலம் ஊரில் ஒரு பள்ளிக்கூடத்தை ஏற்படுத்த உதவி கேட்குமாறு ஊர்மக்கள் என்னை அனுப்பினர். ஆனால் உங்கள் நிலைமையே மோசமாக உள்ளதே! நீங்கள் பரிதாபமான நிலையில் அல்லவா இருக்கிறீர்கள்? ஆகவே என் வேண்டுகோளை நிறைவேற்றச் சொல்ல மாட்டேன். என்னிடம் பணம் இருந்தால் உமக்குக் கொடுத்து உதவுவேன். என்னிடம் எதுவும் இல்லை. உங்கள் நிலைமை மோசமாக உள்ளது. திவால் ஆனவன் போல் பிரார்த்தனை செய்து செல்வம் கேட்டுக் கொண்டிருந்தீர்கள். நான் சக்கரவர்த்தியைத்தான் சந்திக்க வந்தேன்; பிச்சைக்காரரை அல்ல.''

அஷ்டவக்கிரர் சொல்கிறார்: "உலகம் என்ற அலைகள் மோதும் மாகடல் நான்தான் என்பதை அறிந்தும்கூட நீ ஏன் பரிதாபத்துக் குரியவனாக ஓடி அலைகிறாய்?'

கொஞ்சம் உள்முகமாகப் பார். இன்னும் ஓட்டம் மிஞ்சியுள்ளதா? ஏதாவது வேண்டுமென்ற ஏக்கம் உள்ளதா? ஏதாவது கோரிக்கை எஞ்சியுள்ளதா? ஏனெனில் பரமாத்மா கிடைத்து விட்டார் என்றால் மேற்கொண்டு பெறுவதற்கு எதுவுமிராது. கிடைக்க வேண்டியது கிடைத்து விட்டது. இறுதிப் பொருள் கிடைத்து விட்டது. அதைக் கடந்து கிடைக்க வேண்டியது எதுவுமில்லை. இதற்கப்புறமும் ஏதோ

கிடைக்க வேண்டியுள்ளதாக நீ நினைத்தால், உனக்கு இன்னமும் இறைவன் கிடைக்கவில்லை என்று அர்த்தம். நீ வார்த்தை ஜாலங்களில் சிக்கிக்கொண்டு விட்டாய். குருவின் பாதிப்பிற்கு உள்ளாகி அவரது உபதேசத்தில் மயங்கி விட்டாய் என்று அர்த்தம்.

மனத்தின் போக்கு விசித்திரமானது. ஒருவன் நம்மைப் பற்றிச் சொல்லும் நல்ல விஷயங்களை, நம்மைப் பாராட்டுவதை, நமது மனம் சட்டென்று ஏற்றுக் கொள்கிறது. யாராவது நம்மிடம் வந்து, 'நீங்கள் கடவுளைப் போல' என்று சொன்னால் யார் மறுக்க விரும்புவார்கள்? ஏனென்றால் இதனால் நமது அகங்காரத்திற்கு திருப்தியாக இருக்கிறது. "நீ சுத்தர், நீ புத்தர்" என்று ஒரு முட்டாளிடம் சொன்னால்கூட அதை அவன் மறுக்க மாட்டான். அவன் ஆமோதித்து, "நீங்க சொல்றது சரிதான். இப்போதாவது என்னைப் புரிந்து கொண்டீர்களே, இதுவரை யாரும் என்னைச் சரியாக அடையாளம் கண்டுகொள்ளவில்லை. அறிவில்லாதவர்கள். ஆனால் நீங்கள் புத்திசாலி. ஆகவே என்னைத் தெரிந்து கொண்டீர்கள்," என்பான்.

ஞானம் கிடைத்து விட்டதாக நீ செய்யும் அறிவிப்புகள் அகங்காரத்தை ஆதாரமாகக் கொண்டவையாக இருக்கலாமல்லவா? அவை பிரியமானவையாகவும் இருப்பதால் உன் மனம் ஒப்புக் கொண்டிருக்கலாம். கசப்பான விஷயங்களை யார் ஒப்புக் கொள்ள விரும்புவார்கள்? உன்னை ஒருவன் பாவி என்று சொன்னால் கோபம் வரத்தானே செய்கிறது? ஆனால் உன்னை புண்ணியவான் என்று சொன்னால் நீ அதை சுவீகரிக்கிறாய். உன்னை பாவி என்று சொன்னது உண்மைக்கு அதிகம் நெருக்கமாயிருக்கும்.

**டா**ல்ஸ்டாய் தமது சுயசரிதையில் ஒருமுறை அதிகாலையில் அவர் சர்ச்சுக்குப் போனபோது ஏற்பட்ட அனுபவத்தை எழுதியுள்ளார். இருள் பிரியாத அந்த அதிகாலை நேரத்தில் கிராமத்திலேயே பெரிய பணக்காரர் பிரார்த்தனை செய்து கொண்டிருந்தார். இவர்கூட வழிபடுகிறாரே என்று டால்ஸ்டாய் ஆச்சரியப்பட்டார். பின்னால் நின்றுகொண்டு என்ன வரம் வேண்டுகிறார் என்று கவனித்தார். தன் பின்னால் டால்ஸ்டாய் நிற்பது பணக்காரருக்குத் தெரியாது. யாருமில்லை என நினைத்துப் பணக்காரர் உரத்த குரலில் சொன்னார், 'ஹே பிரபு! நான் மகாபாவி. உலகில் என்னைப் போன்ற பாவி யாரும்

கிடையாது.' அடுத்து, அவர் இதுவரை என்ன என்ன பாவங்களைச் செய்துள்ளாரோ அதையெல்லாம் சொன்னார். அவர் பாவ மன்னிப்புக் கேட்கிறார் என்று டால்ஸ்டாய்க்குப் புரிந்தது.

அதே சமயம் பொழுது விடிந்தது. பணக்காரர் தனக்குப் பின்னால் யாரோ நிற்பதை உணர்ந்தார். திரும்பிப் பார்த்தார். தன் ஊர்க்காரரான டால்ஸ்டாய்! அவர் டால்ஸ்டாயிடம் சொன்னார்: "நான் இங்கு சொன்னது யாருக்கும் தெரிய வேண்டாம். இது எனக்கும் கடவுளுக்கும் இடையிலான விஷயம். நீ கேட்டதையெல்லாம் மறந்துவிடு. இது யாருக்காவது தெரியவந்தால் அது உன் வேலையாகத்தான் இருக்க முடியும் என்பதால் உன்மீது அவதூறு வழக்குத் தொடருவேன்."

டால்ஸ்டாய் கேட்டார், "உங்கள் பேச்சு பிரமாதம்! கடவுள் சந்நிதியில் உங்கள் செய்கைகளை வெளிப்படையாகச் சொல்கிறீர்கள். ஆனால் மனிதர்களிடம் ஏன் பயப்படுகிறீர்கள்?"

பணக்காரருக்குக் கோபம் வந்துவிட்டது. "நீ இந்த விஷயத்தில் தலையிடாதே. இங்கே உன்னைத் தவிர யாரும் இல்லாததால், நீ யாரிடமாவது சொன்னால் அல்லது எங்கிருந்தாவது நான் பேசியது திரும்பி வந்தால் உன்னைத்தான் பிடித்துக் கொள்வேன். இது எனக்கும் கடவுளுக்கும் இடையிலான தனிப்பட்ட விஷயம். இது மற்றவர்கள் அறிய வேண்டிய பொது விஷயமில்லை," என்று மிரட்டினார்.

இவ்வாறாக, நாம் செய்த பாவத்தை உரக்கச் சொல்லாமல் கடவுளுக்கும் நமக்கும் இடையிலான விஷயம் அது என்கிறோம். புண்ணியச் செயல் புரிந்தால் உலகெங்கும் அதை அறிவிக்க விரும்புகிறோம். ஆனால் நற்செய்கையை நமக்குள் வைத்துக் கொண்டு, தவறான செயலை வெளியில் சொல்லி மன்னிப்புக் கோர வேண்டும். புண்ணிய விஷயம் நமக்கும் கடவுளுக்கும் இடையிலானது. பாவம் வெளி உலகத்துடன் சம்பந்தப்பட்டது. அதை மக்களுக்கு அறிவிக்க வேண்டும்.

அஷ்டாவக்கிரர் எச்சரிக்கிறார் — சுவையான ஆன்மிக விஷயங்கள், இனிமையான தத்துவங்கள், வேதங்களின் சாரம், உபநிஷதங்களின் சாரம் இவையெல்லாம் உனக்கு நிச்சயமாகப்

பிடித்தவையாக இருக்கும். ஆனால் இனிமையானவை எல்லாம் உண்மையாகவும் இருக்க வேண்டும் என்ற கட்டாயமில்லை.

மனிதனுக்கு மரண பயம் உள்ளது. ஆகவே அவன் ஆத்மாவிற்குச் சாவு இல்லை, அது நிரந்தரமானது என்று சொன்னால் உடனே ஏற்றுக் கொள்கிறான். மரண பயம் அவ்வாறு நினைக்கச் செய்கிறதே தவிர ஆத்மா பற்றிய சுயசிந்தனை எத்தனை பேருக்கு உண்டு?

நம் நாடாகிய பாரதம் முழுவதும் ஆத்மா அழிவற்றது என்னும் நம்பிக்கை நிலவுகிறது. அதே சமயம் இதைவிடக் கோழையான நாடு ஒன்றைத் தேடிப் பிடிப்பது கடினம். ஆத்மா அழியாதது எனபோரை யாரும் அடிமைப்படுத்த முடியுமா? ஆனால் ஆயிரம் ஆண்டாக அடிமைப்பட்டுக் கிடந்த தேசம் இது.

ஆத்மா அழிவற்றது என்னும் கொள்கையை நாம் கெட்டியாகப் பிடித்து வைத்துக் கொண்டிருக்கக் காரணம் நமக்குள்ள சாவு பயம்தான். இக்கொள்கை நமக்குக் கவசமாக உள்ளது. ஆனால் இக்கொள்கை சுய அனுபவத்தால் அறியப்படவில்லை. அனுபவ பூர்வமாக நம் மக்கள் அறிந்திருந்தால் இத்தேசத்தை அடிமைப் படுத்தியிருக்க முடியாது; நசுக்கியிருக்க முடியாது. ஏனெனில் அழியாத ஆத்மாவைப் பெற்றவர்களை நீ அடக்க முடியுமா? கொன்று போடுவேன் என்று பயமுறுத்தத்தான் முடியும்.

நிலைமை எதிரிடையாக உள்ளது. பயந்த மனிதர்கள், சாவச்சமுள்ள மனிதர்ள் 'ஆத்மா அழிவதில்லை' என்று ஜபம் செய்கிறார்கள். அற்பத்தில் ஆழ்ந்து கிடக்கும் மனிதர்கள் பிரம்மாண்டம் பற்றி அறிவிப்புச் செய்கிறார்கள். இப்படி பிரம்மாண்டம் பற்றிப் பேசுவது தங்கள் அற்பத்தனத்தை மறைப்பதற்கான முயற்சியாக இருக்கலாம் அல்லவா? புண்ணியம் பற்றி விவாதிப்பது பாபத்தை மறைப்பதற்கான தந்திரமாக இருக்கலாம் அல்லவா?

அஷ்டாவக்கிரர் வியக்கிறார் – பேரழகும், பரிசுத்தமும், தன்னுணர்வும் பொருந்திய ஆத்மாவின் தன்மை பற்றிக் கேள்விப் பட்ட பிறகும்கூட மனிதனால் பற்றுகளில் பிடிப்புக்கொண்டு மாசடைந்தவனாக எப்படி ஆக முடிகிறது?

கேட்டும்கூட என்பது முக்கியமான சொல். காதால் கேட்பதால் மட்டும் ஞானம் கிடைத்துவிடாது. ஞானம் என்பது சுய அனுபவத்தில் கிடைக்கிறது. இந்துக்கள் சாஸ்திரங்களை ச்ருதி, ஸ்ம்ருதி என்று இரண்டாகப் பிரித்தனர் ச்ருதி என்றால் 'கேட்ட, கேள்விப்படுகின்ற, கேட்கின்ற' என்று பொருள். ஸ்ம்ருதி என்றால் ஞாபகத்தில் வைக்கப் பட்ட, மனப்பாடம் செய்யப்பட்ட என்று பொருள். ஆனால் இரண்டு வகையுமே 'அறியப்பட்ட' என்று பொருள் தரவில்லை. ஆகவே ச்ருதியாலும் ஞானம் கிடைக்காது, ஸ்ம்ருதியாலும் ஞானம் கிடைக்காது.

ஆத்மா பேரெழில் வாய்ந்தது என்று கேள்விப்படுவதை மட்டும் வைத்துக் கொண்டு பிரமைவசப்பட வேண்டாம். அப்படியே ஒப்புக் கொள்ள வேண்டியதில்லை. சுய அனுபவத்தில் அறியாத வரையிலும் அவ்வாறு ஏற்க வேண்டாம். இல்லாவிடில் உன் ஏற்பு மேலோட்டமானதாகவே இருக்கும். ஆத்மா பேரழகு வாய்ந்தது என்று சொல்வாய். அது வாய்ப்பேச்சாக மட்டும் இருக்கும். ஏனெனில் உன் வாழ்க்கையில் பழைய சீழ், புலன் விஷயங்களில் பற்று, ஆசைகளின் ரணங்கள் நீடிக்கும். அவற்றிலிருந்து ஊனீர் கசியும்.

கேட்போர் நிறைய உண்டு. கேள்விப்பட்டதை ஏற்பவர்களும் நிறைய உண்டு. ஆனால் அவர்களது வாழ்க்கையைப் பார். நாளுக்கு நாள் அவர்களது வாழ்க்கை மாசடைந்து கொண்டே போகிறது. ஏமாற்றமும் பிரமையும் தொடர்ந்து வருகின்றன.

இனிமேல் கோபப்படவே கூடாது என்று எத்தனையோ முறை நீ முடிவு செய்திருப்பாய். கோபப்படுவது பாவச் செயல்; கோபம் ஒரு விஷம்; கோபப்படுவதால் எந்த லாபமும் இல்லை என்று கேள்விப் பட்டிருப்பாய்; நீயும் அறிவாய். ஆனால் கோபம் மூளும்போது இதெல்லாம் நினைவில் இருப்பதில்லை. கோபச் சூறாவளியில் உன் சுய உணர்வை இழந்து விடுகிறாய். உன் உள்ளத்தின் அமைதித் தோட்டத்தை அழித்துப் போட்டுவிட்டுக் கோபம் சென்ற பிறகு அதன் தீமைகள் ஞாபகத்திற்கு வந்து உன் இயலாமைக்காக வருந்துகிறாய். வருமுன் காக்க ஏற்பாடு செய்யாமல், பறவைகள் வயலில் தானியத்தை நாசம் செய்தபின் வருந்துவதால் என்ன பயன்? சிறிது இடைவெளிக்குப் பிறகு மறுபடியும் கோபம் வருகிறது. கோபப்பட்டபின் மறுபடியும்

வருந்துகிறாய். இதுவே பழக்கமாகிவிட்டது. கோபமும் பரிதாபப் படுதலும் நண்பர்களாகி விட்டன. இரண்டிற்கும் இடையே வேறுபாடும் மறைந்து விட்டது. உன் பச்சாதாபம் கோபத்தைத் தடுக்க முடிந்த தில்லை. கோபத்தை நீ இதுவரை பார்த்ததில்லை. அது கெடுதலானது என்பது கேள்வி ஞானம்தான் இது உனது சொந்தமான ஆத்ம தரிசனம் அன்று.

**ஸ்**ராவஸ்தி என்றொரு நகரம். இந்தியாவில் செல்வச் செழிப்பு மிகுந்த நகரம். அவ்வூரில் செல்வத்தில் முதலிடம் பெற்ற வணிகரின் பெயர் சேட் மிருகார். அவரது மருமகள் பெயர் விசாகா. அவ்வூருக்கு புத்தர் விஜயம் செய்திருந்தார். விசாகா அவரது உபதேசம் கேட்கச் செல்வது வழக்கம். ஆனால் மிருகார் ஒருபொழுதும் உபதேசம் கேட்கச் சென்றதில்லை. அவர் பணவெறி கொண்டவராக இருந்தான்.

விசாகா தன் மாமனாருக்குச் சிறப்பாகப் பணிவிடை செய்தாள். அவருக்கு அவளேதான் உணவு தயாரிப்பாள். மாமனாருக்கு வயதாகி வந்தபோதிலும் புத்தரின் உபதேசத்தை இதுவரை அவர் கேட்டதில்லையே என்று விசாகா வருந்தினாள். மாமனாரின் வாழ்க்கை பணம், பதவி, அந்தஸ்து என்றே கழிந்து கொண்டிருப்பது, கடலில் சென்று கலக்காமல் நதி வழியில் மணலிலேயே வற்றிவிட்டது போல் விசாகாவிற்குத் தோன்றியது.

ஒருநாள், மிருகார் சாப்பிட உட்கார்ந்தார். விசாகா, உணவு பரிமாறியபடியே, "அப்பா, சாப்பாடு ருசியாக இருக்கிறதா?" என்று விசாரித்தாள்.

"நீ எப்பொழுதுமே சுவையாகத்தான் உணவு தயாரிக்கிறாய். ஆனால் இதுவரை என் அபிப்பிராயம் கேட்டதில்லையே." – மிருகார் பதிலளித்தார்.

"உங்கள் மனசுதான் காரணம். அதனால் சாப்பாடு ருசியாக உள்ளதுபோல் தோன்றுகிறது. ஆனால் இதெல்லாம் பழசாகிப்போன உணவு. இந்த உணவைத்தான் உங்களுக்குக் கொடுக்க நேரிடுகிறது." என்று விசாகா வருத்தத்துடன் கூறினாள்.

மிருகாரால் நம்ப முடியவில்லை, "உனக்கு என்ன பைத்தியமா? இதுவா பழைய உணவு? நீ என்றைக்கும் பழைய உணவு பரிமாறவே

தேவைப்படாதே. வீட்டில் தானியங்களும் பலசரக்கும் கொட்டிக் கிடக்கிறதே. சமையலுக்கு வேண்டிய எப்பொருளும் உனக்குப் புதிதாகக் கிடைக்கிறதே. இங்கே பழைய சோறு என்ற பேச்சே கிடையாதே,'' என்றார் அவர்.

விசாகா விளக்கினாள்: ''நான் அந்த அர்த்தத்தில் சொல்ல வில்லை. உங்களுக்கு என் பேச்சு புரியவில்லை. வீட்டில் தனதான்யம் நிறைந்திருப்பதற்குக் காரணம் சென்ற பிறவியில் உங்கள் புண்ணியச் செயல்களே. ஆனால் இப்பிறவியில் நீங்கள் புண்ணியச் செயல்புரிந்து நான் பார்த்ததில்லை. ஆகவேதான் இதெல்லாம் பழசு என்கிறேன். சென்ற பிறவிகளில் நீங்கள் செய்த புண்ணியச் செயல்களால் இப்பிறவியில் கோடீஸ்வரராக உள்ளீர்கள். நான் இங்கு மருமகளாக வந்ததிலிருந்து பார்க்கிறேன். நீங்கள் நற்செயல் புரிந்ததில்லை. அன்பு, பரிவு, அறம், பூஜை, பிரார்த்தனை, தியானம் ஆகியவற்றை நீங்கள் மேற்கொண்டும் நான் பார்த்ததில்லை. ஆகவேதான் சென்ற பிறவியில் சேமித்த புண்ணியத்தால் கிடைத்த இப்பிறவி வாழ்க்கை வசதிகளைப் பழைய சோறு என்கிறேன். நீங்கள் புத்தம் புதிய உணவு எப்பொழு திலிருந்து சாப்பிடுவதாக உத்தேசித்திருக்கிறீர்கள் என்பது தெரியவில்லை.''

மிருகார் திடுக்கிட்டார். பாதிச் சாப்பாட்டிலேயே எழுந்து விட்டார். இரவு முழுவதும் அவரால் தூங்க முடியவில்லை. மருமகள் சொன்னது சரி என்று உணர்ந்தார். அப்பேச்சால் மனத்தில் ஆழமான பாதிப்பை உணர்ந்தார். மறுநாள் அவர் புத்தரின் தங்குமிடத்திற்கு வந்து உபதேசம் கேட்டதை விசாகா கவனித்தாள். தினமும் உபதேசம் கேட்டு மிருகாரும் ஞானப் பேச்சுகள் பேசலானார். ஆனால் அவரது வாழ்க்கை முன்பு போலவேதான் இருந்தது.

ஒருநாள் விசாகா அவரிடம் வந்து, ''அப்பா, நீங்கள் இன்னமும் பழையதுதான் சாப்பிட்டுக் கொண்டிருக்கிறீர்கள். இப்பொழுது பழைய ஞானத்தை ஏற்றுவருகிறீர்கள். உங்களது ஞானப்பேச்சு சுயமானதன்று; புத்தரது பேச்சு. அவர் பேச்சைக் கேட்டு அதையே திருப்பிச் சொல்கிறீர்கள். சுயமாக உணர்ந்து அதை எப்பொழுது சொல்லப் போகிறீர்கள்? உங்கள் உயிரில் கலந்து நிற்கின்ற கீதம் என்றைக்கு வெளிப்படும்? உங்களுக்குள் ஓர் அருவி அடைந்து கிடக்கிறது. அதைப் பெருக்கெடுத்து ஓடச்செய்யுங்கள்.

"உங்களிடமுள்ள் பணம் பழையது. உங்கள் ஞானம் நாட்பட்டது. இப்படி மட்கியதை வைத்திருப்பது பாபம். எல்லா பாபங்களும் ஊசிப் போனவைதாம். புண்ணியம்தான் எப்பொழுதும் புதுமலர்ச்சியுடன் விளங்கும்; இப்போதுதான் குளித்து வந்ததுபோல் இருக்கும். சமீபத்தில் பெய்த மழையில் புதிதாகத் தலைநிமிர்ந்த மலர், இப்போதுதான் உதித்த சூரியனின் கிரணங்களின் ஊடே நடனமாடுகின்ற பசுமையான இலைகள் – இவை போன்றது புண்ணியம்."

காதால் கேட்கின்ற ஞானத்தை அப்படியே முழுமையாக ஒப்புக் கொண்டு விடாதே. அதைத் திருப்பி ஒப்பிக்காதே. நீ சுயமாக ஒன்றை உணரும் வரை தொடர்ந்து முயலு.

அஷ்டாவக்கிரர் சொல்கிறார்: "எல்லா உயிர்களிலும் ஆத்மாவும், ஆத்மாவில் எலலா உயிர்களும் நிலைபெற்றுள்ளதை அறிந்தும் முனிவர்கள்கூட பாசநேசத்திற்கு ஆளாகிறார்கள் என்பது அதிசயம். ஆகவே, ஜனகரே, ஞானம் பெற்றுவிட்டதாக அவசரப்பட்டுச் சொல்லாதீர். எத்தனையோ சந்நியாசிகள் தங்களுக்குப் பாசம்—பற்று கிடையாது; எல்லாவற்றையும் கைவிட்டாயிற்று என்பார்கள். ஆனால் பெரும்பாலும் இது மேலோட்டமான பேச்சு. ஜனகரே, நீரும் அத்தகைய முனிவர் ஆகிவிடாதீர்."

**ஜைன**ப் பெண் துறவி ஒருவர் (ஸாத்வீ) நான் தில்லியில் இருந்தபோது சந்திக்க வந்தார். என் விளக்கங்களைக் கேட்ட அவர் இதுவரை தான் ஒரு வலையில் அகப்பட்டுக் கொண்டிருந்தது போலவும், இப்போது அதிலிருந்து தப்பித்து வெளியே வந்துவிட்டது போல் இருப்பதாகவும் சொன்னார். இந்த விஷயத்தைத் தன் குருவிடம் முதலில் தெரிவிக்கச் சொல்லி அனுப்பி விட்டேன். இதை அறிந்து குருவிற்குக் கோபம் வந்துவிட்டது. அவர் என்னைச் சந்தித்த போது கோபத்தால் உசிதமற்றதைப் பேசினார். அந்த ஸாத்வீ விலகிச் சென்றால் தமது சம்பிரதாயத்திற்குக் கெட்ட பெயர் ஏற்படும் என்றார். அந்த ஸாத்வீயிடம் தமக்கு மிகுந்த பாசமுண்டு என்றும், அவள்தான் முதுமையில் தமக்கு ஆதரவு என்றும் தெரிவித்தார். அப்போதே அவர் வயதானவராகத்தான் இருந்தார்.

நான் சொன்னேன்: "இல்லறத்தில் இருப்பவர்கள் பேசுவது போலல்லவா உங்கள் பேச்சு உள்ளது! குடும்ப வாழ்க்கை நடத்துபவர்களில் தந்தை மகனை முதுமையில் தமக்கு ஆதரவு என்பார். தாயார் மகளை முதுமையில் தமக்கு ஆதரவு என்பார். ஆகவே நீங்கள் பேசிய விதம் துறவியாகிய உங்களுக்கு அழகன்று. உங்களது சம்பிரதாயமென்ற வலையிலிருந்து வெளியேறுவதால் தனக்கு வாழ்க்கையில் சுதந்திரம் கிடைக்கும் என்று அந்த ஸாத்வீக்குத் தோன்றினால் அவரை ஆசீர்வதித்துப் போக விடுங்கள். ஆனால் இவள் மீது உங்களுக்குப் பாசம் என்றால் அந்தப் பாசம்தான் உங்களுடைய பிரச்சினை என்பதைப் புரிந்து கொள்ளுங்கள். அந்தச் சிக்கலை அவிழ்க்க முயலுங்கள். இறப்பதற்கு முன் பாச உணர்ச்சியிலிருந்து தப்பிவிடுங்கள்."

துறவி அதிர்ச்சியடைந்தார். பிறகு கூறினார், "நீங்கள் சொன்னது சரிதான். பாசம் இருக்கக் கூடாதுதான். ஆனால் எனக்கு இருக்கிறது என்பதை மறுப்பதற்கில்லை."

மகன்—மகள் என்ற பாசத்தைத் துறந்தவருக்குச் சீடன் — சிஷ்யை மீது பாசம் தோன்றுகிறது. பாசம் ஆளை விடுவதில்லை. வீட்டுப் பாசம் நீங்கியவரைக் கோயில் பாசம் பிடித்துக் கொள்கிறது. கடைப் பாசம் நீங்கியவரை ஆசிரமப் பாசம் கவர்ந்து கொள்கிறது. இடம் மாறினாலும் பாசமும் பின்னாலேயே வந்து விடுகிறது. 'எனது' என்னும் உணர்வு புதுப்புது ஆதாரங்களை சிருஷ்டித்துக் கொள்கிறது. ஓர் ஆதாரத்தை அழித்து விட்டாலும் அதற்கு முன்னரே இரண்டாவது ஆதாரத்தை ஏற்படுத்திக் கொண்டு விடுகிறது. ஓரிடத்திலுள்ள கூட்டைக் கலைத்தால் இன்னோர் இடத்தில் கூடு கட்டப்படுகிறது. 'எனது' என்னும் உணர்வு இவ்வாறு தப்பித்து நீடிக்கிறது.

இதுதான் ஆச்சரியமான விஷயம். எல்லாவற்றையும் விட்டவனிடமும் ஏதோ ஒன்று ஒட்டிக் கொண்டிருக்கிறது. இவ்வாறு துறவியும் ஒருவகையில் குடும்பஸ்தன்; சந்நியாசியும் பற்றுகளால் கட்டப்பட்டிருக்கிறான். மோட்சம் அடைய வேண்டும் என்ற ஆசை இருந்தும் சாது — சந்நியாசிகள் இன்னும் உலக வாழ்க்கையிலேயே அலைந்து திரிகின்றனர். பேச்சு (உபதேசம்) மோட்சம் பற்றி இருக்கும். உயிரோ உலகில் நீடிக்கும் ஆசையில் சிக்கிக் கொண்டிருக்கும். நீயும்

முனிவராகி விட்டதாக அவசரப்பட்டுக் கூறாதே. உண்மையிலேயே முனிவனாவது அரிய நிகழ்ச்சியாகும்.

அஷ்டாவக்கிரர் நிச்சயமாகக் கடுமையான குருதான். குரு அப்படித்தான் கண்டிப்பானவராக இருக்க வேண்டும். அவர் கடுமையானவராக இல்லாவிடில் கருணையாளராக இருக்க முடியாது. அவரது கடுமைதான் அவரது கருணை. அவர் ஜனகரை இறுக்கினார். நன்றாகச் சுண்டி, தட்டிப் பார்த்தார். ஜனகர், பாவம், பயந்து போயிருப்பார்.

ஜனகர் தான் ஞானம் பெற்று விட்டதாக உயர்ந்த அறிவிப்பைச் செய்ததும் குரு தன்னை மார்போடு அணைத்துக் கொண்டு, "நீ அதிர்ஷ்டசாலி, உனக்கு ஞானம் கிடைத்து விட்டது என்பது மாபெரும் சாதனை," என்று பாராட்டுவார் என முதலில் நினைத் திருப்பார். ஆனால் இந்த அஷ்டாவக்கிரர் விசித்திரமான குருவாக இருக்கிறார். பாராட்டுவதற்குப் பதில் மிரட்டலாக எச்சரிக்கிறாரே.

ஆனால் அஷ்டாவக்கிரர் செய்தது சரிதான். உரைகல்களில் உரசித்தான் தங்கத்தை மதிப்பிட முடியும். நெருப்பில் புடம்போட்ட பிறகுதான் தங்கம் சுத்தமாகிறது.

'பரம அத்வைதத்தில் நிலைநின்று, மோட்சத்திற்குத் தயாராகி விட்ட மனிதனும் காமவசப்பட்டுக் கேளிக்கைகளில் ஈடுபடத் துடிப்பது எத்துணை ஆச்சரியமான விஷயம்!'

மனிதன் இறக்கும் சமயத்திலும், கடைசி நேரத்திலும், சாவு கதவைத் தட்டும் தருணத்திலும் காம உணர்வால் பீடிக்கப்பட்டிருக் கிறான். சாதாரண மனிதனைச் சொல்லவில்லை. பரம அத்வைதத்தில் – இறைவனுடன் ஐக்கியத்தில் – நம்பிக்கையுடையவன், இறைவன் நெஞ்சத்தில் நான் வீடு கட்டிக் கொண்டு விட்டேன் என்று கூறுபவன், மோட்ச நிலையை நோக்கிப் பயணம் தொடங்கி விட்டேன் என்பவன் – அவனும் காமத்தின் வசப்படுகிறான். ஏனெனில் இதுவரையிலான வாழ்க்கையில் அவன் கேளிக்கைகளில் பயிற்சி பெற்று விட்டான். பழகிப் போன கேளிக்கைகளில் ஆர்வம் கடைசிவரை ஒருவனை விடுவதில்லை.

பார்வையற்ற ஒருவனும் முடமான ஒருவனும் நண்பர்கள். ஒரே தொழில் பிச்சையெடுத்தல். பார்வையற்றவன் தோளில் முடமானவன்

உட்கார்ந்து வழிகாட்ட, மொத்தமாகப் பிச்சையெடுத்துப் பங்கு போட்டுக் கொண்டனர். காலப் போக்கில் இருவரிடையேயும் தகராறு மூண்டது. கண் தெரியாதவன் என்பதால் முடவன் வசூலில் தன்னை ஏமாற்றுவதாக ஒருவன் நினைக்க, நிறைய இடங்களுக்குப் போகாமல் பார்வையற்றவன் வசூலைக் குறைத்து விடுவதாக முடவன் நினைத்தான். ஒருவரை அடிக்கும் நிலைக்குச் சென்று இருவரும் பிரிந்து விட்டனர்.

கடவுளுக்கு இரக்கம் ஏற்பட்டது. இக்காலத்தில் அவருக்கு இரக்கம் வருவதில்லை என்பது வேறு விஷயம். இப்படி இரக்கம் காட்டி—காட்டி அதனால் பயனில்லை என்று கடவுள் களைத்துப் போயிருக்கக்கூடும். மனிதனுக்கு இரக்கம் காட்டினாலும் அதை அவன் சரியாகப் பயன்படுத்துவதில்லை.

ஆனால் மேற்படி கதையில் கடவுள் இரக்கப்பட்டு அவர்களுக்கு நல்லது செய்ய விரும்பினார். பார்வை யற்றவன் கண் கேட்பான். முடவன் கால் கேட்பான். இந்த வரங்களைக் கொடுத்து விட்டால் இருவரும் சுதந்திரமாக வாழ முடியும் என நினைத்தார்.

அவர்களிடம் தனித் தனியாகச் சென்று பேசிய கடவுள் திரும்புகையில் அழுதபடி வந்தார்! ஏனென்றால் விழியற்றவன் அவரிடம் கேட்ட வரம் முடவனைப் பார்வை இழக்கச் செய்யுங்கள் என்பதுதான். அதேபோல் முடவன் கேட்ட வரம் பார்வையற்றவனின் காலை ஒடித்து முடமாக்குங்கள் என்பதாகும.

இத்தகைய அனுபவங்கள் காரணமாகத்தான் கடவுள் காலப்போக்கில் இந்த நிலவுலகிற்கு வருவதைக் கொஞ்சம் கொஞ்சமாக நிறுத்தி விட்டார். பூமிக்கு வருவதில் அர்த்தம் இல்லை என்று அவருக்குத் தோன்றிவிட்டது. ஏனெனில் மனிதர்களிடையே போட்டி மனப்பான்மை என்னும் நோய் இருமடங்காகி விட்டது. கடவுள் வருவதால் லாபமில்லை. இரக்கம் காட்டி வரமளிக்க அவர் முன்வந்தால் விளைவு ஆபத்தாக உள்ளது.

மனிதனின் பழக்க தோஷம். எதிலும் துக்கத்தை வரவழைத்துக் கொண்டு விடுவான். கடவுள் உன் முன்னால் தோன்றினால், நீ என்ன வரம் கேட்பாயோ அதன் மூலம் முன்பைவிட அதிக கஷ்டத்தை

உண்டாக்கிக் கொள்வாய், கேட்பது நீயல்லவே, பழக்க தோஷம்தான் வரம் கேட்கிறது. பார்வையில்லாதவனுக்குக் கொஞ்சமாவது மூளையிருந்தால் அவன் பின்வருமாறு சொல்லியிருப்பான்: "பிரபு. உமக்கு எது சரி என்று தோன்றுகிறதோ, எது எனக்குப் பொருத்த மானதோ, அந்த வரத்தைக் கொடுங்கள். ஏனென்றால் நான் எந்த வரம் கேட்டாலும் அது கடைசியில் தப்பாகவே முடியும். காரணம், இதவரை நான் தவறாக வாழ்ந்திருக்கிறேன். ஆகவே என் கோரிக்கையிலும் தவறு இருக்கும். இதைத் தவிர்க்க, நானாக எதுவும் கேட்க மாட்டேன். நீங்கள் எது வேண்டுமானாலும் கொடுங்கள். உங்கள் விருப்பப்படியே நடக்கட்டும். நீங்கள் சரியான தொலைநோக்கு உடையவர். எனக்கு எது பொருந்துமோ அதைக் கொடுங்கள்."

பார்வையற்றவன் வரம் கேட்டான். அது தவறான வரம். முடமானவன் வரம் கேட்டான். அதுவும் தப்பான வரமே. பழைய பழக்கம் நீங்கவில்லை. இருவரிடமும் கோபம் என்ற விஷம் மிஞ்சியிருந்தது. கடவுளே எதிரில் தோன்றியும் இருவரும் தத்தம் உடற்குறையைப் போக்கிக் கொள்ளும் வாய்ப்பை நழுவ விட்டனர். மனித வாழ்வில் பல முறை மோட்சத்திற்கான வாய்ப்பு வருகிறது. எனினும் மனிதன் அதைத் தவற விடுகிறான். ஏனெனில் பழைய பழக்கங்கள் படையெடுக்கின்றன. மோட்சம் கிடைக்கக்கூடிய சமயம் இவை மிகவும் வலுவாகவே தாக்குகின்றன. ஏனெனில் பழக்கங்களும் தம்மைக் காப்பாற்றிக் கொள்ள விரும்புகின்றன.

நான் பார்த்த வரையில் உலகில் அதிகமான பேர் துக்கத்திற்கான காரணங்கள் உள்ளன என்பதால் துன்பப்படவில்லை. நூற்றுக்குத் தொண்ணூற்று ஒன்பது சூழ்நிலைகளில் துக்கப்படுவதற்குக் காரணம் இருக்காது. பழக்கத்தின் காரணமாகத்தான் மக்கள் துக்கப்படுகிறார்கள். சிலர் துக்கப்படுவதை ஆழமாகப் பயிற்சி செய்துள்ளனர். அந்தப் பயிற்சி பழக்கமாக மாறி எவ்வளவு முயன்றாலும் அதை விடமுடிவ தில்லை. அதில்தான் சம்பந்தப்பட்டவர் தன் முழு வாழ்க்கையையும் முதலீடு செய்திருக்கிறார். திடீரென அதை எப்படி விடுவது?

நான் ஒரு புத்தகம் படித்தேன். அருமையான நூல். அனை வரும் படிக்க வேண்டும். எல்லோருக்கும் பயனுள்ளது. பெயர்: How to Make yourself Miserable. எழுதியவர் Don Greenberg.

கவலைப்படும் மனிதனாக நம்மை ஆக்கிக் கொள்வது எப்படி என்னும் தலைப்பின்கீழ் நூலாசிரியர் ஆழமாக ஆராய்ச்சி செய்துள்ளார். அவர் அதற்கான வழிமுறைகளைத் தவறின்றிப் பின்பற்றுவதற்காகத் தெளிவான நடையில் எழுதியுள்ளார். நீ நூலைப் படித்திராமலே பல விதிகளை ஏற்கெனவே பின்பற்றி வருகிறாய். நூலைப் படித்தால், நீ கவனம் செலுத்தி, சரியான முறையில் எல்லா வழிமுறைகளையும் சரியாகப் பயிற்சி செய்ய முடியும். இதன் மூலம் எந்தவிதக் குறைபாடும் இன்றி நீ முழுமையாகக் கவலைப்படுபவனாக ஆகிவிடலாம்!

மக்கள் துக்கப்படுவதற்குத்தான் பயிற்சி மேற்கொள்ளுகிறார்கள். காம உணர்வு தொன்றுதொட்டுப் பயிலப்பட்டு வருகிறது. பிறவிகள் தோறும் இவ்வுணர்வு தொடர்ந்து வருகிறது. இதனால் எப்பலனும் கிடைத்ததில்லை. எப்பொழுதும் இழப்புதான் ஏற்பட்டிருக்கிறது. ஆனாலும் காமம் நம் ஒவ்வோர் உரோமத்திலும் ஊடுருவி நிற்கிறது. காமம் சம்பந்தப்பட்ட இதுவரையிலான அறிவு, பெற்ற பயிற்சி காரணமாக மனிதன் மீண்டும்—மீண்டும் காம ஏக்கம் கொள்கிறான். சாவு நேரத்திலும்கூட காமக் கனவுகள் காண்கிறான். தியான நேரத்திலும் காம எண்ணங்கள் மனத்தில் ஓடுகின்றன. கோயிலில் இருக்கும் போதுகூட மனத்தில் விலைமகளிர் வீட்டு நினைவே எழுகிறது.

ஆகவே அஷ்டாவக்கிரர் எச்சரிக்கிறார்: "ஜனகரே, அவசரப்படாதீர். இந்த வலைகள் பழங்காலத்திலிருந்தே நீடித்து வருகின்றன. இவற்றை நீர் ஒரு நொடியிலா கிழித்து முக்தி நிலையை அடைய முடியும்?" ஜனகர் முக்தி நிலையை அடையவில்லை என்று அஷ்டாவக்கிரர் கூறவில்லை. ஒரு நொடியில் முக்தி கிடைக்கக்கூடும் என்றும் அவர் கருதுகிறார். அவர் ஜனகரை எச்சரிக்க மட்டும் செய்கிறார். பிரமை காரணமாக அவர் ஞானமடைந்து விட்டதாக நினைக்கக் கூடாதல்லவா? முக்தி (விடுதலை) என்பது முழுமையாக இருக்க வேண்டும். அரைகுறையாக அமைந்து விடக்கூடாது. நோய் கிருமிகள் மறுபடியும் நுழைந்து விடக்கூடாது.

'காமத்தை ஞானத்தின் எதிரி என்று அறிந்திருந்தும், மிகவும் பலஹீனமானவனும் மரணப் படுக்கையில் இருப்பவனும்கூட காமசுகத்தை விரும்புகிறான்! இது ஆச்சரியமான விஷயம்.'

அஷ்டாவக்கிரர் சொல்கிறார்: "ஜனகரே! நீர் ஞானம் பெற்று விட்டதை ஆச்சரியத்துடன் சொல்கிறீர். அதைவிட உண்மையிலேயே ஆச்சரியமான விஷயம் ஒன்று உமக்குத் தெரிவிக்கிறேன். மனிதன் ஒருவன் இறந்து கொண்டிருக்கிறான். உயிர் சக்தி ஏறத்தாழ நீங்கிவிட்டது. ஆனால் காம உணர்வு அப்படியே உள்ளது. வாய் ருசிதான் தெரியவில்லையே தவிர மற்ற உணர்ச்சிகள் மங்கவில்லை. கவலைகளும் காயங்களும் தவிர வேறெதுவும் மிஞ்சவில்லை. வாழ்க்கையே தோல்வி. ஆனால் காமம் மிஞ்சியுள்ளது. அதை நீக்குவது கடினம், முடியாத காரியம். ஏனெனில் பழங்காலத்திலிருந்தே காமம் பழக்கமாகிவிட்டது. ஆகவே நீங்கள் ஆழ்மனத்துள் இறங்கி உங்களை நன்கு பரிசோதித்துக் கொள்ளவும்."

ஸிக்மண்ட் ஃப்ராய்ட் 'அன்கான்ஷஸ்' என்று கூறும் உள்மனத்தைத்தான் இங்கே அஷ்டாவக்கிரர் சுட்டிக் காட்டுகிறார் – உன் மேல்மனத்தில் பிரகாசம் உண்டாகி விட்டது. ஆனால் உன் ஆழ்மனத்தின் நிலை என்ன? உன் வரவேற்பறை சுத்தமாகி விட்டது. நேர்த்தியாகி விட்டது. ஆனால் உன் வீட்டின் நிலவறை எப்படி உள்ளது? அங்கே நெருப்பு மூண்டால் விரைவிலேயே அதன் புகை உன் வரவேற்பறைக்கும் வந்துவிடும். நிலவறை குப்பையால் நிரம்பியிருந்தால் உன் வரவேற்பறையின் நறுமணம் அதிக நேரம் நீடிக்காது. ஆகவே படிப்படியாக ஆழ்மனத்துள் இறங்கு. அங்கு புலன் இன்பங்களின் விதைகளைத் தேடு. அங்கேயே அவற்றைச் சுட்டெரித்துவிடு.

துக்கம், ஏக்கம், காமம், பேராசை, கோபம் ஆகிய நோய்களை நாம் விடாமல் பயிற்சி செய்து வளர்த்துக் கொண்டுள்ளோம். இவை காரணமின்றி ஏற்படவில்லை. நாம் மிகவும் உழைத்து இவற்றைச் சீராக வளர்த்துள்ளோம். இவற்றைப் பற்றி நிறையச் சிந்தித்துள்ளோம். இவற்றிற்காக நிறையச் செலவழித்துள்ளோம். இவை நமக்கு உலகமாகிவிட்டன.

ஒருவன் தான் துக்கத்திலிருந்து விடுபட விரும்புவதாகச் சொன்னால் அவன் ஒரு விஷயம் யோசிக்க வேண்டும். அந்த துக்கத்திலிருந்து அவன் ஏதாவது லாபம் பெற்றால், எதையாவது அறுவடை செய்தால், அவன் விரும்பினாலும் துக்கத்திலிருந்து விடுபட முடியாது.

சிலர் துக்கத்தை விரும்பக் காரணம் அப்பொழுதுதான் மற்றவர்கள் அவர்களிடம் அனுதாபம் காண்கிறார்கள் என்பதுதான். ஒரு மனைவி. மிகவும் மகிழ்ச்சியாகத் தெரிகிறாள். ரேடியோ கேட்டுக் கொண்டிருக்கிறாள். கணவன் அலுவலகத்திலிருந்து திரும்பி வீட்டுக்குள் நுழையும் சந்தடி கேட்கிறது. சட்டென்று மனைவிக்குத் தலைவலி வந்து விடுகிறது!

இதை நான் கண்டிருக்கிறேன். பலர் வீட்டில் இந்த நாடகத்தைப் பார்த்திருப்பதால் சொல்கிறேன். மனைவி ஆரோக்கியமாகத் தெரிவாள். என்னிடம் நன்கு பேசிக் கொண்டிருப்பாள். கணவரின் காரின் ஹாரன் ஒலி கேட்கும். உடனே மனைவி படுக்கையறைக்குச் சென்று படுத்துவிடுவாள். கணவர் அவளைத் தேடி அந்த அறைக்குள் போய்வந்தபின் அவளுக்குத் தலைவலி என்று எனக்குத் தெரியப்படுத்துவார்!

நிஜமாகவே தலைவலி ஏற்பட்டிருக்காது என்று நான் சொல்ல வில்லை. ஆனால்திடீரென்றா? அப்படியாயின் ஏதாவது ஆழ்ந்த காரணமிருக்கும். மனைவிக்குத் தலைவலி என்றதும் கணவன் அனுதாபம் காட்டுவான். அவள் அருகே அமர்ந்து நெற்றியை வருடுவான்; தலையைப் பிடித்து விடுவான். ஆகவே இந்த வலியில் சுயநலம் கலந்திருக்கிறது. வலி இருந்தாலும் கணவனின் கவனிப்பின் சுகத்தை எதிர்பார்ப்பதால் வலி விரும்பப்படுகிறது.

யாராவது தனது நெற்றியை அழுத்திவிட வேண்டும் என்னும் உள்ளாசை இருந்தால், யாராவது தன்னிடம் அனுதாபம் காட்ட வேண்டும். அன்பை வெளியிட வேண்டும், தன்னைக் கவனிக்க வேண்டும் என்றெல்லாம் எதிர்பார்ப்பது உன் துக்கத்தில் கலந்திருந்தால், நீ எத்தனை முறை முயன்றாலும் துக்கத்திலிருந்து விடுபட மாட்டாய். ஏனென்றால் நீ (துக்கத்தின்) கிளைகளை ஒரு கையால் வெட்டிக்கொண்டே வந்தாலும் அவை வளர உதவியாக இன்னொரு கையால் நீர் பாய்ச்சியும் வருகிறாய். மேற்புறம் வெட்டுவாய், கீழ்ப்புறம் நீர் பாய்ச்சுவாய். உனக்கு துக்கத்திலிருந்து விடுதலை கிடைக்க வாய்ப்பில்லை. ஏனெனில் நீ துக்கத்தில் முதலீடு செய்துள்ளாய்.

இங்கே நாட்டில் எல்லோரும் சோகமாக உள்ளனர். பறவை சோகமாக உள்ளது. அதனால் பறக்க முடியவில்லை. அதற்குத் தான்

அடைபட்டுள்ள தங்கக் கூண்டின் மீது மோகம் உள்ளதுபோல் தெரிகிறது. இங்கே கவிஞன் சோகமாக உள்ளான். ஏனெனில் சோகப் பாடல்களைத்தான் மக்கள் விரும்பிக் கேட்கிறார்கள்; கேட்டுக் கைதட்டுகிறார்கள். இங்கு சிந்தனையாளர் சோகமாக உள்ளார். ஏனென்றால் சிரித்தபடி ஆனந்தமாக இருப்பவரை மக்கள் பைத்தியக்காரர் என்று நினைக்கின்றனர். இந்த சோகமான சூழ்நிலையில் சோகத்தைக் கடப்பது மிகவும் கடினமெனத் தோன்றுகிறது. இங்கு வீசும் காற்றும் சோகமாக உள்ளது. அக்காற்றில் காமம், கோபம், லோபம், மோகம் கலந்துள்ளன. இங்கே மோட்ச கிரணங்கள் இறங்கிவருவது மிகவும் சிரமம்.

ஆனால் ஜனகரின் வாழ்க்கையில் ஆன்மிக கிரணம் இறங்கியது. ஆகவே அவரை அஷ்டாவக்கிரர் எல்லா வகையிலும் சோதித்துப் பார்க்க விரும்புகிறார். ஜனகரின் அறிவிப்பில் ஏதேனும் தவறு, துளியளவு குறைபாடு இருக்கக்கூடாது என எதிர்பார்க்கிறார். இத்தகைய மகாகருணை காரணமாக அவர் ஜனகரிடம் கடுமையாகப் பேசுகிறார்:

"ஜனகரே, எச்சரிக்கையாக இருங்கள். ஞானிகளும் முனிவர்களும் தாங்கள் பூரணமடைந்து விட்டதாக நினைக்கும் பிரமை வலையில் நீங்களும் சிக்கிக்கொள்ளாதீர். எத்தனையோ அறிவாளிகள், பண்டிதர்கள் சாஸ்திரப் படிப்பு என்னும் சுமையின்கீழ் அழுந்தப் பட்டுக் கிடக்கிறார்கள். தியாகத்தை உயர்த்திப் பேசுகின்ற எத்தனையோ பேரின் மனம் இப்போதும் பணத்தாசையால் நிரம்பியுள்ளது. இந்த எல்லாவற்றையும் நீங்கள் முறையாக பரீட்சித்துப் பாருங்கள். இம்மாதிரியான பிரமையின் வசப்படவில்லையெனில் நீங்கள் ஞானம் பெற்றுவிட்டதாகச் செய்த அறிவிப்பு உண்மையானதென ஒப்புக் கொள்கிறேன்."

ஹரி ஓம் தத் ஸத்

முதல் கேள்வி:

**புகழ்பெற்ற மனத்தத்துவ அறிஞரான ஏ.எச். மாஸ்லோ மனித வாழ்க்கையின் தேவை களின் வரிசையில் ஆத்மஞானத்திற்கு (self-actualization) கடைசி இடம் தந்துள்ளார். தங்கள் கருத்தில் ஆத்மஞானம் மனித வாழ்க்கையில் ஒரு கட்டாயமான தேவையா? மதம், ஆன்மிகம் முதலிய பெயர்களும் அநாவசியமாக ஆத்ம ஞானத்துடன் சேர்க்கப்பட்டது என்று நீங்கள் கருதுகிறீர்களா? தயவுசெய்து விளக்குங்கள்.**

முதல் விஷயம், ஆத்மஞானம் கட்டாயமுமில்லை, அவசியமும் இல்லை! கட்டாயம், அவசியம் முதலிய சொற்கள் ஆத்மஞானத்தைப் பொறுத்த வரையில் அடிப்படையில் தவறானவை. பசி இருந்தால் சோறு தேவை. உடல் இருந்தால் சுவாசம் தேவை. இவையின்றி நீ உயிர்வாழ முடியாது. ஆனால் ஆத்மஞானம் பெறாவிடிலும் மனிதன் சிரமமின்றி வாழ முடியும். தண்ணீர் – உணவு – வீடு தேவையே. இவையின்றி நீ சிறிது காலம்கூட உயிர்வாழ முடியாது. ஆனால் ஆத்மஞானம் இல்லாவிடிலும் எத்தனையோ மக்கள் உயிருடன்தான் உள்ளனர்.

ஆகவே முதல் விஷயம், ஆத்மஞானம் அவசியமில்லை என்பதுதான். அது கட்டாயமும் இல்லை என்று நிச்சயமாகவே சொல்லலாம். எப்போதாவது ஒரு புத்தர், அஷ்டாவக்கிரர், இயேசு கிறிஸ்து, நபிகள் நாயகம் என்று சிலர் அந்த நிலையை அடைகின்றனர். இது மிகவும் அரியதான சாதனையாக நிகழ்கிறது. ஆகவே இதை எல்லோருக்கும் கட்டாயப்படுத்த முடியாது. இது எளிதெனில் ஒவ்வொருவர் வாழ்விலும் நிகழ்ந்திருக்கும்.

ஆன்மிகம் பலனுடன் சம்பந்தப்படவில்லை. அதை சச்சிதானந்தம் என்கிறோம். ஆனந்தம் என்றால் என்ன அர்த்தம்? ஆனந்தத்திற்கு என்ன அவசியம்? அது ஒரு கட்டாயத் தேவையா? கடவுளின் நேரடியான மேற்பார்வை இல்லாமலேயே உலகம் நன்றாகத்தானே இயங்கிக் கொண்டிருக்கிறது? ஆகவேதான் அவர் கண்ணுக்குத் தெரிவதில்லை. அவர் நேரில் வரவேண்டியது அவசியமாகவும் தோன்றவில்லை. கடையிலோ, அலுவலகத்திலோ, வீட்டிலோகூட அவர் தேவைப்படவில்லை. ஆத்மஞான நிலை மிகவும் உன்னதமான, பிரபுவர்க்கம் போன்ற உச்சநிலை.

சோறு தேவை. மைக்கேல் ஏஞ்ஜிலோவின் கலைப் படைப்புகள் அவசியமானவை அல்ல. அந்த படைப்புகள் இல்லாமலே மனிதன் சுகமாக வாழ முடியும். வீட்டுக்குக் கூரை கட்டாயம் தேவை. ஆனால் காளிதாசர் அவசியமில்லை. காளிதாசரின் நூல்கள் இல்லாவிடில் வாழ்க்கை தடைப்பட்டு விடாது. சிறு பொருளேகூட போதும் என்ற இடத்தில் பிரம்மாண்டமான பொருளுக்கு என்ன தேவை? பேருருவம் என்பது ஆனந்தம், உன்னதம். அதை 'தேவை' என்ற சொல்லால் சுருக்கி விடலாகாது. கடவுளைப் பொருளியலுடன் (இகானாமிக்ஸ்) சம்பந்தப்படுத்தாதே.

ஆகவே சமதருமவாதிகள் (சோஷலிஸ்ட்) உணவு, வேலை, வீடு என்று முழங்குகின்றனர். இந்தப் பட்டியலில் கடவுளுக்கு இடமில்லை. ஆகவே பொதுவுடைமைத் தத்துவத்தில் கடவுள் பெயரை இழுப்பதில்லை. மார்க்ஸ் ஒரு பொருளியல் அறிஞர். அன்றாட வாழ்க்கைக்குக் கடவுளும் ஆத்மஞானமும் தேவைப்பட்டிருந்தால் பொதுவுடைமைக் கோட்பாட்டில் சேர்த்திருப்பார். பொருளியலில் கடவுளுக்கு சுத்தமாக இடமில்லை.

உண்மை என்னவெனில், உன் வாழ்வில் கடவுளின் கிரணம் இறங்கி வந்தால் நிறைய இடைஞ்சல்கள் ஏற்படும். இதனால்தான் பெரும்பான்மையோர் ஆத்மஞானம் பெறும் முயற்சியில் ஈடுபட அஞ்சுகின்றனர். கடவுளின் கிரணம் உன்னைப் பாதித்தால் நீ இதுவரை வாழ்ந்ததுபோல் மேற்கொண்டு வாழ முடியாது. உனது வாழ்க்கை முறை மாற ஆரம்பித்துவிடும். உன் பாணி மாறிவிடும். நடை—உடை—பாவனை மாறிவிடும். உன் திசை மாறிவிடும். எல்லாம் தலைகீழாகி

விடும். இதுவரை உருவாக்கப்பட்ட உன் உருவம் தகர்ந்துவிடும். உன் வேர்கள் பிடுங்கப்பட்டு விடும். பழைய பூமி, பழைய சூழ்நிலை உனக்கு உதவாது. நீ புதிய களத்தைத் தேட வேண்டும். நிலத்தில் உன் கால் பதியாது. வானத்தின் ஆதரவை நீ பெற நேரிடும். இந்த விஷயத்தை நீ எத்துணை ஆழமாகப் புரிந்து கொள்கிறாயோ அந்த அளவிற்கு உபயோகமாக இருக்கும்.

கடவுள் முழுமையாக அவசியமில்லாதவர். ஆகவேதான் வெகுசிலரின் மனத்தில்தான் கடவுள் – தாகம் மேலிடுகிறது. தேவை வேறு, ஆனந்தம் வேறு என்பதை அவர்கள் புரிந்து கொண்டுள்ளனர். தேவை என்ற அளவில் நின்றுவிடும் பொருளில் ஆனந்தம் கிடையாது என்பதை அவர்கள் அறிந்துள்ளனர். அப்பொருள் அதிகபட்சமாக ஒரு குறிப்பிட்ட தேவையைப் பூர்த்தி செய்வதுடன் நின்று விடுகிறது.

உனக்குப் பசிக்கிறது. நீ சாப்பிடுகிறாய். பட்டினி கிடந்தால் கஷ்டம்தான். சாப்பிடுவதால் ஒரு தேவை பூர்த்தியாகிறது. அதை சுகம் என்று சொல்ல முடியாது. கடும் வெயில். வியர்க்கிறது. நீ சிரமப்படுகிறாய். கூரை வேய்ந்த ஓரிடத்திற்கு வருகிறாய். உன் சிரமம் தீருகிறது. ஆனால் அந்த மனநிலை பரமசுகமில்லை.

இது தேவைகளை பூர்த்தி செய்து கொள்ளுகின்ற உலகம். இங்கே துக்கம் உண்டு, துக்கத்திலிருந்து விடுதலை உண்டு. பரமானந்தம் கிடையவே கிடையாது. இதுதான் பிரச்சினை. ஏழை நினைக்கிறான் பணம் கிடைத்தால் ஆனந்தமாக இருக்கும் என்று. எப்படியோ பணம் கிடைக்கிறது. இதனால் ஏழைமை நீங்கியதே தவிர ஆனந்தம் கிடைக்கவில்லை என்பது அப்போதுதான் புரிகிறது.

தேவைகளின் பூர்த்தியினால் ஆனந்தம் உண்டாகிவிடாது; சிரமம் அல்லது துக்கம் மட்டுமே குறையும். எல்லா துக்கமும் நீங்கிவிட்டாலும் ஆனந்தம் கிடைக்குமெனக் கூற முடியாது. ஒரு மனிதன் – அவனுக்கு நோயில்லை, கஷ்டமில்லை, பணத்தட்டுப்பாடு இல்லை. எல்லா வசதிகளும் இருக்கின்றன. வீடு, கார், சமூக அந்தஸ்து எல்லாம் கிடைத்துள்ளன. எல்லாத் தேவைகளும் நிறைவேறி விட்டன. அவனுக்கு வேறென்ன வேண்டியிருக்கிறது? ஆனால் அந்த மனிதனோ தன் வாழ்க்கையில் வெறுமையை உணர்வதாகக் கூறுகிறான். எதையோ இழந்து விட்டதைப் போலவும், ஏதோ ஒன்று கிடைக்காமல் போனதாகவும் அவன் நினைக்கிறான்.

பிரயோஜனம் எதிர்பாராமல் ஒன்றுடன் தொடர்பு ஏற்படுத்திக் கொண்டால், தேவை என்ற நிலையைவிட உயர்ந்த ஒன்றிற்காக முயன்றால், தேவை இல்லாத ஒன்று வாழ்க்கையில் நடைபெற்றால் — அப்போதுதான் ஆனந்தம் தோன்றும்.

தேவை நீங்குவதால், நிறைவடைவதால், துக்கம் ஏற்படுவதில்லை; வசதியும் உண்டாகிறது. ஆனந்தம் விளைவதில்லை. தேவையின் எல்லையைக் கடந்து அர்த்தம் தராத சூன்யத்தில், பூக்களில், இன்னிசையில், காவியத்தில் நீ பயணித்தால் ஆனந்தம் உதிக்கிறது. வாக்னர்,* ஷேக்ஸ்பியர், ரவீந்திரநாத் ஆகியோர் இருந்தாலென்ன, இல்லாவிட்டாலென்ன? கவிதைகளை உண்ணவா, குடிக்கவா, உடுக்கவா போகிறாய்? இவை உதாரணங்கள் மட்டுமே. இவற்றில் கொஞ்சம் சாரம் இருக்கலாம். சிறிதளவு தேவை இவற்றால் பூர்த்தியாகலாம். கடவுளால் இந்த அளவுகூட பயனில்லை. ஆத்மஞானம் என்பது முழுமையாக அர்த்தமே இல்லாதது! அதைப் பெற்றால் ஒருவகைச் சுவையை உணரலாம். ஆனால் அதிலிருந்து அர்த்தம் கிடைக்காது. அதை நீ கடைத்தெருவில் விற்கும் பொருளாக ஆக்க முடியாது.

'தேவையை நிறைவேற்றிக் கொள்வதற்கான முயற்சிகளில் ஈடுபட்டிருக்கும்வரை நான் ஒரு வட்டப் பாதையிலேயே சுற்றி வருபவனாக இருப்பேன்' என்ற உண்மையை மனிதன் புரிந்து கொள்ள வேண்டும். 'தினமும் எனக்குப் பசியெடுக்கும், உணவுப் பொருள் வாங்க தினமும் சம்பாதிப்பேன்; தினமும் சாப்பிடுவேன்; பசி நீங்கும். நாளை மறுபடியும் பசியெடுக்கும். பிறகு சாப்பாடு. பிறகு பசி. உணவினால் சுகம் கிடைத்துவிடாது. பசியால் ஏற்பட்ட வாட்டம் மட்டும் நீங்கும்.

சராசரியான, உலகப் பற்றுள்ள மனிதனின் வாழ்க்கை இப்படித்தான் வரையறுக்கப்படுகிறது. அவன் வசதிகளைத் தேடுகிறான். ஆனால் அசௌகரியம் ஏற்பட்டு விடக்கூடாது என்ற காரணத்தால் தான் அவ்வாறு செய்கிறான். ஆன்மிக மனிதன் எனப்படுபவன் உண்மை நிலையை அறிந்திருக்கிறான். எல்லா வசதிகளும் கிடைத்தாலும் வாழ்க்கையில் பூக்கள் மலர்ந்து விடாது; நறுமணம்

* Richard Wagner (1813-1883) ஜெர்மானிய நாட்டிய நாடக இசையமைப்பாளர்

எழும்பி விடாது; இசையொலி கேட்டுவிடாது. வாழ்க்கை என்னும் வீணை ஊமையாகவே கிடக்கும்.

ஆகவே நான் தர்மம் என்பதை உயர்குடியில் சேர்க்கிறேன். இதன் அர்த்தம் என்னவென்றால் இதனால் ஒரு பயனும் இல்லை என்பதே. இது பயனற்றது, பயன் கடந்தது, பயனைக் கடந்த ஒன்று. உன் வாழ்க்கையில் பிரவேசிக்கும் போது ஆனந்தம் சிறிதளவு காட்சியளிக்கிறது. உதாரணமாக அன்பைச் சொல்லலாம். அன்புக்கு அர்த்தம் என்ன? அதில் என்ன சாரமிருக்கிறது? அன்பை உண்ணவோ, குடிக்கவோ, உடுக்கவோ முடியுமா? அன்பை வைத்துக் கொண்டு என்ன செய்வாய்? ஒருவர் நம்மைப் பைத்தியம் என இகழ்ந்து அன்பினால் என்ன லாபம் என்று கேட்கலாம். அன்பினால் நம் வங்கிக் கணக்கிலுள்ள இருப்பு அதிகரிக்குமா? வீட்டைப் பெரிதாகக் கட்ட முடியுமா? அன்பு என்று கூறிக்கொண்டு நேரத்தை வீணடிக்கலாமா?

ஆகவேதான் அரசியல்வாதி அன்பு – காதல் என்றெல்லாம் அகப்பட்டுக் கொள்வதில்லை. அவன் தன் முழு சக்தியையும் பதவியைப் பிடிப்பதிலேயே ஈடுபடுத்துகிறானே தவிர அன்பைப் பெறுவதற்காக இல்லை. பணப் பைத்தியம், பணத்தாசை உடையவன் தன் முழு ஆற்றலையையும் மேன்மேலும் பணம் சம்பாதிக்கவே பயன்படுத்துகிறான். இத்தகையோர், “அன்பா? தற்போது வேண்டாம். இப்போது அதற்கெல்லாம் நேரம் எங்கே இருக்கிறது?” என்று கேட்பார்கள். அன்பினால் பிரயோஜனம் இருப்பதாகத் தெரியவில்லை.

யதார்த்தவாதிகளிடம் கேட்டுப்பார். அன்பை ஒருவகையான மூளைக் கோளாறு என்பார்கள். ஆனால் அன்பிற்கு அர்த்தம் தேடாதவர்கள், பலன் எதிர்பாராதவர்கள் அன்பை சாரம் நிறைந்தது, ஒளி நிறைந்தது, அது சச்சிதானந்தமயமானது என்பதை அறிவார்கள்.

ஒருவன் வீணை வாசிக்கிறான். அவனிடம் சென்று வீணை வாசிப்பதால் என்ன பலன் என்று கேட்டுப்பார். அவனால் பதில் கூற முடியாது. “வீணைக் கம்பிகளைச் சுண்டுவதால், இழுப்பதால், தட்டுவதால் என்ன பிரயோஜனம்? வாசிப்பதை நிறுத்து. ஏதாவது உருப்படியான வேலை செய். வேலை சம்பந்தமாகப் பேசு. ஏதாவது பயிர்செய், உற்பத்திசெய். தொழிற்சாலை ஆரம்பி. வயலுக்குப் போ.”

என்று அவனை மிரட்டினால் பயனில்லை. வீணைக் கம்பிகளை மீட்டுபவன் அதில் ஒரு விசேஷ சுவை காண்கிறான். சில சமயம் அவன் பசியைக்கூட பொறுத்துக் கொள்வான்; வீணைக் கம்பிகளை லேசில் விடமாட்டான்.

வின்சென்ட் வான் காக்* உணவின்றி இறந்தார். உண்மையில் அவர் பணக்காரக் குடும்பத்தைச் சேர்ந்தவர். அவருடைய சகோதரர் வாரம் ஒருமுறை பணம் கொடுத்து உதவினார். காக் அதில் மூன்று நாள் உணவுக்குச் சேமித்து விட்டு மீதியை ஓவியம் தீட்டுவதற்கான வண்ணங்கள், திரைச்சீலை வாங்குவதில் செலவிட்டார். ஆகவே மீதி நாட்கள் பட்டினிதான். ஆனால் அவருடைய ஓவியங்கள் விற்பனை யாகவில்லை. ஏனெனில் அவை நூறு வருஷங்களாவது சமகாலத்துக்கு அப்பாற்பட்டவை. உலகில் மேதைத்தனத்தின் வெளிப்பாடு எதிர்காலத்துக்கு முற்பட்டதாகவே இருக்கும். சமகால மக்களால் எதிர்காலத்துக்குரிய அந்த ஓவியங்களைப் புரிந்துகொள்ள முடியவில்லை. ஆகவே வாங்குவோர் கிடைக்காமல் காக் பசியுடன் போராடினார். இளமையிலேயே பட்டினிச் சாவு செத்தார். குடும்பத்தினர் குழப்பமடைந்து அவரை பைத்தியம் எனத் தூற்றினர். இப்போதோ அவரது ஓவியங்கள் ஒவ்வொன்றும் லட்சம் ரூபாய்க்கு, பத்து லட்சத்திற்குக்கூட விற்கின்றன.

மனிதனது முதல் தேவை பசியடங்குதல். அதை மறந்து காக் ஓவியக் கலையில் மெய்ம்மறந்து இருந்தார் எனில் மற்றவர்கள் கண்டிராத ஒன்று அவருக்குக் கிடைத்திருக்கும். அக்கலையில் ஏதோ சுவையை உணர்ந்திருப்பார். இல்லாவிடில் அவரது அர்ப்பணிப்பால் அவருக்கு வெளியுலகில் என்ன லாபம்? கௌரவமோ, பெயரோ, பணமோ கிடைக்கவில்லை. பசி, வேதனை, வலி, வறுமை கிடைத்தது. ஆனால் அவர் படம் வரைவதை நிறுத்தவில்லை. வரையும் சமயம் பசி நினைவில் இல்லை. உடல் நினைவு இல்லை. உடல் கடந்த நிலைக்குச் சென்று விடுவார். அவர் தன்னால் வரைய முடிந்த அளவு பூர்த்தி செய்தபின் தற்கொலை செய்து கொண்டு விட்டார். அப்போது விட்டுச் சென்ற கடிதத்தில் தான் இதற்குமேல் உயிர் வாழ்வதில் அர்த்தம் இல்லை என்று குறிப்பிட்டிருந்தார்.

---

* **Gogh** (1853-1890) டச்சு நாட்டு ஓவியர். வரைந்த ஓவியங்கள் 1500. அவர் உயிருடன் இருக்கையில் விற்றது ஓர் ஓவியம்தான்!

அக்கடிதத்தில் அவர் மேலும் எழுதியிருந்தது – 'நான் வரைய வேண்டிய ஓவியங்களை வரைந்தாகி விட்டது. வர்ணம் தீட்ட வேண்டியவற்றிற்குத் தீட்டியாகி விட்டது. நான் ஓவியக்கலை மூலம் சொல்ல விரும்பியதைச் சொல்லி விட்டேன். என் உள்ளத்தினுள் இருந்ததை வெளிப்படுத்தி விட்டேன். மேற்கொண்டு உயிர் வாழ்வதில் அர்த்தம் இல்லை.'

அவர் வரைந்தவற்றிற்கு மக்கள் அர்த்தம் புரியவில்லை என்றார்கள். அதுதான் அவர் நினைத்த அர்த்தம். வந்த வேலை முடிந்ததும் உலகத்திலிருந்து விடைபெற்றுக் கொண்டு விட்டார். அதற்கு மேலும் தான் வாழ்வதில் அர்த்தம் இருப்பதாக அவருக்குத் தெரியவில்லை.

உணவு உண்கிறோம். மீண்டும் பசி. மறுபடியும் சாப்பிடுகிறோம். ஒவ்வொரு வேளை உணவும் அடுத்த வேளைக்கான பசியை உண்டாக்குகிறது. ஒவ்வொரு முறை பசியும் அடுத்த வேளைக்கான உணவை எதிர்பார்க்கிறது. பசி – உணவு – பசி என்னும் சக்கரம் சுழன்று கொண்டே இருக்கிறது. இதற்கு ஏதாவது அர்த்தம் உள்ளதா என்று நீ எப்போதாவது யோசித்தது உண்டா?

ஒருவன் எண்பது ஆண்டுகள் உயிர் வாழ்ந்தான் எனில் அத்தனை ஆண்டுகளில் அவன் சாதித்தது என்ன? உணவு – வேலை – வீடு ஆகியவற்றைப் பெறுவதை அர்த்தமுள்ள செயல்களாக நீ நினைக்கிறாய். ஆனால் அவன் செய்தது என்ன? எத்தனையோ ஆயிரக் கணக்கான மணங்கு உணவை அவன் உள்ளே செலுத்தி, அதே அளவு உடல் கழிவுகளை வெளியேற்றி யிருக்கிறான். சாப்பிட்ட உணவும், நீக்கிய கழிவும் மலை அளவிற்கு இருக்கும் அல்லவா? இவ்வளவுதான் அவன் செய்த வேலை. இதைத்தான் வாழ்க்கையின் அர்த்தம் என்கிறாயா? இதுதான் அர்த்த சாஸ்திரம் எனப்படுகிறதா?

ஆகவே நான் கடவுளுக்கு அர்த்தம் சொல்லுவதில்லை. அர்த்தம் தந்தால் உனது அர்த்தசாஸ்திரத்தில் ஓர் அங்கமாக அவர் அடங்கி விடுவார். அவர் அர்த்தத்தை கடந்தவர் என்கிறேன் நான். அவர் தேவைப்படுவதில்லை. நீ தேவைகளில் சிக்கிக் கிடக்கும் வரை அவரைப் பார்க்க முயலமாட்டாய். ஆகவே ஒரு சமூகம் செல்வச்

செழிப்புடன் விளங்கினால்தான் மத விஷயங்களில் முன்னேற்றம் காணப்படுகிறது.

நான் இவ்வாறு கூறுவது மக்களை சங்கடத்தில் ஆழ்த்தி விடுகிறது. ஏழை சமயப் பற்றுள்ளவனாக இருக்க முடியாதா என்று என்னைக் கேட்கிறார்கள். நான் அவ்வாறு கூறவில்லை, ஏழையும் சமய ஆர்வம் உடையவனாக இருக்க முடியும். ஆனால் ஒட்டுமொத்தமாக ஏழைகளின் சமூகம் சமயப் பற்று கொண்டிருக்காது. தனிமனிதனாக ஓர் ஏழை ஆற்றல்மிக்க ஆன்மிகவாதியாக ஆகலாம்; அவன் வாழ்க்கையின் பயனின்மையைப் புரிந்து கொள்ளலாம். வாழ்க்கையின் அர்த்தம் என நாம் நினைப்பது உண்மையில் அர்த்தமற்றது என அவன் அறிந்திருக்கலாம். அர்த்தத்தைக் கடந்ததுதான் அர்த்தமுள்ளது என்று அவன் உணரலாம். ஆனால் இவ்வளவு மாறுதல் நடப்பது புரட்சிகரமான விஷயம். ஆனால் பணக்கார சமூகம் மதத்தில் ஆர்வம் கொண்டிருக்கும்.

வேறு விதமாகவும் சொல்லலாம். சமயப் பற்றுள்ளதாக ஆகின்ற சமூகமே செழிப்பான சமூகமாகும். இந்தியா பொற்காலத்தில் இருந்தபோது தேவைகள் நிறைவேறின; தானியக் களஞ்சியங்கள் நிரம்பி வழிந்தன; வயல்களில் நல்ல அறுவடை; மக்களுக்குப் பசித்துன்பம் இல்லை, உடல் வேதனை இல்லை, சங்கடங்கள் இல்லை. அப்போது சமய உணர்வு சிகரம் தொட்ட நிலையில் இருந்தது. அக்காலத்தில் பகவத்கீதை தோன்றியது; அஷ்டாவக்கிரரின் மகாகீதை தோன்றியது; உபநிடதங்கள் எங்கும் முழங்கின; புத்தரும் மகாவீரரும் இந்நாட்டைத் தட்டியெழுப்பினார்கள்.

அத்தகைய பொற்கால நிலை மேற்கே சென்றுவிட்டது. சமயம் சம்பந்தமான பெரிய நிகழ்ச்சிகள் மேற்கத்திய நாடுகளில்தான் இனி நிகழும். கிழக்கில் அவை நிகழ வாய்ப்பில்லை. கிழக்கத்திய நாடுகளுடன் மதத்தின் கடந்த காலம்தான் சம்பந்தப்பட்டுள்ளது. மதத்தின் எதிர்காலம் மேற்கின் கையில் உள்ளது. பணத்தில் என்ன இருக்கிறது, சொத்தில் என்ன இருக்கிறது என்று இகழ்ந்து பேசியே ஆன்மிகத்தை இழந்தோம்! ஆம், பணத்திலும் சொத்திலும் ஒன்றுமில்லைதான், சாரமில்லைதான். ஆனால் அதைத் தெரிந்து கொள்வதற்குப் பணமும் சொத்தும் தேவைப்படத்தான் செய்கின்றன!

அந்த அளவிற்காவது அவை அர்த்தமுள்ளவைதான். உன் வாழ்க்கையில் எல்லாம் கிடைத்து விட்டபோதிலும், ஒன்றுமே கிடைக்கவில்லை என்பதுபோல் நீ உணர்ந்தால், உள்ளத்திலிருந்து ஏக்க ஒலி கேட்டால், நீ இதுவரை தேவையில்லை என்று நினைத்ததைத் தேட வேண்டியிருக்கும்.

பரமாத்மா வாழ்க்கைக்குக் கட்டாயமில்லை! தவிர்த்து விடலாம் அவரை. கட்டாயம் என்பது என்ன? நீ ஒன்றைச் செய்தாலும், செய்யாவிடிலும் அது நிகழத்தான் போகிறது என்பதுதான் கட்டாயத்தின் பொருள். தவிர்க்க முடியாதது. கட்டாயமானது மரணம், முதுமை. கட்டாயமில்லாதது சமாதி நிலை, தியானம், மதம். கட்டாயமானது என்றால் எளிதில் அழியக்கூடியது போய்த்தான் ஆகவேண்டும் என்பதாகும். ஆனால் நிரந்தரமானது வந்தே தீரும் என்று நிச்சயமோ, கட்டாயமோ இல்லை.

நிரந்தரம் என்பதை நீ தேடினால்தான் உன்னிடம் வரும். தேடுவாய்; வழி தவறி அலைவாய்; விட்டுவிட்டுப் பெறுவாய்; தொலைப்பாய்; மிகவும் சிரமப்பட்டபின் அது உனக்குக் கிடைக்கும். அதுவும் கட்டாயமில்லை.

கட்டாயம் என்பதற்கு என்ன அர்த்தம்? நீ சும்மா உட்கார்ந்திரு; ஒன்றும் செய்யாதே; நடப்பது நடந்தே தீரும் என்று அர்த்தம். மரணம்போல் கட்டாயம் இல்லை கடவுள் கிடைப்பது. எல்லோரும் இறப்பதுபோல் எல்லோரும் ஆத்மஞானம் பெறுவார்கள் என்று கட்டாயமில்லை; அவசியமும் இல்லை. ஆத்மஞானம் தேடினால், ஆழ்ந்து பயிற்சி செய்தால், சுறுசுறுப்பாக முயன்றால், தன்னையே பணயம் வைத்தால் கிடைக்கும். அது தலைவிதி போன்றதன்று. விதியில் எழுதப்பட்டுள்ளவை அற்ப விஷயங்கள். அவை நடைபெறும். ஆனால் ஆத்மஞானம் தலைவிதியையும் மீறிய விஷயம்.

ப்தினான்காம் வயதில் காம உணர்ச்சி ஆரம்பிக்கும். ஐம்பதைக் கடந்தபின் முதுமை வரும். எண்பதைத் தொடுகையில் சாவு வரும். காம உணர்வு கட்டாயமான தேவை. இயற்கையான தேவை. உரிய வயதில் காம உணர்வு தோன்றாவிடில் உடலில் ஏதோ கோளாறு இருக்கும். சிகிச்சை செய்வது அவசியமாகிவிடும். ஆனால் ஆன்மிக

உணர்வு கட்டாயமான ஒன்றில்லை. அது இயல்பான உணர்வும் இல்லை. அவ்வுணர்வு மனத்தில் மேலிடுவது ஓர் அதிசயம். ஏனென்றால் அரியதான ஒன்றல்லவா சம்பவித்திருக்கிறது.

இதனால்தான் நாம் நூற்றாண்டுகளாகப் புத்தரை நினைவில் வைத்துள்ளோம். அவரது வாழ்க்கையில் அதிசயம் நிகழ்ந்தது; எதிர்பாராதது, சாத்தியமில்லாதது நிகழ்ந்தது. ஆகவே புத்தரை நாம் நினைக்கும் போதெல்லாம் நமது இதய வீணையின் தந்தி ஒலியெழுப்புகிறது.

இந்த நில்வுலகில் நிகழ்வதற்கு மிக அரியதான சம்பவம் ஆத்மஞானம் கிடைப்பதுதான். அரிய சம்பவம் என்று நான் சொல்லுவதால் நிகழவே நிகழாது என்று அர்த்தமில்லை. ஆத்மஞானம் பெறுதல் நிகழ முடியும். ஆனால் அப்படிக் கட்டாயம் ஒன்றுமில்லை. அது இயற்கையானதும் அன்று. ஆகவே நீ ஒரு முயற்சியும் எடுக்காமலிருந்தால் அது தானாக நிகழவும் வாய்ப்பில்லை. அது இயற்கை கடந்த நிகழ்ச்சி.

ஆத்மஞானம் கட்டாயமான தேவை என்றால் நீ ஒன்றும் செய்ய வேண்டியிராது. கட்டாயமில்லை என்பதால்தான் அது கிடைப்பதில்லை. அதைப் பெற நீ மிகவும் முயல வேண்டியுள்ளது. முயற்சியின் காரணமாக அது கிடைக்கப் பெறுவதும்கூட அதிசயம்தான். அது முயற்சியால் கிடைக்கும் என்பதற்கு யாதொரு உத்தரவாதமும் இல்லை. அது அரிய சம்பவம். எல்லை கடந்த இறைநிலையை எல்லைக்குள் கொண்டுவர வேண்டும். பரமாத்மாவை உடலினுள் இறங்கச் செய்ய வேண்டும். சூனியத்தை மனத்தில் நிரப்ப வேண்டும். மகாசூனியம் பரவ களம் அமைத்துத் தரவேண்டும். கட்டாயம் என்பவை ஏற்கெனவே முடிந்து போனவையாக இருக்கும். ஆசை ஏற்படுதல், குடும்பத்தை நிறுவுதல், பணத்தைத் துரத்துதல், பதவி தேடுதல் இவையெல்லாம் நடைபெறுகின்றன. அரசியல் கட்டாயமான தேவையாகி விட்டது. ஆன்மிகம் கட்டாயமில்லை.

ஆன்மிகம் அரிதானது என்பதால்தான் நாம் இந்தியாவில் ஆன்மிகவாதிக்கு மரியாதை காட்டுகிறோம். மன்னர்களுக்கு அந்த அளவிற்கு நாம் மரியாதை தந்ததில்லை. ஏனெனில் மன்னர் பதவியில் விசேஷம் ஒன்றுமில்லை. எல்லோருமே மன்னர்களாக

விரும்புகிறார்கள். சிலர் தான் ஆக முடிகிறது என்பது வேறு விஷயம். எல்லோரும் விரும்புவதால் இது சாதாரணமான விஷயம். மன்னர் பதவியைப் பெற்று விடுவதிலும் தனிச்சிறப்பு இல்லை.

ஓர் ஊருக்கு புத்தர் வருகை தந்தார். அவ்வூர் அரசரிடம் அமைச்சர் சென்று, புத்தரை வரவேற்று நகரத்துக்குள் அழைத்துச் செல்வோம் என்று கூறினார். அரசர் திமிர் பிடித்தவர். "நாம் வரவேற்கப் போக வேண்டிய அவசியமென்ன? புத்தர் யார்? கேவலம் ஒரு யாசகர்தானே. பிட்சை கேட்க அவராகவே நம்மிடம் வந்து சேர்வார். நாம் போக வேண்டியிருக்காது," என்று அரசர் மறுத்தார்.

அமைச்சர் வயதானவர். அரசரின் மறுப்பைக் கேட்டு அழுதார். பதவி விலகல் கடிதம் எழுதி அரசரிடம் தந்தார். "என்னை மன்னித்து விடுங்கள். நான் புறப்படுகிறேன். உங்கள் நிழலில்கூட நான் உட்கார விரும்பவில்லை," என்றார்.

அரசர் திகைத்தார். "என்ன விஷயம்? எதற்காக இவ்வளவு கோபமாக இருக்கிறீர்? நான் ஒன்றும் தப்பாகச் சொல்லிவிட வில்லையே. நான் அரசன். அவர் பிட்சு, பிட்சை பெறுபவர். அத்தகையவரை நகருக்குள் வரவேற்க நான் உங்களுடன் சேர்ந்து ஏன் வரவேண்டும் என்கிறீர்?"

அமைச்சர் சொன்னார்: "விஷயம் முடிந்துபோய் விட்டது. நான் உங்கள் அருகில் அமர விரும்பவில்லை. வேறு ஒருவரை அமைச்சராக்கிக் கொள்ளுங்கள். அரசியல் என்பது சாதாரணமான விஷயம். அரசராவதும் சாதாரண விஷயமே. இதுகூடத் தெரியாத உங்களிடம் பணிபுரிய எனக்கு விருப்பமில்லை. ஆனால் சித்தார்த்தன் புத்தரானது, பிட்சுவானது அதிசய நிகழ்ச்சி. அபூர்வமான, உவமையற்ற நிகழ்ச்சி. நீங்கள் சென்று அவருடைய பாதங்களில் பணியுங்கள். இந்த ஊருக்கு அவர் வந்திருப்பது நீங்கள் செய்த அதிர்ஷ்டம். அதைப் புரிந்து கொள்ளாத உங்களை விட்டுப் போகிறேன். இதற்கு மேலும் உங்களுடன் இருப்பது கெட்ட சகவாசமாகவே கருதப்படும்." அமைச்சர் சொன்னது உண்மை. அவரிடம் ஊடுருவும் கண்கள், நுணுக்கமான அறிவு, பரீட்சித்து மதிப்பிடும் திறமை இருந்தன.

பணம் நமக்குத் தேவைப்பட்டாலும் அதற்கு நாம் விசேஷ மரியாதை தந்ததில்லை. நற்புத்தி, சந்நியாசம், தியாகம் ஆகிய மற்ற விஷயங்களுக்குத்தான் முதல் மரியாதை தருகிறோம். பற்றுகளை விட்டவருக்கு, கண்களை உயர்த்தி விண்ணில் பார்வையைப் பதித்தவருக்கு மரியாதை செய்கிறோம்.

மேற்கு நாடுகளில் வரலாறு எழுதப்பட்டது. கிழக்கு நாடுகளில் வரலாற்றுக்குப் பதிலாக புராணங்கள் எழுதப்பட்டன. மேற்கு நாட்டுச் சிந்தனையாளர்கள் இந்தியாவில் ஏன் வரலாறு எழுதும் வழக்கமில்லை என்று திகைக்கின்றனர். புராணம் என்பது கதை, கற்பனை என்று அவர்கள் நினைக்கின்றனர்.

ஆனால் நாம் வரலாற்றை அறிந்திருந்தும் எழுதி வைக்க வில்லை. ஏனெனில் வரலாறு என்பது சாதாரண நிகழ்ச்சிகளின் தொகுப்பாகும். புராணம் என்பது அரிதான, சிறப்பான சம்பவங்களின் தொகுப்பு. . ஆகவே புராணம் கற்பனையை அடிப்படையாகக் கொண்டதுபோல் தோன்றுகிறது. அந்த சம்பவங்கள் நிகழ்ந்திருக்கு மென சுலபத்தில் நம்ப முடிவதில்லை. புராணம் என்றால் எப்பொழுதாவது நடைபெறும் நிகழ்ச்சி என்று அர்த்தம். வரலாறு என்றால் தினமும் நடக்கும் நிகழ்ச்சி, அடிக்கடி நடக்கும் ஒரேமாதிரி நிகழ்ச்சி என்று பொருள். நெப்போலியன், நாதிர்ஷா, தைமூர்லங்க், சங்கேஸ்கான், ஹிட்லர், ஸ்டாலின், மாவோ போன்றோர் சம்பந்தப் பட்ட நிகழ்ச்சிகள் தினசரி நடைபெறுபவை; செய்தித்தாள்களில் வரும் துண்டுச் செய்திகள் போன்றவை. இவற்றை வைத்துத்தான் வரலாறு எழுதப்படுகிறது.

புத்தரின் வாழ்க்கை எதிர்பார்க்க முடியாத நிகழ்ச்சி. சாதாரண மாக நடைபெற முடியாத நிகழ்ச்சி. திடீரென்று நள்ளிரவில் சூரியன் உதித்து, இருட்டில் கிரணங்கள் பரவி, நாம் அவற்றைப் பிடிக்க முடியாமல் போனது போன்ற நிகழ்ச்சி. அற்புதமான பாட்டொலி கிளம்பி அதை நாம் சரிவரக் கேட்க முடியாமல் போனது போன்ற நிகழ்ச்சி. ஏனெனில் நாம் ஆரவாரத்தால் நிரம்பியுள்ளோம். பாட்டு முடிந்து விட்டது. ஏதோ தெளிவற்ற நினைவை ஏற்படுத்திச் சென்று விட்டது. நிஜமாகவே பாட்டுக் கேட்டோமா என்று நமக்கு சந்தேகம் கூட தோன்றலாம். புத்தர் போன்ற மனிதரைப் பார்த்திருக்கிறோமா?

அப்படி ஒருவர் இருந்திருப்பாரா? நமக்கே நம் மீது நம்பிக்கை இல்லை. நாம் சந்தேகத்தில் ஆழ்ந்து விடுகிறோம். காலப் போக்கில் நமது ஞாபக சக்தி மங்கிவிடுவதால் இப்படியொரு சம்பவம் நிகழ்ந்தா இருக்கும் என்ற சந்தேகம் வலுக்கிறது.

எப்பொழுதாவது நடந்த சம்பவத்தைக் கூறுவதுதான் புராணம். அந்த சம்பவங்கள் ஆயிரமாயிரம் ஆண்டுகளில் எப்பொழுதாவது நிகழ்ந்தவை. உவமையற்ற அந்த சம்பவங்களின் தொகுப்பின் பெயர் புராணம். வரலாறு வீண்பொருள் போன்றது. தினமும் வெளியே கொண்டுபோய் கொட்டும் குப்பை போன்ற செய்திகளைக் கொண்டது.

முற்காலத்தில் மக்கள் காலையில் எழுந்து பகவத்கீதை, தம்மபதம் போன்றவை படித்தார்கள். இப்போது தினமும் காலையில் எழுந்தபின் செய்தித்தாள் படிக்கிறார்கள்.

நீ செய்தித்தாளில் படிப்பது தினமும் நடந்து கொண்டேதான் உள்ளது என்பதை எப்பொழுதாவது யோசித்தாயா? ஆனாலும் தினமும் அதையே படிக்கிறாய். இதுவரை நடைபெறாத புதிய நிகழ்ச்சி எதையாவது செய்தித்தாளில் படித்துள்ளாயா? செய்தித்தாளைவிட சீக்கிரம் பழையதாகி விடும் வேறு பொருள் இல்லை. இன்றையச் செய்தித்தாளை நாளை உன்னால் படிக்க முடியாது!

நான் முன்பு வசித்த ஓரிடத்தில் ஒரு பைத்தியக்காரனும் இருந்தான். அவனுக்குச் செய்தித்தாள்கள் என்றால் மிகவும் பிடிக்கும். அவன் தெருவில் அலைந்து செய்தித்தாள்கள் சேகரித்து வருவான். இந்தப் பழக்கம்தான் பைத்தியமாக மாறியதா என்று தெரியவில்லை. என்னிடமுள்ள செய்தித்தாள்களையும் வாங்கிப் போவான். ஒருமுறை நான் அவனிடம், "நீ ஏழெட்டு நாள் பழைய செய்தித்தாள்களையும் எடுத்துச் செல்கிறாயே, இவற்றை நீ என்ன செய்வாய்?" என்று கேட்டேன். அவன் அதற்கு, "செய்தித்தாளில் புதியது – பழையது என்றெல்லாம் உண்டா என்ன? நீ எப்பொழுது படிக்கிறாயோ அச்சமயத்திற்கு அது புதிதுதான். நான் இத்தனைச் செய்தித்தாள்களைப் படிக்காததால் என்னைப் பொறுத்த வரையில் இவை புதியவை." அவன் சொன்னது உண்மைதான். செய்தித்தாளில் புதிது—பழையது இரண்டுமே ஒன்றுதான்.

நீ செய்தித்தாள் படிக்கிறாய். நீ ஒரேவகைச் செய்திகளைத்தான் தினமும் படிக்கிறாய் என்பதை எண்ணிப் பார்த்ததுண்டா? புதிய சம்பவம் ஏதாவது என்றாவது நிகழ்கிறதா? புனித குரானில், தம்மபதத்தில், அஷ்டாவக்கிர கீதையில் நீ புதிய செய்திகளை அறியலாம். நம் முன்னோர்கள் நம்மை விடவும் கெட்டிக்காரர்கள். அவர்கள் சாதாரணமாக நடைபெற முடியாதவற்றை, எளிதில் வர்ணிக்க முடியாதவற்றை, வசப்படாதவற்றைத்தான் படித்தார்கள். அவர்கள் அபூர்வமான மலர்களைத் தேடி திரட்டினார்கள். காலப்போக்கில் அவர்களே துர்லபமான, அபூர்வமான மனிதர்களாகி விட்டார்கள். நடைபெற முடியாத சம்பவங்களைத் தேடித்தேடி அவர்களே அத்தகைய நிகழ்ச்சிகளைச் செய்யக் கூடியவர்கள் ஆகிவிட்டார்கள். ஆனால் நீயோ குப்பை கூளத்தை நாடிச் சென்று அதை அலசுகிறாய்.

ஆகவே நான், ஆன்மிகம் என்பது இந்த உலகத்தில் கட்டாயத் தேவை இல்லை என்கிறேன். அது அநாவசியம் என்றும் கருதுகிறேன். ரஷ்யாவில் இருபது கோடி மக்கள் மதம் எதையும் பின்பற்றாமல் வாழ்கிறார்கள். அவர்களுக்கு என்ன கெடுதல் அல்லது பின்னடைவு ஏற்பட்டிருக்கிறது? அவர்கள் சந்தோஷமாகத்தான் வாழ்கிறார்கள். வசதிகளுக்கும் குறைவில்லை. நூற்றுக்கு ஒன்றிரண்டு பேர் அமைதியிழந்திருக்கலாம். உதாரணமாக ஸோல்ஜெனித்ஸனைச் சொல்லலாம்.* மக்களாட்சியில் ஒன்றிரண்டு பேருக்கு என்ன மதிப்பு உள்ளது? மக்களாட்சி என்பது கும்பலின் ஆட்சிதானே. தொண்ணூற்று ஒன்பது பேர்க்கு சமூக அக்கறை கிடையாது. அவர்களுக்கு மது, மாது, வீடு, கார், சாப்பாட்டு வசதிகள் அமைந்து விட்டால் போதுமானது. எத்துணை அற்ப விஷயங்களால் மக்கள் சமாதானமாகி விடுகிறார்கள்! எத்துணை பரிதாபமான நிலை இது. எல்லோரும் இப்படி மாசடைகிறார்களே.

மதம் என்பது உலகிலிருந்து நீங்கிவிட்டால் சிலருக்கே அது கஷ்டமாக இருக்கும். இதனால் பெரும்பான்மையோர் பாதிக்கப்பட மாட்டார்கள். கௌதம புத்தரின் பிறப்பால் சிலருக்குத்தான் வாழ்க்கையில் மாறுதல் செய்து கொள்ள வேண்டியிருந்தது. அவரால் மற்றவர்களுக்கு எந்த பிரச்சினையுமில்லை. மதம் அபூர்வமானது.

---

* Aleksandr Solzhenitsyn ரஷ்ய நாவலாசிரியர், நோபல் பரிசு பெற்றவர்

எப்பொழுதாவது மலரும் பூ அது. தினந்தோறும் அது தோன்று வதில்லை.

என்னிடம் ஒரு தோட்டக்காரர் வேலை பார்த்தார். அவர் ஒருநாள் ஒரு செடியை வாங்கியிருப்பதாகவும், அதற்காக ஐந்நூறு ரூபாய் கொடுக்க வேண்டும் என்றும் சொன்னார். நான் அதற்கு அவரிடம், "உனக்கு பைத்தியமா? ஒரு செடியின் விலையா ஐந்நூறு ரூபாய்? அப்படி என்ன விசேஷம் இந்தச் செடியில்?" என்று கேட்டேன்.

"இந்தச் செடியில பன்னிரண்டு வருஷங்களுக்கு ஒரு முறைதான் பூ மலரும்," என்று அவர் விளக்கினார்.

"அப்படியானால் ஐந்நூறு என்ன ஆயிரம் ரூபாய் கூட தரலாம். பூ பூக்க அவ்வளவு இடைவெளி எடுத்துக் கொள்ளுமென்றால் இது உவமையற்ற தாவரம்தான். சாதாரணச் செடிகளில் இரண்டு வாரம், நாலு வாரங்களில் பூ தோன்றி விடுகிறது. ஆனால் ஒரு பூ பூக்க பன்னிரண்டு ஆண்டுகள் பிடிக்கின்றன என்றால் எப்போதோ தோன்றும் மதத்துக்கு இணையானது அது. கட்டாயம் இந்தச் செடியை நடு. இது என் தோட்டத்திற்குக் கட்டாயமாக வேண்டும். இது மலர்வதை நாம் எதிர்பார்த்துக் காத்திருப்போம்," என்று நான் தோட்டக்காரருக்கு அனுமதி கொடுத்தேன்.

ஒருநாள் அச்செடியில் பூ தோன்றியது. அது இரவில்தான் மலரும். ஒரு பௌர்ணமி இரவில் அது மலர்ந்தது. அக்கம்பக்கத்தினர் மட்டுமில்லை, தொலைவிலிருந்து மக்கள் அந்தப் பூக்களைப் பார்க்க வந்தார்கள். காரணம், அது அடிக்கடியோ, தினந்தோறுமோ பூப்பதில்லை என்பதுதான்.

புத்தரைப் போன்ற அபூர்வமான மனிதர்கள் எப்பொழுதாவது தான் பிறக்கின்றனர். யோகத்தில் குறிப்பிடப்படும் ஸஹஸ்ரார கமலம் எப்பொழுதோதான், யாருக்கோதான் மலரும். தினமும் மலர்கின்ற ஒன்றிற்கு ஆசைப்படாதே. தினமும் கிடைப்பது அற்பமானது. அதில் சிறப்பொன்றும் இல்லை. அபூர்வமானது, உவமையற்றது, வர்ணிக்க முடியாதது எதுவோ அதற்கு ஆசைப்படு. நடைபெற முடியாததை, கிடைக்க முடியாததை நீ என்று விரும்பத் தொடங்குகிறாயோ

அன்றிருந்து நீ ஓர் ஆன்மிகவாதியாகிறாய். சாத்தியமில்லாததை விரும்புவதே மதம் என்று நான் வரையறுக்கிறேன்.

தர்தூலியன்* கூறிய புகழ்பெற்ற வாசகம் ஒன்றுள்ளது – 'நான் கடவுளை நம்புகிறேன். ஏனெனில் அவர் வசப்படாதவர், சாத்தியப் படாதவர்.' சாத்தியப்படும் ஒன்றில் நம்புவதற்கு என்ன உள்ளது? அதற்குப் பெருமளவில் அறிவோ, மேதைமையோ தேவை இல்லை. சாத்தியப்படும் ஒன்றில் முட்டாள்கூட நம்பிக்கை கொள்ள முடியும். சாத்தியப்படாததில் நம்பிக்கை கொள்ள உனக்கு இமயமலை அளவு பக்தி தேவைப்படும் – passion for the impossible. இதுதான் மதம் என்பது.

'மதம், ஆன்மிகம் முதலிய சொற்கள் ஆத்மஞானத்துடன் அநாவசியமாகச் சேர்க்கப்படுகின்றனவா?' என்று நீ கேட்டாயல்லவா?

இல்லை, துளிக்கூட அவ்வாறில்லை. இச்சொற்கள் அர்த்தம் நிரம்பியவை. தர்மம் (மதம்) என்பதற்கு சுபாவம் என்று அர்த்தம். அது மதம் என்ற பெயரால் அழைக்கப்படும் சம்பிரதாயங்களைவிட ஆழமானது. தர்மம் என்பது சம்பிரதாயமான இஸ்லாம், கிறிஸ்தவம், ஜைனம், இந்து சமயம் முதலிய எல்லாவற்றின் அடிப்படை சுபாவம் அல்லது சாரம். சம்பிரதாயமான மதவழிகள் அந்த ஒரே தர்மம்வரை கொண்டு சேர்க்கும் பாதைகளாகும். இஸ்லாம், கிறிஸ்தவம் முதலியவை எல்லாம் சம்பிரதாயங்கள். சம்பிரதாயம் என்றால் நம்மைக் கொண்டு சேர்க்கும் வழி; தர்மம் என்றால் நாம் போய்ச் சேரும் இடம் என்று பொருள்படும்.

தர்மம் நம் உள்மனத்தில் நிறைந்துள்ள சுபாவமாகும். நமது உள்மனத்தின் மையத்தில் விதைபோல் மறைந்து கிடந்து வெளிப்படுவதே தர்மம் என்பது. நாம் கடவுளை விதை வடிவில் ஏந்தியபடி இயங்குகிறோம். பல பிறவிகளாக இவ்வாறு இயங்கி வருகிறோம். அந்த விதைக்கு நாம் தியானம் என்னும் நிலத்தை தயார் செய்யாத வரையில் ஆன்மிகம் என்னும் மரம் அங்கே வளராது. ஆன்மிகத்தை நெருக்கமாக அறிவதற்கு தியானத்தில் ஆழமாக மூழ்க வேண்டும். தியானம் என்னும் நிலத்தில் ஆன்மிகம் என்னும் விதை

* Tertullian கிறிஸ்தவக் கோட்பாட்டு அறிஞர். கி.பி. இரண்டாம் நூற்றாண்டைச் சேர்ந்தவர். ஞான ஸ்நானம் பற்றிய முதல் நூல் எழுதியவர்.

முளைக்கிறது. உலகில் ஆன்மிகர்கள் அரிதாக உள்ளனர். பெரும்பாலும் மதநம்பிக்கை உடையவர்கள்தான் உண்டு. அவர்களும் பல சம்பிரதாயங்களாகப் பிரிந்துள்ளனர். ஆன்மிகம் உனது உண்மை சொரூபமாகும். அதைப் புரிந்துகொள்ள முயற்சிசெய்.

உன்னிடம் இருவகைப் பொருள்கள் உள்ளன. ஒன்று மற்றவர்கள் தந்தது. அது உனது சொந்தமானது அன்று. உதாரணமாக மொழி. நீ பிறந்தபோது எந்த மொழியையும் உன்னுடன் சேர்த்துக் கொண்டு வரவில்லை. மொழி உனக்கு இங்கே பிறகு கொடுக்கப்பட்டது. நீ மௌனத்துடன் சேர்ந்து பிறந்தாய். மௌனம் ஆன்மிகம்; மொழி சமூகம் சார்ந்தது. பிறக்கும்போது நீ உன்னுடன் கொண்டு வந்தது, உனக்கே சொந்தமான ஒன்று. அது ஆன்மிகம். கடன் வாங்கியது, பழையதாகிப் போனது, மற்றவர்கள் உனக்குக் கொடுத்தது – இதெல்லாம் ஆன்மிகமன்று.

நீ நிரம்ப அறிவு பெற்றிருப்பாய். பல்கலைக் கழகத்திலிருந்து, சாஸ்திரங்களிலிருந்து, குருமார்களிடமிருந்து நிறையக் கற்றிருப்பாய். இதெல்லாம் ஆன்மிகமன்று. உனது உள்மனம் விழித்து, அகக்கண்கள் திறந்து, சுயமான ஞானம் பிறப்பது – அதுவே ஆன்மிகம். ஆன்மிகத்திற்கெனத் தனி சாஸ்திரமோ, பாடப் புத்தகமோ கிடையாது. அதைக் கடன் வாங்குவதற்கான வழியும் இல்லை. அது ஒருவர் கையிலிருந்து இன்னொருவர் கைக்கு மாற்றக்கூடிய திடப்பொருள் அன்று. அது உனது நிஜத்தன்மை. உனக்கு உலகில் மற்றவர்களால் கிடைத்தவற்றை 'இது நானில்லை, இது நானில்லை' என்று விலக்கிக் கொண்டே வந்தால், கடைசியாக உனக்குச் சொந்தமானது என்று மிஞ்சியிருப்பதுதான் ஆன்மிகம். எல்லாவற்றிலிருந்தும் உன்னை விலக்கிக் கொண்டு பார்ப்பது, சாட்சி மனப்பான்மையுடன் விளங்குவதே ஆன்மிகம்.

ஆன்மிகம், சாட்சி மனப்பான்மை ஆகியவை, இனிமையான சொற்கள். இவற்றின் அர்த்தத்தை மனத்தினுள் கிரகித்துப் புரிந்து கொண்டால் உள்ளே ஏதோ மாற்றம் நிகழத் தொடங்கும். சிறு நெருப்புப் பொறி மாபெரும் வனத்தை எரித்துவிடும். இந்தச் சொற்களும் அத்தகைய நெருப்புப் பொறிகள் போன்றவையே.

**இரண்டாம் கேள்வி:**

**குரு, சீடனை நேரடியாகப் பார்க்கிறார். ஆனாலும் அவனுக்கு நிறைய பரீட்சைகள் வைக்கிறார். இதனால் சீடனுடைய ஆத்ம ஞானம் மேலும் தூய்மைப்பட்டு தீவிரமாகிறதா?**

**கு**ரு உன்னை மூன்று வடிவங்களில் பார்க்கிறார். நீ முன்பு எப்படி இருந்தாய்; இப்போது எப்படி உள்ளாய்; நீ எதிர்காலத்தில் எத்தகையவனாக ஆவாய் என்று பார்க்கிறார். நீ முன்பு எப்படியிருந்தாயோ அதிலிருந்து உன்னை விடுவிக்க வேண்டும். உனது கடந்த காலத்திலிருந்து உனக்கு விடுதலையளிக்க வேண்டும். உனது கடந்த கால மாசைத் துடைத்து உன்னைத் தூய்மையாக்க வேண்டும். கடந்த காலக் குப்பை உனது கண்ணாடியில் படிந்துள்ளது. உன்னைக் கடந்த காலத்தின் பாதிப்பிலிருந்து பிரிக்க வேண்டும். இது குருவின் முதல் வேலை.

நீ இயற்கையாக எப்படி உள்ளாய் என்பதை உனக்கு உணர்த்த வேண்டும். ஏனென்றால் நீ யார் என்பது உனக்கே முழுமையாகத் தெரியவில்லை. இதுவரை நீ இருந்த விதம், அதாவது உனது கடந்த காலம், பாரமானது. அந்தப் பாரத்தின் கீழ் நீ மிகவும் அழுந்திக் கிடப்பதால் உனது நிகழ்காலம் உன் கண்ணுக்குத் தெரிவதில்லை. நிகழ்காலம் என்பது மிகவும் அற்பமான காலம்; அணு அளவேயான காலம். அதை நீ பிடித்து நிறுத்த முடியாது. இதோ நிகழ்காலம் என்று நீ சொல்லி முடிக்கும்போதே அது கடந்த காலமாகி விடுகிறது. மெல்லிய நீரோட்டம் போன்றது நிகழ்காலம். நீ சாட்சிபோல் கவனித்தால்தான் அதைப் பிடிக்க முடியும்.

உன் எதிர்காலம் எப்படி இருக்கும்? நீ கடந்த காலத்தின் பிடியிலேயே நீடித்தால், அந்தக் கடந்த காலம்தான் உன் எதிர்காலத்தை நிர்ணயிக்கும். அது செத்த காலம். ஆகவே அது நீ வாழவேண்டிய எதிர்காலத்தையும் நாசமாக்கி விடும். ஏனெனில் நீ எதிர்காலத்தைக் குறித்து தயாரிக்கும் திட்டத்தை எங்கேயிருந்து கொண்டு வருவாய்? உன் கடந்த காலத்திலிருந்துதானே? கடந்த கால அனுபவத்தை அடிக்கல்லாகக் கொண்டுதான் எதிர்காலக் கட்டடத்தை நீ எழுப்புவாய். அது திருப்பிக் கூறல்களுக்கு சமம். நிறத்தை மாற்றினாலும்,

வடிவத்தைச் சிறிது மாற்றினாலும் அது கடந்த காலப் பாதிப்பிலிருந்து தப்ப முடியாது. நன்றாக அலங்கரிக்கப்பட்ட உடல்தான், ஆனால் பிணம்! எதிர்காலம் குறித்த உன் திட்டமெல்லாம் கடந்த காலத்தி லிருந்து வரும். அது கடந்த காலத்தின் உருவமைவாக இருக்கும்.

ஆகவே உன் கடந்த காலம் உன் எதிர்காலத்தினுள் ஊடுருவ விடாமல் தடுக்க குரு முயல்வார். இல்லாவிடில், உன் கடந்த காலம் நஷ்டமடைந்ததைப்போல் எதிர்காலமும் நஷ்டப்படும். குரு நீ எதிர்காலம் பற்றி கவலைப் படுவதிலிருந்தும் சிந்திப்பதிலிருந்தும் காப்பாற்றி விடுவார். எதிர்காலம் பற்றிய சிந்தனை எதிர்காலத்தைச் சேதப்படுத்தும். எதிர்காலம் என்பது இன்னமும் வந்துசேராத காலம் அல்லவா? எதிர்காலம் என்பது நீ அறிந்திராத காலமாயிற்றே. அது எழுதாத பலகை, எழுதாத காகிதத்திற்கு சமம். அதில் ஏதாவது முன்கூட்டியே எழுதினால் தூய்மை கெடும்.

ஆகவே நிகழ்காலத்திற்கு உன்னை எழுப்ப வேண்டும். கடந்த காலத்திலிருந்து உன்னை விடுவிக்க வேண்டும். எதிர்காலக் கனவு களுக்குத் தடைபோட வேண்டும். இந்த மூன்று பணிகளுக்காகவும் குரு அதிகபட்ச முயற்சி எடுத்துக் கொள்கிறார். உன்னை எழுப்புகிறார். பிறகு நீ எழுந்துவிட்டாயா என்றறிய சோதனைகள் செய்கிறார். ஏனெனில் நீ ஆழ்ந்து தூங்குகிறாய். அவ்வாறு தூங்குகையில் நீ விழித்திருப்பதாகக் கனவு காண்கிறாய். அத்தகைய பல கனவுகள் உனக்கு நினைவிருக்கும். காலையில் எழுந்தபிறகு கனவு பொய்யென்றும், கனவில் விழித்திருந்ததும் பொய்யென்றும் தெரிய வருகிறது. இன்னொரு நிலையும் உண்டு. சிலர் விழிப்பு நிலையில் தாம் விழித்திருப்பதாக நினைப்பதும்கூட கனவாக இருக்கலாம். இது கண்விழிப்பே தவிர ஆன்மிக விழிப்பன்று.

ஆகவே அஷ்டாவக்கிரர் ஜனகரை நன்றாகச் சோதித்துப் பார்க்கிறார். ஜனகர் புதிய கனவு ஏதேனும் காண்கிறாரா என்று குரு கண்டுபிடிக்க விரும்புகிறார். சிலர் ஆன்மிகக் கனவு காண்பதுண்டு. அது மெய்யென நினைப்பதுண்டு. உலக விஷயமாயினும் ஆன்மிக மாயினும் அவை பற்றிய கனவு மெய்யாகாது. அதிலிருந்து விடுபட வேண்டும்.

அஹங்காரத்திடம் எச்சரிக்கை தேவை. நீ கடவுள் சொரூபம் என்று யாராவது கூறினால் உடனே ஒப்புக் கொள்கிறாய். ஏனெனில் உன் அஹங்காரத்திற்கு திருப்தி உண்டாகிறது. ஆனால் நீ மட்டுமில்லை, கோடிக் கணக்கான மக்கள் தங்களைக் கடவுள் சொரூபம் என்றுதான் நினைக்கிறார்கள். 'நீ கடவுள்' என்று உபநிடதங்களும் அஷ்டாவக்கிரரும் முழங்குவதைக் கேட்டு படுபாவியும் சமாதான மடைகிறான். பாவம் முதலிய எல்லாமே கனவு என்பதால் தானோ, பிறரோ யாரும் பாவியில்லை என்பது தனக்கு ஏற்கெனவே தெரியும் என்கிறான்.

ஆகவே நீ தொடர்ந்து பாவச் செயலில் ஈடுபடுகிறாய். பாவத்தை மறுக்க நீ எல்லாமும் மாயை என்கிறாய். திருட்டுத்தனம் செய்கிறாய், ஊரை ஏமாற்றுகிறாய். பிறகு எல்லாம் மாயையின் லீலை என்கிறாய். இந்த மாயாவாதம் அடிப்படையில் சுத்த வேதாந்தத்துடன் சம்பந்தப்பட்டது. இதனால்தான் வேதாந்த விளக்கக் கூட்டங்களில் அமர்ந்திருக்கும் பாவிகள் சந்தோஷமாகத் தென்படுகிறார்கள்.

மற்ற இடங்களில் பாவிகள் இவ்வளவு சந்தோஷமாக இல்லை. வேறு எங்கே போனாலும் மக்கள் ரகசியக் குரலில் ஏசுகிறார்கள் – 'அதோ கள்ள வாணிகன் போகிறான்; திருட்டுப்பயல் போகிறான்; மோசடிக்காரன் போகிறான்; பாவியிலும் படுபாவி போகிறான்' என்கிறார்கள். ஆனால் ஆன்மிகப் புனிதம் நிறைந்த சூழ்நிலையில் அவர்கள் சிறிது மன அமைதி பெறுகிறார்கள். ஆன்மிகக் கூட்டத்தில் பாவம்–புண்ணியம் என்பதெல்லாம் பொய் என்று கூறப்படுவது பாவிகளுக்குச் சரியான பேச்சென்று தோன்றுகிறது.

இதனால் துறவிகள், சாதுக்களின் அருகில் இவர்கள் அதிகம் காணப்படுகிறார்கள்! துறவிகளின் பேச்சு இவர்களது அஹங்காரத்திற்கு திருப்தியாக இருக்கிறது. அந்த சூழ்நிலையில் இவர்கள் சந்தோஷமாக உட்கார்ந்திருக்க முடிகிறது. ஏனெனில் அங்கே சந்நியாசிகள் சொல்கிறார்கள் – பாவம் முதலியவை கிடையாது. எல்லாம் மாயை. நடைபெறும் நிகழ்ச்சிகளை நாம் செய்யவில்லை. நாம் எதுவும் சுயமாகச் செய்ய முடியாது. கர்த்தா (செய்பவர்) நாம் இல்லை; போக்தா (அனுபவிப்பவர்) நாம் இல்லை. நாம் சாட்சி மாத்திரமே' இம்மாதிரிப் பேச்சு பாவிகளுக்குப் பிடித்திருக்கிறது.

சாட்சி என்பதற்கு இப்படி எதிர்மறை அர்த்தமும் கொள்ளலாம் என்பதால் குரு எச்சரிக்கையுடன் சீடனைக் கவனிக்க வேண்டியுள்ளது. ஜனகர் – அஷ்டாவக்கிரர் உரையாடல் குறித்து நான் எழுதியவற்றைப் பலர் படித்துள்ளனர். சிலர் எனக்குக் கடிதம் எழுதி அதில் ‘எங்களுக்கு ஆன்ம விழிப்பு கொடுத்து விட்டீர்கள். எங்களுக்கு ஆத்மஞானம் ஏற்பட்டு விட்டது’ என்று தெரிவித்துள்ளனர். ஒரு நண்பர் தன் கடிதத்தில், ‘நீங்கள் என்னை விழிக்கச் செய்து விட்டீர்கள். நான் பரமாத்மா ஆகிவிட்டேன்!’ என்று எழுதினார். அவர் எழுதியிருப்பது உண்மைதானா என்று யாரும் பரிசோதிக்க அவர் வாய்ப்புத் தரவில்லை. அவரே அப்படி முடிவு செய்து கொண்டு விட்டார்.

சுபாவ் என்பவர் எனக்கு எழுதிய கடிதத்தில், ‘எனக்கு விழிப்பு உண்டாகிவிட்டது.' நான் கடவுள் என்று குருதேவராகிய நீங்கள் சொன்னீர்கள். அதற்காக மிகுந்த நன்றி’ என்று கூறியிருந்தார். அத்துடன் அவர் மொட்டையுமடித்துக் கொண்டு விட்டார். அவர் மனைவி உஷா அழுததாகக் கேள்விப்பட்டேன். நான் உஷாவிற்கு ஆறுதல் தகவல் அனுப்பினேன் – ‘நீ துளிக்கூட கவலைப்படாதே. இப்படி யாருக்கும் ஆன்மவிழிப்பு ஏற்பட்டு விடாது. மொட்டை யடித்துக் கொண்டாரென்றால், சரிதான் என்று விட்டுவிடு. குடுமி கொஞ்சம் பாக்கி வைத்துள்ளாரல்லவா? ஆகவே அவர் இன்னும் முழுத் தியாகியாகி விடவில்லை. இந்துக்களுக்கு குடுமி குடும்பஸ்தரின் அடையாளம்.’

நான் என் செய்தியில் மேலும் கூறினேன், ‘நீ துளியும் பயப்படாதே, உஷா. உன் கணவருக்கு ஞான விழிப்பு ஏற்பட்டு விட்டதாக அவரின் குருவாகிய நான் அறிவிக்கும்வரை நீ கவலைப்படாதே. இம்மாதிரி இவர் பலமுறை புரண்டு படுப்பார்; மீண்டும் – மீண்டும் தூங்குவார்.’ இவ்வாறு ஜனகரும் செய்கிறாரோ என்றறியவே அஷ்டாவக்கிரர் அவரைக் கேள்விகள் கேட்கிறார்.

மனம் நேர்மையில்லாதது. பிறரை ஏமாற்றும் சாமர்த்தியம் நிறைந்தது. மற்றவர்களை மட்டுமல்ல, தன்னையேகூட அது ஏமாற்றிக் கொள்கிறது. நீ ஒருநாள் கட்டாயம் விழிப்பாய். விழித்தாக வேண்டும். விழித்திருப்பது உனது இயற்கை குணம். ஆனால் உனக்கு விழிப்பு ஏற்பட்டு விட்டதை குருவும் ஒப்புக் கொள்ள வேண்டும். தேவைப்

பட்டால் உன் காலை இடறிக் கீழேதள்ள வேண்டும்! இல்லாவிடில் மிகையான சுயமதிப்பீடு காரணமாக நீ ஆபத்தில் சிக்கிக் கொள்வாய்.

ஞானவிழிப்பு நிச்சயம் ஏற்படுகிறது; ஏற்படவும் வேண்டும். சிலசமயம் அது தீவிரமாகவும் ஏற்படுகிறது. சிலசமயம் சட்டென்று உண்டாகிறது. ஆனாலும் சம்பந்தப்பட்ட சாதகர் பிரமை, காரணமாக ஞானம் பெற்று விட்டதாக நினைத்தால் குருவும ஒத்தூதாமல் இருப்பதில் கவனம் செலுத்த வேண்டும். சில சமயம் உன் மனம் புண்படும். ஏனெனில் நீ சாதித்து விட்டதாக நினைக்கலாம். நானோ அதை மறுத்துப் பேசலாம். அப்போது நீ அடிபட்டதுபோல் உணர்வாய். இது தவிர்க்க முடியாதது. அதற்காக என்னை மன்னித்துவிடு. நான் உன்னைக் கண்டித்துத்தான் தீரவேண்டியுள்ளது. அவ்வாறு உன்னை நான் கண்டிக்காவிடில், உன்னை உன் பிரமையிலேயே நான் நீடிக்கவிட்டால், நான் உன் குரு இல்லை, நெருங்கிய தோழன் இல்லை. உன் பகைவனாக, உன்மீது கருணையற்றவனாக, உன்னை நேசிக்காதவனாக ஆகிவிடுவேன். உன் அஹங்காரத்தை நான் வளரவிட்டால் நான் உனக்கு எதிரி. உன் அஹங்கார விதை அடியோடு அழிந்துபோகுமாறு செய்வது எனது கடமை. தலையை மொட்டையடித்துக் கொள்வது முக்கியமன்று. அஹங்காரத்தைத்தான் மொட்டையடிக்க வேண்டும்.

ஆத்மஞானம் பெற ஒருவர் அதைப் புரிந்து கொள்ள முயலுகிறார். ஆழ்ந்து முயலுகிறார். மிகவும் ஆசைப்படுகிறார். விழிப்புடன் இருக்க விரும்புகிறார். ஆகவேதான் தூங்கும்பொழுதும் சில சமயம் விழித்திருப்பதாகக் கனவு காண்கிறார். விருப்பம் இருப்பது சுபம். விருப்பம் இருக்கத்தான் வேண்டும். அது கனவுதான் என்றாலும், அத்தகைய கனவு விழாதவர்களைவிட தூக்கத்தில் விழித்திருப்பதாகக் கனவு காண்பவர்கள் அதிர்ஷ்டசாலிகள். ஏனென்றால் விழிப்பு ஆசை உள்ளதால் தான் விழித்திருப்பது போன்ற கனவு வரும். ஒருவர் தான் சந்நியாசியாகி விட்டதாக அஹங்காரம் கொண்டாலும் பரவாயில்லை. அதற்கு அடிப்படையாக இருப்பது சந்நியாசத்தில் ஆர்வம் என்பது பாராட்டிற்குரியது. இந்த அஹங்காரத்தைக் கடந்து இன்னும் கொஞ்ச தூரம் முன்னேறினால் போதும். பயணம் முடிந்துவிடும்.

கடவுளை நோக்கிய இப்பயணத்தின் பாதையில் பல இடங்களில் தங்கும் முகாம்கள் இருக்கும். அங்கங்கே தங்கித் தூங்கலாம் என்று மனத்தில் தோன்றும். நீ ஆன்மிக சக்தி பெற்றுவிட்டதாகவும், மேலும் பயணிக்க வேண்டாம் என்றும் நினைப்பாய்.

ஒரு முஸ்லிம் இளைஞன் எனது சீடனாக இருந்தான். தீவிர விருப்பத்துடன் ஆன்மிகப் பயிற்சி மேற்கொண்டான். தனது குறிக்கோளில் அசையாத நம்பிக்கை கொண்டிருந்தான். ஒருநாள் அவன் என்னிடம் வந்து தனது முயற்சி பலனளித்துள்ளது என்றும், தனக்கு ஆத்மஞானம் ஏற்பட்டு விட்டதாகத் தோன்றுவதாகவும் தெரிவித்தான். "உனக்கு அப்படி என்ன அனுபவம் ஏற்பட்டது?" என்று நான் விசாரித்தேன்.

அவன் விளக்கினான்: "நான் மலைப்பாதையில் செல்லும் பஸ்ஸில் உட்கார்ந்திந்தேன். பஸ் ஓரிடத்தில் திரும்பும்போது நான் என் எதிரே உள்ளவன் விழுந்து விடுவான் என நான் நினைத்தேன். அவ்வாறே அவன் விழுந்து விட்டான்! என் எண்ணத்தின் வலிமையினால் அவன் விழுந்துவிட்டதாக நினைத்தேன். அல்லது அவன் தற்செயலாக விழுந்திருக்கலாம் என்றும் தோன்றியது. ஆகவே பஸ் இன்னொரு முறை திரும்புகையில் வேறொரு மனிதன்மீது கவனம் செலுத்தி அவன் விழக்கூடும் என்று நினைத்தேன். அவ்வாறே அவன் விழுந்து விட்டான்! நான் நினைத்தது நடக்கிறதே என்று கொஞ்சம் பயந்து போனேன். எனினும் இன்னொரு முறை சோதித்து விடலாம் என்று வேறொருவர் மீது பார்வை செலுத்தினேன். அவர் விழ வாய்ப்பே இல்லாதபடி அவருக்கு இருபுறமும் இருவர் நெருக்கி உட்கார்ந்திருந்தனர். பஸ்ஸே தலைகீழாகக் கவிழ்ந்தாலும் அவர் விழ வாய்ப்பில்லை. பஸ் மூன்றாம் முறை திரும்பும்போது நான் பார்த்துக் கொண்டிருந்த மூன்றாவது நபரும் விழுந்து விட்டார்! எனது பயம் அதிகரித்தது. ஆனந்தமும் உண்டானது. என் ஆத்மபலம் அதிகரித்து வருவதாக நினைக்கிறேன்."

நான் மனத்திற்குள் நினைத்துக் கொண்டேன் – 'இவனுக்குள் சக்தி கூடி வருகிறது. ஆனால் அதை ஆன்மபலம் என நினைப்பது பைத்தியக்காரத்தனம்.'

அவனுக்கு நேர்ந்தது ஒருமுகச் சிந்தனையின் விளைவு. நீ தியானத்தில் ஆழ்ந்து உன் சிந்தனையை வலுவாக ஒருமுகப்படுத்தினால், அந்த சமயம் நீ நினைப்பது உடனுக்குடன் நிகழ்ந்துவிடும். ஆகவே எல்லா யோக சாஸ்திர நூல்களும் ஓர் எச்சரிக்கை தருகின்றன. அதன்படி, தியானத்தின் மூலம் ஒருமுகச் சிந்தனையை வளர்த்து வலுப்படுத்துவதற்கு முன் மனத்தில் சுபமான எண்ணங்களை நிரப்பிக் கொள்ள வேண்டும் என்று கூறப்படுகிறது. ஏனெனில் ஒருமுகச் சிந்தனை கைவரப்பெற்ற பிறகு அசுபமான எண்ணங்கள் உன் மனத்தில் தோன்றினால் அவற்றின் கெடுதலான பாதிப்பு வெளியுலகில் உண்டாகும்.

உதாரணமாக, பதஞ்சலி தமது யோக சாஸ்திரத்தில் தாரணை, தியானம், சமாதி, யமம், நியமம், பிராணாயாமம், பிரத்தியாகாரம் முதலியவற்றைப் பயிலச் சொல்கிறார். இவை மூலம் நீ பரிசுத்தனாவாய். இவற்றின் முடிவில் எழும் வீரிய சக்தி உன் மனத்தில் தப்பான எண்ணங்கள் எழுவதைத் தடுத்துவிடும்.

ஆகவே மகாவீரர், தியானத்தில் ஈடுபடுவதற்கு முன்னால் அகிம்சை உணர்வை உனக்குள் ஆழமாக நிரப்பிக்கொள்ள என்றார். புத்தர், கருணை உணர்வால் உன்னை நிரப்பிக்கொள் என்றார். அவர் மேலும் கூறுகையில், ஒவ்வொரு முறை தியானம் முடிந்தபின், எழுந்து நிற்பதற்கு முன்னராக, உலகம் அனைத்திற்கும் கருணை அதிர்வுகளைப் பரப்பச் சொல்கிறார். ஒவ்வொரு முறையும் கருணை உணர்வுடன் தியானத்தை ஆரம்பித்து, கருணை உணர்வுடன் நிறைவேற்றி முடிக்க வேண்டும். இல்லாவிடில் அபாயம் ஏற்படும். ஏனென்றால் தியான நிலையில் ஏதாவது கெட்ட எண்ணம் மனத்தில் சஞ்சரித்தால் அது நடந்தே தீரும். கெட்ட எண்ணமாயினும் தியான பலம் சேர்வதால் அது சம்பந்தப் பட்டவர்களைப் பாதிக்கும். சக்தி ஊற்றெடுத்தால் மட்டும் போதாது. அது நல்லதற்கில்லை என்றால் குரு தடுக்க வேண்டும். கற்பனையை உண்மையென சாதகர் நினைத்தால் அப்போதும் குரு தலையிட்டுச் சரிசெய்ய வேண்டும்.

பிரமையானது பிறவிதோறும் தொடர்ந்து வரக்கூடியது. அது பரந்து விரிந்தது. ஒரு தோட்டத்தில் பல தலைமுறைகளாகக் குப்பை சேர்ந்து கொண்டே போவதற்கு ஒப்பானது. அங்கு காடுபோல்

புல்வளர்ந்திருக்கிறது. அங்கே ரோஜாச் செடியை நட்டால் அதன்மீது புல் மண்டி அதை அமுக்கிவிடும். ரோஜாச் செடி இருந்த இடமே தெரியாமல் போய்விடும். பல பிறவிகளாக உனது மனம் சாரமற்ற, குப்பைச் சிந்தனைகளால் நிறைந்து போனது. சாரமுள்ளது சிறிதளவு தலைதூக்கினாலும் சாரமற்றது அதைச் சூழ்ந்து அமுக்கிவிடும். அவ்வாறு நேர்வதை குரு தடுக்க முயல வேண்டும். கனவு, நிஜத்தை ஆக்கிரமித்து விடக்கூடாது என்பதற்காகச் சீடன் பல சோதனைகளைக் கடக்க வேண்டியுள்ளது.

குரு அந்த சோதனைகளை நடத்துகிறார். அவர் தம்முடைய கண்களால் உன் கண்களைப் பார்க்கையில் அங்கு ஒரு நயன பரீட்சை நடைபெறுகிறது. குருவின் அருகில் இருப்பதேகூட இருபத்து நான்கு மணி நேரமும் நீ பரீட்சிக்கப்படுவதாக அர்த்தமாகும். இப்படி சோதனைகளால் இறுக்கப் படுவதற்காக நீ பயப்படாதே. அவ்வாறு இறுக்கப்படுவதற்கு தயாராக இரு. "என்னை நடுவிலே கைவிடாதீர்கள். தொடர்ந்து கடுமையான சோதனை நடத்துங்கள். நான் நன்றியுள்ளவனாக இருப்பேன்' என்று குருவிடம் பிரார்த்திக்க வேண்டும். 'ஏனெனில் நான் மேற்கொண்டுள்ளது நெடிய பயணம். முன்பு அறிந்திராத, பழக்கமற்ற பாதை. நான் எதுவும் சரிவர அறிந்திருக்கவில்லை. வழி தவறிப் போய்விடக் கூடாது' என்று குருவிடம் தெரிவிக்க வேண்டும். இப்பயணத்தில் வழிதவறிப் போவதற்கான வாய்ப்புகள் அதிகம். மேலும் வழிதவறிப் போவது நமது சுபாவம் ஆகும்.

**மூன்றாம் கேள்வி:**

**எங்களுக்கு சந்நியாச தீட்சை வழங்கும் சமயம் ஒரு காகிதத்தில் எங்கள் புதுப் பெயரை எழுதிக் கையெழுத்திடுகிறீர்கள். அந்தக் காகிதத்தின், மீதிப் பகுதியை காலியாக விடுகிறீர்கள். அந்த காலி இடத்தில் நீங்கள் என்ன எழுதுவீர்கள்? இப்படி வெற்றிடம் விடுவதன் ரகசியமென்ன?**

**அ**துதான் உன் சந்நியாசத்திற்கான சூத்திரம். காகிதத்தின் மூலையில் நான் எழுதும் உன் பெயரை இன்றில்லாவிடில் நாளை

மறந்துபோ. அதை அழித்துவிடு. வெற்றுக் காகிதம் நீடிக்கட்டும். நீயும் சூனியமாகவே இருந்துவிடு. நீ யார், என்ன என்பது உனக்குத் தெரியாமலே போய்விடட்டும். உனக்கு சமமான எதுவும் இல்லாமல் போகட்டும். உன் எல்லைச் சுவர்கள் வீழ்ந்து படட்டும். நீ வெற்றுக் காகிதமாக இருந்துவிடு. ஆகவே வேண்டுமென்றேதான் காகிதத்தின் ஒரு மூலையில் உன் பெயரை எழுதுகிறேன். அதுவும் கீழ் மூலையில். மேலே வெள்ளையான, வெற்றிடமான ஆகாயம்.

நீ சீன நாட்டு ஜென் துறவிகளின் ஓவியக் கலை பற்றி அறிந்துள்ளாயா? அவை உண்மையான சித்திரங்கள். நீண்ட பெரிய திரைச்சீலையில் ஒரு மூலையில் சிறிய அளவில் படம் வரைந்திருப்பார்கள். காலி இடம் ஆகாயத்தை, மனிதன் அறியாத எல்லையற்ற நிலப்பரப்பைக் காட்டுகிறது. மூலையில் மட்டும் ஓவியம் இருப்பது மனிதனுக்கு அவ்வளவுதான் தெரியும் என்பதை, அவனது சுருங்கிய அறிவைப் புலப்படுத்துகிறது.

மேற்கத்திய ஓவியக் கலையில் இவ்வளவு வெற்றிடம் அல்லது ஆகாயம் இருக்காது. திரைச்சீலை முழுதும் ஓவியத்தால் நிரம்பி யிருக்கும். ஒரே வண்ணக் கலவையாக இருக்கும். கொஞ்சம்கூட வெற்றிடம் விடமாட்டார்கள். மேற்கத்திய ஓவியர்கள் ஜென் ஓவியங்களை முதல்முறையாக அறிந்து கொண்டபோது இவ்வளவு பெரிய திரைச்சீலையில் ஒரு மூலையில் இத்துணை நுணுக்கமான ஓவியமா என வியந்தனர். அதற்குச் சிறிய அளவிலான காகிதம் போதாதா? இவ்வளவு காலியிடம் எதற்காக? இதில் ஏதோ ரகசியம் இருக்கிறது. காலியிடம் எதையோ சுட்டுகிறது. இந்த வெறுமைதான் உண்மை; பரந்து விரிந்த கடல்தான் உண்மை. மற்றவை கரையின் ஒரு மூலையை அடையும் சிற்றலைகள்.

நாம் வசிக்கும் பூமி மிகவும் சிறியது. வானம் எல்லையற்றது. இந்த விகிதாசாரத்தை மறந்து விடாதே. அதன் அடிப்படையில்தான் காகிதத்தின் மூலையில் உன் பெயரெழுதிக் கையொப்பமிடுகிறேன். காகிதத்தின் மீதிப் பகுதியை காலியாக விடுகிறேன். அப்போதுதான் உன் பெயர் ஒரு மூலையில் சிறிய இடத்தில்தான் வியாபித்துள்ளது என்பது அடிக்கடி உன் நினைவிற்கு வரும். அதையும்கூட ஒருநாள் மறந்தாக வேண்டும். பெயரில்லாதவனாக வேண்டும். அப்போதுதான்

சந்நியாசம் முழுமை பெறும். நீ வெற்றுக் காகிதம்போல் காலியாகிவிட வேண்டும்.

சூஃபிகளின் புனித நூல் ஒன்றுளது. அது முழுவதும் காலியாக இருக்கும்! அதைப் போன்ற அருமையான வேறு நூல் கிடையாது. அந்நூலில் எதுவும் எழுதப்படவில்லை. சுமார் 700–800 ஆண்டுகள் பழைமையான நூல் அது. ஒரு குருவிடமிருந்து அடுத்த குருவிற்கு கைமாறி வருகிறது. அதாவது ஒரு குரு தம்முடைய பிரதம சீடனுக்கு வழங்குவார். அவன் குரு நிலைக்கு உயர்வான். அந்நூல் இப்போதும் பாதுகாக்கப்படுகிறது. சூஃபி* சீடர்கள் 700 ஆண்டுகளுக்குப் பிறகும் இப்போதும் அந்நூலைப் படிக்கின்றனர்! அதில் ஒன்றும் எழுதப்பட வில்லைதான். காலி காகிதங்கள்தான் உள்ளன. சூஃபிக்கள் அதை அச்சிட விரும்பினர். முதலில் எந்தப் பதிப்பகமும் ஏற்கவில்லை. பிறகு ஏதோ ஒரு பதிப்பகம் துணிந்து வெளியிட்டது. முன்னுரையாக 20–25 பக்கங்கள் எழுத்து வடிவில் அச்சாயின. அந்த முன்னுரையில் இந்த நூலைப் பழக்கத்திற்கு யார் கொண்டு வந்தார்; யார்–யார் கைக்கு மாறியது என்ற முழு வரலாறும் அச்சாகியிருந்தது. ஆனால் இதனால் நூலின் புனிதம் கெட்டுவிட்டது. ஏனெனில் அந்த நூலின் பக்கங்கள் காலியாகவே இருப்பதுதான் தொன்றுதொட்டு நிலவிய வழக்கம்.

**நா**ன் ராஜஸ்தானில் பயணிக்கும் போதெல்லாம் பூரிபாய் என்ற பெண்மணி சந்திக்க வருவார். அற்புதமான பெண்மணி. அவருக்கு சமமான பெண்கள் இந்தியாவில் குறைந்த எண்ணிக்கையில்தான் இருப்பார்கள். சுத்த பட்டிக்காடு. எதுவுமே தெரியாதவள் என்றாலும் இன்னொரு வகையில் எல்லாம் தெரிந்தவள். அவள் ஒருமுறை என்னைச் சந்தித்தபோது, "அய்யா, என் கிராமத்திற்கு விஜயம் செய்யுங்கள். நான் ஒரு புத்தகம் எழுதியுள்ளேன். அதை நீங்கள் வெளியிட்டருள வேண்டும்," என்று கேட்டுக் கொண்டாள்.

நான் சிரித்தேன். "நீ மற்றவர்களை ஏமாற்றலாம். என்னை ஏமாற்ற முடியாது. உன் புத்தகம் எத்தகையது. அதில் என்ன இருக்கும் என்பதை நான் புரிந்து கொண்டேன். நீ அதை இங்கே எடுத்துவா. நான் இங்கேயே அதை வெளியிடுகிறேன்" என்றேன்.

* இஸ்லாமின் ஒரு பிரிவு. கனிவானது, நெகிழ்ந்து கொடுப்பது. கடவுளுடன் நேரடியான அனுபவத்தை ஆதரிக்கிறது. சூஃபி ஆன்மிக இலக்கியம் நாயக-நாயகி உணர்வின் அடிப்படையிலானது.

அவள் அவ்வாறே செய்தாள். அழகிய அலங்காரமான பெட்டியில் தனது நூலை வைத்து மரியாதையுடன் தலையில் சுமந்து வந்தாள். அவளுக்கென்று சில பக்தர்கள், அடியார்கள். அதற்கு அவள் தகுதி உடையவள்தான். அவளுடன் அடியார்களும் சேர்ந்து வந்தனர். நான் அவளது நூலை வெளியிட்டேன். பெட்டியில் மிகச் சிறிய புத்தகம் ஒன்றிருந்தது. ஆனால் பக்கங்கள் காலியாக, எதுவும் எழுதப் படாமல் இருந்தன! அப்பெண்மணிக்கு எழுத– படிக்கத் தெரியாது!

அவள் என் முகாமிற்கு முதல் முறையாக வந்தபோது அவளுடன் வந்த அவளுடைய அடியார்கள் எல்லோரும் தியானத்தில் ஈடுபட்டனர். அவள் வேறொரு அறைக்குச் சென்று விட்டாள். அவளுடைய பக்தர்கள் அவளிடம், "நாம் இங்கே வந்துள்ளதே தியானம் செய்வதற்காகத்தானே. நீங்கள் தியானம் செய்யப் போவதில்லையா?" என்று விசாரித்தனர்.

"நீங்கள் அய்யாவிடம் கேளுங்கள்," என்று அவள் அவர்களை என்னிடம் அனுப்பி விட்டாள். அவர்கள் பூரிபாய் ஏன் தியானம் செய்யவில்லை என்று என்னை விசாரித்தனர். அப்பெண்மணி என்னை 'அய்யா' என்று குறிப்பிடுவது பொருந்தாது. அவள் 70–80 வயதானவள். நான் அவளுடைய பக்தர்களிடம், "அவள் சொன்னது சரிதான். நான் சொன்னதைத்தான் அவள் செய்திருக்கிறாள். நான் அவளிடம் 'எதுவுமே செய்யாமல் சாந்தமான சாட்சியாகிவிடு' என்று கூறினேன்" என விளக்கினேன்.

அவர்கள் அவளிடம் சென்று நான் கூறியதைத் தெரிவித்தனர். நான் சொன்னது சரி என்று அவள் ஒப்புக் கொண்டாள். "ஆமாம். வெளியே பலத்த கூட்டம். உபத்திரவமான ஆரவாரம். எல்லோரும் ஏதாவது செய்தபடி ஓசையெழுப்பிக் கொண்டிருக்கிறார்கள். நான் இந்த அறைக்கு வந்து தனிமையில் அமர்ந்தேன். நான் செயலேதும் செய்யாமல் இருந்தேன். தியானம் அருமையாக அமைந்தது." என்றாள்.

அவள் தனது கிராமத்திற்குத் திரும்பியபின் மக்கள் அவளிடம் "என்ன கொண்டு வந்திருக்கிறாய்?" என்று விசாரித்தனர். அவள் பதில் கூறாமல் தன் அறை வாயிலில் 'பேச்சடங்கு' என்று எழுதி வைத்தாள். "அய்யா நிறைய உபதேசம் செய்தார். ஆனால் அவை என் புத்திக்கு

எட்டவில்லை. நானோ படிப்பறிவில்லாதவள். அய்யாவின் உபதேசத்தில் எனக்குப் புரிந்தது 'பேச்சடங்கு' என்பது மட்டும்தான். அது நினைவிலிருக்க அறைக் கதவில் எழுதி வைத்தேன்."

சூஃபிக்களும் அவளும் காண்பித்த வெற்றுத்தாளும் சொல்வது 'பேச்சடங்கு' என்பதைத்தான். அந்த காலியான வெள்ளைத் தாள்தான் புனித குரான், தம்மபதம், அஷ்டாவக்கிர ஸம்ஹிதை ஆகிய எல்லாம். சகல சாஸ்திரங்களும் நீ அந்த காலியான காகிதத்தை 'படிக்க' வேண்டும் என்றே முயலுகின்றன. சூனியத்தை விளக்கத்தான் சொற்களே தவிர, சொற்கள் அடிப்படையில், சுயமாக, முக்கியமில்லை. மொழியின் பணி அடுத்த கட்டமாகிய மௌனத்திற்கு இட்டுச் செல்வதுதான்.

நீ சாட்சியாகிவிடு. உள்ளே நிலவும் சூன்யத்திற்கு சாட்சியாகி விடு. அதுதான், எதுவுமற்ற காலியான நிலைதான் நிர்வாணம். அங்குதான் சமாதி கூடுகிறது.

**நான்காம் கேள்வி:**

**நீங்கள் ஒரு கதை சொன்னீர்கள். மோகமும் ஞானமும் கங்கைக் கரைக்குச் சென்றன. மோகம், கங்கையில் இறங்கி நீராடி அன்பின் உருவம் பெற்றது. ஆனால் ஞானத்துக்கு என்ன நேர்ந்தது? தயவு செய்து விளக்குங்கள்.**

**ஞா**னம் இன்னமும் அலைந்து திரிந்து கொண்டிருக்கிறது. ஞானத்திற்குத் திமிர் அதிகம். ஞானிகளைவிட அதிக அஹங்கார மானவர்கள் யார் உள்ளனர்? பணக்காரனுக்குக்கூட அத்துணை திமிர் இருக்காது. 'எல்லாம் எனக்குத் தெரியும்' என்று கூறுவதால் ஞானி கர்விதானே.

ஞானம் கங்கையில் இறங்கி நீராட சம்மதிக்கவில்லை. ஞானம் என்பது புத்தி, திட நிச்சயம், சிந்தனை ஆகியவற்றின் உருவகம். மோகம் என்பது இதயம், சமர்ப்பண மனப்பான்மை, உணர்ச்சிகள் ஆகியவற்றின் உருவகம். கங்கை இரண்டையும் அழைத்தது. "பிரியமானவர்களே, வாருங்கள். என் நீரில் இறங்கிக் குளியுங்கள். புனிதமடையுங்கள். நான் உங்களைக் குளிப்பாட்டுவேன். பரிசுத்த

மாக்குவேன். புதியவர்களாக்குவேன். உங்களுக்குப் புதுவாழ்க்கை அமையும்.''

இதைக் கேட்டு மோகம் கங்கையில் இறங்கியது. ஏனெனில் மோகம் என்பது உணர்ச்சி. அது இதயபூர்வமானது. அது வாத–விவாதம் செய்யாது. மோகம் கங்கையில் மூழ்கி நீராடியது. அது வெளியே வந்தபோது அதன் பழைய உருவம் மாறிப் போயிருந்தது. அன்பு என்னும் புதிய உருவம் பெற்றுவிட்டது. இதயம் சமாதியில் ஆழ்ந்தது. உணர்ச்சி, கனிந்த ரசமாக மாறியது.

ஞானம் மிடுக்காகக் கரையிலேயே நின்றுவிட்டது. அது சொன்னது: "யார் என்னை சுத்தம் செய்வது? இதென்ன அர்த்தமில்லாத பேச்சாக இருக்கிறதே. நானாவது, சுத்தமாகுவதாவது. இந்த சாதாரண கங்கைத் தண்ணீர் என்னை மேலும் சுத்தமாக்கி விடவா முடியும்? நான் சாஸ்திரங்கள் அறிந்தவன். மேற்கொண்டு என்னை சுத்தம் செய்ய யாருக்குத் துணிச்சல்? நான் அல்லவா மற்றவர்களைத் தூய்மையாக்குபவன்?''

அது மோகத்தைப் பார்த்துக் கேலியாகச் சிரித்தது. தனக்குள் நினைத்தது. 'இந்த மோகம் ஒரு பைத்தியம். பிறரது பேச்சை நம்புகிறது. ஆகவேதான் அது ஓரிடத்தில் நிலைபெறாமல் அலைந்தபடி உள்ளது.' பண்டிதர்கள் இப்படித்தான் பக்தர்களைப் பார்த்துச் சிரிப்பது வழக்கம். ஆனால் அன்புமயமானவர்களுக்குத்தான் விரும்பியது கிடைக்கிறது.

ஓர் அரசர். அவருக்கு ஞானகுமார், பிரேம்குமார் என்று இரு புதல்வர்கள். தனக்குப் பின் யாருக்கு அரசாட்சி அளிப்பது என்று அவர் கவலைப்பட்டார். இருவரும் இரட்டையர். வயது அடிப்படையில் சமம். இருவரும் திறமைசாலிகள், மேதாவிகள், ஆற்றல் மிகுந்தவர்கள். யார் அரசாள அதிகத் தகுதி பெற்றவன் என்று முடிவு செய்வதில் அநியாயம் நேர்ந்துவிடக் கூடாதல்லவா? அரசர் ஒரு சந்நியாசியிடம் ஆலோசன கேட்டார்.

சந்நியாசி ஓர் உபாயம் சொன்னார்: "அரசே, நீங்கள் இருவருக்கும் பணம் கொடுத்து நாடெங்கும் வீடு கட்டச் சொல்லுங்கள். ஐந்தாண்டுகளில் அதிக எண்ணிக்கையில் வீடு கட்டியவனுக்கு

ஆட்சிப் பொறுப்பைக் கொடுங்கள்," என்றார். அரசர் காரணம் சொல்லாமல் புதல்வர்களை வெவ்வேறு திசையில் அனுப்பினார். ஞானகுமார் வீடுகள் கட்டத் தொடங்கினான். ஆனால் ஐந்தாண்டுகளில் எத்தனை வீடுகள் எத்தனை ஊர்களில் கட்டிவிட முடியும்? கைவசமிருந்த பணமெல்லாம் செலவழிந்து விட்டது. உடலாலும் அவன் களைத்துப் போனான். குழப்பமடைந்தான். முட்டாள்தனமான திட்டமாயிருக்கிறதே என்றும் நினைத்தான்.

ஐந்தாண்டு கழிந்து இளவரசர்கள் நாடு திரும்பினர். ஞானகுமார் மிகுந்த சோர்வுடன் பிச்சைக்காரனைப் போல் காணப்பட்டான். பிரேம்குமார் குதூகலமாகத் திரும்பினான். நாடெங்கும் நிறைய வீடுகள் கட்டிவிட்டதாகத் தந்தையிடம் தெரிவித்தான்.

அரசர் அதிசயப்பட்டு விசாரித்தார்: "உனக்கு எப்படி அது சாத்தியமாயிற்று? உன் சகோதரன் சில ஊர்களில் மட்டும் சில வீடுகள் கட்டிவிட்டுச் சோர்ந்து போய்த் திரும்பியிருக்கிறான். நீ நாடெங்கும் வீடுகள் கட்டியதாகச் சொல்கிறாய். பிறகும் களைத்துப் போகாமல் உற்சாகமாகத் தெரிகிறாயே பணமும் திருப்பிக் கொண்டு வந்து விட்டாயே."

இளவரசன் பிரேம் விளக்கினான்: "நான் சென்ற ஊர்களி லெல்லாம் புதிய நண்பர்களை உருவாக்கிக் கொண்டேன். அந்த எல்லா நண்பர்களின் வீடுகளும் எனக்காகத் திறந்தே உள்ளன. ஒவ்வோர் ஊரிலும் இந்த விதமாக எனக்கு மூன்று வீடுகளாவது ஏற்பட்டுவிட்டன. ஆகவே நான் புதிதாக வீடு கட்டவேண்டிய அவசியம் ஏற்படவில்லை. என் சகோதரன் நிஜமாகவே வீடுகள் சில கட்டியதால் களைத்துத் திரும்பியுள்ளான். எனக்கு ஒவ்வொரு ஊரிலும் நட்புறவின் மூலம் வீடுகள் ஏற்பட்டு என்னை வரவேற்கத் தயாராக உள்ளன."

அன்பின் வழியும் ஞானத்தின் வழியும் வெவ்வேறானவை. ஞானத்திலிருந்து விஞ்ஞானமும், விஞ்ஞானத்திலிருந்து தொழில் நுட்பமும் பிறக்கிறது. பிரேமையிலிருந்து பக்தி பிறக்கிறது. பக்தியின் உச்சத்தில் பகவான் பிறக்கிறார்.

ஞான வழியில் செல்பவன் ஒருகாலத்தில் விஞ்ஞானத்தில் சிக்கிக் கொள்வான். ஐரோப்பா அப்படித்தான் விஞ்ஞான மார்க்கத்தில்

அலையத் தொடங்கியது. கிரேக்க ஞானியர்களிடமிருந்து மேற்கத்திய அறிவியல் பரம்பரை ஆரம்பமானது. குறிப்பாக, அரிஸ்டாட்டில், பிளேட்டோ தர்க்க அறிவைத் தூண்டிவிட்டனர். எதையும் அறிந்தே தீருவோம் என்ற நோக்கத்தின் விளைவாக மனிதன் அணுகுண்டு வரை வந்து விட்டான். சாவிற்கான வழி தேடிக் கொண்டான்.

ஆசியா அல்லது கிழக்கு அன்புவழியில் பயணம் தொடங்கியது. இதனால் சமாதி நிலை கண்டுபிடிக்கப்பட்டது. நாம் வாழ்வில் நிறைவை உணர்ந்தோம். ஆனால் மேற்கு நாடுகள் ஞான மிகுதியால் அமைதியிழந்து குழம்புகின்றன.

ஆல்பர்ட் ஐன்ஸ்டீன் இறக்கும் தறுவாயில், "எனக்கு இன்னொரு பிறவி கிடைத்தால் நான் விஞ்ஞானியாக வளர விரும்பேன். குழாய் பழுது பார்ப்பவராக வாழவே விரும்புவேன்," என்றாராம். பகுத்தறிவில், தர்க்கவழி அறிவில் சாரமில்லை என்பதுதான் இதன் பொருள்.

அன்புவழியிலும் பணிவு மனப்பான்மை இல்லாவிடில் பக்தி தோன்றாது. ஞானமும் பணிந்துபோனால் தியானம் கைகூடும். ஆனால் அன்பு உடனடியாக வளைந்து கொடுப்பது போல் ஞானம் வளைந்து கொடுப்பதில்லை. ஞானமும் கங்கையின் அழைப்பை ஏற்று நீராடியிருந்தால், மோகம் அன்பாக வெளிப்பட்டதுபோல, ஞானம், தியான நிலையை அடைந்திருக்கும். ஆனால் அது கரையிலேயே திமிராக நின்றுவிட்டது. இதனால் அது விஞ்ஞானம் ஆனது, தொழில்நுட்பம் ஆனது. எல்லாம் குட்டிச்சுவராகப் போய்விட்டது.

ஞான மனப்பான்மைக்காரர்களுக்கு நல்ல வழி எதுவுமில்லை என்று அர்த்தமில்லை. பணிவு இருந்தால் அவர்கள் வாழ்க்கையும் பயனுள்ளதாக இருக்கும். அன்புடையவர் பணிந்தால் பிரார்த்தனை பிறக்கிறது. ஞானி பணிந்தால் தியானம் பிறக்கிறது. பிரார்த்தனையும் சரி, தியானமும் சரி, கடவுளிடமே சேர்ப்பிக்கின்றன. அவற்றின் மொழிதான் வெவ்வேறு. ஞானி கடவுளை அடைந்தால் தனது ஆத்மா அவருடன் சேர்ந்து விட்டதென்பான். அன்புடையவன் கடவுளை அடைந்தால், 'எல்லாமே நீதான். நான் என்று தனியாக உண்டா?' என்பான்.

சொற்கள் வேறாயினும் இருவரும் சென்றடைவது ஒரே மகாசூன்யத்தைத்தான். ஒருவன் அதை ஆத்மா என்கிறான்,

இன்னொருவன் பரமாத்மா என்கிறான். உனக்கு சிந்தனையின் பாரம் அதிகமாக இருந்தால் தியானவழியை மேற்கொள். இதோ உள்ள கங்கையில் மூழ்கி நீராடு. நான் உன்னைப் புதியவனாக்குவேன்.

சிந்தனை சக்தி வலுவாக இருந்தாலும் கவலையில்லை. மோகத்தையே அடியோடு மாற்றவல்ல கங்கையால் சிந்தனையை மாற்ற முடியாதா என்ன? மோகமேகூட அன்பாக மாறிவிடுகிறதெனில் சிந்தனையிடம் எதிர்ப்பு சக்தி இருக்கவா முடியும்? சிந்தனை உடனடியாக தியானமாக மாற வாய்ப்புள்ளது. ஆனால் பணிவு வேண்டும், சமர்ப்பண உணர்வு வேண்டும்.

**ஐந்தாம் கேள்வி:**

**உலக வாழ்க்கையில் நீடித்துவந்த ஜனகர் ஞானத்தின் மூலம் ஆகாயத்தைக் கண்டதும் ஆச்சரியமடைந்தார். ஆன்மிக ஆகாயத்தில் உலாவும் அஷ்டாவக்கிரர் உலகின் இயல்பு கண்டு ஆச்சரியப்பட்டார். அப்படியானால் உலகிற்கு மோட்சமும், மோட்சத்திற்கு இந்த உலகமும் வியப்பூட்டுபவையா? அவை ஒன்றிற்கொன்று எதிர்ப்பானவையா அல்லது ஒன்றையொன்று நிரப்புபவையா?**

**அ**வை எதிரெதிரானவையும் அல்ல, ஒன்றையொன்று பூர்த்திசெய்பவையும் அல்ல. ஒன்று இருக்கும்போது இன்னொன்று இருப்பதில்லை. அவை ஒளியும் இருட்டும் போன்றவை. இவ்விரண்டும் விரோதியுமல்ல, பரஸ்பரம் நிரப்புபவையும் அல்ல. ஒளி இருந்தால் இருட்டு இருக்காது. இருட்டும்போது ஒளி இருப்பதில்லை. விரோதி களாயினும், நிரப்புபவையாயினும் இரண்டும் ஒரே சமயத்தில் இருந்தால்தானே சாத்தியம். ஆனால் அவை ஒரே சமயம் காணப்படு வதில்லை.

உன் வாழ்க்கையில் ஆகாயத்தைக் கண்ணுறும் அனுபவம் நேரிடும்போது பூமி காணாமல் போய் விடுகிறது. ஆகவே அந்த உச்சநிலையை அடைந்தவர்கள் உலகை மாயை என்கிறார்கள். மாயை என்றால் பிரமை, இழந்த நிலை, கனவுநிலை என்று அர்த்தம். எதிரிடையாக, உலக மாயை உன்னைக் கெட்டியாகப் பிடித்துக்

கொண்டால் ஆத்மா, ஈஸ்வரன், பிரம்மம் ஆகியவை கனவுபோல் ஆகிவிடும்.

இவ்வுலகை உண்மையென நினைப்பவர்களுக்கு ஆத்மா என்பது மாயையாகத் தோன்றுகிறது. ஆத்மாவை உண்மையெனக் கருதுபவர்கள் இவ்வுலகை மாயை என்பார்கள்.

இது கயிற்றில் பாம்பு தெரிவதற்கு சமம். பாம்பாகத் தெரியும் வரை கயிறு கண்ணுக்குத் தெரியாது. விளக்கு எடுத்து வந்து பார்த்தால் கயிறுதான் தெரிகிறது. பாம்பைக் காணோம். ஆகவே கயிறும் பாம்பும் எதிரிகளுமில்லை, ஒன்றையொன்று நிரப்புகின்றவையும் அல்ல. ஏனெனில் இவை இரண்டும் ஒருபோதும் ஒன்றாக இருப்பதில்லை. பிரமை காரணமாக ஒன்றுபோல் இன்னொன்று தெரிகிறது.

ஆகாயம் இருக்கிறது, பரமாத்மா உள்ளார். ஆனால் நீ பார்க்கும் விதத்தில் சிறு குறையுள்ளது. நீ உருவத்தால் கவரப்பட்டுள்ளாய். அருவத்தை உன்னால் பார்க்க முடிவதில்லை. குணங்களை உன்னால் பட்டியலிட முடிகிறது. ஆனால் நிர்குணப் பொருள் கைநழுவி விடுகிறது. உன் அறிவு வலுப்பெற்று, ஆழமுடையதாகி, அருவத்தைக் காணும் நிலையை நீ பெற்றால் உருவம் மறைந்து விடும். அருவத்தை, உருவமற்றதை, காணமுடிவது ஆச்சரியமான விஷயம்.

ஜனகருக்கு ஏன் ஆச்சரியம் எனில் அவர் ஞானம் பெற்றபின் முதல் தடவையாக ஆகாயம் தெரிந்தபோது பூமி முழுமையாகக் காணாமல் போய்விட்டது. அவர் இதுவரை காலூன்றியிருந்த நிலம் நழுவிச் சென்றுவிட்டது. 'இப்போது எனக்கு நேர்ந்தது என்ன? இது எப்படி நேர்ந்தது?' என்று ஆச்சரியத்தினால் நிரம்புகிறார்.

அஷ்டாவக்கிரரும் ஆச்சரியப்படுகிறார். ஆகாயத்தைப் பார்த்தபடி உள்ளதால் அவர் கண்ணில் இவ்வுலகம் தட்டுப்படவில்லை. இருவரும் வியப்படைந்தது நியாயம்தான். கயிற்றைப் பாம்பென நினைத்தவன் அதைக் கயிறென அறிந்ததும் ஆச்சரியமடைவான். கயிறு வெறும் கயிறுதான் என அறிந்தவன் சிலர் கண்ணுக்கு அது எப்படிப் பாம்பாகத் தெரிந்தது என்று அதிசயிப்பான்.

பரமாத்மாவும் அவரது படைப்பாகிய பொருளுலகமும் வெவ்வேறல்ல. சத்தியமும் மாய உலகமும் வெவ்வேறல்ல.

சத்தியத்தைத் தவறாகப் பார்த்து, தவறான விளக்கம் கொண்டால் அதுதான் உலகம். உலகைச் சரியாகப் பார்த்து, சரியாகப் புரிந்து கொண்டால் அதுவே சத்தியப் பொருள். நாம் எந்த நிலையிலும் கடவுளைத்தான் பார்க்கிறோம். எதை வேண்டுமானாலும் பார். உன் கண்ணில் தெரிவது கடவுள்தான். வேறு என்ன இருக்கிறது நீ பார்ப்பதற்கு? ஆனால் உன் பார்வையில் பிரமை இருந்தால், உன் கண்ணில் குறை இருந்தால், நீ பார்ப்பது, உனக்குத் தென்படுவது வித்தியாசமானதாக இருக்கலாம். ஆனால் அந்த ஒரே பொருள், பரம்பொருள், நிரந்தரமானது, தொன்றுதொட்டு நிலவுவது, உருவ மாற்றம் இல்லாததாகும்.

மனிதனின் பிரமைதான் உலகம். அவனது தவறான விளக்கம்தான் உலகம். பகலில் குளித்தபின் கோவணத்தைக் கொடியில் தொங்கப் போடுகிறாய். உலர்ந்தபின் மாலையில் அதை எடுக்க மறந்து விட்டாய். இரவில் தொலைவிலிருந்து பார்க்கும் போது பிசாசோ, வெள்ளை உடையில் எவனோ நிற்பதுபோல் தெரிகிறது. ஆகவே நீ அப்பக்கம் செல்ல நடுங்குகிறாய். கோவணம் அப்படியேதான் உள்ளது. அது உன்னை பயமுறுத்த தானாக எதுவும் செய்யவில்லை.

சில சமயம் இருட்டில் நீ தனியாக நடந்து செல்கையில் உன் செருப்பு சப்தம் கேட்டு உன்னை யாரோ பின்தொடர்வதாக பயப்படுவாய். சிறு—சிறு பொருள்களும் ஒலிகளும்கூட பிரமை ஏற்படுத்துகின்றன. இந்த பிரமைகளின் மொத்தத் தொகுப்பே இவ்வுலகம். பிரமை நீங்கினால் காட்சிக்குத் தெரிபவர் கடவுள். எது உள்ளது அது பரம்பொருள்; எது உள்ளதுபோல் தெரிகிறதோ அது உலகம்.

**ஆறாம் கேள்வி:**

**நான் காவி உடை அணிந்திருப்பதுபோல் சில சமயம் கனவு வருகிறது. இக்கனவு என்னை மிகவும் ஆச்சரியப்படுத்துகிறது. இதென்ன விந்தையான கனவு! நான் எப்போதும் சந்நியாசிகளைக் கேலி செய்வது வழக்கம். ஒரு வேளை அவர்களில் உண்மையான சந்நியாசியான ஒருவர் 'நீ காவி உடை தரித்து சந்நியாசியாகக் கடவது' என்று சபித்திருப்பாரோ?**

மனிதன் பலதரப்பட்ட கனவுகள் காண்கிறான். சந்நியாசி ஆவதுபோல் கனவு காண்பதில்லை. ஏனெனில் சந்நியாசம் என்பது கனவன்று. அது கனவு நிலையிலிருந்து விழித்தலைக் குறிப்பிடுகிறது. நீ நிறையக் கனவுகள் கண்டாய். அந்தக் கனவுகளின் பலன் உனக்கு வாழ்க்கையில் கிடைக்கவில்லை. இந்நிலையில்தான் சந்நியாசக் கனவு தோன்றுகிறது.

உலக முயற்சிகளில் தோல்வி கண்டபின் சந்நியாசத்தில் நாட்டம் ஏற்படுகிறது. பணம் கிடைத்தாலும் துன்பம்; கிடைக்காவிடிலும் துன்பம். பதவி கிடைத்தாலும் பிரச்சினை; கிடைக்காவிடிலும் பிரச்சினை. ஓடி அலைந்து ஒன்றைப் பெற்று அல்லது ஒன்றைப் பெறாமல் எல்லா நிலையிலும் துன்பம்.

மேற்படி கேள்வியைக் கேட்ட மைத்திரேயர் என்பவர் பாராளுமன்ற உறுப்பினராக இருந்தார். அரசியலில் நல்ல செல்வாக்குள்ளவர். அதிலேயே அவர் நீடித்திருந்தால் தனது மாநிலத்தின் முதலமைச்சராக அவர் ஆகியிருக்க முடியும். அதற்கான பிரகாசமான வாய்ப்பு அவருக்கிருந்தது. அவர் ஜவஹர்லால் நேருவிற்குப் பிரியமான நண்பர்களில் ஒருவர். அதேசமயம் ஜெயப்பிரகாஷ் நாராயணுக்கும் நண்பர். இவர் என்னிடம் வந்து மாட்டிக் கொண்டார். இல்லாவிடில் நேருவின் ஆதரவுடன் அவர் முதலமைச்சர் ஆகியிருப்பார். அல்லது ஜெயப்பிரகாஷ் நாராயணுடன் தொடர்பு காரணமாகச் சிறைக்குப் போயிருப்பார். அவர் சந்நியாசியாக வேண்டுமெனக் கனவில் கூட ஆசைப்பட்டிருக்க மாட்டார். அரசியல்வாதிக்கு ஒருபொழுதும் துறவறக் கனவு வராது!

அரசியலும் ஆன்மிகமும் அதிகபட்சம் ஒன்றுக்கொன்று முரணானவை. அரசியலில் அதிகபட்ச ஆசை தேவை. ஆன்மிகத்தில் ஆசையின்மை முக்கியம். அரசியலில் பதவியைப் பிடிக்க, மற்றவர்களை அடக்கியாள அளவு கடந்த துடிதுடிப்புக் காணப்படும். ஆன்மிகத்தில் தன்னை வென்று தன்னை அடக்கியாளும் முயற்சி மேற்கொள்ளப்படும். அரசியல் பிறருக்குத் தலைவனாகும் குறிக் கோளுடையது. ஆன்மிகம் தனக்குத் தானே தலைவனாகும் எண்ணம் உடையது.

ஆகவே நாம் சந்நியாசிகளை 'சுவாமி' என்று குறிப்பிடுகிறோம்; அழைக்கிறோம். நீ சந்நியாசியானால் உன்னையும் சுவாமி என்பார்கள். இதனால் நீ மற்றவர்களுக்குத் தலைவனாகி விட்டாய் என்று பொருளில்லை. அவ்வாறு நீ நினைக்கவும் கூடாது. நீ உன்னை வென்று உனக்குத் தலைவனாகி விட்டாய் என்று அர்த்தம். இது போதும். தன்னை வென்று தனக்கு சுவாமி ஆகாமல், பிறருக்குத் தலைவனாகும் முயற்சியில் இறங்குபவன் தற்காலிக வெற்றி பெற்று இறுதியில் தோற்பான். தன்னை அடக்காதவன் பிறரை எப்படி அடக்க முடியும்?

அரசியல் தலைவர் அடிப்படையில் தன் தொண்டர்களிடமும் பயப்படுபவராக, தன்னுடைய அடிமைகளுக்கும் அடிமையாக இருப்பார். செய்தித்தாள்களில் தலைவர்களின் படங்களைப் பார்த்து பிரமிக்காதே. அவர்கள் தங்கள் கட்சியில் முரடர்களிடம், வன்செயல்களின் ஈடுபடுபவர்களிடம் அடங்கிக் கிடக்கிறார்கள். அந்த அடியாட்களின் படம் செய்தித்தாள்களில் வராது. ஆனால் தலைவர்கள் அவர்கள் சொல்படி நடக்க வேண்டியுள்ளது. உலக நியதிப்படி, அரசியலில், ஆரம்பத்தில் யாரை நமக்குப் பின்னால் வரச் செய்கிறோமோ, அவர்களின் பின்னால் நாம் ஒரு காலத்தில் நடக்க வேண்டிவரும்.

நீங்கள் எல்லோரும் அரசியல் தலைவர்கள் அல்லர் என்பதால் குடும்ப வாழ்க்கையிலிருந்து உதாரணம் தருகிறேன். மனைவி, கணவனைப் பின்தொடர்ந்து வருபவளாகக் கருதப்படுகிறாள். அவள் அவ்வாறு அடங்கி நடக்க வேண்டுமானால் அவளது ஒவ்வொரு ஆசையையும் கணவன் பூர்த்தி செய்தாக வேண்டும். அப்படியானால் உண்மையில் பின்னால் வருபவர் யார்?

அவள் பேசும்போது நான் உங்கள் அடிமை என்பாள். கடித முடிவிலும் உங்கள் தாசி (அடியவள்) என எழுதுவாள். ஆனால் நீங்கள் தாஸ் (ஆண் அடிமை/சேவகன்) ஆக இருந்தால்தானே பெண்பாலாக தாசி என்ற சொல் வரும்? திருமண சமயம் அக்னியை வலம் வரும் போது மனைவி உங்களைப் பின்தொடர்ந்து நடக்கிறாள். அதுபோல் அவள் வாழ்க்கை முழுதும் உங்கள் பின்னால் வரவேண்டுமானால், நீங்கள் நுணுக்கமான முறையில், வேறோர் அர்த்தத்தில், அவள் பின்னாலேயே போகநேரிடும். இல்லாவிடில், அவள் உங்களைப்

பின்பற்றி வரமாட்டாள். 'நீ என் பின்னால்' என்று நினைத்த கணவன் 'நான் உன் பின்னால்' என்ற நிலைக்குப் போகிறான் — குடும்ப ஒற்றுமைக்காக

அரசியல் தலைவர் முதலில் மக்களைத் தன் பின்னால் வரச்செய்கிறார். அவர்கள் திரண்டபின், அவர்கள் எத்திசையில் செல்ல விரும்புகின்றனர் அல்லது முயல்கின்றனர் என்பதைத் திரும்பித் திரும்பிப் பார்க்கிறார். பிறகு அவரும் அத்திசையில் நடைபோடுகிறார். கெட்டிக்காரரான அரசியல்வாதியின் இலக்கணம் இதுவே. அதேசமயம் அரசியல்வாதிகள் சிலர் தோல்வியடைகிறார்கள். ஏனெனில் உலகம்தான் தன் பின்னால் வருவதாக அவர்கள் இறுமாப்புக் கொள்கின்றனர். அவர்கள் சிக்கலில் மாட்டிக் கொள்கின்றனர். தாங்கள் எங்கே போனாலும் உலகமும் தங்கள் பின்னால் வரும் என்று அவர்கள் தவறாக நினைத்து விடுகின்றனர். கெட்டிக்கார அரசியல்வாதி மக்கள் எத்திசையில் போகிறார்களோ அதே திசையில் சென்று அவர்களைக் கடந்து முதலில் செல்ல ஆரம்பித்து விடுவான். அவன்தான் அந்த இயக்கத்தை நடத்திச் செல்வது போன்ற பிரமையை உண்டாக்குவான்.

**மு**ல்லா நஸ்ருத்தீன் தனது கழுதைமேல் அமர்ந்து வேகமாக எங்கோ போய்க் கொண்டிருந்தார். கடைத் தெருவில் மக்கள் அவரைத் தடத்து, "எங்கே அவசரமாகப் போகிறீர்கள்?" என்று கேட்டனர். முல்லா பதிலளித்தார்: "என்னைக் கேட்காதீர்கள். என் கழுதையிடம் விசாரியுங்கள். ஏனெனில் நான் ஓர் அரசியல்வாதி. முதலில் நான் இந்தக் கழுதை என் விருப்பப்படி செல்ல வேண்டுமென்று முயன்றேன். ஆனால் இதுவோ மடக்கழுதை. நான் இதை இடப்பக்கம் திருப்பிச் செலுத்த முயன்றால் இது வலப்பக்கமாகத் திரும்பி விடுகிறது. இதைக் கண்டு நடுத்தெருவில் எல்லோரும் என்னைக் கேலி செய்தனர். கூட்டம் கூடிவிட்டது. சிலர் என்னைப் பார்த்து, "அரே நஸ்ருத்தீன், உன்னால் ஒரு கழுதையைக்கூட அடக்க முடியவில்லையே' என்றனர். கழுதை விஷயத்தில் அரசியல் தந்திரம் செய்ய வேண்டுமென்று புரிந்து கொண்டேன். அதன்படி இப்பொழுதெல்லாம் கழுதை எந்தப் பக்கம் போகிறதோ நானும் அப்பக்கமே போகிறேன். உலகம் நான்தான் கழுதையை ஓட்டுகிறேன் என்று நினைக்கிறது. ஆனால் கழுதைதான் தன் போக்கில் என்னை இட்டுச் செல்கிறது!"

என்னிடம் கேள்வி எழுப்பிய மைத்ரேயர் அரசியலில் இருந்தார் என்றும் சந்நியாசி ஆகிவிடுவார் என்றும் அவர் நினைத்ததில்லை என்றும் கூறினேன். ஆனால் அரசியல் வாழ்வில் அவர் எப்பயனும் பெறவில்லை. அவர் அரசியல் அறிவு உள்ளவர். ஆனால் சராசரி அரசியல்வாதி அல்லர். பழக எளிமையானவர். நேர்மையைக் கைவிடாதவர். அரசியலில் பிரவேசித்ததால் அவருக்கு பிரச்சினை ஏற்பட்டது. அங்கு அவர் மிகவும் சங்கடப்பட்டார். தரம் தாழ்ந்து மட்டமான அரசியல் செய்ய அவர் விரும்பியதில்லை. இதனால்தான் அவரது மனம் வேறு திசையில் செல்ல ஆரம்பித்தது. அது சந்நியாசத்தில் கொண்டுபோய் விட்டது.

அரசியுல்வாதி எதற்கும் துணிந்தால்தான் வெற்றிபெற முடிகிறது. தரம் பார்த்து அரசியலில் செயல்பட முடியாது. ஒருவன் பழக எளிமையானவனாகவும், நேர்வழியில் செல்பவனாகவும் இருந்தால் அவன் அரசியலில் வெற்றிபெற முடியாது. அவன் அரசியலில் இருந்தால் அது அவனுக்குப் பொருந்தாத இடமாகும்.

அவர் சந்நியாசிகளைக் கேலி செய்ததற்கும் ஒருவேளை இதுதான் காரணமாக இருக்கும். ஏனெனில் கேலிக்கும் காரணம் உண்டு. யாரிடம் நமக்குப் பொறாமையோ அவர்களைத்தான் பெரும்பாலும் நாம் கேலி செய்கிறோம். உதாரணமாக, பஞ்சாபி சர்தார்கள் பற்றி நாடு முழுதும் 'ஜோக்'குகள் சொல்லப்படுகின்றன. அதற்குக் காரணமுண்டு. சர்தார்ஜிகளிடம் மற்றவர்களுக்குப் பொறாமை உள்ளது. காரணம், அவர்களுக்கு உடல்வலிமை அதிகம். நம் கழுத்தைப் பிடித்தால் மூச்சு வெளியேறிவிடும். இந்தியாவில் அதிக உடல்வலிமை யுடையவர்களை எப்படிப் பழிவாங்குவது? இவர்களோடு சண்டை சச்சரவிட முடியாது. ஆகவே இவர்களைக் கேலியாகப் பேசுகிறோம். இந்தக் கேலி உண்மையன்று. இது பொறாமையின் வெளிப்பாடு.

மேற்கு நாடுகளில் யூதர்களைக் கேலி செய்கிறார்கள். அவர்களைக் குறிவைத்துத் தான் அதிகபட்ச நையாண்டிப் பேச்சுகள் நிலவுகின்றன. இதன் பின்னணியில் காரணமுண்டு. யூதர்கள் மேதைகள் என்பதால் மற்றவர்களுக்குப் பொறாமை. யூதர்கள் ஓரிடத்தில் கால் பதித்தால் மற்றவர்கள் பின்வாங்க நேரிடும். அதிகபட்ச நோபல் பரிசு அவர்கள்தான் பெற்றுள்ளனர். அவர்களது எண்ணிக்கை குறைவு. அந்த

விகிதாசாரப்படி அவர்கள் அதிகமாகவே நோபல் பரிசு பெற்று விட்டனர் என்பதை அறிந்து வியக்கிறோம்.

இந்த நூற்றாண்டில் உலகளாவிய செல்வாக்கை நிலைநாட்டிய மார்க்ஸ், ஃப்ராய்ட், ஐன்ஸ்டீன் ஆகிய மூவரும் யூதர்கள்! இந்த 20ஆம் நூற்றாண்டின் மீது யூதர்களின் செல்வாக்கு நன்கு படிந்துள்ளது. இந்த முழு நூற்றாண்டும் அவர்களைத்தான் ஆதாரமாகக் கொண்டுள்ளது. ஹிட்லர் கம்யூனிசத்தை எதிர்த்தார். ஏனெனில் அவர் யூதர்களின் சதி என்று நினைத்தார். மார்க்ஸ் உலகம் முழுவதையும் வசப்படுத்துவதற்குப் புதிய உபாயத்தை, புதிய சித்தாந்தத்தை அறிமுகப்படுத்தினார். பாதி உலகத்தை அவர் வென்று விட்டார். ஃப்ராய்ட் தமது கண்டுபிடிப்புகள் மூலம் மனத்தத்துவப் அறிவியல் உலகை முழுவதுமாகத் தம் வசப்படுத்தி விட்டார். மனித இனத்தின் மூளை சம்பந்தப்பட்ட விஷயங்களுக்கு அவரே முதலாளியாகி விட்டார். ஐன்ஸ்டீன் அறிவியல் முழுவதையும் தன் வசப்படுத்தி விட்டார்.

யூதர்கள் அரசியலில், வணிகத்தில், செல்வம் திரட்டுவதில் என்று எதில் ஈடுபட்டாலும் மற்றவர்களைத் தோற்கடித்து விடுவார்கள். அவர்களிடம் மேதைமை நிறைந்து விளங்குகிறது. அதைக் கவனித்து மற்றவர்களுக்கு சங்கடமாக இருக்கிறது; பொறாமை உண்டாகிறது. அவர்களைக் கேலி செய்வதன் மூலம் நமது பழிவாங்கும் உணர்வு திருப்தியடைகிறது. நினைவில் வை – நமக்கு யார்மீது பொறாமையோ அவர்களைத்தான் கேலி செய்கிறோம்.

நான் மைத்திரேயரிடம் 'நீ துறவிகளைக் கேலி செய்திருப்பாய் அவர்களிடம் பொறாமை ஏற்பட்டிருக்கும். அதாவது, அவர்களைப் போல் ஆகவேண்டும் என்று விருப்பம் இருந்தும் அவ்வாறு ஆகவில்லையே என்ற மனக்குறை இருந்திருக்கும்," என்றேன்.

"துறவியானது இன்னொரு துறவியின் சாபத்தாலன்று. உன் மனத்திற்குள்ளேயே எற்கெனவே துறவறத்தின் மீது நாட்டம் இருக்கிறது. அந்தக் கற்பனையில் சுவை கண்டிருக்கிறாய். உன்னால் துறவிகளை அலட்சியம் செய்ய முடியவில்லை. துறவியின் வாழ்க்கை சரியென்றும் ஒப்புக்கொள்ள முடியவில்லை. ஏனென்றால் துறவியின் போக்கு சரியானதாக இருந்தால் உன் கண்ணோட்டம் தவறு என்று ஆகிவிடும். ஆகவே அவரை நீ கேலி செய்கிறாய். ஆனால் உன்

ஆழ்மனத்தில் துறவி சரியானவர்தாம். அவர் போகும் திசை சரியானதுதான் என்று உறுத்தியிருக்கும். அவரைக் கேலி செய்வதை உன் தற்காப்பு முயற்சி எனலாம்.

நீ எனக்குக் கிடைத்திருந்தால் சங்கடப்பட்டிருப்பாய். ஏனெனில் நான் மற்ற துறவிகள்போல் இல்லாமல் வித்தியாசமானவன். ஆகவே மற்ற துறவிகளை எதிர்ப்பவர்களும் என்னிடம் வந்து சந்நியாசி யாகிறார்கள். மதங்களை எப்பொழுதும் தாக்கிப் பேசியவர்களும் என்னிடம் வந்து தியானம் பயில்கிறார்கள். நாத்திகர்களும் என்னிடம் வந்து, "ஆத்திகர்களை நாங்கள் சமாளித்து விடுவோம். உங்களைத் தான் எங்களால் எதிர்க்க முடியாமல் போகிறது." என்கிறார்கள். நியாயம்தான். நான் மகாநாத்திகனாயிற்றே என்னுடனா மோத முடியும்? நான் இரண்டு மடங்கு நாத்திகன். ஆனால் என் நாத்திகம், ஆத்திகத்துக்கு எதிரானது அன்று, அதற்கும் மேம்பட்டது. நாத்திகத்தை நான் ஓர் ஏணியாகப் பயன்படுத்துகிறேன். இந்த நாத்திக விளையாட்டையும் சிறிது காலம் விளையாடிப் பார்த்து விடலாமென எண்ணினேன். எனக்கு நாத்திகம், ஆத்திகத்தின் படிக்கட்டாகவும், உலக வாழ்க்கை துறவறத்தின் படிக்கட்டாகவும் அமைந்தது. ஆகவே வழக்கமான, சம்பிரதாயமான துறவிகளால் ஈர்க்கப்படாதவர்கள் என்னை எதிர்பார்க்கிறார்கள். ஆனால் அவர்கள் என்னிடம் வந்து சேர்ந்தால் நான் அவர்களை மூழ்கடித்து விடுவேன்!

**நான் சில பூக்கள் பறித்தேன்**
**சில கவிதைகள் நெய்தேன்**
**எனது இசைக்கூடத்தை அலங்கரிக்க.**

**எனது வாழ்க்கையை நடத்திச்செல்ல**
**ஏமாற்றங்கள் எத்தனையோ அனுபவித்தேன்.**
**எனது மனத்தை இழுத்துக்கட்ட**
**மெல்லிய கயிற்றால் வலை பல செய்தேன்.**

**அருகில் நான் நெய்த**
**கனவுகளின் குளிர்ந்த நிழல்;**
**உடலின் அழகு மனத்தைக் கவர்ந்தே வந்தது;**
**ஆயினும் இந்த ஆசையெனும் மாயையால்**
**இரவும் பகலும் என்றுமே எனக்கு**
**அமைதி கிடைக்காது போயிற்று.**

நான் சில பாடல்கள் நெய்தேன்
சில பாடல்கள் கேட்டேன்
கேட்டு ரசித்துத் தலையசைத்தேன்
இந்த கீதங்களின் இனிமையில் ஆழ்ந்து
புன்னகை காட்டும் தூய மனத்தைச்
சரிக்கட்டி நான் மகிழ்வித்தேன்
அழகும் சுவையும் கிடைத்ததாய் மயங்கினேன்.

நான் தெரிந்தெடுத்த அப்பூக்களும்
நெய்துமுடித்த அப்பாடல்களும்
உள்ளத்திற்கு எழுச்சி கொடுத்தன

இளமையின் இனிய கனவுகள்
சிற்சில இரவுகளில், சந்திப்புகள்
என்னை மகிழ்வித்தபோதிலும்
உருவமெடுக்கும் மாயையில்
எனக்கு மகிழ்ச்சி கிடைக்கவில்லையே.

மைத்திரேயர் கண்டதெல்லாம் கனவு. அவரது மனம் கனவுகளை அருமையாக நெய்தது. ஆனால் அவை உடையும் இயல்பு பெற்றவை. அவற்றிலிருந்து அமைதி கிடைக்கவில்லை, சுகம் கிடைக்கவில்லை, நிழல் கிடைக்கவில்லை. காய்ச்சல், மன இறுக்கம், மனத்துயரம் ஆகியவை விளைந்தன. உலக வாழ்க்கையில் களைத்துப் போனவனுக்கு. பெரிய விருப்பங்கள் நிறைவேறாமல் தோற்றவனுக்கு துறவறம் தவிர வேறு புகலிடம் எங்கே உள்ளது? தோற்றவனுக்கு தெய்வமே கதி.

உங்களுக்கு நான் பொருத்தமானவன்
என்று ஒருபோதும் நான் சொன்னதில்லை
பரீட்சை இன்னும் மிஞ்சியுள்ளதா என்ன?
ஏற்கெனவே நான் பொறுத்து ஏற்றது போதாதா?

'நான் உங்கள் தரத்திற்குத் தகுதியற்றவன்' என்று நீ ஒப்புக் கொள்கையிலேயே நீ என்னிடம் வரத் தகுதி பெற்றுவிட்டாய். தன்னிடம் தகுதி உள்ளதாகக் கூறுபவன் உண்மையில் எனக்குப் பொருந்தாதவன். தகுதியுள்ளவர்களுக்கு இங்கே இடமில்லை. திமிர் பிடித்தவர்களுக்கு இங்கே வழிகாட்டுதல் இல்லை.

'ஐயா, நான் உங்கள் சீடனாகத் தகுதியற்றவன்' என்று நீ பணிவு காட்டினால் என் இருப்பிடக் கதவுகள் உனக்குத் திறக்கும். மதுசாலைபோன்ற இனிய என் இல்லம் உனக்குக் கோவிலாக அமையும். இங்கே ஞானிகளும், அறிஞர்களும், புண்ணியவான்களும், சாது மகாத்மாக்களும் வரவேண்டிய தேவை இல்லை. பணிவுள்ளவர்களும், விட்டுக் கொடுக்கவும் வளைந்து கொடுக்கவும் தயாராக உள்ளவர்கள்தான் இங்கு தேவைப்படுகிறார்கள்.

பரீட்சையோ, சோதனையோ எதுவும் மிஞ்சியிருக்கவில்லை. நீ தெளிவுடன்தான் சோதனைக்குட்பட்டாயெனில் மேற்கொண்டு சோதனை தேவைப்படாது. நீ நினைவுடன் சோதனையை முடித்திருந்தால் சாட்சி என்னும் கரைக்கு வந்துவிட்டாய். ஆத்மஞானம் நிகழும் தருணம் நெருங்கிவிட்டது. அந்த அனுபவம் எக்கணமும் உனக்கு நேரலாம். மயக்கம் போன்ற நிலையில் சோதனையை சகித்திருந்தால் ஒரு பரீட்சை இன்னமும் பாக்கியுள்ளது. விழித்தெழும் பரீட்சை அது. மயக்கநிலையில் நீ சகித்ததாகக் கூறும் சோதனைகளை விழித்துக் கொண்டு பொறுத்துக்கொள். விழித்த நிலையில் நீ முடிக்கும் சோதனைகள் மூலமே தளைகளிலிருந்து விடுபடுவாய்.

**எப்பொழுதிலிருந்து உன் மீது**
**எனக்குக் கவனம் எழுந்ததோ**
**எனது அறிவு நினைவிழந்தது**
**உள்ளத்தால் தொலைவு இல்லையெனில்**
**உள்ளேன் அடிமை உன் அருகேதான்.**

எவனது புத்தி மயக்கமுற்றதுபோல் செயலிழக்கிறதோ அவன்தான் எனக்குப் பயன்படுவான். உள்ளத்தால் தொலைவு ஏற்படுவதற்கு உலகத்தில் இதயங்கள் மயங்கியிருப்பதுதான் காரணம். அங்கே விழிப்பு என்ற தீபத்தைக் கொஞ்சம் ஏற்றிவைத்தால் பிறகு உள்ளங்களிடையே இடைவெளி இருக்காது.

**இரக்கம் சிறிதும் இல்லா புத்தி**
**உள்ளமென்னும் குடியிருப் பினின்று**
**விருப்பங்களை விரட்டியடித்து**
**வெற்றிடமாக ஆக்கிவிட்டது.**

ஆம். புத்தி (மிகை அறிவு) உன் உள்ளத்தைக் கொள்ளையடித்து காலி இடமாக ஆக்கிவிட்டது.

**உள்ளக்குடியிருப்பு சூறையாடப்பட்டு**
**சோகமாக, மௌனமாக நாமுள்ளோம்**
**உள்ளத்தின் நிலைமையை யாரிடம் சொல்வோம்?**
**நாங்களாகவே எங்களை இழந்தோம்**
**உனது தெருவில் உலாவுவதற்கு**

அது பிரபுவின் தெரு. அன்புச் சந்து. ஒரேசமயம் இருவர் செல்ல முடியாதபடி குறுகலானது. அதில் ஒருவருக்குத்தான் இடமுண்டு. நீ உன்னை முன்னிலைப்படுத்தி அஹங்கரித்ததால் அந்தச் சந்தில் நீ நுழைய முடியாமற்போனது.

அந்த பிருந்தாவனத்துச் சந்துத்தெருவில் நீ பிரவேசித்து நடமாட வேண்டுமானால் உன்னை, நீ என்ற நினைவை, கைவிடு. உனக்கும் கடவுளுக்கும் நடுவில் கொஞ்சம்தான் இடைவெளி. அந்த இடைவெளி 'நான்' என்னும் உணர்வு. ஒரு காலடி கூடுதலாக எடுத்து வைத்தால் போதும் — நான் என்பது நான் இல்லை என, அஹங்காரம் நிர்—அஹங்காரமாக (அகந்தையின்மையாக) மாறினால் போதும். மற்றவை தாமாக பொருத்தமாக அமைந்துவிடும். மதுசாலை போன்ற என் இனிய இல்லத்தின் கதவுகள் திறந்தே உள்ளன. 'நான்' என்பதை வெளியிலேயே வைத்துவிட்டு உன்னால் உள்ளே வரமுடிந்தால் இது உனது இல்லமாகிவிடும்.

**ஹரி ஓம் தத்ஸத்!**

அஷ்டாவக்கிரர் மொழிகிறார்:

இஹாமுத்ர விரக்தஸ்ய நித்யாநித்யவிவேகின: |
ஆச்சர்யம் மோக்ஷகாமஸ்ய மோக்ஷாதேவ விபீஷிகா || 53

தீரஸ்து போஜ்யமானோஅபி பீடய்யமானோ அபி ஸர்வதா |
ஆத்மானம் கேவலம் பஸ்யன் ந துஷ்யதி ந குப்யதி || 54

சேஷ்டமானம் ஸரீரம் ஸ்வம் பஸ்யத்யன்ய ஸரீரவத் |
ஸம்ஸ்தவே சாபி நிந்தாயாம் கதம் க்ஷுப்யேத் மஹாஷய: || 55

மாயாமாத்ரமிதம் விஸ்வம் பஸ்யன் விகதகௌதுக: |
அபி ஸன்னிஹிதே ம்ருத்யௌ கதம் த்ரஸ்யதி தீரதீ: || 56

நிஸ்ப்ருஹம் மானஸம் யஸ்ய நைராஸ்யேஅபி மஹாத்மன: |
தஸ்யாத்ம ஞானத்ருப்தஸ்ய துல்னா கேன ஜாயதே || 57

ஸ்வபாவாதேவ ஜானானோ த்ருஷ்ய மேதன்ன கிஞ்சன |
இதம் க்ராஹ்யமிதம் த்யாஜ்யம் ஸ கிம் பஸ்யதி தீரதீ: || 58

அந்தஸ்த்யக்தகஷாயஸ்ய நிர்த்வந்த்வஸ்ய நிராஸிஷ: |
யத்ருச்சயாகதோ போகோ ந துக்காய ந துஷ்டதேயே || 59

ஒரே ஒரு பூ மலர்வதனால்
எந்த நந்தவனத்திற்கும்
வசந்த காலம் வந்துவிடாது.

வீட்டின் வெளிப்புறப் பளபளப்பு
உட்புற உல்லாசத்தின் பிரதிபலிப்பன்று
வெளியே மகிழ்ச்சிபோல் தெரிந்தாலும்
வீட்டினுள் வேதனை நீடிக்கிறது

மாந்தோப்புக் காற்றின் குளிர்ச்சியின் நடுவில்
உள்ளத்தின் சூடு தணியவில்லை.
சில துளி நீரின் துணைகொண்டு
தாகம் நமக்கு அடங்குவதில்லை.

கார்மேகம் இப்புறம் கர்ஜிக்க
ஆழ்கடல் நெருப்பாய்க் கொதிக்கிறது
துறவியின் பழைய குடிசையை துக்கம்
இரவும் பகலும் சூழ்கிறது
சில மணி நேரம் கண்களை மூடுதல்
சமாதிநிலை ஆகிவிடாது

ஒரு பூ மலர்ந்தால் வசந்தகாலம் தொடங்கி விட்டதாக நினைப்பது ஆபத்தானது. முழு உயிரும் மலர வேண்டும். உணர்வு மையம் கமலங்களால் சூழப்பட்டிருக்க வேண்டும். உள்ளத்தின் ஆழ்ந்த இருண்ட பகுதிகளும் ஞான ஒளியால் நிரம்ப வேண்டும். இதுவே ஆத்மாவிற்கு வசந்த காலம்.

ஒரு கிரணம் இறங்கி வந்தால் சூரிய உதயம் ஆகிவிட்டதென நினைக்காதே. ஆகவே குரு மூலமாக சீடன் பரீட்சிக்கப்படுவது கட்டாயத் தேவையாகிறது. நாம் இத்தனை பிறவிகளில், வாழ்க்கைகளில் அஞ்ஞான இருட்டில் மூழ்கியிருந்தோம். ஆகவே சிறிது திருப்தி உணர்வு ஏற்பட்டாலும் மோட்சத்தின் வாசலை அடைந்து விட்டதாக நினைக்கிறோம். சிறிதளவு நறுமணம் வீசினாலும் பெரிய மலர்த் தோட்டத்தினுள் நுழைந்து விட்டதாகக் கருதுகிறோம். கண்களில் கனவில் ஒளி பட்டாலும் சூரியோதயம் ஆகிவிட்டதாகக் கருதுகிறோம்.

துரும்பளவு சுகம்கூட நமக்குப் பெரியதாகத் தெரிகிறது. ஏனெனில் நாம் துன்பம் தவிர வேறெதுவும் அறிந்திருக்கவில்லை. சிறிதளவு இன்ப அதிர்வும் நம்மை ஆனந்தப்படுத்துகிறது. நாம் வாழ்ந்ததெல்லாம் நரகத்தில்தான். எனவே சுவர்க்கம் பற்றிய கனவுகூட மிகுந்த திருப்தி தருகிறது.

ஆனால் இந்தப் போலி சுகத்திலிருந்து நம்மை எழுப்ப குரு தேவைப்படுகிறார். அவர்தான் நம்மிடம் வசந்த காலம் வருவதற்கு

மேலும் நிறையப் பூக்கள் மலர வேண்டும் என்று சொல்வார். அவர் நாம் ஓரிடத்தில் நின்றுவிடாமல் தொடர்ந்து மேற்கொண்டு முன்னேறத் தூண்டுவார். 'மேலே, மேலே' என்று விரட்டுவார். நமது முழு வாழ்க்கையும் நறுமணத்தால் நிரம்பும்வரை, உயிரின் மூலைமுடுக் கெல்லாம் ஒளி பரவும்வரை, நாமே சுயமாக ஒளிவிடத் துவங்கும்வரை அவர் நம்மைத் தேங்கவிட மாட்டார். நமக்குள் ஒளியைத் தவிர வேறெதுவும் இல்லை என்கிற நிலை உருவாகும்போது வசந்த காலம் வந்துவிட்டதென்பதை உணரலாம்.

ஆகவே ஜனகர் தன் மகிழ்ச்சியை வெளிப்படுத்தும்போது அஷ்டாவக்கிரர் மௌனமாக இருந்து அதை ஒப்புக்கொண்டு விடவில்லை. அவர் ஜனகரை பரீட்சிக்கத் தொடங்கினார். நீண்ட காலமாகப் பட்டினியாய் இருப்பவனுக்கு உலர்ந்துபோன ரொட்டி கிடைத்தாலும் விருந்தாக அவன் நினைப்பானே. அதுபோன்றதா ஜனகரின் நிலை? வெயிலில் அலைந்து மிகவும் களைத்துப்போன ஒருவன், ஏதோ மரத்தின் நிழலில், அது பேரீச்சைமர நிழலாயினும் சரி, உட்கார்ந்தால் கற்பகத் தருவின் கீழிருப்பதாக நினைக்கிறானே அது போன்றதா ஜனகரின் நிலை? ஏனெனில் நாம் தற்காலத்தில் உணர்வ தெல்லாம் கடந்தகால அனுபவத்தை அடிப்படையாகக் கொண்டுதான்.

நடந்து செல்லும் பாதையில் ஏழைக்கு ஒரு ரூபாய் கிடைத்தால் துள்ளிக் குதிக்கிறான். பணக்காரனுக்குக் கிடைத்தால் அலட்சியப் படுத்துகிறான். ஒரே மாதிரி மதிப்புள்ள காசுதான். ஆனால் ஏழை தனது கடந்த காலத்தாலும், பணக்காரன் தனது கடந்த காலத்தாலும் அக்காசை மதிப்பிடுவதால் வெவ்வேறு உணர்ச்சிகளை வெளிப்படுத்துகிறார்கள். பணக்காரனிடம் ஏற்கெனவே செல்வம் குவிந்துள்ளது. ஒரு ரூபாய் சேர்வதால் அவனது செல்வநிலையில் மாறுதல் இல்லை. ஏழையிடமோ ஒரு காசுகூட கிடையாது. ஒரு ரூபாய் கிடைத்தாலும் பெரிய சொத்துக் கிடைத்ததுபோல் உணர்கிறான். ரூபாயின் மதிப்பில் மாறுதல் இல்லையெனினும் நமது கண்ணோட்டம் ஒப்பிட்டு முறையிலும் எதையாவது சார்ந்துமே உள்ளது.

**ஒ**ரு மாஜி மகாராஜா தனது சுயசரிதையில் ஒரு சம்பவம் குறிப்பிடுகிறார். புதிதாக ஒருவனை வேலைக்கு நியமித்திருந்தார். அவனைக் கூப்பிட்டு, படிக்கம் (எச்சில்துப்பும் பாத்திரம்) கொண்டுவரச்

சொன்னால். அவனுக்குப் புரியவில்லை. அந்த அறையின் மூலையில்தான் அது இருந்தது. தங்கத்தால் செய்யப்பட்டு, ரத்தினக் கற்கள் பதிக்கப்பட்டிருந்த அப்பாத்திரத்தைப் புதிய வேலைக்காரன் எச்சில் துப்பவே அது வைக்கப் பட்டுள்ளது என்று கற்பனை செய்திருக்க முடியாது.

மன்னர் கேட்டார், “நான் சொன்னது புரியவா இல்லை? அதோ மூலையில் இருக்கும் தங்கப் பாத்திரத்தைக் கொண்டுவா.”

வேலைக்காரன் பாத்திரத்தின் அருகே சென்று உள்ளே பார்வையைச் செலுத்தினான். உடனே முகத்தைச் சுளித்துக் கொண்டு, “கொஞ்சம் பொறுங்கள், எஜமான். எந்த மடையனோ இந்த பாத்திரத்தில் எச்சில் துப்பி அசிங்கப்படுத்தியிருக்கிறான். தோட்டியைக் கூப்பிட்டு சுத்தம் செய்யச் சொல்கிறேன்,” என்றான்.

எச்சில் துப்ப ஒரு பாத்திரம் வைத்துக் கொள்ளும் வழக்கம் ஓர் ஏழைக்கு இருக்க முடியாது. அவன் எங்கு வேண்டுமானாலும் எச்சில் துப்புவான். பூமியனைத்தும் அவனுக்குப் பழக்கம்தான்.

நாம் நமது அனுபவத்தால் எதையும் நிறுத்து, அளந்து பார்க்கிறோம். வாழ்க்கை குறித்து நாம் சொல்லும் விளக்கமெல்லாம் நம்முள்ளே இருந்துதான் வருகிறது. ஜனகரின் அனுபவமும் கடந்தகால அனுபவங்களின் விளைவோ என்று அஷ்டாவக்கிரருக்கு சந்தேகம், கவலை.

பூவே பார்த்திராதவன், பாலை நிலத்துவாசி, ஒரு பூ மலர்ந்ததுமே வசந்த காலம் வந்து விட்டதாக நினைக்கக்கூடும். அவனுக்குள் இருக்கும் பசி, ஏக்கம் அவனை ஏமாற்றியிருக்கலாம். இப்படித்தானே கானல்நீர் தெரிகிறது. பாலைவனத்தில் வழி தவறி அலைபவன் மணிக்கணக்காகத் தாகத்தைத் தணித்துக் கொள்ள முடியாத போது கானல்நீர் தோன்றுகிறது. இதே மனிதனுக்குத் தாகமில்லாதபோது, கையில் தண்ணீர் நிரம்பிய போத்தலும் குடுவையும் இருக்கும்போது, தாகமெடுத்தால் தண்ணீர் குடிக்கும் வசதி இருக்கும்போது கானல்நீர் கண்ணில் தட்டுப்படாது. ஆனால் தண்ணீரும் உணவும் கிடைக்கா விடில் அவன் பிரமைகளுக்கு ஆளாகிறான். அப்போது கிரணங்களின் மாயையால் சற்றுத் தொலைவில் பசுந்திடல் ஒன்று அவன்

கண்களுக்குத் தென்படுகிறது. தாகம் காரணமாக இக்காட்சி வலுப்படுகிறது. தாகத்தால் எது இல்லையோ அதைக் காணும் பிரமையை உண்டாகிறது. கனவு நிஜம்போல் உருவெடுக்கிறது.

தாகமுள்ளவனுக்குக் கானல்நீரின் பிரமை உண்டாகிறது. பயந்தவனுக்குக் கயிற்றில் பாம்பு தெரிகிறது. பாம்பு கயிற்றில் இல்லை – நமது பயத்தில் உள்ளது. பாம்பை அடிக்கடி பார்க்க நேர்ந்தால், பாம்பைப் பற்றிய பயங்கள் உயிரில் ஊடுருவியிருந்தால், கயிற்றில் பாம்பு தெரிவதில் வியப்பில்லை. பார்ப்பவரின் கண்களும் அவரது பயமும் கயிற்றில் பாம்பை உருவத்தை ஏற்றுகின்றன.

ஆகவே அஷ்டாவக்கிரர் விசாரணை செய்கிறார். ஜனகரைப் பொறுத்த வரையில் நிஜமாகவே சூரியோதயம் ஏற்பட்டு விட்டதா அல்லது இத்தனை காலம் இருட்டிலிருந்ததால் ஒளிவீசுவதாகக் கனவு காண்கிறாரா என குரு அறிய விரும்புகிறார்.

இன்னொரு விஷயம். ஒருவனுக்கு அனுபவத்தில் தெரியும் விஷயம் அவன் வரையில் உண்மைதான். நான் அறிந்துள்ளவை என்வரையில் உண்மையே. உன்னிடம் சொல்லும்போது அது பொய்யாக மாறத் தொடங்குகிறது. உண்மை என்று சொன்னதுமே அது பொய்யாக மாறக்கூடும். நான் அறிந்ததை எனக்குள்ளேயே வைத்திருக்கும்வரை அது உண்மையாக இருக்கும். ஏனெனில் நான் அறிந்தது என் அனுபவத்தின் விளைவு, நான் நேரில் கண்டது. அதை உன்னிடம் சொல்ல வார்த்தைகளை அடுக்கியபோது, வாக்கியம் அமைத்தபோது, உனக்குத் தெரிவித்தபோது அது பொய்யாக உருவெடுக்கத் தொடங்கி விட்டது.

சொல்ல முடியாததை – நிசப்தத்தை – நான் சொற்களில் கட்டியபோதே அது மிகவும் சேதமடைந்து விட்டது. பரந்து விரிந்த ஒன்றைச, சிறிய முற்றத்துக்குள் இறக்க முயன்றபோது எவ்வளவோ விட்டுப் போனது. விடியலின் புத்துணர்வைச் சொற்களென்னும் பேழையில் அடைக்க முயன்றபோது பெரும் பகுதி வீணாகிவிட்டது.

விடியலில் சூரியன் உதிக்கும்போது, துள்ளிவிழும் கிரணங்கள் பசுமையான மரங்களைக் கடந்து செல்கையில், மரங்கள் போதைபோல் தள்ளாடுகின்றன. காலை இளங்காற்று ஆனந்தமாக ஆடித் திரிகிறது.

கலகலவெனச் சிரிக்கிறது. இவையனைத்தையும் ஒரு சிறு பெட்டியில் அடைத்துவிடு. நீ போய் மரங்களில் இலைகள் சல்லடைபோல் சலித்து பூமியில் விழுகின்ற சூரிய கிரணங்களையும், இலைகளை அசைந் தாடச் செய்த காற்றினையும், எங்கும் பரவியுள்ள நறுமணத்தையும், விடியலின் புத்தம்புதிய இனிமையையும் ஒரு பெட்டியில் அடைந்துக் கொண்டு வா. ஓரிடத்திலமர்ந்து பெட்டியைத் திறந்தால் உள்ளே காலியாகத் தெரியும்! அதிலிருந்து சிறிதளவு நறுமணம் மட்டும் எழலாம். ஆனால் ஒளியை, காற்றை எப்படிக் கட்டிப் போடுவாய்? பெட்டியில் மிஞ்சும் நறுமணம் விரைவில் நாற்றமடிக்கும்.

அறியப்பட வேண்டியது எதுவோ அதை சூனியத்தில், மௌன நிலையில் ஆழ்ந்த அமைதியில் அறிந்து கொள்ளலாம். அதை வார்த்தைகளில் வெளியிட்டால் தாறுமாறாகி விடும். அது மட்டுமின்றி, வார்த்தைகளை உபயோகித்தால் உண்மையில் பாதி செத்துவிடும். மீதி மிஞ்சி நிற்பதுகூட பேசுபவரின் திறமையைப் பொறுத்தது.

ஆகவே உலகில் ஞானியர்கள் நிறைய உண்டு; சத்குருக்களின் எண்ணிக்கைதான் குறைவு. சத்குருவின் கடமை கூடுதலானது, சிரமமானது. அவர் எதை அறிந்து கொண்டாரோ அதை உன்னிடம் திறம்படச் சொல்லி அவர் அறிந்த சத்தியத்தில் கொஞ்சமாவது உனக்குக் கிடைக்கச் செய்வதே சத்குருவின் பணி.

**பு**த்தரிடம் ஒருவர் கேட்டார்: "உங்களிடம் பத்தாயிரம் பிட்சுகள் உள்ளனர். தங்கள் வாழ்க்கையை உங்களுக்கு அர்ப்பணித்துள்ளனர். ஆன்மிகப் பயிற்சி முடித்துள்ளனர். சிலர் பயிற்சியில் ஈடுபட்டுள்ளனர். இவர்கள் எத்தனை பேர் புத்தர் நிலையை – புத்தத்துவத்தை – அடைந்துள்ளனர்?"

அதற்கு புத்தர், "இவர்களில் பலர் புத்தநிலையை அடைந்து விட்டனர்; பலர் அந்நிலையை எட்டி வருகிறார்கள்; மேலும் சிலர் அதற்கான பாதையில் முன்னேறி வருகிறார்கள். அதாவது, சிலர் புறப்பட்டு விட்டார்கள்; சிலர் சேருமிடத்தை நெருங்கிக் கொண்டார்கள்; மேலும் சிலர் இலக்கை அடைந்தும் விட்டார்கள்."

கேள்வி கேட்டவனுக்கு இந்தப் ப்திலால் திருப்தி ஏற்பட வில்லை. அவன் தொடர்ந்தான்: "இவர்களில் யாரும் உங்களைப் போல்

தேஜசாகத் தெரியவில்லையே" புத்தர் சிரித்தார்: "புத்த நிலையை அடைந்து விட்டால் அதை வெளிப்படுத்தினால்தான் தெரியவரும். தான் அறிந்த பௌத்தத்தை வெளியே சொல்ல வேண்டும்; அதை முரல வேண்டும்; பாட்டாக இயற்ற வேண்டும்; யாப்பு – சீர்களில் பிணைக்க வேண்டும். மற்றவர்களிடம் பௌத்தத்தைச் சேர்ப்பிக்காத வரையிலும், அதுபற்றி உரையாடல் நிகழ்த்தாத வரையிலும், ஒருவர் புத்த நிலையை அடைந்துள்ளதை எப்படிக் கண்டுபிடிப்பது? நான் உயிருடன் இருக்கும் வரையிலும் என் இந்தச் சீடர்கள் பேச மாட்டார்கள். "நீங்கள் இருக்கும்போது, உங்கள் முன்னிலையில், நாங்கள் பேசுவதற்கு என்ன உள்ளது?' என்று கேட்பார்கள். இவர்களில் பலர் புத்தநிலையை அடைந்து விட்டார்கள். ஆனால் பிரசங்கம் செய்ய மாட்டார்கள். ஏனெனில் பேசுதல் என்பது தனிவகையான திறமையாகும்."

ஒன்றைப் பெறுதல் என்பதும், அதைப் பற்றிப் பேசுதல் என்பதும் வெவ்வேறானவை. ஞானம் பெற்றவரை ஜைன மத சாஸ்திரங்கள் கேவலி அல்லது ஜின் என்று கூறுகின்றன. ஞானவிளக்கம் தருபவர்கள் தீர்த்தங்கர் எனப்படுகின்றனர். கேவலிகள் ஆயிரக் கணக்கில் உள்ளனர், தீர்த்தங்கர்களை விரல்விட்டு எண்ணிவிடலாம். தீர்த்தம் என்றால் படித்துறை என்று சமண மதத்தில் பொருள். தீர்த்தங்கர் என்றால் படித்துறையை அமைப்பவர் என்று பொருள். அவர்கள் கரை அமைத்து, படகு கட்டி, மற்றவர்களை அதில் அமரவைத்து, அக்கரைக்குக் கொண்டு செல்பவர்கள். அவரும் நீந்திக் கரையைக் கடக்க வல்லவர். மற்றவர்களும் சம்சாரக் கடலைக் கடக்கச் செய்கிறார்.

ஒன்றை நினைவில் வை. தீர்த்தங்கராயினும் சத்குருவாயினும் தமது ஆன்மிக அனுபவத்தைச் சொற்களால் வடிக்கும்போது, அதன் உண்மைத் தன்மை தேயத் தொடங்குகிறது. அதில் ஓர் அம்சம் உடனே உயிரிழக்கிறது மீதிான் கேட்பவனுக்குப் போய்ச் சேருகிறது. அதன் அளவென்ன என்பது கேட்பவனின் கிரகிக்கும் தன்மையைத்தான் பொறுத்தது.

முதல் கட்டம், பேசுபவன் தனக்குள் எவ்வளவு விஷயம் நிரப்பிக் கொள்ள முடிகிறது என்பது; இரண்டாம் கட்டம், அதைப் பேசும்போது அதில் எவ்வளவு தேய்மானம் என்பது; மூன்றாம் கட்டம், வந்து சேர்ந்ததிலும் எந்த அளவிற்கு கிரகிக்க முடியும் என்பது.

நீ எந்த அளவு புரிந்தேற்க முடியும் என்பது நீ உன் மனக்கதவை எவ்வளவு திறந்து வைத்திருக்கிறாய் என்பதைப் பொறுத்தது. ஒரு சமயத்தில் ஒரே உபதேசம் கேட்கும் ஒவ்வொருவரது மனமும் வெவ்வேறு விகிதத்தில்தான் அதை உள்ளிழுக்கும். உன் பக்கத்தில் உட்கார்ந்திருக்கும் ஒருவன் அதிக அளவில் மனத்தைத் திறந்து வைக்கக்கூடும். அவன் உணர்ச்சி மேலிட்டால் நெகிழ்ந்து காணப்படுவான். அதைப் பார்க்கும் நீ இவனுக்குப் பைத்தியமா என்று வியப்பாய். உன்னைவிட அதிகமாக அவன் மனத்தை திறந்ததுதான் காரணம். அவனது இதயத்தை உபதேசம் தொட்டிருக்கும். உன்னைப் பொறுத்தவரையில் அதே பேச்சு உன் தலையைத் தொட்டுவிட்டு நீங்கிப் போயிருக்கும். நீ காதில் விழுந்த சொற்களின் கணக்குப் போட்டுக் கொண்டிருந்தாய். அவன் விஷயத்தில் சொற்கள் அவனது உள்ளத்தின் ஆழத்தைத் தொட்டுவிட்டன.

ஆகவே ஞானம் பெறுவது நீ உன்னை – மனத்தை, இதயத்தை – திறந்து வைக்கிறாயா என்பதைப் பொறுத்துள்ளது. அப்பொழுதும் அந்தப் பேருண்மையின் ஒரு பாகம் சேதம் அடையவே செய்யும். சொற்களைக் கடந்த ஒன்றைச் சொற்களால் கட்ட முயல்வதால் இப்படி நேருகிறது. இதனால் நீ சொற்களிலிருந்து சொற்களைக் கடந்த ஒன்றை சலித்தெடுக்க நேரிடும். சொற்களிலிருந்து அர்த்தத்தைப் பிரித்தெடுக்க வேண்டும். சொல்லின் எல்லையை உடைத்தெறிய வேண்டும். எல்லையற்ற ஒன்றைச் சொற்களிலிருந்து விடுபடவைக்க வேண்டும். எல்லையற்ற பரம்பொருளாகிய பட்சியைச் சொற்களெனும் கூட்டில் வைத்து உன்னிடம் தருகிறேன். அவ்வாறு நான் யாரிடமெல்லாம் தருகிறேனோ அவர்களில் பலர் கூட்டின் அழகிலேயே மயங்கி நிற்பர். பட்சியை மறந்துவிடுவர். கூண்டைப் பத்திரமாகத் தலையில் வைத்து எடுத்துச் செல்வார்கள். அவர்களுக்குப் பட்சியின் நினைவு வராது. பட்சியை அடையாளம் காணக்கூட அவர்களால் முடியாது. கூண்டைத் தருவது எனது எண்ணமல்ல. அதனுள் உயிர்த்துடிப்புடன் இருக்கும் பட்சிக்காகக் கூண்டையும் சேர்த்துத் தந்தேன். பட்சியை உன்னிடம் பாதுகாப்பாக ஒப்படைக்கவே கூண்டை தயார் செய்தேன். இல்லாவிடில் பட்சி என் கையிலிருந்து பறந்துவிடும். உன்னை ஒரு காலத்திலும் அடையாது.

சொற்களும் சாஸ்திரங்களும் அந்தக் கூண்டு. சித்தாந்தம் (கோட்பாடு), மொழிநடை அந்தக் கூண்டு. அதுமுடிந்த அளவிற்கு அழகாகத் தயார் செய்யப்படுகிறது. ஏனென்றால் அப்போதுதான் கூண்டின் அழகால் கவரப்பட்டு அதன் உள்ளே நுழைய ஆசைப்படுவாய். உனக்கு அதற்கான தாகம் ஏற்படும். பலர் கூண்டை அப்படியே வைத்திருப்பார்கள். அவர்கள் பண்டிதர்களாக ஆவார்கள். அவர்கள் நான் சொல்வதையே திருப்பிச் சொல்வார்கள். அவர்கள் எனது கூண்டை எடுத்துக் கொண்டு திரிவார்கள். இந்தக் கூண்டு எவ்வளவு அழகாக இருக்கிறது என்று மற்றவர்களிடம் காட்டுவார்கள். எவ்வளவு அருமையான தத்துவம், உயர்ந்த கோட்பாடு, இதயத்தைத் தொடும் கருத்து, கவர்ச்சியான பேச்சு, மனத்தை எப்படி ஈர்க்கிறது, எப்படிப்பட்ட தயாரிப்பு, வண்ணங்கள் தீட்டப்பட்டது, வானவில் போன்றது என்றெல்லாம் கூண்டைத்தான் புகழ்வார்கள். கொடுக்க வந்தது கூண்டையல்ல என்பதை மறந்து விடுவார்கள். சிலர் மட்டுமே கூண்டினுள் உள்ள பட்சியை அடையாளம் காண்பார்கள். ஆனால் அதைக் கூண்டிலிருந்து விடுவிக்க இயலாதவர்களாக இருப்பார்கள். நீண்ட நாள் கூண்டிலேயே இருந்தால் பட்சி தனது பறக்கும் ஆற்றலை இழந்து விடக்கூடும்.

என்னிடமிருந்து சப்தம் கிடைத்தால் தாமதம் செய்யாமல் அதை நிசப்தமாக ஆக்கிக் கொள்ளவும். நீ என்னிடமிருந்து என்ன கேட்கிறாயோ அதைத் தாமதிக்காமல் தியானநிலைக்கு மாற்று. தாமதம் செய்தால் பலன் கிடைப்பது கடினமாகி விடும். நான் கூறுவதைக் கேள். தியானத்தில் ஈடுபட்டு உன்னை விடுவித்துக் கொள். உன் கையில் கூண்டைக் கொடுக்கிறேன். நீ அப்படியே நின்றுவிடாதே. கூண்டைக் கையிலெடுத்ததும் கதவைத் திறந்துவிடு. பட்சியை விடுதலை செய்துவிடு. நீ தாமதம் செய்தால், நாளை அல்லது பிறகு பார்த்துக் கொள்ளலாம் என்றால், ஒரு நோட்டுப் புத்தகத்தில் எழுதி வைத்துப் பிறகு, வசதிப்படும்போது, வாய்ப்பு ஏற்படும்போது அர்த்தம் பார்க்கலாம், இப்போது என்ன அவசரம் என்று தள்ளிப் போட்டுக் கொண்டே போனால் அதற்குள் அர்த்தம் செத்துப் போயிருக்கும்; வார்த்தைகள் மட்டுமே மிஞ்சியிருக்கும். நீ பட்சியை விடுவிக்காவிடில் அதுவும் மரித்துப் போகும். பிறகு கூண்டைத் திறந்தால் பிணம்தான் மிஞ்சியிருக்கும். உயிர் புறப்பட்டுப் போயிருக்கும். ஏனெனில் அந்த

உயிர் எல்லையற்றதற்குச் சொந்தமானது; சூன்யத்திற்குச் சொந்தமானது; ஆகாயத்தினுடையது. அந்த பட்சி கூண்டில் வாழ்வதற்காக உண்டாகவில்லை. உடல் கூண்டில் கிடக்கும். உயிர் என்னும் பட்சி பறந்து போய்விடும். மிஞ்சிய உடலுக்கு நீ எவ்வளவு உபசாரம் செய்தாலும் உயிர் திரும்பி வராது. இப்படித்தான் நீ கோயில்களிலும் பிற வழிபாட்டுத் தலங்களிலும் செத்த பட்சிக்கு பூஜை செய்து வருகிறாய். இனி உயிரை நிரப்ப முடியாது. அதற்கான வாய்ப்பைத் தவற விட்டாய்.

சத்குருவிடமிருந்து உபதேசம் கிடைத்ததும் அதை உடனே திறந்துபார். ஒரு நிமிடம் தாமதிப்பதுகூட ஆபத்தானது. உபதேசம் சூடாக இருக்கையிலேயே, அதன் வெப்பம் நீங்குவதற்கு முன்னரே திறந்துபார். நான் உனக்குத் தருவது சூடானது, புத்தம் புதியது. அதை வாங்கிக் கொண்டு அப்படியே உட்கார்ந்து விடாதே. அதை ஃபிரிட்ஜில் போட்டு வைக்காதே. வசதிப்படும்போது திறந்து எடுத்துக் கொள்ளலாம் என நினைக்காதே. அது உயிரோட்டத்தை, உஷ்ணத்தை இழந்துவிடும். உயிர்ப் பறவை வெளியேறிவிட உடல் மட்டும் மிஞ்சிக் கிடக்கும்.

இப்படிக் கிடக்கின்ற உடல்களின் பெயர்தான் சாஸ்திரங்கள்! பிறகு நீ கீதை, பைபிள் முதலிய நூல்களைத் தலையில் தூக்கி வைத்துக்கொள். அவற்றைக் கணக்கு வழக்கில்லாமல் பூஜை செய்; பூ தூவு; அர்ச்சனை செய். எல்லாம் வீணாகிவிடும். ஒரு பயனும் விளையாது.

பிறகு வழி என்ன? சத்குரு பேசுவதை உடனுக்குடன் திறந்து அறி. நான் பேசப்பேச நீ திறந்து கொண்டே செல். நீ சொற்களில் அதிகமாகச் சிக்கிக் கொள்ளாதே. நீ அர்த்தத்தை விடுவித்துக் கொண்டே செல். நீ பூக்களின் அழகில் மாட்டிக் கொள்ளாதே. நறுமணத்தை விடுவித்துக் கொண்டே செல். நீ கூண்டை மறந்துவிடு. நீ என்னோடு சேர்ந்து ஆகாயத்தில் பற. நீ வேண்டுவது உனக்கு நிறையக் கிடைக்கும். இல்லாவிடில், உயிரோட்டமுள்ள எதுவும் உனக்குக் கிடைக்காது.

என்னிடம் கேட்டதை இன்னொருவரிடம் நீ சொன்னால் அது செத்ததைவிட மோசமான நிலையாக இருக்கும்; அழுகிய பிணமாக

இருக்கும். அப்படித்தான் ஆனது. சம்பிரதாயங்கள் அப்படித்தான் உருவாகின்றன. நான் சொன்னதை நீ பிறருக்குச் சொல்லித் தலைமுறை – தலைமுறையாகக் கைமாறிச் செல்கிறது. இந்த நீண்ட இடைவெளியில் கிடைப்பது அழுகிய பிணம். ஆகவேதான் மதங்கள் நாற்றமடிக்கின்றன; மதங்களின் பெயரால் எண்ணற்ற கொலைகள் நிகழ்கின்றன. மதங்களின் காரணமாக உலகத்தில் அன்பு பரவவில்லை; வெறுப்பும் பகைமையுமே பரவியது. மதங்ளால் போராட்டம் விளைந்தது; கொலைகள் நடந்தன; போர்கள் மூண்டன. பிரார்த்தனை உணர்வு ஊடுருவவில்லை; கடவுளின் இல்லக் கதவுகள் திறக்கவில்லை. மதங்களின் மூலம் சாத்தானின் சக்தி அதிகரித்தது; கடவுளின் சக்தி விருத்தியடையவில்லை. ஏனெனில் நீ மதம் என்று அழைப்பது அழுகிய பிணநிலையில் உள்ள அமைப்பைத்தான்.

அஷ்டாவக்கிரர் மீண்டும் – மீண்டும் ஜனகரைத் தட்டிக் கேட்கிறார். குரு ஞானம் அருளும்போது, உன்வரை அது உயிருடன் வந்து சேர்ந்ததா; அது உயிரோட்டத்துடன் உள்ளதா; சூடு குறையாமல், ஆறிப்போகாமல் கிடைத்ததா; நீ கூண்டைச் சரியாகத் திறந்தாயா; சொற்சுவையால் சலனமடையாமல் இருந்தாயா என்றெல்லாம் தெரிந்து கொள்ள விரும்புகிறார். இந்த ஜனகர் ஒருவேளை கூண்டை அசைத்துப் பார்ப்பதுடன் நின்று விடுகிறாரா? அதற்குள் பட்சியும் இருக்கிறதா? உயிருள்ள பட்சியா? அந்த உயிருள்ள பட்சியை விடுவிக்க ஜனகர் முயன்றாரா அல்லது வார்த்தை ஜாலங்களில் சிக்கிக்கொண்டு விட்டாரா? ஏனெனில் அஷ்டாவக்கிரர் சொன்னதையே ஜனகர் திருப்பிச் சொல்லியிருக்கிறார். கூடுதலாக 'ஆச்சரியம்' என்று சேர்த்துக் கொண்டார். ஜனகர் பேசியது கூறியது கூறலா? இயந்திரம் போன்ற ஞாபக சக்தியின் விளைவா? உண்மையாகவே இவருக்கு ஞானம் ஏற்பட்டு விட்டதா அல்லது சும்மா சொல்கிறாரா?

அஷ்டாவக்கிரர் எல்லாப் பக்கங்களிலிருந்தும் துருவிப் பார்க்கிறார். அவருடைய சோதனைக் கேள்விகளில் கருணையும் உள்ளது; கடுமையும் உள்ளது. ஜனகரின் பேச்சில் பெருமிதம் தெரிந்ததால் அஷ்டாவக்கிரர் கடுமையை வெளிப்படுத்துகிறார். ஆனால் உடனே ஆராயாவிடில், காலதாமதம் ஏற்பட்டால், ஜனகரை சோதிப்பதில் அர்த்தம் இருக்காது. ஆகவே, தான் சொன்னது ஜனகரின் இதயத்தைச் சென்றடைந்து விட்டதா என்று புத்தம்புதிதாக பரீட்சை

செய்கிறார். அவரது உடலின் தசை, ரத்தம் என்ற ஒவ்வொரு பாகத்திலும் ஊடுருவி உள்ளதா என்று அறிய விரும்புகிறார். அது உயிரின் அம்சமாக மாறிவிட்டதா? வாழ்வின் ஒரு பாகமாக ஆகிவிட்டதா? புத்தியளவில் மட்டும் பரவியுள்ளதா? நீ எங்கேயிருந்து பேசுகிறாய்? ஞானம் உன்னுள் கலந்து உள்ளத்தின் ஆழத்திலிருந்து பேசுகிறாயா அல்லது என் பேச்சைக் கேட்டதால் அதையே திருப்பி ஒப்பிக்கிறாயா? நீ மனிதனா, கிராமஃபோன் இசைத்தட்டா?

இந்த ஆபத்து இருக்கத்தான் செய்கிறது. ஏனெனில் சத்குருவின் பேச்சில் காணப்படும் சிறப்பு அதன் இனிமை எனலாம். அதை நம்பவேண்டும் என்னும் அளவிற்கு குருவின் பேச்சு இனிக்கும். அதுதான் ஆபத்து. சத்தியமான ஒன்றை நம்பிக்கையின் அடிப் படையில் ஏற்பது தவறான அணுகுமுறை. நம்பிக்கை பொய்த்து விடுவதுண்டு.

நான் உன்னிடம் ஒரு விஷயம் சொல்கிறேன். அருமையான விஷயம். நீ அதில் மயங்குகிறாய். சொல்கின்றவர் பிரியமானவர்; விஷயம் அருமையானது; ஆகவே அது பொய்யாக இருக்க முடியாது. ஆகவே நீ விவாதிக்கவில்லை; தர்க்கம் செய்யவில்லை. எதுவும் பேசாமல் ஒப்புக் கொண்டு விட்டாய். நீயாக ஒரு நம்பிக்கையை ஏற்படுத்திக் கொண்டாய். அதன் ஆதரவில் வசிக்கத் தொடங்கினாய். அது பொய்யான ஆதரவு. நான் சொன்ன விஷயம் உண்மைதான். ஆனால் நீ அதை நம்பிக்கையின் அடிப்படையில் எடுத்துக் கொண்டதால் அது மதிப்பு இழந்து விட்டது. சிரத்தையின் அடிப்படையில் அணுகியிருக்க வேண்டும்.

சிரத்தைக்கும் நம்பிக்கைக்கும் இடையே என்ன வேறுபாடு? எந்த சுய அனுபவமும் இல்லாமல், சாட்சியம் இல்லாமல், பிறர் கூறுவதை ஒப்புக் கொள்வது நம்பிக்கையின் பாற்பட்டது. நமது அனுபவம் என்ற உரைகல்லில் உரசிப் பார்த்த பிறகு பிறர் சொல்வதை ஏற்பது சிரத்தை எனப்படும். சிரத்தை சொந்த அனுபவத்தைக் குறிக்கிறது. நம்பிக்கை பிறரது அனுபவத்தைச் சார்ந்தது. ஆகவே அதனிடம் எச்சரிக்கையாக இருக்க வேண்டும்.

ஜனகரின் அறிவிப்பின் அடிப்படை எது – நம்பிக்கையா, சிரத்தையா? இதை உரசி மதிப்பிட அஷ்டாவக்கிரர் விரும்புகிறார்:

**இஹாமுத்ர விரக்தஸ்ய நித்யாநித்யவிவேகின: |**
**ஆஷ்சர்யம் மோகஷகாமஸ்ய மோகஷாதேவ விபீஷிகா ||**

'இவ்வுலகம், பரலோகம் இரண்டிலும் கிடைக்கின்ற போகங்களை விரும்பாதவனாகவும், நிரந்தரமானது – நிரந்தரமற்றது பற்றி விவேகம் உள்ளவனாகவும், மோட்சத்தை நாடுபவனாகவும் உள்ளவன், அவனும் மோட்சமென்றால் பயப்படுவது ஆச்சரியமான விஷயமாகும்.'

இது அற்புதமான சூத்திரம். மோட்சத்தினிடம் பயமா? சுதந்திர நிலையிடம் பயமா? நாம் எல்லோருமே சுதந்திரத்தைத் தானே விரும்புகிறோம்? சுதந்திரம் என்பது மோட்சம்தானே?

அப்படியில்லை. அஷ்டாவக்கிரர் சொல்வது நுணுக்கமானது. இவ்வுலகில் மிகக் குறைவான மக்களே உண்மையில் சுதந்திரத்தை விரும்புகிறார்கள். நூறுபேரில் தொண்ணூற்று ஒன்பது பேர் சுதந்திரம் பற்றி பேசுவார்கள். ஆனால் சுதந்திரமடைய விரும்ப மாட்டார்கள். அடிமை நிலையில் பாதுகாப்பு அதிகம். சுதந்திரமாக இருப்பதில் ஆபத்து உண்டு. ஆகவே மக்கள் ஓர் அடிமைத் தனத்திலிருந்து வேறோர் அடிமைத்தனத்திற்கு மாறிச் செல்கிறார்கள். உதாரணத்திற்கு முதலாளித்துவத்திலிருந்து பொதுவுடைமைக்குப் போகிறார்கள். பாதுகாப்பு உணர்வு ஏற்படாததால் சாதாரண சுதந்திரமே பயம் தருகிறது. மோட்சமோ பரம சுதந்திர நிலை. அதனிடம் அதிக பயம் உண்டாவது இயற்கைதானே.

அஷ்டாவக்கிரர் சொன்னதை ஐந்தாயிரம் ஆண்டுகள் கழித்து மேற்கத்திய மனத்தத்துவ சாஸ்திரம் இப்பொழுது புரிந்து கொண்டு வருகிறது. அங்கு புகழ்பெற்ற மனத்தத்துவ நிபுணரான எரிக் ஃபாம் இந்த விஷயத்திற்கு முக்கியத்துவம் கொடுத்து பெரிய ஆராய்ச்சிகள் செய்துள்ளார். Fear of Freedom (சுதந்திரம் குறித்த பயம்) என்று தலைப்பிட்டுள்ளார். நம்மை யாராவது அடக்கி வைத்தால், யாருடைய மேற்பார்வையின் கீழாவது இருந்தால், நல்லதென நினைக்கிறோம். ஆகவேதான் நம்மைப் பலர் கட்டிப் போடுகிறார்கள். ஆனால் கட்டுப்பட விரும்பாதவனை யாரும் கட்டிப்போட முடியாது. உனக்கு முதலில் கட்டுப்படும் விருப்பம் எழுகிறது. கட்டிப் போடுபவன் பிறகுதான் வருகிறான். முதலில் தேவை, பிறகு பூர்த்தி. 'யாராவது என்னைக் கட்டிப் போடுங்கள்' என்று நீ கூவுவதால் அதற்கான ஆள்

வருகிறான். பிறகு 'ஐயோ, என்னை அடிமைப்படுத்தி விட்டார்களே' என்று புலம்புகிறாய்.

என்னிடம் பலர் வந்து, "நாங்கள் பலமாகக் கட்டப்பட்டிருக்கிறோம். மனைவி, குழந்தைகள் எங்களைக் கட்டிப்போட்டு விட்டார்களே." என்று புலம்புகிறார்கள். ஆனால் முதலில் நீ ஏன் ஒப்புக் கொண்டாய்? லட்சக் கணக்கானவர்கள் உன்னைத் துரத்தினாலும், உன் விருப்பத்தை மீறி யார் உன்னை அடக்க முடியும்? யாராவது அடிமைப்படுத்த வந்தால் நீ ஓடிப்போக வேண்டியதுதானே. வீட்டில் நெருப்புப் பிடித்தால், நீ அப்போது வீட்டின் உள்ளே இருந்தால், மக்கள் உன்னிடம், 'வீட்டிலேயே இரு. பெரிய ஆபத்து வராது' என்று சொன்னாலும் உன்னால் உட்கார்ந்திருக்க முடியாது. "போதும் உங்கள் உபதேசம். நான் இதோ கிளம்பி விட்டேன். நீங்கள் வேண்டுமானால் உள்ளேபோய் உட்காருங்கள்." என்று சொல்லிவிட்டு வெளியே பாய்ந்தோடுவாய் அல்லவா? அப்போது உன்னை எதுவும் கட்டிப் போட்டதாகத் தெரியவில்லையே.

மனைவியால் சுதந்திரம் போய்விட்டதாகக் கூறுகிறாய். வேடிக்கை என்னவென்றால், அவள் இறந்து போனால், கூடிய விரைவிலேயே நீ இரண்டாவது திருமணம் செய்து கொண்டு விடுவாய். இறந்த மனைவியை உன்னால் அதிக நாள் நினைவில் வைத்திருக்க முடியாது. மனத்தில் புதிதாக இனிய கற்பனைகள் தோன்றும். 'எல்லாப் பெண்களும் ஒன்றுபோலவா இருப்பார்கள்? இதுவரை என்னுடன் வாழ்ந்தவள் துஷ்டை. அது என் தலைவிதி. மீதிப் பெண்களுமா துஷ்டையாக இருப்பார்கள்? உலகில் குணவதிகளும் உண்டுதானே. இறந்துபோன என் மனைவியைத் தவிர உலகில் மீதிப் பெண்கள் எல்லோருமே நல்லவர்கள்தான். அவர்களில் ஒருத்தி கிடைத்து மணந்து கொண்டால் வாழ்க்கை சுகமாகக் கழியும்.' இவ்வாறெல்லாம் நினைப்பாய். நீ பெண் தேடுவாய். நீ மறுபடியும் கட்டில் மாட்டிக்கொள்ள அதிக காலம் பிடிக்காது. பிறகு 'நான் கட்டிப் போடப்பட்டு விட்டேனே' என்று கூக்குரலிடுவாய்.

நீதான் உன்னைக் கட்டும் தளைகளைத் தயாரிக்கிறாய். கட்டுப்பாடு ஏதுமின்றி வாழ மிகுந்த தைரியம் வேண்டும். கட்டுப்பாடுகள் இல்லாத நிலையில் பாதுகாப்பும் இருக்காது. நாளையப்

பொழுது எப்படி இருக்குமெனத் தெரியாது. மனைவி ஒருத்தியைத் தேர்ந்தெடுப்பது எதற்காக? நாளைய — அன்றாட — வாழ்க்கையில் ஓர் ஒழுங்குமுறை இருக்க வேண்டும் என்றுதானே. நாளை உனக்குக் காம உணர்வு மேலிட்டால் திருப்தி செய்வது யார்? மனைவியைத் தேர்ந்தெடுத்துள்ளாய். அவள் நாளையும் உன்னுடன் இருப்பாள். மனைவியும் கணவனைத் தேடிக் கொண்டு விட்டாள். இல்லாவிடில் எதிர்காலத்தில் அவளுக்கு என்ன பாதுகாப்பு உள்ளது. உணவு, வீடு, உடை, அலங்காரப் பொருள்கள் யார் தருவார்? இவ்வாறு ஒவ்வொருவரும் நாளை, நாளைக்கு மறுநாள் என்று எதிர்காலத்திற்குப் பாதுகாப்பு செய்து கொண்டு விட்டார்கள்.அந்தப் பாதுகாப்பெனும் தளையில் கட்டப்பட்டு விட்டனர்.

நீ வீடு கட்டிவிட்டாய். வங்கிக் கணக்கில் கணிசமாகப் பணம் சேர்த்து விட்டாய். சமூகத்தில் ஓர் அந்தஸ்தை ஏற்படுத்திக் கொண் டாய். பிறகு நீ கட்டிப் போடப்பட்டு விட்டதாகப் புகார் செய்கிறாய். ஆனால் உன்னை யார் கட்டிப் போட்டது? கட்டுப்பட்டிருப்பதில் பாதுகாப்பு என்று நீயேதான் விலங்கை மாட்டிக் கொண்டாய். எதிர்காலத்தில் நோய் வந்தால் என்ன செய்வது? இறக்கும் நிலையில் இருந்தால் என்ன ஆகும்?

**மு**கம்மதுவின் வாழ்க்கையில் ஒரு நிகழ்ச்சி. நாள் முழுதும் அவருக்கு என்ன வருமானம் கிடைக்கிறதோ அதில் உணவிற்கான செலவுபோக மீதியை மாலையில் ஏழைகளுக்கு தானம் செய்துவிட்டு இரவில் பிச்சைக்காரனின் நிலையில் தூங்குவார். வாழ்க்கை முழுதும் அவர் இம்மாதிரியே செய்து வந்தார். ஒருநாள் அவர் இறக்கும் நிலையில் இருந்தார். அவர் மனைவி ஐந்து தங்கக் காசுகள் (அராபிய நாணயமாகிய தீனார்) தனியாக எடுத்து வைத்துவிட்டாள். அவசரத்திற்கு மருந்து வாங்க, மருத்துவரைக் கூப்பிட இப்பணம் உதவும் என்று அவள் எண்ணினாள்.

இரவு பன்னிரண்டு மணிக்கு முகம்மது துடிக்க ஆரம்பித்தார். அவர் மனைவியை அழைத்து, "என் வாழ்க்கையின் கொள்கை இப்போது இறக்கும் சமயம் சிதறுவதுபோல் தோன்றுகிறது. நான் அடுத்த நாளைக்கென ஒருபொழுதும் எந்த முன்னேற்பாடும் செய்துவைத்துக் கொண்டதில்லை. ஆனால் இன்று வீட்டில் பணம்

தேங்கிவிட்டது என்று அஞ்சுகிறேன். அது உண்மையானால் அப்பணத்தை உடனே ஏழைகளுக்கு அளித்துவிடு. இல்லாவிடில் வாழ்க்கையின் இந்தக் கடைசி நாளன்று கடவுளின் முன்னால் வெட்கித் தலைகுனிய நேரிடும். கடவுள் என்னைப் பார்த்து, 'உன் வாழ்க்கையின் கடைசி நாளன்று பணத்தை மிச்சப்படுத்திக் கொள்கையைக் கைவிட்டாய் அல்லவா' என்று கேட்பாரே'' என்றார்.

கணவருக்கு எப்படி இந்த விஷயம் தெரிந்தது என்று மனைவி பயந்து போனாள். அவள் சட்டென்று ஐந்து தீனாரை எடுத்த அவர் முன் வைத்து, "என்னை மன்னித்து விடுங்கள். நான் தவறிழைத்து விட்டேன். உங்கள் உடல்நிலை மோசமடைந்துள்ளதால், நள்ளிரவில் பணம் தேவைப்பட்டால் யாரிடம் கடன் கேட்பது என்று இப்படிச் செய்தேன்,'' என விளக்கினாள்.

முகம்மது அவளிடம், "உனக்கு என்ன பைத்தியமா? நமக்கு ஒவ்வொரு முறையும் கொடுத்தவர், இத்தனை நாள்வரை கொடுத்தவர் திடீரென நிறுத்தி விடுவாரா? நாம் என்றாவது பட்டினி கிடந்திருக் கிறோமா? நமது தேவை ஏதாவது நிறைவேறாமல் இருந்துள்ளதா? காலையில் கொடுப்பவன், மாலையில் கொடுப்பவன், நள்ளிரவில் தர முடியாதவனாகி விடுவானா? நீ வாசலில் போய்ப் பார்,'' என்று கட்டளையிட்டார்.

அவள் ஐந்து தீனார் பணத்தையும் எடுத்துக் கொண்டு வாசலுக்குப் போனாள். அங்கே ஒரு பிச்சைக்காரன், அவளைப் பார்த்ததும், "எனக்கு ஐந்து தீனார் தேவைப்படுகிறது,'' என்றான். அவள் கையிலிருந்ததைக் கொடுத்துவிட்டாள். அவள் உள்ளே திரும்பியதும் முகம்மது அவளிடம், "பார்த்தாயல்லவா,'' பெற்றுக் கொள்ளவும் அவனே வருகிறான். கொடுப்பதற்கும் அவனே வருகிறான். நாம்தான் தேவையின்றிக் கவலையை உருவாக்கிக் கொள்கிறோம். கவலையின் தளையில் மாட்டிக் கொள்கிறோம். நாமே மாட்டிக் கொண்டு நாமே கூக்குரலிடுகிறோம். இப்போது என் கவலை நீங்கிவிட்டது. நான் கடவுளின் முன்னால் தலை உயர்த்தி, 'உன் ஒருவனைத்தான் எப்போதும் நம்பியிருந்தேன். வேறு எவரிடமும், எப்பொருளிலும் நம்பிக்கை வைத்ததில்லை' என்று கூற முடியும்'' என்றார்.

கடவுளை மட்டும் நம்புகின்றவனுக்குக் கட்டுப்படுத்தத் தளைகள், பற்றுகள் கிடையாது. ஆனால் ஒப்புக்காகத்தான் நாம்

கடவுளை நம்புகிறோம். நாம் நம்புவது வேறு விஷயங்கள்தாம் — இன்ஷ்யூரன்ஸ் கம்பெனி, பாங்க், நம் மனைவி, கணவன், நண்பர்கள், குடும்பத்தினர், தந்தை, மகன், அரசாங்கம், இன்னும் எத்தனை — எத்தனையோ.

நாத்திகன் கடவுளை மட்டும்தான் நம்பாதவனே தவிர அவனும் பாங்க், இன்ஷ்யூரன்ஸ் கம்பெனி என்று ஆத்திகனைப் போலவே பல நம்பிக்கைகளைக் கொண்டுள்ளான். ஆத்திகனின் இலக்கணம் என்ன? அவன் உயிரின் சக்தியாகிய கடவுளை மட்டுமே ஒரே நம்பிக்கையாகக் கொண்டிருப்பான். கடவுளை மட்டுமே நம்புவான்.

மனைவி ஏழைக்கு தீனார் கொடுத்து விட்டதைச் சொன்னதும், முகம்மது சந்தோஷப்பட்டார். அவர் திருப்தியான குரலில் மனைவியிடம், "எல்லாம் சுபமாக முடிந்தது. என்னுடைய நேரம் வந்துவிட்டது. இனி நான் கவலையில்லாமல் புறப்பட முடியும்," என்று கூறிவிட்டுப் போர்வையால் முகத்தை மூடிக் கொண்டார். அப்படியே இறந்து விட்டார். சில நிமிடம் கழித்து மனைவி போர்வையை நீக்கிப் பார்த்ததில் உயிர் நீங்கிவிட்டது தெரிந்தது. அவர் புறப்படுவதை ஐந்து தீனார் பணம்தான் தடுத்தது போலிருந்தது. அப்பணத்தை அவர் சுமையாக, தன்னைக் கட்டிப் போடும் சங்கிலியாக நினைத்தார்.

பேச்சுவாக்கில், நாம் சுதந்திரமடைவதை விரும்புவது போல்தான் சொல்கிறோம். ஆனால் விடுதலைக்காக நாம் செய்யும் ஏற்பாடுகளே நம்மை அடிமைப்படுத்தி விடுகின்றன.

மனிதன் ஏன் பணம் திரட்ட விரும்புகிறான்? சுதந்திரமாக வாழ வேண்டும் என்றுதானே. பணத்தால் சுதந்திரம் கிடைப்பதாக அவன் நினைக்கிறான். பணம் இருந்தால் — எங்கே வேண்டுமானாலும் போகலாம்; பெரிய ஹோட்டலில் தங்கலாம்; விமானத்தில் பயணிக்கலாம்; மாளிகையில் வசிக்கலாம்; விரும்பிய பெண் கால் பிடித்து விடுவாள்; அவன் இஷ்டப்பட்டதை எல்லாம் செய்யலாம். ஆனால் பணத்தைச் சம்பாதிக்க மேற்கொள்ளும் முயற்சியாலேயே அவன் கட்டப்பட்டு விடுகிறான். பணத்தின் சுமை அதிகரித்து நெஞ்சை அழுத்துகிறது. சாதாரண சுதந்திரத்திற்கே இந்தப்பாடு எனில் மோட்சமாகிய பரம சுதந்திரம் பெற எத்துணை முயற்சி தேவை.

அஷ்டாவக்கிரர் கூறுகிறார்: "ஜனகரே, உமது பேச்சிலிருந்து நீர் முழுமையாக விடுதலை பெற்றுவிட்டதாகத் தெரிகிறது. இவ்வுலகத்தில் உமக்கு எந்த எதிர்பார்ப்பும் இல்லை. பரலோகம் பற்றியும் நாட்டம் இல்லை. உலகிலும் எதற்கும் ஆசைப்படவில்லை. சுவர்க்கத்திலிருந்தும் எதையும் பெறும் எண்ணம் இல்லை. ஆகவே உமக்கு விவேகம் கிடைத்து விட்டதாகவே தோன்றுகிறது. நிரந்தரம் எது — தற்காலிகம் எது; சாரம் எது — சக்கை எது; இந்த வேற்றுமை உமக்குப் புரிந்துவிட்டது. சத்தியத்தின் தரிசனம் கிடைத்திருக்கும். ஆனால் மோட்சத்தை விரும்புகிறவன் மோட்சத்திடமே பயப்படும் ஆச்சரியமான விஷயம் உமக்குத் தெரியுமா? உமது மனத்திலும் அந்த பயம் உண்டா? அப்படி பயப்பட்டால் நீர் பேசும் ஞானமெல்லாம் வெற்றொலி. அந்த பயம் காரணமாக நீர் கட்டப்பட்ட நிலையிலேயே இருப்பீர். கற்பனை உலகங்களைப் படைப்பீர்."

நாம் பயம் காரணமாகத்தான் உலகத்தைப் படைத்தோம். உலகம் என்பது நமது பயத்தின் விரிவாக்கம்தான், மேலும் வேடிக்கை என்னவென்றால் உன் கடவுளும் சரி, உன் சுவர்க்கமும் சரி, புண்ணியமும் சரி உன் பயத்தின் விஸ்தரிப்பேயாகும். நீ புண்ணியச் செயல் புரிவதுகூட நரக பயம் காரணமாகவே. சுவர்க்கம் நழுவிப் போய்விடக் கூடாது என்றும் பயம். தேவநங்கையர், கற்பகத் தரு, அருவி வெள்ளம் போல் மது கிடைக்காமல் போய் விடுமென்ற பயம். நீ கோயிலுக்குச் சென்று தலை தரையைத் தொடும்படி வணங்கிவிட்டு வருவது பக்தியாலா? நீ கோயிலுக்கு வராவிடில் கடவுள் கோபப்படுவார் என்ற பயத்தால்தானே.

உனது மதம் பயத்திலிருந்து தோன்றியது. இதனால் அது அதர்மமாகி விட்டது. இந்த விஷத்திலிருந்து அமுதம் தோன்றாது. பயத்திலிருந்து தோன்றுவது உலகம். அதைக் கடவுள், சுவர்க்கம் என்று எந்தப் பெயரில் வேண்டுமானாலும் அழைத்துக்கொள். பயத்தின் மூலம் மோட்சம் எப்படிக் கிடைக்கும்? அது ஆற்றுமணலிலிருந்து எண்ணெய் பிழிய முயல்வதற்கு ஒப்பாகும். அது நடக்காத காரியம்.

பயமின்மையிலிருந்து (அபயம்) மோட்சம் கிடைக்கிறது. மோட்ச பயம் என்றால் என்ன? அஷ்டாவக்கிரர் ஜனகரிடம், "உமது ஆழ்மனத்தில் எங்காவது மோட்ச பயம் உள்ளதா என ஆராய்ந்து பாரும்," என்று ஏன் கூறுகிறார்?

மோட்ச பயம் என்பது மகாம்ருத்யு (மாமரணம்) என்ற பயமாகும். சாதாரணச் சாவிற்கும் அப்பாற்பட்ட முழுமையான சாவு மோட்சமாகும். நீ மோட்சமடைந்தாய் என்பதன் பொருள் நீ முழுமையாக அழிந்து போனாய் என்பதே. அதன்பின் மிஞ்சியிருப்பதே மோட்சம். சாதாரணச் சாவில் உடல்தான் இழக்கப்படுகிறது. அஹங்காரம், இதுவரை வாழ்ந்ததன் பாவ – புண்ணிய பலன்கள் அழிவதில்லை. மனம் நீடிக்கிறது. உடல் மட்டும் மாறுகிறது. அணியும் ஆடைகள் மாறுகின்றன. பழைய, நைந்துபோன துணிகள் தூக்கி எறியப்படுகின்றன. புதிய ஆடைகள் கிடைக்கின்றன. ஆனால் மோட்சத்தில் உடல், பழக்கங்கள், தன்னுணர்வு, மமதை மனம், நீ அறிந்தவை, நீ அனுபவித்தவை எல்லாம் நீங்கி விடுகின்றன. நீயும் போய் விடுவாய். முழுமையாகக் காணாமல் போய்விடுவாய். நீ இல்லாத நிலையில், நீ எதிரில் பிரசன்னமாகாத நிலையில் மிஞ்சுகின்ற சூன்யமே மோட்சம் என்பது. அதுவே பரமாத்மா. அதுவே சத்தியம். ஒளி வந்தால் இருட்டு சென்று விடுவதைப்போல் நீ மறைந்துபோவாய். மோட்சம் வந்தால் நீ மிஞ்சமாட்டாய். மோட்சம் என்பது மாமரணம்.

உபநிஷத நோக்கில் குருவும் மகாமரணம். ஏனெனில் குருவின் மூலமாக நாம் மேற்கொள்ளும் பயணம் மோட்சத்தை நோக்கியே உள்ளது. குருதான் சாகும் கலையைக் கற்றுத் தருகிறார்!

அஷ்டாவக்ரரின் சூத்திரப்படி, மோட்சத்திற்கு ஆசைப்படுபவர்களும்கூட மோட்சமென்றால் அஞ்சுகிறார்கள். அவர் சொல்கிறார், "ஜனகரே, சற்று ஆழ்ந்து கவனியுங்கள். உமது உள்ளத்திலும் அந்த பயத்தின் ரேகையாவது உள்ளதா என்று பாருங்கள். பயம் அணுவளவேனும் இருந்தால் இந்த மோட்சப் பேச்சுகள் எல்லாம் வீண். அவை அர்த்தமற்ற உளறல்கள். அவற்றில் சாரமில்லை.

"உம்முடைய எல்லா ஒலிகளும் அடங்கிப் போனபின்பே மோட்சத்தின் ஒலி உம் உள்ளே எழும்புகிறது. உம் குரல் மறைந்து போன பின்பே அந்த மகா சங்கீதத்தில் நனையும் நேரம் வருகிறது. நீர் சிம்மாசனத்தை காலி செய்க. அரச இருக்கையில் உட்கார்ந்தபடி மோட்சம் பெற முடியாது. நீர் என்னும் தனித்தன்மை இருக்கும்வரை மோட்சம் கிடையாது. நீர் இல்லாமல் போனால், அழிந்தால், உம்மை இழந்தால் – மோட்சம்தான். எப்போதும் மோட்சம் இருந்து

கொண்டேதான் உள்ளது. நீர் இருந்த காரணத்தால் அது தென்படவில்லை. நீர் மறைப்பாக, திரையாக இருக்கிறீர். நீர்தான் தடை, நீர்தான் முட்டுக்கட்டை."

நான்தான் என் மோட்சத்தைத் தடுக்கும் நோய் என்பதை உணர்வதுதான் மோட்சத்தின் அர்த்தமாகும். மோட்சம் என்பது உனது முக்தியன்று; உன்னிடமிருந்து விடுதலை பெறுவதாகும். 'நான்தான் நோய். நான்தான் மொத்த நோய்க்கும் ஆதாரம். சரி, இப்போது அந்த ஆதாரத்தைக் கைவிடுகிறேன். நான் இனி இல்லாமல் போவதற்கான ஏற்பாட்டை ஆரம்பிப்பேன். இப்போது இறந்துபோக சம்மதிக்கிறேன். மீண்டும் – மீண்டும் பிறந்து எல்லாம் பார்த்தாகி விட்டது. எதுவும் கிடைக்கவில்லை. இழந்ததுதான் மிச்சம். எத்தனையோ பிறவிகள் எடுத்ததால் மோட்ச முயற்சி தாமதித்து விட்டது. ஒவ்வொரு பிறவியும் தோல்வியில் முடிந்தது. அடுத்ததாக, இனி நீ இல்லாமல் போய்விடு. மோட்சத்தின் அர்த்தம் இதுதான். இருந்து பார்த்தோம்; தோல்வியடைந்தோம். இல்லாது போவோம்; என்ன நடக்கிறதெனப் பார்ப்போம்.' – இதுதான் மோட்சத்தின் அர்த்தம்.

அஷ்டாவக்ரர் கேட்கிறார்: 'ஜனகரே, உமது மனத்தில் மோட்சம் குறித்து பயம் ஏதும் உண்டா? உமக்குப் பெரிய ஆச்சரியமான விஷயம் சொல்கிறேன். மோட்சத்திற்கு ஆசைப்படுபவனும் சாவதற்கு பயப்படுகிறான். சாகாமல் மோட்சம் எப்படி சாத்தியப்படும்? மோட்சம் என்பது மாமரணமாயிற்றே.

**மு**ல்லா நஸ்ருத்தீனும் அவர் மனைவியும் சாப்பிட்டுக் கொண்டிருந்தபோது ரேடியோவில் மல்லாரி ராகம் இசைக்கப் படுவதைக் கேட்டார்கள். முல்லா, "எவ்வளவு அருமையாக உள்ளது!" என்று பாராட்டினார். "எது?" என்று மனைவி சத்தமாகக் கேட்டாள். அதைவிடச் சத்தமாக முல்லா, "எவ்வளவு அருமையாக உள்ளது என்று சொன்னேன்," என்றார்.

மனைவி சிடுசிடுத்தாள். "முதலில் இந்த ரேடியோவை நிறுத்துங்கள். நீங்கள் பேசுவது காதில் விழட்டும். ரேடியோவின் புலம்பல் சப்தத்தில் நீங்கள் பேசுவது காதில் விழுந்தால்தானே," என்றாள்.

முல்லா பாராட்டிய மல்லாரி ராகத்தை அவர் மனைவி புலம்பல் என்று விமரிசிக்கிறாள்! மோட்சத்திற்கும் ஒரு ராகமுண்டு. ஒருவருக்கு அது மல்லாரி ராகம்போல் இருக்கலாம். இன்னொருவருக்கு அதுவே 'ஆஆஆ...' என்று கத்தலாகத் தோன்றலாம். பயந்தவர்கள் அதை வீண் அலறல் என்று நினைப்பார்கள். அவர்கள் வீண் அலறலை அர்த்தமுள்ளதாகவும், அர்த்தம் பொதிந்ததை வெற்றொலியாகவும் நினைப்பவர்கள். அவர்கள் தலைகீழாக நிற்கிறார்கள்; சிரசாசனம் செய்கிறார்கள். வெற்றொலி அல்ல எனச் சரியாகப் புரிந்து கொண்டவர்கள் அதை உடனே மல்லாரி ராகம்போல் மோட்ச ஒலி என்றும் வாழ்க்கையின் மகாசங்கீதம், பேரிசை, என்றும் அறிந்து கொள்வார்கள்.

நீ வாழ்க்கையில் தெரிந்து கொள்ள வேண்டிய ஒரே விஷயம் வாழ்க்கை சாரமற்றது என்பதுதான். ஓடு, குதி, ஆர்ப்பாட்டம் செய், கடுமையாக உழை — கையில் எதுவும் வசப்படுவதில்லை. இது பெரிய ஆச்சரியம். அப்படியும் நீ இறக்க விரும்புவதில்லை; அழிய விரும்புவதில்லை. 'எப்பொழுதும் நான் உயிருடன் இருக்க ஏதாவது உபாயம் சொல்லுங்கள்' என்கிறாய். என்றும் உயிர் வாழ்ந்து நீ எதை சாதிக்கப் போகிறாய்?

**சி**கந்தர் (அலெக்ஸாண்டர்) கிழக்கு நாடுகளை வெல்லக் கிளம்பியபோது அவரது அவையிலிருந்த ஒரு ஞானி அவரிடம், "நீங்கள் கிழக்காகச் செல்கிறீர்கள. வழியில் பாலைவனத்தில் ஒரு நீர்வீழ்ச்சி உள்ளதாம். அதன் நீரைப் பருகுபவன் அமரவாழ்வு பெற்று விடுவான். போகும் வழியில் அதையும் தேடுங்கள். ஒருவேளை உங்கள் கண்ணில் தட்டுப்படலாம். இது கதையாக இல்லாமல் உண்மையாக இருக்கலாம்," என்று தெரிவித்தார்.

சிகந்தரும் தன் படைவீரர்களுக்கு இது சம்பந்தமாக எச்சரிக்கை கொடுத்தார். அந்த நீர்விழ்ச்சி குறித்து ஏதேனும் செய்தியோ, வதந்தியோ கேள்விப்பட்டால் உடனே தனக்குத் தெரிவிக்கச் சொன்னார். ஒருநாள் செய்தி கிடைத்தது. ஒரு குகையில் அந்த நீர்வீழ்ச்சி உள்ளதாகத் தகவல் கிடைத்தது. படையை பின்னால் நிறுத்திவிட்டு, மெய்க்காப்பாளர்களையும் விலக்கிவிட்டு சிகந்தர் குகை உள்ளே

சென்றார். நீர்வீழ்ச்சியைக் கண்டு ஆனந்தமுற்றார். 'இதோ இந்தத் தண்ணீரைப் பருகி என்றும் சாகாதவன் ஆகப்போகிறேன்' என்று தனக்குள் கூறிக்கொண்டார். உள்ளங்கையில் அந்த நீரைப் பிடித்து ஏந்திக் கொண்டார். அருகில் ஒரு பாறையில் உட்கார்ந்திருந்த ஒரு காகம் "அதைக் குடிக்காதே" என்று கத்தியது. காக்கை பேசுகிறதே என்று சிகந்தர் அதிர்ச்சியடைந்தார். காகம் தொடர்ந்தது: "பயப்படாதே. நீ அந்தத் தண்ணீரைக் குடிப்பதற்கு முன்னால் நான் சொல்வதைக் கேட்டுக் கொள். ஏனென்றால் நான் அதைக் குடித்துப் பெரிய சிக்கலில் மாட்டிக் கொண்டு தவிக்கிறேன்." சிகந்தர் அது என்ன சிக்கல் என்று விசாரித்தார். காகம் விளக்கியது:

"நானும் மிகவும் தேடி அலைந்து இந்த நீர்வீழ்ச்சியைக் கண்டுபிடித்தேன். நீ மனிதர்களின் அரசன் என்பதுபோல் நான் காக்கை ராஜா. நான் சாதாரணக் காக்கையில்லை, அரச காக்கை என்பதால் நாமிருவரும் சமம். நான் ஆயிரம் காக்கைகளை இங்குமங்கும் அனுப்பி இந்த நீர்வீழ்ச்சி உள்ள இடம் கண்டுபிடிக்கச் சொன்னேன். இடம் தெரிந்ததும் இங்கு வந்து தண்ணீரைக் குடித்தும் விட்டேன். அப்படித்தான் நான் சிக்கிக் கொண்டேன். நான் இறக்க விரும்புகிறேன். ஆனால் பல நூறாண்டுகளாக உயிருடன் உள்ளேன். இறக்க முடியவில்லை. பாறையில் தலையை மோதிப் பார்த்தேன். விஷம் குடித்தேன். கழுத்தில் கயிறு கட்டிக் கொண்டு தூக்கில் தொங்கிப் பார்த்தேன். ஆனால் நான் சாக ஒரு உபாயமும் கிடைக்கவில்லை. இந்தத் தண்ணீர் அவ்வளவு அபாயமானது, சிகந்தர்."

"ஆனால் நீ ஏன் இறக்க விரும்புகிறாய்?" — சிகந்தர் வினவினார்.

"இறக்க விரும்பாமல் வேறென்ன செய்வது? தினமும் உணர்ச்சிக் கொந்தளிப்புகள், ஒரேமாதிரித் தொந்தரவுகள் எவ்வளவு காலம்தான் இவற்றையே அனுபவிப்பது? இதனால் எதுவும் கிடைக்க வில்லை. இறப்பவர்களைக் கண்டால் எனக்குப் பொறாமையாக உள்ளது. ஏனெனில் அவர்களுக்கு அமைதி கிடைத்து விடுகிறது. தற்சமயம் என்னைவிட அமைதியில்லாத ஜந்து வேறெதுவும் இருக்க முடியாது. நான் இவ்வளவு சொன்ன பிறகு இந்த நீரை நீ குடிக்க விரும்பினால் உன் இஷ்டம்," என்று முடித்தது காக்கை.

இதைக் கேட்டதும் சிகந்தர் கையிலிருந்த தண்ணீரை உதறிவிட்டார். படிகளில் இறங்கிக் குகையைவிட்டு வெளியேறி விட்டார். இக்கதை உண்மையோ, பொய்யோ, அர்த்தம் நிறைந்துள்ளது. நீ யோசித்துப் பாரேன், என்றும் நீ இறக்க மாட்டாய் என்றால் அந்த நீண்ட வாழ்க்கையில் நீ என்ன செய்வாய் வழக்கமான அறுபது—எழுபது வயது வரையிலான வாழ்க்கையை நீ ஓட்டிவிடலாம். இது ஒன்றும் நீண்ட வாழ்க்கையில்லை. எழுபது வயது வரை வாழும் மனிதன் சுமார் 25 ஆண்டுகள் தூக்கத்திலேயே கழித்து விடுகிறான். பள்ளிக்கூடம் முதலியவற்றில் படிப்பில் 15–20 ஆண்டுகள் செலவழிந்து விடுகின்றன. சுயநினைவில்லாத வாழ்க்கைக் காலம் அது. மீதி 20–25 ஆண்டுகள் அலுவலகம், தொழிற்சாலை, கடை, வேலை, மனைவி, குழந்தைகள் என்றெல்லாம் நூற்றக் கணக்கில் தொந்தரவுகள். கோயில்களில் வழிபடல், சடங்குகள் ஆகியவற்றையும் சேர்த்துக் கொள்ளலாம். எழுபது ஆண்டு ஆயுளில் உனதென்று உன் கையில் மிஞ்சுவது எவ்வளவு?

வாழ்க்கை வீணானது என்று நினைப்பவன் அமரத் தன்மைக்கு ஆசைப்படுவதில்லை. அவன் சொல்லுவான்: 'இறைவா! எனக்கு மகாமரணம் கிடைக்கட்டும். திரும்பவும் பிறக்கத் தேவையில்லாத சாவாக அது அமையட்டும்.' இதைத்தான் பிறப்பு – இறப்பிலிருந்து விடுதலை என்கிறார்கள். இதுதான் கிழக்கத்திய நாடுகளின் சிறப்பான கண்டுபிடிப்பும் பொக்கிஷமும் ஆகும். மேற்கத்திய நாடுகளுக்கு இவ்வளவு முதிர்ச்சி இல்லை. அந்நாடுகள் இன்னும் பொருள்மய வாழ்க்கையில் சலிப்படையவில்லை. கிழக்கு நாடுகள் மிகவும் தொன்மையானவை, முதிர்ந்தவை. அவை பொருள்மயமான வாழ்க்கையில் சலிப்படைந்து விட்டன. இது மேற்கத்திய சிந்தனை யாளர்களுக்கு புரிவதில்லை. புத்தர், மகாவீரர், பதஞ்சலி, அஷ்டாவக்ரர், லாவோத்சூ ஆகிய ஞானியர்கள் ஒரே குரலில் எப்படி விடுதலை பெறுவது என்றே கேட்கின்றனர். வாழ்க்கையிலிருந்து விடுதலையா என்று மேற்கத்திய அறிஞர்கள் திகைக்கின்றனர். வாழ்க்கையை, ஆயுளை, நீட்டிக்க அல்லவா வேண்டும். அதற்காகப் புதிய மருந்துகள், புதிய உபாயங்களை ஆராய்ந்து கண்டுபிடிக்க வேண்டும். மனிதன் நீண்டநாள் வாழவேண்டும். அருமையாக வாழவேண்டும் – இவ்வாறு நினைக்கின்ற மேல்நாட்டு அறிஞர்கள், கீழ்திசை

அறிஞர்களுக்கு புத்தி பேதலித்து விட்டதா, பிறப்பு — இறப்பிலிருந்து விடுதலை கேட்கிறார்களே என்று வியக்கிறார்கள்.

மேல்நாடுகளுக்கு வாழ்க்கை அனுபவம் போதாது. கிழக்கத்திய நாடுகள் வாழ்க்கை குறித்து நீண்ட அனுபவம் பெற்றுள்ளன. அதன் அடிப்படையில் வாழ்க்கை முழுமையாக சாரமற்றது; நீர்க்குமிழி போன்றது; நொடியில் நொறுங்கக் கூடியது; உள்ளே வெறுமையானது; உடைந்தால் சூன்யம்தான் மிஞ்சும். வெங்காயம்போல் உரித்துக் கொண்டே செல்கையில் மேலும் மேலும் தோல்கள் கிளம்புகின்றன. கடைசியில், கையில் ஒன்றும் மிஞ்சுவதில்லை. எவ்வளவுதான் ஓடினாலும் துள்ளினாலும் எங்கும் போய்ச்சேர மாட்டாய். இருக்குமிடத்தில் இறந்துபோவாய். ஒருவன் 30 ஆண்டுகள், இன்னொருவன் 50 ஆண்டுகள், வேறொருவன் 60 ஆண்டுகள் நடந்தான். எங்காவது போய்ச் சேர்ந்தானா? ஏதாவது முகாம் கிடைத்ததா? முடிவடையாமல் பாதை நீண்டு கொண்டே சென்றது. அலைச்சலுக்கு முடிவில்லை. ஆகவே திருப்தி பெற முடியவில்லை. அதிருப்திதான் பல மடங்காக வளர்ந்து கொண்டே சென்றது. ஏனெனில் மனநிறைவு என்பது உலகில் சாத்தியமில்லை.

பிறப்பு—இறப்பிலிருந்து விடுபட விரும்புவதே மோட்சமென்பது. அஷ்டாவக்ரர் கூறுகிறார்: "சற்று கவனித்துப் பார். பூதக் கண்ணாடி வைத்து வேண்டுமானாலும் ஆராய்ந்து பார். சாவதற்குத் துளிக்கூட பயமே இல்லையா? பயம் எஞ்சியிருந்தால் நீ பேசும் தத்துவப் பேச்செல்லாம் வெறும் ஓசை மட்டுமே. பயமின்மை உயிரினுள் இறங்கியிருந்தால் சாவதில் உனக்கு ஆட்சேபணை இருக்க முடியாது. மகாமரணத்திற்கு நீ தயாராக இருக்க வேண்டும். மகிழ்ச்சியுடன் நடனடிமாடியபடி சாவை நீ வரவேற்கச் செல்ல வேண்டும்.

இவ்வாறு ஆடிப்பாடி மரணத்தை வரவேற்பவன்தான் வாழ்க்கையைச் சரியாக அறிந்து கொண்டவனாக இருப்பான். பயந்து கொண்டே நடுக்கத்துடன் சாவை நோக்கிச் செல்பவர்கள் வாழ்க்கையை அறிந்திருக்கவில்லை; அடையாளம் கண்டுகொள்ள வில்லை. ஆகவே சாவின் அர்த்தமும் அவர்களுக்குத் தெரியாது. சாவு என்பது விடுதலை, முழு ஓய்வு. இறக்கும் தறுவாயில் உனக்கு மீண்டும் பிறக்க வேண்டும் அல்லது மேலும் சில காலம் வாழ வேண்டும் என்ற

ஆசை இருந்தால் நீ மீண்டும் வரத்தான் போகிறாய். உன் விருப்பம் உன்னை மீண்டும் இங்கே இழுத்து வந்துவிடும். விருப்பமென்னும் மெல்லிய நூல் உன்னை யாருடைய கர்ப்பத்திலாவது கட்டிப்போடும். இறக்கும் சமயம் எவனொருவன் 'நான் போகிறேன், ஒருபொழுதும் திரும்பிவர மாட்டேன். இது ஆச்சரியமான விஷயம்' என்கிறானோ அவன் அதிர்ஷ்டம் செய்தவன்.

புத்தர் இத்தகையவனை 'அனாகாமின்' (திரும்பாதவன்) என்கிறார். இறக்கும் வேளையில் முழுமையாக இறப்பவர்கள், யாத்திரை முடிந்துபோனது என்று சொல்பவர்கள், அர்த்தமற்ற ஓட்டமும் ஆர்ப்பாட்டமும் முடிந்துவிட்டது என்பவர்கள், மேற்கொண்டு கனவு காண வேண்டியதில்லை என்பவர்கள் பாராட்டிற்குரியவர்கள்.

**தீரஸ்து போஜ்யமானோஅபி பீட்யமானோஅபி ஸர்வதா |**
**ஆத்மானம் கேவலம் பஸ்யன் ந துஷ்யதி ந குப்யதி ||**

தீரமான மனிதன் அனுபவித்துக் கொண்டும் அவஸ்தைபட்டுக் கொண்டும் இருந்தாலும் எப்பொழுதும் ஆத்மாவை மட்டும் தரிசித்துக் கொண்டிருப்பான். அவன் களிப்பதும் இல்லை, கோபிப்பதும் இல்லை.

அஷ்டாவக்ரர் சொல்கிறார்: "ஜனகரே, கவனியுங்கள், ஞானம் கைவரப் பெற்றவன், தீரமான மனிதன், களிப்போ, கோபமோ அடைவதில்லை. நஷ்டமா, வருத்தம் இல்லை; லாபமா, கூத்தாடவில்லை; கௌரவமா, மகிழ்ச்சியில்லை; அவமதிப்பா, சினமில்லை. ஆழ்ந்து யோசித்துப் பாருங்கள். மேற்கண்ட நிலைகளில் நீர் எப்படி நடந்துகொள்வீர்? நீர் வாழ்க்கையில் தோற்றால், அரசராகிய நீர் ஆண்டியானால், உமது உள்ளம் சலனப்படுமா? ஒரு ரேகை அளவுகூட உமது உள்ளம் தடுமாறுமானால், ஞானம் கிடைத்து விட்டதாக அவசரப்பட்டு அறிவிக்க வேண்டாம். பொருத்தமற்ற அறிவிப்பு ஆபத்தானதும்கூட. ஏன் நீரே காலப்போக்கில் அது உண்மைதான் என நம்பி விடுவீர்கள். பிறகு சத்யம் ஒரு காலத்திலும் உமக்கு வசப்படாது."

நீ தவறாக ஞானம் பெற்றுவிட்டதாக பிரமைகொள்ளக் கூடாது என்று குரு எப்பொழுதும் முயலுகிறார். அவரது இந்த முயற்சி கட்டாயமான ஒன்று; கருணையும் நிறைந்தது. ஏனெனில் நமது மனம் அவசரக்குடுக்கை. எதையும் சீக்கிரம் ஒப்புக் கொண்டுவிடும். அதுவும் கஷ்டப்படாமல் ஒன்று கிடைக்கிறது என்றால் மனம் அதை

நம்பிவிடும். இந்த விஷயத்தில் பதஞ்சலியும் அஷ்டாவக்ரரும் வேறுபடுகிறார்கள். பதஞ்சலி சீடர்களைப் பரிசோதித்ததில்லை. அஷ்டாவக்ரர் கடுமையாக பரீட்சிப்பார்.

பதஞ்சலி மனிதனை மெதுவாக, அங்குலம்—அங்குலமாக. உயர்த்தி முன்னேற்றுபவர். சாதாரண மனிதனால் எந்த அளவிற்கு முடியுமோ அதற்கேற்பவே அவனை முன்னேற்றுகிறார். தாவிக் கடத்தல் பதஞ்சலி முறையில் கிடையாது. அம்முறையில் ஒவ்வொரு படியாகத்தான் ஏற வேண்டும். எந்தப் படிவரை ஏறமுடிகிறதோ அதுதான் முயலுபவரின் எல்லை. ஆகவே பதஞ்சலி பரீட்சித்துப் பார்ப்பதில்லை.

ஆனால் அஷ்டாவக்ரர் பரீட்சிக்கிறார். அதற்கான வழிமுறை மேற்கொள்ளுகிறார். அவரது கண்ணோட்டப்படி, பூரண ஞான நிலையை அடையப் படிவரிசை கிடையாது. திடீரென ஒருநொடியில், இந்த நொடியிலேயே விடுதலை, முக்தி, பெற்றுவிட முடியும் என்கிறார். ஆனால் வேண்டுமென்றே எவனாவது கிறுக்குத்தனமாக தனக்கு ஞானம் கிடைத்து விட்டது என அறிவிக்கலாம். அப்படிப்பட்டவனை வெளியே இழுத்து உரிய இடத்தில் நிறுத்துவதும் குருவின் வேலை.

**சேஷ்டமானம் ஸரீரம் ஸ்வம் பஸ்யத்யன்யஸரீரவத் |**
**ஸன்ஸ்தவே சாபி நிந்தாயாம் கதம் க்ஷுப்யேத் மஹாஷய: ||**

எவன் தனது இயக்கம் நிறைந்த உடலை இன்னொருவனின் உடல்போல் கருதுகிறானோ, அவன் பாராட்டாலோ, நிந்தையாலோ பாதிக்கப்பட மாட்டான்.

எவன் தனது உடலை இன்னொருவனின் உடல்போல் கருதுகிறானோ, தனது உடலைக்கூட தனக்குச் சொந்தமென நினைக்கவில்லையோ, மற்றவரின் உடலிலிருந்து நம் உடல் படாமல் நிற்பதுபோல் எவன் தன் உடலை வேறாகப் பார்க்கிறானோ, இன்னொருவர் உடலில் அடிபட்டால் நம் உடலைப் பாதிக்காததுபோல், தன் உடலுக்குக் கெடுதல் நேர்ந்தால் எவன் பாதிப்படைவதில்லையோ, அவன் புகழாலும் பழியாலும் சலனப்படுவதில்லை.

சுலோகத்தில் வரும் 'மகாஷய' என்னும் சொல் சிறப்பானது. 'ஆஷய' எனில் அபிப்பிராயம், எண்ணம், லட்சியம் என்று பொருள்.

'மகாஷய' என்பவர் உயர்ந்த சிந்தனை கொண்டிருப்பார். உடல், மனம், தொழில் ஆகிய சராசரி விஷயங்கள் பற்றி நினைத்துக் கொண்டிராமல் அவர் தம்முடைய அனைத்து எதிர்பார்ப்புகளையும் இறைவனின் திருவடிகளில் சமர்ப்பித்திருப்பார்.

அன்றாட வாழ்க்கையிலும் மக்கள் இச்சொல்லை ஐயா என்ற பொருளில் சாதாரணமாக (வடஇந்தியாவில்) பயன்படுத்துகிறார்கள். இதற்கு நாம் நல்ல அர்த்தம் எடுத்துக் கொள்ளலாம். மகாஷய் வந்திருக்கிறார் எனில் நம்மைச் சந்திக்க நல்ல எண்ணத்துடன் ஒருவர் வந்துள்ளார், இறைவனின் தூண்டுதலால் வந்துள்ளார் என்று அர்த்தம் செய்யலாம். ஆகவே நாம் அதிதியை, விருந்தாளியை, தேவதை என்கிறோம். அதிதி வந்துள்ளார் எனில் கடவுள் வந்துள்ளார் என்று உத்தம குணம் படைத்தவர்கள் நினைப்பார்கள். வந்துள்ளவர் யாராயினும், திருடனாயினும், அவர் மகாஷய்தான். ஏதோ உயர்வான சிந்தனையுடன்தான் வந்திருப்பார்.

அஷ்டாவக்ரர் சொல்கிறார், "உயர்ந்த சிந்தனை உடையவன் (மஹாஷய) புகழ்ச்சி—பழி இரண்டாலும் சலனமடைய மாட்டான். ஜனகரே, உம்மைப் புகழ்ந்தால் மகிழ்வீரா?"

மகிழ்ச்சி அடைவதும் மனச்சலனத்தின் ஒருவகைதான். அப்போது அலைகள் போல் உணர்ச்சிகள் எழும்பிக் கிளர்ச்சி உண்டாகிறது. சுகம், துக்கம், களிப்பு, கோபம் முதலிய எல்லாமே கிளர்ச்சி ஏற்படுத்துகின்றன. மனம் உணர்ச்சி அலைகளால் நிரம்பித் தடுமாறுகிறோம். சுகம்—துக்கம் இரண்டையும் கடந்தால் குழப்பத் தையும் கடந்தவர்களாவோம். அந்த நிலையில் யாரும் நம்மைச் சலனப்படுத்த முடியாது.

"ஜனகரே, உம்மை யாராவது அவமதித்தால் சலனமடைவீரா? புகழ்ந்தால் தடுமாறுவீரா? புகழ்—பழி போன்ற சூழ்நிலைகளில் உம்மிடம் ஏதேனும் மாற்றம் தெரியுமா? நீர் சலனமடைவீர் எனில் ஞானம் பற்றி நீர் சொல்வதெல்லாம் சுயமானவை அல்ல. நான் சொன்னதையே நீர் திருப்பிச் சொல்வதாகிவிடும். சத்தியத்தை பிறர் சொன்னதை வைத்துச் சொல்லக் கூடாது. அனுபவத்தில் அறிந்து கூற வேண்டும்.

**மாயாமாத்ரமிதம் விஸ்வம் பஸ்யன் விகதகௌதுக: |**
**அபி ஸன்னிஹிதே ம்ருத்யௌ கதம் த்ரஸ்யதி தீரதீ: ||**

எவன் இந்த உலகை மாயையாக மட்டுமே பார்க்கிறானோ, குதூகலப்படும் அல்லது ஆர்வத்துடன் எதையும் ஆராயும் நிலையைக் கடந்துவிட்டானோ, அவன் மரணத்திடம் ஏன் பயப்படப் போகிறான்?

அவனது ஆர்வம், குதூகலம், பரபரப்பு, அறியாமை ஆகிய எல்லாம் நீங்கியிருக்கும். அவன் கேள்வி கேட்டுத் தெரிந்து கொள்ள வேண்டிய விஷயம் மிஞ்சியிருக்காது. அவனுடைய கேள்விகளின் பயணம் முடிந்துவிட்டது. அவனுடைய கேள்விகள் எல்லாம் பதில் பெற்று வீழ்ந்து போயின.

எவன் மனத்தில் கேள்வி எதுவும் பாக்கி இல்லையோ, எவன் உலகை மாயை எனப் பார்க்கிறானோ, ஆராயும் ஆர்வத்தைக் கைவிட்டானோ, அத்தகையவன் மரணம் நெருங்குவது கண்டு பயப்படவா போகிறான்?

சாவு நெருங்கி விட்டது. உன் வீட்டு வாசல் கதவைத் தட்டுகிறது. எருமைகளின் மீது சவாரி செய்தபடி யமதூதர்கள் அணுகிவிட்டனர். நீ அவர்களை வரவேற்று அவர்களுடன் செல்ல தயாராகி விடுவாயா அல்லது உனது மனம் தயங்குமா? கொஞ்சமாவது தயங்கினால் வாழ்வில் இன்னும் நப்பாசை உள்ளதென்றும், உனது சிரத்தை முழுமையானதன்று என்றும் பொருள். இன்னும் நீ முயல வேண்டியுள்ளது, இன்னும் அக்ப்புரட்சி ஏற்பட்டு விடவில்லை என்று பொருள். நீ பெற்ற அறிவெல்லாம் புத்தியின் வழி வந்ததேயன்றி உயிரினால் அதை நீ புரிந்துகொள்ள வில்லை. உன் அறிவு மேலோட்டமானது. உள்ளத்தில் ஞான தீபம் ஏற்றப்படவில்லை.

**நிஸ்ப்ருகம் மானஸம் யஸ்ய நைராஸ்யேऽபி மஹாத்மன: |**
**தஸ்யாத்ம ஞானத்ருப்தஸ்ய துலனா கேன ஜாயதே ||**

எந்த மகாத்மாவின் மனது மோட்சத்திலும் ஆசை கொள்ள வில்லையோ, தான் பெற்ற ஆத்மஞானத்தால் மட்டுமே திருப்தி அடைந்து விடுகிறதோ, அவருடன் சமமாக யாரை ஒப்பிட முடியும்? அவர் ஆசைகளை எல்லை மீறிக் கடந்து மோட்ச ஆசைகூட இல்லாதவராகி விடுகிறார். மோட்சம் என்பது இருந்தாலென்ன,

இல்லாவிட்டாலென்ன என்று நினைப்பது ஆசையின்மையின் இறுதி நிலை. மோட்ச ஆசைகூட நீங்கிவிட்டதும் மோட்சம் கிடைத்து விடுகிறது! ஆசைப்படாதது கிடைத்துவிடுவது விசித்திரமான முரண்பாடு.

ஒரு சூஃபி துறவி டமாஸ்கசில் வாழ்ந்து வந்தார். துறவறத்திற்கு முன் பெரும் பணக்காரராக இருந்தார். டமாஸ்கசில் உலகப் புகழ் பெற்ற மசூதி உள்ளது. அந்தத் துறவி பூர்வாசிரமத்தில் இந்த மசூதிக்குப் பொறுப்பாளர் ஆக விரும்பினார். அது தனது ஆதிக்கத்தின் கீழ் இருக்க வேண்டுமென்று நினைத்தார். அது மிகப் பெரிய கௌரவமாகக் கருதப்பட்டது. டமாஸ்கசில் அந்த மசூதிக்குப் பொறுப்பாளர் பதவி தான் அனைத்திலும் முதன்மையான பதவி. அந்தத் துறவியிடம் முன்பு செல்வம் குவிந்திருந்ததால் வேலைக்குப் போகவேண்டிய அவசியம் ஏற்படவில்லை. ஆகவே காலையில் மசூதியில் நுழைகின்ற முதல் ஆளாக அவர்தான் இருப்பார். மாலையில் கடைசியாக அவர்தான் வெளியேறுவார். நாள் முழுதும் அவர் மசூதியில் நமாஸ் (தொழுகை) செய்வார். இவ்வளவு முனைப்பாக அவர் பல மணி நேரம் தொழுகை செய்வதைப் பார்த்தால், மக்கள் அவரைக் கூடிய சீக்கிரம் தலைசிறந்த வழிபாட்டாளர் என்று கருதி, வேறு யாரையும்விட அவரே மசூதியின் பொறுப்பாளராக இருக்கட்டும் என்று தீர்மானிப்பார்கள். இதுதான் அவரது தொழுகையின் ரகசியம்.

உண்மையில் அவருக்குத் தொழுகையில் லயிப்பு இல்லை. தான் நாள் முழுதும் தொழுவதை மக்கள் பார்க்க வேண்டும் என்பது மட்டுமே அவரது குறிக்கோள். ஜனங்களும் பார்க்கத்தான் செய்தார்கள். மாதங்களாயின. ஓர் ஆண்டு முடியும் நிலை. எந்தப் பலனும் ஏற்படவில்லை. கடவுளிடம் முறையிடலாம் என்றால் அவர் இதுவரை செய்த தொழுகை போலியாயிற்றே. வெளிவேஷமாயிற்றே. ஓராண்டு முடிவடைந்தது.

அவர் யோசிக்கலானார். 'நான் ஓராண்டாகக் கடைப்பிடிக்கும் தீவிரத் தொழுகையை ஊர் மக்கள் அறியவில்லையா? ஒருத்தர்கூட என்னிடம் வந்து என்னை மசூதியின் பொறுப்பாளராகும்படி கேட்டுக் கொள்ளவில்லையே. நான் மேற்கொண்டது வீண் முயற்சி' என்று அங்கலாய்த்தபடி அவர் கடவுளை நினைத்து வீட்டிலேயே

உண்மையாக பிரார்த்தனை செய்தார். 'இறைவா, என்னை மன்னித்து விடு. நான் வீணான முயற்சியில் ஓராண்டை இழந்து விட்டேன். இந்த ஓராண்டில் உன்னை அடைய வேண்டுமென வழிபட்டிருந்தால் உன் தரிசனம் ஒருவேளை கிடைத்திருக்கும். ஆனால் இந்த முட்டாள் களிடம் கொஞ்சம்கூட புத்திசாலித்தனம் இல்லை. ஆனால் இவர்களை நம்பிய நானும் முட்டாள்தான். என்னை மன்னித்துவிடு' என்று உருகினார்.

பிரார்த்தனையை முடித்தபோது வாசலில் சப்தம் கேட்டு வெளியே வந்தார். ஊர் மக்கள் திரண்டிருந்தனர். என்ன விஷயம் என்று அவர் விசாரித்தபோது மக்கள் அவரிடம், "ஒரு வருஷமாக உங்களை நாங்கள் மசூதியில் கவனித்துக் கொண்டுதான் வருகிறோம். உங்களைவிட மேலான நமாஜியை (தொழுபவரை) நாங்கள் ஒருபோதும் பார்த்ததில்லை. எனவே நீங்கள்தான் நம் மசூதிக்குப் பொறுப்பாளராக இருக்க வேண்டும் என்று கேட்டுக் கொள்ளவே வந்துள்ளோம்," என்று தெரிவித்தனர்.

அவர் அசந்து போனார். 'இன்றுதான் நான் ஆசையைக் கைவிட்டேன். அது நிறைவேறுவதும் இன்றே வாய்த்திருக்கிறதே' என வியந்த அவர் சுதாரித்துக் கொண்டார். அவர் பதிலுக்கு, "நண்பர்களே, என்னை மன்னியுங்கள். நான் ஓராண்டாக இப்பதவிக்கு ஆசைப் பட்டபோது நீங்கள் எல்லாம் எங்கே போயிருந்தீர்கள்? இப்போது நான் ஆசையைத் துறந்துவிட்டதும் நீங்கள் வந்து நிற்கிறீர்கள். ஆசையைத் துறப்பதால் இத்துணை மகத்தான பலன் கிடைக்கு மெனில் இனிமேல் நான் எதற்கும் ஆசைப்பட மாட்டேன்," என்று கூறி உள்ளே சென்றுவிட்டார்.

அதுமட்டுமல்ல, அன்று ஏற்பட்ட ஞானோதயம் காரணமாக அவர் சொத்து, சுகத்தைக் கைவிட்டு ஆண்டியானார். 'காசில்லா முதலாளி' என்று புகழ்பெற்றார். பிறகு அவர் மோட்சத்திற்குக்கூட ஆசைப்படவில்லையாம். ஆசைப்படும் பழக்கத்தையே கைவிட்டார். அவர் இறந்தபின் ஒரு முதியவரின் கனவில் தோன்றினார். முதியவர் அவரிடம் சுவர்க்கத்தில் என்ன நடந்ததென விசாரித்தார்.

ஏனென்றால் காசில்லா முதலாளி மரித்த அன்று ஹஸன் என்ற புகழ்பெற்ற துறவியும் இறந்து போயிருந்தார். ஆகவே முதியவர்,

"நீங்கள் இருவரும் ஒன்றாக ஒரேசமயம் இறந்ததால் ஒன்றாகவே சுவர்க்க வாசலை அடைந்திருப்பீர்கள். உள்ளே செல்ல யாருக்கு முதலில் அனுமதி கிடைத்தது?" என்று வினவினார்.

காசில்லா முதலாளி சொன்னார்: "முதலில் நான்தான் உள்ளே செல்ல அனுமதிக்கப்பட்டேன். அது என்னை வியப்பிலாழ்த்தியது. நான் கடவுளிடம் காரணம் கேட்டேன். ஏனெனில் ஹஸன் என்னைவிட அறிவாளி, மகாஞானி. நானே அவரிடம் பாடம் கேட்கப் போனதுண்டு. கடவுள் சொன்னார், "ஆம், அந்த ஹஸன் பெரிய ஞானிதான். உன்னைவிட தியாகசீலன்தான். ஆனால் அவன் மனத்தில் மோட்ச ஆசை இருந்தது. உன் மனத்திலோ லவலேசமும் எதற்கும் ஆசையில்லை. ஆகவே நீதான் முதலில் நுழையும் உரிமை பெற்றவனாகிறாய்."

ஒருவன் மோட்ச விருப்பத்தைக் கைவிட்டான், மோட்சத்திற்குக் கூட ஆசைப்படவில்லை. ஆத்மஞானத்தால் திருப்தியடைகிறான். தன்னிலேயே நிறைவை உணர்கிறான் எதுவும் வேண்டும் என்று கேட்பதில்லை. 'நானாக இருப்பதே போதும் என்பதைவிட அதிகம்' என்று கூறுகிறான். இதைவிட வேறு என்ன தேவை என்று கேட்கிறான். 'நான் என்னை நன்றாக, முழுமையாக அறிந்து கொண்டதால் எனக்கு எல்லாம் கிடைத்து விட்டது' என்கிறான். அத்தகையவனுக்கு சமம் யாரும் இருக்க முடியாது. அவனை யாருடனும் ஒப்பிட முடியாது.

'ஆகவே ஜனகரே, உமது மனத்தில் மோட்ச ஆசை ஒட்டிக் கொண்டிருக்கிறதா? முக்தி அடைய வேண்டும் என்ற ஆசை தோன்றுவதில்லையா? உமக்கு ஆத்மஞானம் கிடைத்து விட்டதாகச் சொல்கிறீரே, அதில் பூரண திருப்தி அடைந்து விட்டீரா? இனி வேறெதுவும் உமக்குத் தேவையில்லையே? வேறெதுவும் கேட்க மாட்டீரல்லவா? கடவுள் உம்மெதிரே தோன்றி, 'உனக்கு என்ன வரம் வேண்டும்? நான் கொடுக்கத் தயாராக இருக்கிறேன்' என்று அறிவித்தால் நீர் எதுவும் வேண்டுமெனக் கேட்பீரா அல்லது, 'மிக்க நன்றி. நீங்கள் ஏற்கெனவே எனக்கு எல்லாமும் வழங்கியிருக்கிறீர்கள். ஆகவே எனக்கு எதுவுமே வேண்டாம்' என்று சொல்வீரா? தயங்காமல் சொல்வீரா? மனத்துள் சிறிதளவுகூட போராட்டம் இருக்காதா? கடவுளே கேட்கும் பொழுது வாங்கிக் கொண்டால் என்ன

தப்பு என்று உமது மனம் இடித்துக் கூறாதா? எத்தனையோ பிறவிகளாக முயன்று, ஆசைப்பட்டு, இப்போது சுபவேளை வந்துவிட்டது. 'வரம் வாங்கிக்கொள். கேட்பதை வாரிக் கொடுக்க எனது கை, வாதஹஸ்தம், தயாராக உள்ளது' என்று கடவுள் தாமாகவே கூறுகிறார். உமது பையை நிரப்ப உம் எதிரே நிற்கிறார். உமது மனம் பையைத் திறக்கத் தூண்டுமா, தூண்டாதா?"

ஜனகர் தனது நிலையைத் தெளிவுபடுத்திக் கொள்வதற்காக அஷ்டாவக்ரர் இவ்வாறெல்லாம் பேசுகிறார்.

**ஸ்வபாவாதேவ ஜானானோ திருஷ்யமேதன்ன கிஞ்சன் |**
**இதம் க்ராஹ்யமிதம் த்யாஜ்யம் ஸ இம் பஸ்யதி தீரதீ: ||**

எவன் தன் கண்ணில் தெரியும் காட்சியெல்லாம் அடிப்படையில் சாரமற்றவை என்பதை அறிந்துள்ளானோ, தீரமான புத்தியுடைய அவன் எது ஏற்கத்தக்கது, எது கைவிடத் தக்கது என்று ஏன் பிரித்துப் பார்க்கப் போகிறான்?

இது மிகவும் முக்கியமான சூத்திரம் ஆகும். அஷ்டாவக்ரர் கூறுகிறார்: "ஜனகரே, கவனிக்கவும். மனோதிடமுள்ள மனிதன் பணத்தில், மோட்சம் பெறுவதில், பேரரசு – மாளிகை – செல்வம் ஆகியவற்றை விஸ்தரிப்பதில் விருப்பம் வைக்க மாட்டான். இதைக் கேட்டதும் 'நானும் அம்மாதிரியே எல்லாவற்றையும் தியாகம் செய்துவிட வேண்டுமா?' என்னும் கேள்வி உமது மனத்தில் எழலாம். 'தீரமான மனிதன் சுகம் – வசதிகளுக்கு ஆசைப்பட மாட்டான் என்பதால் நானும் எல்லாவற்றையும் உதறிவிட்டு, காட்டுக்குப் போய்விடலாமா?' என்ற எண்ணம் உமது மனத்தில் தோன்றினால் நீர் இன்னும் திடபுத்தியுள்ளவராக ஆகவில்லை என்றுதான் அர்த்தம். திடபுத்தியுள்ளவன் பெறுவதிலும் வைத்துக் கொள்வதிலும் மட்டுமல்ல, தியாகம் செய்வதிலும் ஆர்வம் கொள்ள மாட்டான். ஜனகரே, உமது உள்ளத்தில் போகம், அனுபவிக்கும் ஆசை மிஞ்சியுள்ளதா என்று ஆராய்ந்து பாரும்."

இது முக்கியமான சூத்திரம். போக ஆசை வேண்டுமானால் நீங்கியிருக்கலாம். தியாகம் செய்யத் துடிப்பதும் ஒருவகையான ஆசையே. தியாகம் என்பது போகத்தின் இன்னொரு வகைதான்.

போகத்தின் தலைகீழாக நிற்பது தியாகம். இரண்டிற்குமிடையே வேறுபாடு இல்லை! போகம் சொல்கிறது — பிடி. தியாகம் சொல்கிறது — விடு. ஆனால் எதைப் பிடிப்பது, எதை விடுவது என்ற கேள்விக்கு ஒரே பதில்தான். பெண், பொன், செல்வம் என்பதுதான் அந்தப் பதில். போகம் பெண்ணையோ, ஆணையோ ஜோடி சேர்த்துக் கொள்ளச் சொல்கிறது. தியாகம் அதை எதிர்க்கிறது. ஆக, பார்வை பெண் அல்லது ஆண் மீதே பதிந்திருக்கிறது. போகம் சொல்லுகிறது — மேலும் மேலும் பணம். தியாகம் சொல்கிறது — மேலும் மேலும் தானம். இரண்டுமே 'மேலும்' என்பதற்குத்தான் அழுத்தம் தருகின்றன.

போகியையும் திருப்திப்படுத்த முடியாது. தியாகியையும் திருப்திப்படுத்த முடியாது. போகி இன்னமும் அனுபவிக்க வேண்டியுள்ளது என்பான். தியாகி இன்னமும் கைவிட வேண்டும் என்பான். இருவர் பார்வையும் 'இன்னமும்' என்பதில்தான் பதிந்திருக்கிறது.

போகி நிம்மதியின்றிப் படபடப்பாக உள்ளான். 'கார் உள்ளது, ஆனால் பெரிய கார் வேண்டும். வீடு உள்ளது, ஆனால் பெரிய வீடாக வேண்டும்' என்பான். தியாகி சொல்வான் 'உணவை விட்டேன். உபவாசம் இருந்தேன். இது போதாது. தியாகம் செய்தேன், இது போதாது. கைவிடுவதற்கு இன்னும் எவ்வளவோ உள்ளது. கோபத்தையும் மாயையும் விட்டேன். மோகத்தை விட வேண்டும். கௌரவம் பார்ப்பதை, அகங்காரத்தைவிட வேண்டும். இந்த 'இன்னமும், மேலும்' என்பதற்கு முடிவில்லை.

திடபுத்தி பெற்றுவிட்டவன், ஆகவே பொறுமையானவன், சாந்தமடைந்தவன், அறிவுபெற்றவன், எல்லாவற்றையும் காட்சி களென்றே பார்க்கிறான். ஆகவே எதையும் கைப்பற்ற வேண்டும் என்றோ, விட்டுவிடவேண்டும் என்றோ அவனுக்குத் தோன்று வதில்லை.

போகிக்கும் தியாகிக்கும் இடையே அதிக வேறுபாடில்லை. அவர்கள் ஒரே நாணயத்தின் இரு பக்கங்கள் போன்றவர்கள். ஒரே தர்க்கத்தின் இரண்டு விளக்கங்கள் போன்றவர்கள். உண்மையான தீர புருஷன் இரண்டு நிலைகளையும் கடந்தவனாக இருப்பான்.

அஷ்டாவக்ரர் வைக்கும் பரீட்சை மேன்மேலும் கடினமாகிக் கொண்டே போகிறது. ஜனகரை மேன்மேலும் இறுக்கமாகக் கட்டுகிறார். தப்பி ஓட வழிவிடவில்லை. முதலில் அஷ்டாவக்ரர் போகத்தை, இன்பங்களை, கண்டித்தார். ஆகவே ஜனகர் தப்பி ஓட ஒரு வழி இருந்தது. பணம், பதவி, வசதிகள், ராஜ்ஜியம், அரண்மனை ஆகியவற்றை ஞானி தன்னிடம் வைத்துக் கொள்ள மாட்டான் என அஷ்டாவக்ரர் சொல்வது சரிதான் என்று ஜனகரும் ஒப்புக் கொண்டார். 'இவற்றை நான் உதறித் தள்ளிவிடுகிறேன். இதன் மூலம் மாயையி லிருந்து தப்பித்து விடுவேன்' என்று நினைத்தார்.

அஷ்டாவக்ரர் சொல்கிறார்: "ஜனகரே, நீங்கள் விழிப்புப் பெற்று விட்டதாக அறிவித்தீரே, அது உண்மையெனில் உலகப் பொருள்களை நீர் கைவிட வேண்டும். ஏனெனில் விழிப்புப் பெற்ற மனிதன் இவற்றில் விருப்பம் வைக்க மாட்டான். ஆனால் இங்கும் அகங்காரம் உள்ளது. ஆனால் நுணுக்கமாகச் செயல்படுகிறது. எல்லாவற்றையும் கைவிடவும் அகங்காரம் ஒப்புக் கொள்ளும்." ஜனகர் நினைத்திருப்பார், 'தியாகம்தான் நான் ஞானம் பெற்றதன் உரைகல் எனில் நான் அதற்கு உடன்படுகிறேன். உடைமைகளை விட்டுச் செல்கிறேன். இதோ ராஜ்யத்தைத் துறக்கிறேன். நான் கிளம்பி விட்டேன்."

ஆனால் இதனால் ஒன்றும் நிரூபணமாகி விடாது. சாம்ராஜ்ஜியம் வேண்டாம் என்றதும் அது கனவுப் பொருள் ஆகிவிடாது. கனவைப் பிடித்து நிறுத்தவும் முடியாது, அதை வேண்டாமென்று உதறவும் முடியாது. ஒருவன் உன்னிடம் வந்து லட்சக்கணக்கில் பணம் தியாகம் செய்திருப்பதாகக் கூறினால், அங்கே உண்மையில் தியாகம் இல்லை; கூட்டல் கணக்குதான் உள்ளது. அவன் இன்னமும் கணக்குப் போடுவதைத் தொடர்கிறான் என்றும், பணம் அவனை இன்னமும் கட்டிப் போட்டுள்ளது என்றும் நீ உறுதியாக அறியலாம்.

என் மூத்த நண்பர் ஒருவர், தானமாக லட்சக் கணக்கில் பணம் கொடுத்திருக்கிறார். பிறகு பல ஆண்டுகள் கடந்துவிட்டன. எனினும் நான் அவரை எப்பொழுது சந்திக்கப் போனாலும், அவர் எப்படியாவது தன் பேச்சில் தான் லட்சக் கணக்கில் தியாகம் செய்ததைப் புகுத்தி விடுவார். 'உதைத்துத் தள்ளினேன் பணத்தை' என்று கர்வமாகச்

சொல்வார். இரண்டு – மூன்று முறை அவர் பெருமையடித்துக் கொண்டதைப் பொறுத்துக் கொண்ட நான் ஒருமுறை அவரிடம், "இப்படி உதைத்துத் தள்ளி எவ்வளவு காலம் ஆகியிருக்கும்?" என்று வினவினேன்.

"அதுவா? சுமார் முப்பது – முப்பத்தைந்து வருஷங்களுக்கு முன்னால் லட்சக் கணக்கான ரூபாயை உதைத்து வெளியே தள்ளியிருக்கிறேன்."

நான் விளக்கினேன்: "நீங்கள் பணத்தை உதைத்தீர்கள். ஆனால் அதன் மீது உதை படவில்லை. அதையே ஏன் அடிக்கடிச் சொல்லுகிறீர்கள்? முப்பது – முப்பத்தைந்து வருஷம் பழையதாகிப் போன விஷயத்தை ஏன் மீண்டும் கிளப்புகிறீர்கள்? அந்த லட்சம் பற்றிய கணக்கு இப்பொழுதுமா நீடிக்கிறது? முன்பு உங்களிடம் லட்சக் கணக்கில் பணம் உள்ளதென வீறாப்பாக நடந்து கொண்டிருப்பீர்கள். இப்போதோ எல்லாவற்றையும் உதைத்து வெளியேற்றி விட்டதாக கர்வம் கொள்கிறீர்கள். பணம் வெளியேறியிருக்கலாம், ஆனால் கர்வம் அப்படியேதான் இருக்கிறது. இந்த இரண்டாவது கர்வம் பணம் வைத்திருந்த காலத்து கர்வத்தைவிட ஆபத்தானது. ஏனென்றால் முதலாவது கர்வம் வெளிப்படையாகத் தெரிந்தது. இரண்டாவது கர்வம் மிக நுணுக்கமானது; வெளியில் தென்படுவதில்லை."

இதுவரையிலும் ஜனகர் நழுவுவதற்கு அஷ்டாவக்ரர் தியாகக் கதவைத் திறந்து வைத்திருந்தார். இப்போது அதையும் மூடிவிட்டார். இனி ஜனகர் தப்பிக்க வழி ஏதுமில்லை. விழிப்புப் பெறுவது ஒன்றுதான் மிஞ்சி உள்ளது. ஆகவே தனக்கு ஞானம் ஏற்பட்டது உண்மையான நிகழ்ச்சியா என்பதை மேற்கண்ட போகம் – தியாகம் முறையில் ஆராய்ந்து சொல்ல வேண்டும். உண்மையில்லையெனில் ஒப்புக் கொண்டு விடுவதைத் தவிர வேறு மாற்று இல்லை."

எல்லாம் மாயையாகத் தெரிந்தால் ஒருவன் எதை விடுவான், எதைப் பிடிப்பான்? இல்லாத ஒன்றை எப்படிப் பிடிப்பது, எப்படி விடுவது? திடபுத்தியுள்ளவன் தங்கத்தை மண் என்று சொல்ல மாட்டான். அவனைப் பொறுத்த வரையில், தங்கம் வேறு, மண் வேறு. ஆனால் இரண்டுமே சாரமற்றவை. மாளிகைக்குள்ளே வசித்தாலும் சரி, வெளியே வாழ்ந்தாலும் சரி, இரண்டுமே கனவுதான். பணக்காரனுக்கு

வரும் கனவு, ஏழையின் கனவு, வெற்றிக் கனவு, தோல்விக் கனவு, எல்லாமே கனவுதான். ஒரு கனவிற்கு எதிரான அர்த்தமுள்ள கனவு வந்தாலும் பயனில்லை. ஒரு கனவில் நீ திருடன், இன்னொரு கனவில் நீ துறவி என்று வந்தாலும் இரண்டுமே கனவுதான். இரண்டிற்கும் மதிப்பில்லை. ஏனெனில் நீ உண்மையில் திருடனுமில்லை, சாதுவும் இல்லை. இன்னொன்று எதனுடனோ நீ ஒன்றியிருக்கும்வரை, உன்னை அதுவாக, அவராக நினைக்கும்வரை பிரமை பிடித்தவனாக இருப்பாய். உண்மையில் நீ பரம சூன்யம், பரம உணர்வு, பரம சாட்சி.

போகத்தைப் போன்றே தியாகமும் ஒரு செயல்தான். அஷ்டாவக்ரரின் புரட்சி சூத்ரம் சொல்வது என்ன? கர்த்தாவோ, போக்தாவோ (செய்பவனோ, அனுபவிப்பவனோ) கிடையாது; நீ சாட்சியாக இருந்துவிடு. பிடிப்பது போன்றே விடுவதும் ஒரு செயல்தான், நடவடிக்கைதான். இந்த இரண்டிலுமே நீ கர்த்தா ஆகிறாய். ஆகவே இந்த இரண்டு நிலைகளிலும் அகங்காரம் தோன்றுகிறது. செயல் புரிந்தால் அகங்காரம் விளைவதால் நீ சாட்சியாகிவிடு.

**அந்தஸ்த்யக்தகஷாயஸ்ய நிர்த்வந்த்வஸ்ய நிராஸிஷ: |**
**யத்ருச்சயாகதோ போகோ ந துக்காய ந துஷ்டதேயே: ||**

எவன் உள்ளத்தின் கசண்டுகளைக் கைவிடுகிறானோ, முரண்படும் சிந்தனைகளின் மோதல் இல்லாமல் உள்ளானோ, எதிர்பார்ப்புகள் அற்றவனோ, அந்த மனிதன் சூழ்நிலையால் தனக்குக் கிடைக்கும் பொருள் குறித்து வருந்துவதோ, மகிழ்வதோ இல்லை.

உள்ளத்தின் கஷாயத்தை விடுதல் என்பதன் பொருள் உள்ளத்தில் தேங்கியவற்றிற்கு நான் பொறுப்பல்லன் என்று உணர்தலாகும். அத்தகையவன் விளக்கேற்றி 'நான் பிரகாசம் மட்டுமே, வேறெதுவும் இல்லை. கோபமோ, மோகமோ என்னுடையதன்று. பிடிப்பதும் விடுவதும் என் செயல்கள் அல்ல. போகமும் தியாகமும் என்னுடையவை அன்று' என நினைப்பான்.

இனிமேல் உள்ளத்தில் எந்தப் போராட்டமும் கிடையாது. ஏனெனில் அங்கே இரண்டு என்ற தன்மை மிஞ்சியிருக்கவில்லை. சாட்சி மட்டும்தான் மிச்சம். சாட்சி என்பது எப்பொழுதும் ஒன்றுதான், ஒற்றைப்படைதான். சாட்சி மனப்பான்மை கொண்டவன் உள்ளத்தில்

போராட்டம் இருக்காது; ஆசையும் இருக்காது. இப்படி நடைபெற வேண்டும். அப்படி நடைபெற வேண்டும்; இது கிடைக்கட்டும், அது கிடைக்கட்டும் என்று எதற்கும் ஆசைப்பட மாட்டான்.

நேற்று என்பது போராட்ட நாள். நாளை என்பது ஆசைப்படும் நாள். 'நான் இதுவரை எப்படியெல்லாம் இருந்தேனோ அதெல்லாம் கனவு' என்று சொல்பவன் கடந்த காலத்தின் பாதிப்பிலிருந்து விடுதலை பெற்று விட்டான்.

ஒருவன், எல்லா ஆசைகளையும் கைவிட்டு, 'நான் எப்படி உள்ளேனோ அதுவே போதும் இன்னும் வேறுவிதமாக நான் ஆக வேண்டியதில்லை; நான் எங்கும் போக வேண்டியதில்லை; நான் உள்ள இடமே என் வீடு; எங்கே உள்ளேனோ அதற்கேற்ப இருப்பது என் சுபாவம்; எப்படி உள்ளேனோ அப்படியிருக்கத்தான் எனக்கு விதிக்கப் பட்டுள்ளது; அது வேறு விதமாக அமைவதில் எனக்கு விருப்பம் இல்லை' என்று சொன்னால் அவன் எதிர்காலத்தின் தாக்கத்திலிருந்து விடுதலை பெற்று விட்டான் என்று பொருள். இவ்வாறு கடந்த காலத்தையும் எதிர்காலத்தையும் துடைத்து நீக்குபவன் சாஸ்வதத்தில் (நிலைத்த தன்மையில்) பிரவேசித்து விடுகிறான். அவனுக்குத் தற்செயலாகவோ, அதிர்ஷ்டத்தாலோ சுகமோ, துக்கமோ எது கிடைத்தாலும் ஏற்கிறான்.

இதைப் புரிந்து கொள்ளவும். இந்த சூத்திரத்தை நினைவில் வைக்கவும். மறக்காதே. இதுவே சாட்சிக் கோட்பாடு. இது தலைவிதிக் கோட்பாட்டிலிருந்து வேறுபட்டதாகும். அஷ்டாவக்ரர் சொல்கிறார்: அவனுக்கு சுகமோ, துக்கமோ எது கிடைத்தாலும் அது தெய்வாதீன மானது, கடவுளின் விருப்பம், கண்ணுக்குப் புலப்படாத சக்தியின் இஷ்டம் என்பான். தன்னால் சுகமோ, துக்கமோ விளைந்தது என்று கூறமாட்டான். 'நான் பார்வையாளன் மட்டுமே' என்பான். ஒன்று கிடைப்பதும் கிடைக்காததும் கடவுளின் லீலை. பிறகு கிடைத்த பொருளில் சுகமோ, துக்கமோ இருக்காது.

இயேசுநாதர் சிலுவையில் அறையப்பட்டபின் கடைசி நேரத்தில் கூறினார்: 'உன் விருப்பமே நிறைவேறுவதாக! என் விருப்பத்தை நீ கேட்க வேண்டியதில்லை. என் பேச்சில் நீ கவனம் செலுத்தாதே. ஏனெனில் என் என்ன சொன்னாலும் அது தவறாக இருக்கும். நீ

சொல்லவுள்ளதே சரியாக இருக்கும். எனக்கு விருப்பமோ, இல்லையோ, உன் விருப்பம் எதுவோ அப்படியே நடக்கட்டும்.' –

நீ கடவுளை பிரார்த்தனை செய்யும்போது 'இப்படி உதவு – அப்படிச் செய்' என்று கேட்டுக் கொண்டால் அந்த வழிபாடு மாசடைந்து விடுகிறது. சேதமடைந்து விடுகிறது. வழிபடுதல் என்பதே அர்த்தமிழக்கிறது. ஏனெனில் நீ கடவுளுக்கு ஆலோசனை கூறத் தொடங்குகிறாய். நீ கடவுளைப் பார்த்து, 'நான் உன்னைவிட அறிவாளி. உன் செயல்பாடுகள் சரியில்லை,' என்று கூறுவதற்கு சமம்.

ஒரு சூபி சம்பிரதாய பக்தருக்கு இரு மகன்கள். இரட்டையர்கள். லட்சணமானவர்கள். அவரது முதுமையில் பிறந்தவர்களானதால் அவர்கள் மீது எல்லை மீறிய பாசம் வைத்திருந்தார். ஒருநாள் அவர் மசூதியில் பேருரை நிகழ்த்திவிட்டு வீடு திரும்பினார். உடனே அவர் மனைவியிடம் மகன்கள் எங்கே என்று கேட்டார். சிறுவயதிலிருந்தே மகன்கள் அவர் உரையாற்றும் சமயம் மசூதிக்கு வருவார்கள். அன்றைய தினம் அவர்கள் வரவில்லை.

மனைவி சொன்னாள், "எங்கேயாவது விளையாடப் போயிருப்பார்கள். நீங்கள் சாப்பிட்டு முடியுங்கள்." தினமும் மகன்களுடன் சேர்ந்து சாப்பிடுபவர் மனைவியின் வற்புறுத்தலால் உணவை முடித்துக் கொண்டார். மறுபடியும் மகன்களை பற்றி விசாரித்தார். மனைவி சொன்னாள், "அதற்கு முன்னால் நான் உங்களிடம் ஒரு விஷயம் கேட்டுத் தெரிந்து கொள்ள விரும்புகிறேன். ஒரு மனிதன் இருபது ஆண்டுகளுக்கு முன்னால் ஏதோ பொருளை என்னிடம் அடகு வைக்கிறான். அப்பொருள் இரண்டு வைரங்கள் என்று வைத்துக் கொள்வோம். இன்று அவன் வாங்கிக் கொண்டு போக வந்திருந்தானெனில் அவற்றை நான் திருப்பித்தர வேண்டுமா, வேண்டாமா?"

சூபி பக்தர் சொன்னார், "இதுகூட யாரிடமும் கேட்க வேண்டிய கேள்வியா என்ன? அவனுடைய வைரங்களை அவனிடம் திருப்பித் தரத்தான் வேண்டும். இதில் என்னிடம் கேட்பதற்கு என்ன இருக்கிறது. நமக்கு இந்த விஷயத்தில் என்ன சம்பந்தம்? நீ ஏன் இதையெல்லாம் கேட்கிறாய்?"

“நல்லதாகப் போயிற்று. உங்கள் கருத்தை அறியவே கேட்டேன்,” என்ற கூறியபடி மனைவி அவரைப் பக்கத்து வீட்டுக்கு அழைத்துச் சென்றாள். அங்கு ஓர் அறையில் மகன்கள் இருவரும் பிணமாகக் கிடந்தனர். அவர்கள் பக்கத்து வீட்டிற்குப் போனபோது ஓரிடத்தில் மேல்பகுதி இடிந்து தலையில் வீழ்ந்ததால் மரணம் ஏற்பட்டது என்று தெரியவந்தது.

கணவர் புரிந்து கொண்டார். மனைவியைப் பார்த்து, “நீ செய்தது சரிதான். கடவுள் சக்தியோ, கண்ணுக்குத் தெரியாத சக்தியோ, தற்செயல் நிகழ்வோ இருபது ஆண்டுகளுக்கு முன் நமக்கு இரண்டு வைரங்கள் கொடுத்தது. இன்று அவற்றைத் திருப்பி எடுத்துக் கொண்டு விட்டது. நடுவில் நாம் யார்? மகன்கள் இல்லாத போதும் நம் வாழ்க்கை நடைபெற்றது. மகன்களைப் பெற்று இழந்ததால் நாம் அந்தப் பழைய வாழ்க்கைக்கே திரும்புகிறோம். இவர்கள் நடுவில் சிறிது காலம் இருந்துவிட்டுப் போனார்கள். அவ்வளவுதான்,” என்று கூறினார்.

‘நடப்பதெல்லாம் என் காரணமாகத்தான்’ என்று நினைத்தால் ‘நான்’ என்ற பிரமை மேலோங்குகிறது. எந்த நிகழ்ச்சியும் எத்தனையோ சக்திகள் இணைந்து நிகழ்கிறது. நான் பார்வையாளன் மட்டுமே என்பதை ஆழமாகப் புரிந்து கொண்டால் சாட்சி உணர்வு பிறப்பெடுக்கிறது. அவ்வுணர்வு சலனமற்ற, புகையற்ற தீபமாக நமக்குள் பிரகாசிக்கிறது.

அஷ்டாவக்ரர் சொல்கிறார்: “ஜனகரே! நான் கூறியவற்றுடன் உம்மை ஒப்பிட்டுப் பார்க்கவும். உமது அறிவிப்பு இவற்றுடன் ஒத்துப் போகிறதென்றால் சிறப்பான அறிவிப்புதான். அவ்வாறு இல்லாவிடில் உமது அறிவிப்பைத் திரும்பப் பெறுங்கள். பொய்யான அறிவிப்புகள் ஆபத்தானவை. என் பேச்சைக் கேட்டு அதனால் ஒன்றை நம்ப வேண்டாம். நீரே சுயமாகவே சத்தியத்தில் விழிப்புக்கொள்க. என் விழிப்பு, என் உள்ளொளி உமக்கு உரிமையாகாது. என் கண்கள் எனக்குதவும்; என் கால்களால் நான் நடப்பேன். உமக்கு உம்முடைய கால்கள், உம்முடைய கண்கள், உம்முடைய உள்ளொளிதான் தேவை. நீர் என் சிறப்பியல்பால் பாதிக்கப்படவில்லை என்பதைத் தெளிவாக்கிக் கொள்ளவும்.”

ஜே. கிருஷ்ணமூர்த்தி, நாம் யாராலும் பாதிக்கப்படக் கூடாது என்பதை எப்பொழுதும் வலியுறுத்தியிருக்கிறார். அவர் சொல்வது சரி. அவர் கருத்து அஷ்டாவக்ரரின் சூத்திரம்தான்.

இதையே நானும் சொல்கிறேன். நான் பேசுவதைக் கேளுங்கள். ஆனால் அது போதாது. பேச்சைக் கேட்டபடியே விழிப்புக் கொள்ளுங்கள். நான் சொல்வதை மட்டுமே பிடித்துக்கொண்டு உட்கார்ந்து விடாதீர்கள். அப்படிச் செய்தால் கூண்டுதான் கையில் மிஞ்சும். பட்சி பறந்து அல்லது இறந்து போயிருக்கும். நான் பேசுவதை உடனே திறந்து ஆராயுங்கள். உங்களுக்கேற்றபடி மாற்றிக் கொண்டு சீரணியுங்கள். என் பேச்சை அப்படியே ஏற்றால் அசீரணம் விளையும்! ஆகவேதான் உமக்கேற்றபடி மாற்றிக் கொண்டால் சீரணிக்க முடியும். அது உமது ரத்தமாக ஆகட்டும்; ரத்தத்தில் பிரவாகிக்கட்டும்; உமது எலும்பாக, தசையாக, உயிராக ஆகட்டும்.

வெறும் நம்பிக்கை – அசீரணம்; சிரத்தை – சீரணம். நம்பிக்கை ஒரு சுமை. சிரத்தை எல்லாச் சுமையிலிருந்தும் விடுதலை.

**ஹரி ஓம் தத்ஸத்.**

முதல் கேள்வி:

**மனத்தத்துவ அறிஞர் விக்டர் இ. ஃப்ராங்கல் ஆஹா அனுபவம் (Aha-Experience), சிகரம் தொடும் அனுபவம் (Peak-Experience) ஆகிய வற்றை அறிமுகப்படுத்தி உளவியலில் புதியதொரு பரிமாணம் தந்துள்ளார். இதை உங்களால் அஷ்டாவக்ரர் விஷயத்திலும், ஜனகரின் ஆச்சரிய உணர்வின் விஷயத்திலும் சம்பந்தப்படுத்தி விளக்க இயலுமா?**

ஃப்ராங்கல் கோட்பாட்டில் 'ஆஹா' என்பது சரி. ஆனால் அதில் அனுபவம் துளிக்கூட இல்லை. அனுபவம் ஏற்பட்டிருந்தால் 'ஆஹா' காணாமல் போயிருக்கும். ஆஹா உணர்வு எப்பொழுது தோன்றுகிறது? ஏதோ நிகழ்ந்து, உன் மேலறிவால், கடந்தகால அறிவால் புரிந்து கொள்ள முடியாதபோது அது உன் அனுபவம் ஆக முடியாமல் ஆஹா என்று வியப்பதுடன் நின்று விடுகிறது. நிகழ்ந்த சம்பவம் கடந்த காலத்தின் வழக்கமான சம்பவங்களின் சங்கிலியில் ஒரு கண்ணியாகச் சேரவில்லை. ஆகவே சங்கிலி பூர்த்தி ஆகவில்லை. நடைபெற முடியாத ஒன்று, அறிமுகமற்ற ஒன்று, சாத்தியப்படாத ஒன்று, நீ ஒருபோதும் யோசித்திராத, கனவிலும் கண்டிராத ஒன்று இப்போது நடைபெற்றுள்ளது.

கடவுள் உன் முன் தோன்றும்போது புல்லாங்குழல் ஊதும் கிருஷ்ணன் வடிவிலோ, சிலுவையில் தொங்கும் ஏசுநாதர் வடிவிலோ, வில்–அம்பு தரித்த ராமனாகவோ காட்சி தரமாட்டார்! வில்லம்புடன் கூடிய ராமன் மாதிரித் தெரிந்தால் அது உன் அனுபவத்துடன் ஒத்துப்போகும். கடவுள் உன்னைத் தேடி வாசலுக்கு வந்துவிட்டார் என்பாய். அப்போது ஆஹா வெளிப்படாது. இந்த அனுபவம் பழைய

அனுபவத்துடன் பொருந்திவிடும். உள்ளத்தில் பதிந்துவிடும். தரிசன சமயம் சற்றுத் தடுமாறுவாய். ஆனால் உன் கடந்த காலத்தையும் எதிர்காலத்தையும் பிரிக்கும் அளவிற்கு வலுவான அதிர்ச்சியாக இராது.

'ஆஹா' என்பது பாதிக்கும் விதம் வேறானது. திடீரென ஒரு மின்னல் மின்னியதுபோல் தோன்றும். அக்கணத்திலேயே கடந்த காலமெல்லாம் அழிந்து போய்விடும். அதனுடன் இனி ஒரு தொடர்பும் இராது. நீ கனவிலும் ஊகிக்காத ஒன்றாக அது நிகழ்ந்திருக்கும். நடைபெற முடியாத ஒன்று நிகழ்ந்திருக்கும். அறியப்படாத ஒன்று வாசலில் வந்து நிற்கும். அதைப் பற்றி முன்கூட்டியே கருத்தோ, எண்ணமோ, கோட்பாடோ இருந்திருக்காது. இதுவரை அதை நீ புரிந்து கொள்ள இயலாது போனது. இதுவரை உன் மனத்தில் சேர்ந்த அனுபவங்களின் கட்டமைப்புடன் இந்தப் புதிய அனுபவம் பொருந்தவில்லை; மேலும் உன் அனுபவ அறிவின் கட்டமைப்பை யெல்லாம் தகர்த்தெறிந்து விட்டது. இந்த சூழ்நிலையில்தான் ஆஹா உணர்வு பிறக்கிறது.

ஆகவே 'ஆஹா'வும் அனுபவமும் வெவ்வேறானவை என்பதை நினைவில் வைக்கவும். அனுபவம் என்பதன் பொருள், உதாரணமாக, ஒரு பூவைப் பார்த்ததும் 'இது ரோஜாப்பூ' என்று அடையாளம் கண்டுகொள்வது தான். ஆனால் அது ரோஜா என்று அடையாளம் காண்பதற்குக் கடந்த காலத்தில் அதேபோன்ற பூக்களைப் பார்த்துள்ளமைதான் காரணம். அப்படிக் கடந்த காலத்துடன் தொடர்பு கொள்ள முடியாமல் போனால் நீ அது என்ன பூ என்று கூறமுடியாமல் திகைத்து நிற்பாய். உன் மனம் இயக்கமின்றி நின்றுபோகும். உன் சிந்தனை ஓட்டம் பாதியில் வெட்டுண்டு போகும். அவ்வாறு சிந்தனை வெட்டப்பட்டு, சிந்தனையே எழாத சூனிய கணத்தில் நிகழ்வதுதான் 'ஆஹா' என்பது. ஆகவே அது அனுபவம் ஆகமுடியாது.

அனுபவம் கடந்த இந்த நிலையின் மூன்று வகைகள் அல்லது கட்டங்கள் உள்ளன. முதல் கட்டம்: முன்பின் அறிந்திராத, அறிமுகம் இல்லாத ஒருவர் உன் வாழ்க்கையில் எதிர்ப்படுவது போல், முன்னால் நிற்பதுபோல் உணர்வு. அவ்வுணர்வை சமாதி எனலாம், பரமாத்மத் தொடர்பு எனலாம். அந்த அறிமுகமற்ற ஒன்றிலிருந்து உன்னை

நோக்கி அலைகள் வரும். அவற்றில் நீ சுகமாக மிதப்பாய். அப்போது உன் மனத்தில் எழும் முதல் உணர்ச்சி 'ஆஹா, எனக்கா இது ஏற்பட்டுள்ளது! நம்ப முடியவில்லையே. புத்தருக்கும், கிருஷ்ணருக்கும், ஏசுநாதருக்கும் இம்மாதிரி ஏற்பட்டிருக்கும். ஆனால் எனக்கா ஏதோ அரிதான ஒன்று நிகழ்ந்திருக்கிறது. நானோ பாவி, எத்தகுதியுமற்றவன், தாழ்ந்து வீழ்ந்தவன், எனக்கா! ஆஹா!'

இவ்வாறாக, முதல் அனுபவமாக நெஞ்சில் குத்துவாள் பாய்ந்ததுபோல் உணரப்படும். இது உனக்கு நேரும் என்று நீ ஒருபொழுதும் எண்ணியதில்லை. வேறு யாருக்கு வேண்டுமானாலும் கடவுள் கிடைக்கலாம். உனக்கும் கிடைக்கக் கூடியவர் என்று எப்பொழுதாவது எண்ணியிருப்பாயா? அவர் கிடைப்பார் என்று நினைக்கும் அளவிற்கு நீ அவரை தியானித்ததில்லை; பூஜை—அர்ச்சனை செய்ததில்லை. அவரை அடைவதற்கு என்ன சேகரித்து வைத்துள்ளாய்? ஆயிரக்கணக்கில் தவறுகள், பாவச் செயல்கள், முட்டாள்தனங்கள் செய்துள்ளாய். அவற்றைத் தற்பொழுதும் செய்து வருகிறாய். ஆகவே முதல் முறையாகக் கடவுள் உன்னுள் இறங்கும்போது அதை உன்னால் நம்ப முடிவதில்லை. சுளீரென அடிபட்டது போலுள்ளது. 'ஆஹா! எனக்கா தெய்வீக உணர்வு? இல்லை, இது எப்படி சாத்தியமாகும்?' இறைவன் அருள்மழை உன்மீதுகூட பொழியும் என்று ஒப்புக் கொள்வது உனக்கு சிரமமாக இருக்கும்.

ஆனால் அந்த அருள்மழை எல்லோர் மீதும் பொழியும் என நான் கூறுகிறேன். அது பிரசாதம். அதைப் பெறுவதற்காக நீ எதையும் சேகரித்து வைக்க வேண்டிய அவசியமில்லை. அது எடை போட்டு பேரம் பேசுவதற்கு உரியதன்று. தியாகத்தால், தவத்தால் பெறுவதும் இந்த பிரசாதமன்று. தியாகத்தால், தவத்தால் கிடைப்பது வேறு எதுவாக வேண்டுமானாலும் இருக்கலாம். அது பரமாத்மாவாக இராது. ஏனெனில் நீ மேற்கொள்ளும் நடவடிக்கையால் கிடைப்பது உன்னைவிட தாழ்ந்ததாக இருக்கும். அது உள்ளங்கைக்குள் அகப்படும் ஒன்றாக இருக்கும். அது விசாலத் தன்மை கொண்டிருக்காது. கர்த்தா (செயல்புரிபவன், செயலாளி) கர்மத்தை செயலை) விட எப்போதும் உயர்ந்தவனாகவே இருப்பான்.

நீ ஓவியம் வரைகிறாய். அந்த ஓவியம் எத்துணை எழிலுடன் விளங்கினாலும் ஓவியரைவிட உயர்ந்ததாக முடியாது. ஓவியரிட மிருந்து அது பிறந்ததால், ஓவியர்தான் பெரியவர், உயர்ந்தவர். நீ ஒரு பாடல் இயற்றுகிறாய். அது அருமையானதாக, மனத்தைக் கவர்வதாக இருந்தாலும், கவிஞனாகிய உன்னைவிட அது உயர்ந்ததன்று. நீ வீணை வாசிக்கிறாய். இன்னிசை ரசமாகப் பெருகுகிறது. எத்தகைய இனிய ஒலியாயினும் அது வீணைக் கலைஞரைவிட உயர்ந்ததன்று. யாருடைய முயற்சியால் இசையொலி எழுகிறதோ அவரைவிட அவ்வொலி தாழ்ந்ததுதான்.

இதுபோல் உனது நடவடிக்கையால் கடவுள் கிடைப்பாரெனில் அவர் உன்னைவிட சிறியவராகி விடுவார். மக்கள் தங்களுக்குக் கடவுள் கிடைத்து விட்டாரென்று சொல்வதுண்டு. அந்தக் கடவுளர்கள் பரமாத்மாவைவிட சிறியவர்கள். மக்களின் மனம் காட்டும் விளையாட்டில் தோன்றியவர்கள். மக்களின் எதிர்பார்ப்புகள், விருப்பங்கள் இணைந்து உருவம் பெற்றவர்கள். அவர்கள் கனவுலக பாத்திரங்கள் அவர்கள் நிஜமில்லை.

உண்மையான பரமாத்மா பிரசாத வடிவில் கிடைக்கிறார். அதற்கு அடிப்படையாக உன் செயலோ, புண்ணியமோ, தியானமோ, தவமோ அமைவதில்லை. அந்நிலையில் எதுவும் இருப்பதில்லை. நீயும் இருக்க மாட்டாய்! நீ என்பது அழிந்தவுடன் அந்த பிரசாதம் பொழியும். நீ அரியணையைவிட்டு அகன்று விட்டால் அதன் அடுத்த அரசர் அங்கே வருகிறார்.

'ஆஹா!' என்பது உன்மீதுபட்ட முதல் தாக்கம். உன்னால் நம்ப முடிவதில்லை. வேறு யாருக்கோ, நிறையத் தவம் செய்தவனுக்கு, பிறவிகள்தோறும் செய்த புண்ணியங்கள் திரண்டவனுக்கு அல்லவா கிடைத்திருக்க வேண்டும் என்று உனக்குத் தோன்றியிருக்கும். உனக்கா கிடைத்தது? ஆஹா! பிறகு சிறிது சமாளித்துக் கொண்டு நடப்பதைக் கவனிக்கிறாய். யாருக்கு அந்த மெய்யுணர்வு நிகழ்கிறது என்று நிதானித்து நோக்கத் தோன்றுவதில்லை. தயங்குவதும் தாமதிப்பதும் இனி எதற்காக? நடப்பதைக் கவனித்தலும் நீ 'ஆஹா! அபூர்வமான ஒன்று. வர்ணிக்க முடியாத ஒன்று நிகழ்கிறது' என்று கூவுவாய்.

'ஆஹா!' என்பது அருமையான சொல். இது குறிப்பிட்ட மொழியின் சொல்லன்று. இந்தி, ஆங்கிலம், சீனம் முதலிய மொழிகளிலும் 'ஆஹா!' தான். இது மொழிகளைக் கடந்த சொல். மெய்யுணர்வு யாருக்குக் கிட்டினும், அவர் சாதாரணமானவராயினும் சரி, கபீர்தாசர் அல்லது இக்ஹார்ட்* ஆயினும் சரி அவர்களும் 'ஆஹா!' என்றே உணர்கின்றனர். உலகத்தின் எந்த மூலையாயினும் சரி, இறை அனுபவம் யாருக்காவது கிடைத்தால் அங்கே 'ஆஹா' ஒலியும் எழும்பியிருக்கிறது.

இது இரண்டாவது கட்டம். முதல் கட்டத்தில் உனக்கா மெய்யுணர்வு கிடைத்தது என்று திகைப்பேற்படுகிறது. இரண்டாம் கட்டத்தில் கடவுள் ஏற்பட்டுள்ளார்' என்று திகைக்கிறாய். இந்த இரண்டையும் கடந்த மூன்றாம் நிலையும் உண்டு. அதுதான் 'அஹோ' நிலை. அதுதான் ஜனகருக்கு ஏற்பட்ட நிலை. அதன்பின் 'எனக்கா ஏற்பட்டது? கடவுளா ஏற்பட்டுள்ளார்?' என்ற கேள்விகள் எழுவதில்லை. எழுவாய், செயப்பொடு பொருள் — நான், நீ — என்ற நிலைகளைக் கடந்த ஆச்சரியமான நிலை தோன்றுகிறது.

ஞானி தர்தூலியன் சொல்கிறார், 'கடவுள் என்பவர் சாத்தியமில்லை. ஆனால் இருக்கிறார்.' இதை உணர்தல் 'அஹோ' என்ற மூன்றாம் நிலை. இதை இதயம் ஒரு நொடி நின்றுவிடுவது போன்ற அதிர்ச்சியான நிலை எனலாம். வாயடைத்துப் போன நிலை. வாக்கிய முடிவில் முற்றுப்புள்ளி வைக்கப்பட்டது போன்ற நிலை. ஓடுகிறாய். எங்கெங்கெல்லாமோ ஓடுகிறாய். திடீரெனக் கால்கள் நின்று விடுகின்றன. ஓட்டம் நின்று போனது. உடல் இயக்கம் நின்று போனது. சுவாசிப்பதுகூட தடைப்பட்டது. 'ஆ!' என்று மூச்சு வெளியேறி விட்டது. அது உள்ளே திரும்பவில்லை. சிறிது நேரம் எல்லாம் சூன்யமாகி விட்டது. பிறகு சமாளித்துக் கொண்டாய். அப்போது மூச்சு உள்ளே திரும்பி வந்தது.

இவ்வாறு மூச்சுக் காற்று உள்ளே திரும்புவது மிகவும் புதுமையான அனுபவமாக இருக்கும். ஏனெனில் நீ அழிந்து போயிருந்தாய். நீ சூன்யமான வீடு அல்லது சூன்யமான கோவில்போல் வெறுமையாக இருந்தாய். மூச்சுக் காற்று மீண்டும்

* Eckhart (1260-1327) ஜெர்மானிய ஞானி, இறைமை இயல் அறிஞர்

உனக்குள் பிரவேசிக்கும்போது, வெளியே காத்திருந்த கடவுளின் நறுமணத்தால் நிறைந்து, கிளர்ச்சியுற்று, குளுமை பெற்று, கிரணங்களில் நனைந்து, அன்பில் தோய்ந்து திரும்புகிறது. "ஆஹா! என்று நீ முதலில் திகைத்து நின்றாய். மூச்சுக்காற்று வெளியிலேயே நின்றுவிட்டது. இப்போது உயிர்க்காற்று உள்ளே திரும்புகையில் அதன் வழியாகக் கடவுளும் உள்ளே வருகிறார். உனது ஒவ்வொரு ரோமமும் அப்போது சிலிர்க்கும். உனது மனம் என்னும் ஏரியில் மொட்டுகள் ஒவ்வொன்றும் பூவாகும்; ஆயிரம் தாமரைகள் மலரும். ஆஹா!

அடுத்து நீங்கள் இருவரும் அழிந்து விடுகிறீர்கள். நீயும் இல்லை, கடவுளும் இல்லை என்ற நிலை. இருவரும் ஒன்றிவிட்ட நிலை. எல்லைகள் மறைந்து நீங்கின. புனித சங்கமம் நிகழ்கிறது. அப்போது 'நான், நானல்லன்; நீ, நீ அல்லன்' என்ற நிலையில் 'அஹோ' நிலை. 'ஆ' என்பதில் வாயடைத்து ஆச்சரியம் மேலிடு கிறது. 'அஹோ'வில் மௌனம், ஆச்சரியத்துடன் நன்றியுணர்வும் சேர்ந்து கொள்கிறது.

நாத்திகருக்கும் 'ஆ!' நிலை உண்டாகலாம். விஞ்ஞானிக்கும் உண்டாகிறது. விஞ்ஞானி புதிதாக எதையும் கண்டுபிடித்ததும் அதிர்ந்து நிற்கிறான். தனது வெற்றியை நம்ப முடியவில்லை. 'ஆ!' என்கிறான். கணித அறிஞரும் இதே நிலைக்கு உள்ளாகலாம். பல்லாண்டுகளாக ஒரு தேற்றம் விடை கிடைக்காமல் அவரைச் சிக்கலுக்குள்ளாக்கி யிருக்கும். இதனால் மனம் இறுகிப் போயிருக்கும். திடீரென ஒருநாள் விடை கிடைத்ததும் இறுக்கமெல்லாம் இளகிப் போயிருக்கும். மனத்தில் பேரமைதி உதித்திருக்கும். இதற்கும் மத சம்பிரதாயங்களுக்கும் சம்பந்தம் இல்லை. 'ஆ!' நிலை மத நம்பிக்கை இல்லாதவருக்கும் ஏற்படலாம். ஹிலேரி* எவரெஸ்ட் சிகரத்தை அடைந்தபோது 'ஆ!' வெளிப்பட்டிருக்கும். இதற்கும் கடவுளுக்கும் தொடர்பு இல்லை. ஹிலேரி கடவுள் பக்தரா, இல்லையா என்பதும் வேறு விஷயம். யாருமே எக்காலத்திலும் சென்றடையாத இடத்திற்குப் போய்ச் சேர்ந்த எதிர்பாராத நிகழ்ச்சியால் பிரமித்ததன் விளைவே 'ஆ!' எனப் பிரதிபலித்தது.

---

* Sir Edmund Hillary நியூஜிலாந்து நாட்டவர். டென்சிங்குடன் சேர்ந்து 1953இல் எவரெஸ்ட் சிகரத்தை அடைந்தார்.

முதல் முறையாக மனிதன் நிலவில் கால் பதித்தபோது 'ஆ!' வெளிப்பட்டிருக்கும். தான் சந்திர மண்டலத்தில் நடப்பதைத் தன்னாலேயே நம்ப முடியாமல் போயிருக்கும். எத்தனையோ நூற்றாண்டுகளாக மனிதன் சந்திரனை அடைய வேண்டும் எனக் கனவு கண்டிருக்கிறான். ஒவ்வொரு குழந்தையும் சந்திரனைப் பிடிக்கக் கை நீட்டியுள்ளது. ஆனால் சந்திரனில் நடந்ததால் உண்டான 'ஆ!'விற்கும் கடவுளுக்கும் இடையே கொடுக்கல் – வாங்கல் கிடையாது.

**ஆஹா! - கவிஞர், ஓவியர், சிற்பியிடம் உண்டாகும்.**
**'ஆ!' - விஞ்ஞானி, கணித அறிஞர், தர்க்கம் செய்பவரிடம் உண்டாகும்.**
**அஹோ! - ஞானிக்கு உண்டாகும்.**

பாடகருக்குத் திடீரென ஒரு ராகம் வசப்படுகிறது. இதற்குமுன் அவர் இந்த ராகத்தைக் கையாள முடிந்ததில்லை. அந்த ராகம் இப்போது கேட்கிறது; உண்மையாகவே வெளிப்படுகிறது; ஆழமும் அடர்த்தியும் பெறத் தொடங்குகிறது; நாற்புறமும் பொழிகிறது. அப்போது ஏற்படுவது வாயடைத்துப்போன ஆச்சரிய நிலை – ஆஹா நிலை.

கவிஞர் ஏதோ பாடலை முணுமுணுக்கிறார். அத்தகைய பாடல் பிறக்க வேண்டுமென்றுதான் இது வரையிலான வாழ்க்கை முழுதும் துடித்துக் கொண்டிருந்தார். இதுவரை பொருத்தமான சொற்கள் கிடைக்கவில்லை. உணர்ச்சிகள் கட்டுக்கோப்பாக இல்லை. திடீரென வரி–வரியாகச் சரிவர அமைந்து, லயமும் யாப்பும் குறையின்றி அமைந்து பாடல் தோன்றிய நிலை – ஆஹா நிலை.

ஆஹா, சிறிதளவு ரகசியமானது. ஆ, யதார்த்தமானது, நடைமுறைக்கு உகந்தது. அஹோ, ஆன்மிகம் சார்ந்தது. நுணுக்கமான ஆன்மிக முறையை மேற்கொள்பவருக்கு, சமாதி நிலையை அடைந்தவருக்கு 'அஹோ' நிகழ்கிறது.

ஜனகரின் பேச்சு 'அஹோ' வகையைச் சேர்ந்தது. அதில் நன்றி உணர்வு மிகுதியாக நிறைந்துள்ளது. ஆழமான, மனபூர்வமான நன்றி அது. முதல் முறையாக முழுமையான நம்பிக்கை உதித்துள்ளது. முதல் முறையாக இருளில் நம்பிக்கையின் கிரணம் இறங்கி வந்துள்ளது.

இதுவரை கடவுளைப் பற்றி யோசித்தார்; கடவுள் உண்டென ஒப்புக் கொண்டார். இப்போது அந்தக் கடவுள் உள்ளே இறங்கி வந்திருக்கிறார்; உள்ளே காட்சி தருகிறார்.

**ரா**மகிருஷ்ணரிடம் விவேகானந்தர் சென்றார். "நான் கடவுளைத் தேடிக் கொண்டிருக்கிறேன். இதைப் பற்றி உங்களுடன் விவாதிக்க தயாராக உள்ளேன். கடவுள் உண்டென உங்களால் நிருபித்துக் கூறமுடியுமா?" என்று கேட்டார்.

ராமகிருஷ்ணர் பதிலுக்குக் கேட்டார், "நீ உடனே கடவுளைப் பார்க்க விரும்புகிறாயா அல்லது சிறிது நேரம் கழித்தா?"

விவேகானந்தர் அசந்து போனார். அவர் கடவுள் உண்டா என்று பலரிடம் கேட்டிருக்கிறார். இவ்வாறு கேட்பது அவருக்கு வழக்கமாகி விட்டது. வங்காளத்தில் ஆன்மிகப் பெரியோர்களிடம் விசாரித்துப் பார்த்திருக்கிறார். அவர்கள் வேதங்கள், உபநிடதங்களிலிருந்து சான்றுகள் தந்து கடவுள் உண்டெனக் கூறியிருந்தார்கள். ஏட்டறிவு மட்டுமே அவர்களின் நம்பிக்கைக்கு ஆதாரமாக இருந்தது. ஆனால் இங்கே, இதோ ஒரு மனிதர், படிப்பறிவில்லாதவர், கடவுள் உடனே வேண்டுமா என்கிறார்! வீட்டில் வைத்திருப்பதுபோல, சட்டைப்பையில் கிடப்பதுபோல் அல்லவா பேசுகிறார். இப்பொழுதே கடவுளைக் காண்பிக்கட்டுமா என்று கூறும் ஒருவர் கிடைப்பாரென்று விவேகானந்தர் ஒரு பொழுதும் நினைத்ததில்லை.

விவேகானந்தரின் பதிலை எதிர்பார்க்காதவர்போல் ராமகிருஷ்ணர் எழுந்து நின்றார். தமது காலை விவேகானந்தரின் நெஞ்சில் வைத்து அழுத்தினார். அவ்வளவுதான், விவேகானந்தர் 'ஆ!' என்று கூவியபடி கீழே விழுந்தார். பல மணி நேரம் மயக்கநிலையில் இருந்தார்.

நினைவு திரும்பியபோது அவருடைய கண்கள் நீரால் நிறைந்திருந்தன. 'ஆ!' என்பது 'ஆஹா!'வாக மாறியிருந்தது. விழித்தபின் ராமகிருஷ்ணரை நோக்கியபோது 'ஆஹா!' என்பது 'அஹோ!' என மாறிவிட்டது. அவர் நெகிழ்ந்து போனார். ராமகிருஷ்ணரின் கால்களைப் பிடித்தவாறு சொன்னார்: "இனி என்னை ஒருபோதும் கைவிடாதீர்கள். நான் அறிவிலி. நான் உங்களைக்

கைவிட்டாலும், ஓடிப்போக முயன்றாலும் நீங்கள் என்னை விட்டுவிடாதீர்கள். எனக்கு என்ன ஆனது? என்னை எந்த உலகத்திற்கு இட்டுச்சென்றீர்கள்? என் எல்லா எல்லைகளும் நீங்கிவிட்டன. நான் என்னையே இழந்து விட்டேன். அபூர்வமான ஆனந்தமும் அமைதியும் உணர்ந்தேன். ஆகவே கடவுள் இருக்கிறார்! எண்ண ஓட்டம் சட்டென நின்றுவிட்டது. உணர்ச்சிகள் நின்றுவிட்டன. ஆத்மாவே முழுமையாக அதிர்ந்து விட்டது. அஹோ!''

'ஆஹா!' அனுபவம் பற்றித் தெரிவித்து ஃப்ரைங்கல் மனதத்துவ இயலில் முக்கியமான பங்களிப்புச் செய்திருக்கிறார். ஆனால் அவர் துறவியோ, ஞானியோ அல்லர். அவர் தியானம், சமாதி பற்றி அறிந்திருக்க மாட்டார். ஆகவே அவர் 'ஆஹா!' வரைதான் வந்துசேர முடிந்தது. 'அஹோ!' பற்றி அவரால் அறிந்து கூறமுடியவில்லை. அவரது 'ஆஹா!'வும் பெருமளவு 'ஆ!' போன்றே உள்ளது. ஏனெனில் அவருக்கு சுயமாக அனுபவம் ஏற்படவில்லை. அவர் தர்க்கத்தின், சிந்தனையின் அடிப்படையில் 'ஆ!' என்று கூறுவதற்குரிய அனுபவங்களும் இருக்கலாம் என்று நினைத்தார். அவர் இக்ஹார்ட், தர்தூலியன், கபீர்தாஸ், மீராபாய் இவர்களைப் பற்றி சிந்தித்துள்ளார். அவ்வாறு சிந்தித்து 'ஆஹா!' கோட்பாட்டை நிறுவியிருக்கிறார். இது மதிப்பு வாய்ந்த கோட்பாடுதான். தர்க்க அறிவால் நிரம்பிக் குறுகிப் போயிருந்த மூளைகளில் 'ஆஹா!' நிலைக்கு அப்பாலும் உயர்ந்த நிலை இருக்க முடியுமென்று பதிவு செய்தார். ஆனால் ஃப்ரைங்கல் கூறியிருப்பது தொடக்க நிலையிலான விஷயம்தான். அதை நீட்டித்து, 'அஹோ!' வரை கொண்டு செல்ல வேண்டிய தேவை உள்ளது. அப்போதுதான் அதில் தெய்வத் தன்மை பிரவேசிக்கிறது.

**இரண்டாவது கேள்வி:**

**மனிதர்கள் தங்களிடம் இயல்பாகவே உள்ள ஆச்சரிய உணர்வை எந்தப் பெரிய விருப் பத்தை நிறைவேற்றிக் கொள்வதற்காகத் தியாகம் செய்து விடுகிறார்கள்? விளக்குங்கள்.**

**ஒ**வ்வொரு குழந்தையும் ஆச்சரியப்படும் உணர்வுடன்தான் பிறக்கிறது. எதைப் பார்த்தாலும் குதூகலமும் குறுகுறுப்பும் கொள்கிறது.

நம்மால் நம்ப முடியாதபடி அற்பத்திலும் அற்பமான பொருளிலும் ஆனந்தமடைகிறது. நதி அல்லது கடற்கரையில் அது கிளிஞ்சல் களையும் சங்குமணிகளையும் பொறுக்குகிறது. நமக்கு வைரமும் ரத்தினங்களும் எப்படியோ அதுபோல் குழந்தை சிவப்பு, மஞ்சள், பச்சை நிறக் கற்களை அள்ளுகிறது. 'இதையெல்லாம் வீட்டுக்கு எடுத்துப் போகக் கூடாது. இங்கேயே எறிந்துவிடு' என்று அப்பா-அம்மா அறிவுறுத்துவார்கள். எனினும் குழந்தை கொஞ்சம் கல்துகள்களையாவது. சட்டைப் பைகளில் ஒளித்து வீட்டுக்கு எடுத்துவந்து விடுகிறது. இரவில் அதன் படுக்கையில் கல்துகள்கள் சிதறிக் காணப்படுகின்றன. தாயார் விஷயத்தைப் புரிந்துகொண்டு அவற்றை நீக்கி விடுகிறாள்.

நமக்கு அற்பக் கல்லாகத் தெரிவது குழந்தைக்கு அற்புதப் பொருளாகத் தோன்றுகிறது. ஏனெனில் அதன் ஆச்சரியப்படும் ஆற்றல் இன்னும் மரத்துப் போகவில்லை. அதன் உயிரில் இன்னும் குறுகுறுப்பு மிஞ்சியுள்ளது. அது இப்போது தானே புதிதாக, பசுமையாகக் கடவுளின் வீட்டிலிருந்து வந்திருக்கிறது. அதன் கண்கள் பல்லொலிகளை ரசிக்கின்றன. கைகளின் தொடு உணர்வு உயிரோட்டத் துடன் உள்ளது. உணர்ச்சிகள் துடிதுடிப்புடன் உள்ளன. ஆகவே குழந்தை சிறிய பொருளைக் கண்டாலும் கைகொட்டிக் களிப்பை வெளிப்படுத்துகிறது. மிகச் சிறிய விஷயங்கள்கூட குழந்தையை சந்தோஷப்படுத்துவதை உன்னால் நம்ப முடிவதில்லை.

குழந்தை வளர-வளர அதன் வியப்பாற்றல் தேய்கிறது. நாம் அதை நசுக்கி விடுகிறோம். குழந்தைகளின் குறுகுறுப்பான ஆர்வங்களில் வளர்ந்தவர்கள், விருத்தர்கள் அக்கறை காட்டுவதில்லை. குழந்தைகளின் நடவடிக்கைகள் தொல்லையாக, தொந்தரவாகத் தோன்றுகின்றன. குழந்தைகள் கேள்வி மேல் கேள்வி கேட்கின்றனர். பெரியவர்களால் சரியாகப் பதில் கூற முடியவில்லை. அல்லது அவர்களிடம் பொய்யான பதில்தான் இருக்கிறது. அதைக் கூறிக் குழந்தைகளை ஏமாற்ற முடியாது. இதனால் பெரியவர்கள் சங்கடத்திற் குள்ளாகிறார்கள்.

இந்த 'உலகத்தை உண்டாக்கியவர் யார் என்று குழந்தை கேட்கிறது. கடவுள் உண்டாக்கினார் என்று நீ பதிலளிக்கிறாய். உடனே

குழந்தை. 'கடவுளை உண்டாக்கியவர் யார்?' என்று கேட்கிறது! நீ குழந்தையை மிரட்டுகிறாய். ஏனெனில் உனக்குப் பதில் தெரியாது. உனது அறியாமையைக் குழந்தை சுட்டிக் காட்டுவதுபோல் தோன்றுவதால் உனக்கு எரிச்சல் மூளுகிறது. "ஏய் அதிகபிரசங்கி, வாயை மூடு. பெரியவன் ஆனதும் நீயே பதில் தெரிந்து கொள்வாய்," என்று அதை அடக்கி விடுகிறாய்.

நீதான் வளர்ந்து விட்டாயே, பதில் தெரிந்து கொண்டாயா? இல்லையே. தட்டிக் கழிக்கிறாய். தப்பிக்கப் பார்க்கிறாய். "தொந்தரவு செய்யாதே, எனக்குப் பதில் தெரியாது," என்று சொல்ல உனக்குத் துணிச்சல் இல்லை. அல்லது, "நானும் பதில் தேடிக் கொண்டிருக்கிறேன். விடை கிடைத்தால் உனக்குச் சொல்கிறேன். அதுபோல் உனக்கு பதில் தெரிய வந்தாலும் என்னிடம் சொல்லு," என்று குழந்தையை சமாதானப்படுத்தினால் அது நேர்மையாக இருக்கும். இதனால் குழந்தையின் வியப்பாற்றல் மரத்துப் போகாமலிருக்கும்.

பள்ளிக்கூடத்தில் சிறுவன் ஆசிரியரிடம் உலகத்தைப் படைத்தது யார் என்று கேட்கிறான். ஆசிரியர் என்ன சொல்ல வேண்டும்? "எனக்குத் தெரியாது, தம்பி. இதுவரை அந்த விஷயம் ரகசியமாகவே உள்ளது. ஆனாலும் பலர் ஆராய்ச்சியில் ஈடுபட்டுள்ளனர்." அப்படிச் சொல்ல மாட்டார். வாயை மூடு என்பார். அப்பாவிற்கு அகங்காரம். தான் தந்தை ஸ்தானத்தில் இருப்பதால் தனக்கு எல்லாம் தெரியும் என்று இறுமாப்பு. இதேபோல் தான் தாயார் என்பதால் தனக்கு எல்லாம் தெரியும் என்று அம்மா நினைக்கிறாள். குறைந்த சம்பளம் வாங்கும் தொடக்கப்பள்ளி ஆசிரியர் கூட தனக்கு எல்லாம் தெரியும்போல் நடந்து கொள்கிறார். இது அவரது அஹங்காரம்.

மேலும், மூத்த சகோதர—சகோதரிகள், குடும்பப் பெரியவர்கள், சமூக மக்கள் ஆகியோரின் அகங்காரமும் சேர்ந்து கொள்கிறது. சிறுவயதுப் பையன் இத்தனை அகங்காரங்களின் பாதிப்பிலிருந்து தப்ப முடியுமா? அவனது மிருதுவான வியப்பாற்றல் உனது அகங்காரங்களால் நசுங்கி, தேய்ந்து, மறைந்து போகும். எல்லோருமாகச் சேர்ந்து அதை மாவாய் அரைத்து விடுவீர்கள். எங்கே கேள்வி கேட்டாலும் அதட்டல்தான் பதிலாகக் கிடைக்கிறது.

யாரிடமாவது கேள்வி கேட்டால், கேட்கும்போதே தான் ஏதோ தப்பு செய்து விட்டதுபோல் தோன்றுகிறது. யாரிடம் கேட்டாலும் கோபப் படுகிறார்கள். அல்லது அவர்கள் தரும் பதில் உண்மையாக இருப்பதில்லை. அல்லது முட்டாள்தனமான கேள்வி என்று புறக்கணித்து விடுகிறார்கள். சாதாரண மக்கள் மட்டுமில்லை, ஞானியர்களிடமும் இதே போக்குதான் காணப்படுகிறது.

ஜனகர் ஒருமுறை பெரிய அளவில் சாஸ்திரம் பற்றிய விவாத மகாநாடு நடத்தினார். அதில் பங்கேற்க அக்காலத்தில் மகாஞானியான யாக்ஞவல்கியரும் வந்தார். விவாதத்தில் வெற்றி பெற்றவருக்குப் பரிசளிக்க ஜனகர் அரண்மனை வாயிலில் ஆயிரம் பசுக்கள் நிறுத்தி வைத்திருந்தார். யாக்ஞவல்கியர் தம்முடைய சீடர்களைப் பார்த்து, "இந்தப் பசுக்கள் வெயிலில் நிற்கின்றன. இவற்றை நம் ஆசிரமத்திற்கு ஓட்டிச் செல்லுங்கள். அப்புறமாக நான் விவாதத்தில் கலந்து கொள்வேன்." என்றார். அவருக்குத் தமது வாதத் திறமை குறித்து அத்தனை நம்பிக்கை இருந்தது. மிகவும அஹங்காரியாகவும் இருந்திருப்பார். அவர் உண்மையிலேயே அறிஞர்தான். தமது வாதத் திறமையால் இதுவரையில் மற்ற அறிஞர்களைத் தோற்கடித்திருக்கிறார். ஆனால் ஜனகரின் ஆட்சிக் காலம் அறிவுலகின் பொற்காலம். விவாத மண்டபத்தில் கார்க்கி என்னும் பெண்மணி எழுந்து யாக்ஞவல் கியரிடம் பல கேள்விகள் கேட்டு அவரை சங்கடப்படுத்தினாள்.

ஆண்களைவிட பெண்களே குழந்தைகளுக்கு நெருக்கமாக இருப்பவர்கள். இதனால் அவர்களது இளமை நீடிப்பதுடன் முகத்தில் அப்பாவித்தனமும் குழந்தைத்தனமும் தென்படுகிறது. வளர்ந்த பெண்களும்கூட குழந்தைகளைப் போலவே சட்டென்று அழு கிறார்கள், சிரிக்கிறார்கள். ஆண்கள் உலர்ந்து, வறண்டு கிடப்பதால் அவர்களுக்கு இதெல்லாம் சாத்தியமில்லை. அறிஞர்களாயினும் உலர்ந்து போயிருந்த அவர்களை யாக்ஞவல்கியர் விவாதத்தில் தோற்கடித்து விட்டார்.

ஆனால் உயிர்த்துடிப்புமிக்க கார்க்கி அவரை விவாதத்திற்கு அழைத்தாள். அந்நாட்களில் பெண்கள் பொதுசபையில் வாதிடத் தடை கிடையாது. பிற்காலத்தில்தான் பெண்களுக்கு அனுமதி மறுக்கப் பட்டது. வேதங்கள் பயிலவும் கூடாதெனக் கூறப்பட்டது. இது

மாபெரும் அநியாயம். கார்க்கியின் துணிச்சல் இந்தத் தடைக்கு மூலகாரணமாக இருக்கலாம். அவள் குழந்தைகள் போலவே வியப்பாற்றால் பெற்றிருந்தாள். அவள் எளிதான கேள்விகளே கேட்டாள். அவையிலிருந்த பண்டிதர்கள் சிக்கலான கேள்விகளே கேட்டனர். பண்டிதர்களின் கேள்விகளுக்கு யாக்ஞவல்கியர் பதிலளித்து விட்டார்.

கடினமான கேள்விகளுக்குப் பதில் சொல்வது சுலபம். எளிதான கேள்விகளுக்குப் பதிலளிப்பதுதான் சிரமம். ஏனெனில் அநேகமாக பதிலே இருப்பதில்லை. கேள்வி கடினமாக இருப்பின் வெவ்வேறு கோணங்களிலிருந்து அதை அணுகி விளக்கமான பதில் தயாரிக் கலாம். 'மஞ்சள் நிறம் என்றால் என்ன?'' என்று எளிதான, நேரடியான கேள்வி கேட்டால் என்ன செய்வாய்? விளக்குவது கடினம். மஞ்சள் நிறத்தை வரையறுத்துக் கூற முடியாது. அந்நிறத்திலுள்ள பொருளைக் காண்பித்துச் சொன்னாலும் கேள்வி அப்படியேதான் உள்ளது.

கார்க்கி கஷ்டமான கேள்வி எதுவும் கேட்கவில்லை. அவள் சராசரிப் பெண்ணாக இருந்திருப்பாள். அதுதான் பிரச்சினை. அவள் விதுஷியாக இருந்திருந்தால் யாக்ஞவல்கியர் அவளை வாதத்தில் தோற்கடித்திருப்பார். அவள் என்ன கேட்டாள் – இந்த பூமியைத் தாங்கி நிற்பது எது அல்லது யார்?

இதென்ன தொல்லைபிடித்த கேள்வியாக இருக்கிறதே என்று யாக்ஞவல்கியர் உடனே பயந்திருப்பார். ஏனெனில் இது சாஸ்திரம் சம்பந்தமான கேள்வி இல்லையே. ஆமை தாங்குவதாக புராணத்தில் சொல்வதையே தமது பதிலாகச் சொன்னார். இந்த பதில் குழந்தைத் தனமானது. இது பொய்யான பதிலும்கூட. குழந்தைபோலவே கார்க்கி விடாமல் அடுத்த கேள்வி கேட்டாள், ''அப்படியானால் அந்த ஆமை எதை ஆதாரமாகக் கொண்டு அல்லது எதன் மீது நிற்கிறது? ஆகவேதான் கார்க்கி சங்கடமான நிலையை ஏற்படுத்தி விட்டாள் என்கிறேன். ஏனெனில் அவள் சாதாரணப் பெண். எதற்கும் ஆச்சரியப்படுகின்றவள்.

யாக்ஞவல்கியரின் பயம் அதிகரித்திருக்கும். இவள் பிரச்சினை ஏற்படுத்துகிறாள். மேலும் – மேலும் கேள்விகள் கேட்பாள்

போலுள்ளது. பூமி, யானை மேல் நிற்கிறது என்று மாற்றிக் கூறியிருந் தாலும் அத்துடன் விட்டிருக்க மாட்டாள். அந்த யானை எதன்மீது நிற்கிறது என்று கேட்டிருப்பாள். இதற்கு என்ன முடிவு? ஒரு தீர்வும் கிடையாதே.

இவள் வாயை மூட வேண்டும் என அவர் எண்ணினார். எல்லா பண்டிதர்களும், ஆசிரியர்களும், பெற்றோர்களும் பதில் கூறுவதற்கு முயலாமல், வாயை மூட வைப்பதில்தான் ஆர்வம் காட்டுகின்றனர். யாக்ஞவல்கியர் கூறினார் – எல்லாமும் கடவுள் மீது நிற்கின்றன. அனைத்தையும் அவர்தான் தாங்கிக் கொண்டிருக்கிறார்.

கார்க்கி சொன்னாள், "சரி, இன்னும் ஒரு கேள்விதான் பாக்கியுள்ளது. அந்த கடவுளைத் தாங்கி நிற்பது யார்?"

அவள் குழந்தைபோல் அப்பாவியாகக் கேள்வி எழுப்புகிறாள். கேள்வியும் குழந்தைகள் கேட்கும் விதமாக உள்ளது. ஆனால் யாக்ஞவல்கியருக்குக் கோபம் மூண்டது. "கார்க்கி! நீ அதிகபிரசங்கித் தனமாகப் பேசுகிறாய். இதற்கு மேலும் நீ கேள்வி கேட்டால் உன் தலை உன் உடலில் இருக்காது!"

இது ஒரு பதிலா? இத்தகைய பதிலைத்தான், 'இதற்கு மேலும் கேள்வி கேட்டால் உதை விழும்' என்ற பதிலைத்தான், எல்லா அப்பாக்களும் கூறி வருகிறார்கள். அதிகபிரசங்கித்தனமான கேள்வி என்பது என்ன? அப்படித் தனி விதமான கேள்வி உண்டா? எல்லாக் கேள்விகளுமே கூடுதலான விசாரிப்புகள் மாதிரிதான். கேள்வியே கேட்காதே அல்லது பதிலே சொல்லாதே. ஒரு கேள்வியை அதிகபிரசிங்கத்தனமானது என்று பழிப்பதற்குக் காரணம் அல்லது பொருள், அதற்குப் பதில் தெரியாது என்பதாலும் இருக்கலாம். இந்த அறியாமை காரணமாகவே கோபம் எழுகிறது.

யாக்ஞவல்கியர்—கார்க்கி வாதம் நடந்த காலத்திற்குப் பிறகு இந்தியாவில் பெண்கள் வேதம் கற்பது தடை செய்யப்பட்டது. பெண்கள் வேதஞானம் பெற்றால் ஆபத்து என்று நினைக்கப்பட்டது. படித்த பெண்கள் பண்டிதர்களைக் கேள்விகள் கேட்டு சங்கடப் படுத்தினர். இந்தியாவில் பெண்களுக்கு இருண்ட காலம் ஆரம்பித்தது. அவர்களது சிந்தனை உரிமை பறிக்கப்பட்டது.

குழந்தைகளின் விஷயத்திலும் நாம் இப்படித்தான் செய்தோம். இச்சூழ்நிலையில் குழந்தை எவ்வளவு காலம்தான் தனது வியப்பாற்றலைக் காப்பாற்றிக் கொள்ள முடியும்? குழந்தை சீக்கிரமோ, தாமதமாகவே நிலைமையைப் புரிந்து கொள்கிறது. 'யாருக்கும் என் கேள்விகளுக்குப் பதில் சொல்வதில் ஆர்வம் இல்லை. நான் ஆர்வமாகக் கேள்வி கேட்டால் நான் ஏதோ பாபம் செய்ததுபோல் எல்லோரும் நினைக்கிறார்கள்.' இப்போது குழந்தைகள், வளர்ந்தவர்களின் எதிர்ப்பான சமிக்ஞைகளைப் புரிந்து கொண்டு, கேள்வியைத் தமக்குள்ளேயே புதைத்துக் கொள்கிறார்கள். அன்றே அவர்களது குழந்தைப் பருவம் முடிந்துவிட்டதெனலாம். பிறகு குழந்தை வயோதிகத்தை நோக்கி முன்னேறுகிறது. வியப்பாற்றல் தொடராவிடில் மனிதன் சாவை நோக்கிப் பயணிக்கத் தொடங்கி விட்டான் என்று பொருள். ஏனெனில் வியப்பு இருக்குமிடத்தில்தான் வாழ்க்கை வளர்ச்சியும் சாத்தியம்.

எந்த உயர்ந்த விருப்பத்தை அடைவதற்காக வியப்பாற்றலை நாம் கைவிடுகிறோம்? ஒரே வார்த்தையில் சொல்வதானால் – மக்களின் அங்கீகாரம் அல்லது ஏற்பு. சிறுவயதினர் அப்பா – அம்மாவின் ஏற்பை விரும்புகின்றனர். ஏனெனில் அவர்கள் பெற்றோரைத்தான் எதற்கும் சார்ந்துள்ளனர். அவர்கள் பெற்றோரின் அன்பிற்கு ஏங்குகின்றனர். தங்களது எச்செயலாலும் பெற்றோர் கோபப்படவோ, கவலைப்படவோ கூடாதென எதிர்பார்க்கின்றனர். இல்லாவிடில் அவர்களது அன்பு கிடைக்காமல் போய்விடும். பெற்றோர்களுக்கு அடுத்து ஆசிரியர்களுக்குக் கோபம் வரும்படி கேள்விகள் கேட்கக் கூடாதென்றும், அவர்களது அன்பும் அங்கீகாரமும் கிடைக்க வேண்டும் என்றும், எல்லோரும் தங்களுடன் ஒத்துழைக்க வேண்டும் என்றும் சிறுவயதினர் எதிர்பார்ப்பதால் அவர்களது வியப்பாற்றல் மடிந்து விடுகிறது. அந்த இடத்தை அஹங்காரம் கைப்பற்றுகிறது. அகங்காரத்தின் காரணமாகத்தான் நாம் மற்றவர்கள் நம்மை கௌரவிக்க வேண்டும்; நம்மை அவமதிக்கக் கூடாது; அனைவரும் நம்மை அங்கீகரிக்க வேண்டும்; நம்மை நல்லவன், சாந்தமானவன், பண்பாளன் என்றெல்லாம் கூற வேண்டும் என்று விருப்பப் படுகிறோம்.

கேள்வி கேட்பவன் உபத்திரவம் செய்பவனாகத் தோன்றுகிறான். எல்லை மீறிக் கேள்வி கேட்பவன் கலகக்காரனாகத் தெரிகிறான்.

ஒருவன் ஒவ்வொரு விஷயம் குறித்தும் துருவித் துருவிக் கேள்விகள் கேட்டால் பெரிய தொல்லையாகி விடும்.

நான் சிறியவனாக இருந்தபோது என்னை எந்தக் கூட்டத்திற்கும் போகவிட மாட்டார்கள். என்னால் அவர்கள் பெயர் கெடுவதாகச் சொல்வார்கள். ஏனென்றால் கூட்டத்தில் நான் எழுந்து கேள்வி கேட்பதை மற்றவர்கள் தடுக்க முடியாது. யாராவது துறவி பிரசங்கம் செய்து கொண்டிருப்பார். நான் நடுவில் திடீரென எழுந்து நிற்பேன். இந்த உபத்திரவம் செய்யும் பையன் இங்கேயும் வந்துவிட்டான் என்று கூட்டத்தினர் கோபம் கொள்வார்கள். ஏனென்றால் என்னால் கேள்வி கேட்காமல் இருக்க முடியாது. கிடைக்கும் பதிலோ திருப்திகரமாக இல்லாமல் மேலும் – மேலும் கேள்வி கேட்கத் தோன்றும். ஆகவே பிரசங்கம் செய்ய வரும் துறவிகள், மடத்தலைவர்கள் என்மீது கோப மாக இருப்பார்கள். கல்லூரியிலிருந்து நான் நீக்கம் செய்யப்பட்டேன். அங்கும் வகுப்பில் கேள்வி கேட்டதால் ஆசிரியர்கள், 'ஒன்று, நீ இரு, அல்லது நாங்கள் இருக்கிறோம்' என்பார்கள்.

**நா**ன் கல்லூரியில் தத்துவ இயல் (ஃபிலாஸபி) பாடம் எடுத்துக் கொண்டேன். ஆனால் தத்துவ இயல் பேராசிரியரோ "நீ வகுப்பில் கேள்வி கேட்டால் நான் வேலையை விட்டுப் போய்விடுவேன் என்பார். நிலைமை எல்லை மீறிவிட்டது. தத்துவ இயல் கற்பிப்பவர் வகுப்பில் யாரும் கேள்வி கேட்கக் கூடாது என்றால், பெரிதாக என்ன தத்துவம் சொல்லித்தர முடியும்?

அவரது சிரமத்தைப் புரிந்து கொள்கிறேன். முன்பைவிட இப்போது அவர் பட்ட சிரமம் நன்கு புரிகிறது. ஏனென்றால் நான் கேள்விகள் கேட்டதால் வகுப்பில் பாடம் நடத்துவது தடைப்பட்டது. என் கேள்விகளுக்கு முடிவிருந்தால்தானே. அவரோ எந்தக் கேள்விக்கும் பதில் சொல்லியாக வேண்டியிருந்தது. தனக்குத் தெரியாது என்று அவர் நிலையில் ஒப்புக் கொள்வது சங்கடமானது. அவர் ஏதாவது பதில் சொல்வார். அதிலுள்ள தவறை நான் சுட்டிக் காட்டுவேன்.

இப்படி நான் இடைஞ்சல் செய்ததால் எட்டு மாதம் வகுப்பு நடந்தும் முதல் பாடத்தைக் கடக்கவில்லை. இதனால் அவர் பயந்து

விட்டதையும் என்னால் புரிந்துகொள்ள முடிந்தது. ஆனால் அவர் 'பதில் தெரியாது' என்று மட்டும் சொல்லியிருந்தால் இந்த பிரச்சினை எப்பொழுதோ முடிந்து போயிருக்கும். பிறகு நான் அவரை தொந்தரவு செய்திருக்க மாட்டேன். தெரியாததைத் தெரியும் என்று சொன்னதால்தான் வாழ்க்கை முழுதும் விவாதம் செய்யத் தயாராக இருந்தேன்.

எட்டு மாதங்கள் சரியாக பாடம் நடத்த முடியாமல் ஆசிரியருக்கு தான் சிக்கலில் மாட்டிக் கொண்டது புரிந்தது. தேர்வுகள் நெருங்கிக் கொண்டிருந்தன. மற்ற மாணவர்களின் நலனையும் அவர் கவனிக்க வேண்டியிருந்தது. மாணவர்களும் காலப்போக்கில் வகுப்பிற்கு வருவதை நிறுத்தி விட்டனர்! வகுப்பிற்கு வருவதால் பயனில்லை என்பது அவர்களுக்குப் புரிந்தது. வகுப்பில் நானும் ஆசிரியரும் மோதுவதுதான் நடந்ததே தவிர, பாடத்தில் முன்னேற்றமில்லை. பாடம் நடப்பதற்கான வாய்ப்பும் இல்லை. நான் கேட்கும் கேள்விக்கு ஆசிரியர் தரும் பதிலிலிருந்து புதிய கேள்வி உற்பத்தியாகிக் கொண்டிருந்தது.

அவர் கொஞ்சம் பணிவு காட்டியிருந்தால் பிரச்சினை தீர்ந்து போயிருக்கும். "உங்களுக்கு என் கேள்விக்குப் பதில் தெரியாது என்று ஒரு தடவையாவது சொன்னால் போதும். விஷயம் முடிந்தது. அதற்கு மேலும் உங்களைக் கேள்வி கேட்டுத் தொந்தரவு செய்வது நாகரிகமாக இருக்காது. ஆனால் நீங்களோ பதில் தெரியும் என்கிறீர்கள். அதனால் நான் கேள்வி கேட்கும் கட்டாயத்திற்கு உள்ளாகியிருக்கிறேன்," என்று அவரிடம் விளக்கினேன்.

கடைசியில் அவர் பதவியை ராஜினாமா செய்துவிட்டார்! அதற்குமுன் அவர் மூன்று நாள் விடுப்பு எடுத்துக் கொண்டு வீட்டிலேயே இருந்து விட்டார். 'அந்த மாணவன் வகுப்பில் இல்லாவிட்டால்தான் நான் பாடம் நடத்த வருவேன்' என்று தெரிவித்து விட்டார். இவ்வாறு ஆசிரியர் மாணவனிடம் வியப்பாற்றல் மிஞ்சியிருக்க விடுவதில்லை. தேர்வில் என் விடைத்தாளைத் திருத்துவது அவர் கையில்தான் இருந்தது. ஆகவே எனக்கு நல்ல புத்தி வந்துவிடும் என்றும், இனி வகுப்பில் நான் அமைதியாக இருப்பேன் என்றும் அவர் எதிர்பார்த்தார். நான் அவரிடம்

சொன்னேன், "தேர்வு முதலியவை பற்றி எனக்குக் கவலையில்லை. என் கேள்விகளுக்குப் பதில் கிடைத்து விட்டால் எல்லாவற்றிற்குமே தீர்வு கிடைத்துவிட்ட மாதிரிதான்."

ஆனால் சமூக அங்கீகாரம் வேண்டுமென்றால் நாம் விட்டுக் கொடுத்துப் போக நேரிடும். மக்கள் என்ன சொல்கிறார்களோ அது சரியென்று ஒப்புக் கொள்ள வேண்டியிருக்கும்.

எந்தக் காரணத்தால், எந்த பெரிய குறிக்கோளுக்காக ஆச்சரிய உணர்வு அழிக்கப்படுகிறது என்று நீ கேட்டாய்.

அஹங்காரத்தால் ஒன்றை அடைய வியப்புணர்வு அழிக்கப் படுகிறது. சமூகத்தில் வெற்றி பெற வேண்டுமானால் ஆச்சரியப் படுவதைக் கைவிட வேண்டியிருக்கும். ஏனெனில் அன்றாட வாழ்க்கையில் வெற்றிபெற மற்றவர்களின் ஒத்துழைப்பு கட்டாயம் தேவைப்படுகிறது. அதற்குமுன் அவர்கள் நம்மை மதிப்பது, அங்கீகரிப்பது அவசியமாகிறது.

ஆனால் தோற்பது உனக்கு சம்மதமானால் உனது வியப்புணர்வை யாராலும் அழிக்க முடியாது. ஆனால் இது கடினமான முடிவு. யார்தான் தோற்றுப் போக ஒப்புக் கொள்வார்கள்? நீ குறிப்பாக எதுவும் ஆக விரும்பாவிடில், முக்கியத்துவம் பெற முயலாவிடில், உன் ஆச்சரிய உணர்வை யாராலும் அழிக்க முடியாது. ஆனால் அஹங்காரத்திற்கென்று சுயமான ஒரு விருப்பம் உண்டு. பாராட்டுச் சான்றிதழ் தேவைப்படுகிறது; பரிசு தேவைப்படுகிறது. ஆசிரியர்கள், பெற்றோர், ஊரார், சமூகத்தினரின் பாராட்டு தேவைப்படுகிறது. எவ்வளவு அருமையான மகன் என்று மக்களின் மதிப்பு தேவைப் படுகிறது. ஆனால் இதெல்லாம் வேண்டும் என்றால் வியப்பாற்றல் மரித்துவிடும். உன் உள்ளத்தின் குதூகலம், ஆழ்ந்த அனுபவம் பெறும் ஆற்றல் உணர்விழந்து விடும். உன் உள்ளம் கற்சாலை போலாகி விடும். உள்ளத்தின் ரசம் – ஈரத் தன்மை – உலர்ந்துவிடும். நீ பாலை நிலமாகி விடுவாய். வெளியுலகில் வெற்றி பெறுவாய். ஆனால் வாழும் அனுபவத்தை இழப்பாய். சாவதற்கு முன்பே செத்து விடுவாய்.

நான் சொல்வது இதுதான்: தாராளமாகத் தோல்வியடை. அது பற்றிக் கவலைப்படாதே. வியப்பாற்றலை மட்டும் வாடவிடாதே:

இழந்து விடாதே. ஏனெனில் ஆச்சரிய உணர்வு கடவுளை நோக்கித் திறக்கும் கதவாகும். உன்னை ஆச்சரியத்தால் நிரப்பிக்கொள். உனது ஆச்சரிய உணர்வு எவ்வளவு விசாலமாக உள்ளதோ, ஞானத் தேடல் எவ்வளவு ஆழமாக உள்ளதோ, அந்த அளவிற்கு விரிந்து பரந்த கடவுள் உனக்குள் இறங்கிவர வாய்ப்புள்ளது. கேள்வி மேல் கேள், உரக்கக் கூப்பிடு, அலைந்து தேடு – கடவுள் உனக்குக் கிடைப்பார்.

ஏசுநாதர், 'தட்டுங்கள் திறக்கப்படும்; கேள்வி கேளுங்கள், பதில் கிடைக்கும்; கேளுங்கள், நிரப்பப்படுவீர்கள்' என்று சொன்னதை இங்கே ஒப்பிடலாம்.

ஆனால் உள்ளத்தின் உள்ளே நீ உணர்ச்சியற்றவனாக இருந்தால், நீ கேள்விகள் கேட்பதே இல்லையெனில், ஞானத்தைத் தேடுவதே கிடையாதெனில், நீ ஞான யாத்திரை மேற்கொள்ளு வதில்லையெனில், பிள்ளையார்போல் இருந்து விடுகிறாய் எனில் மக்கள் நம்மைப்போல்தான் இவனும் என்று மகிழ்வர். கேள்வி கேட்டுத் தொந்தரவு செய்யாமல் இருந்தால் பெற்றோர்களும் பாராட்டுகிறார்கள். ஆனால் சும்மா இருக்கும் நிலை செத்துப் பிறந்த குழந்தையின் நிலைபோன்றது. பிடித்துவைத்த பிள்ளையார் மாதிரி இல்லாவிடில் உபத்திரவம் பிடித்த சிறுவன் என்று நினைக்கிறார்கள். அவன் எத்தகையவன்? அவன் பெற்றோர் நம்பும் கொள்கைகளைச் சிதைக்கிறான். அவர்களால் பதில் கூற முடியாத கேள்விகளைக் கேட்கிறான். அவன் வாழும் விதத்தைப் பெற்றோர்களால் சகிக்க முடிவதில்லை. பெற்றோர்கள் ஆத்திகர்களெனில் மகனின் கேள்விகளில் நாத்திக வாதத்தை உணர்கிறார்கள். பெற்றோர்கள் பரம்பரைப் பழக்கங்களில் ஊறியவர்களெனில் மகன் அவற்றைப் புறக்கணிப்பது கண்டு வருந்துகிறார்கள்.

அரசாங்கம், காவல்துறை, நீதிமன்றங்கள் கொண்ட இந்த மாபெரும் சமூகம் முழுவதுமே ஆச்சரிய உணர்வைக் கொன்றுபோடக் காத்திருக்கின்றன. உனது ஆச்சரிய உணர்வு மரித்துவிட்டால் நீ பிறகு யந்திரம்போல் ஆகிவிடுவாய். அத்தகையவனைத்தான் சமுகம் தனக்குப் பொருத்தமானவன் என நினைக்கிறது. சமூகக் கடமைகளுக்கு உபயோகமானவன் என நினைக்கிறது. திறமைசாலி என்று பாராட்டு கிறது. பிறகு நீ, மறுத்துப் பேசமாட்டாய்; கேள்வி எழுப்பமாட்டாய். சொல்லும் வேலையை வாய் திறவாமல் செய்து முடிப்பாய்.

இராணுவத்தில் இதுதான் நடக்கிறது. அங்கே மணிக்கணக்காக உடற்பயிற்சி நடைபெறுகிறது. 'லெஃப்ட், ரைட்' என்று ஏன் இப்படி ஒரே மாதிரியான நீண்ட நேரப் பயிற்சி தரப்படுகிறது தெரியுமா? அதற்கு மனத்தத்துவ ரீதியான காரணம் உள்ளது. இராணுவத்தில் ஒவ்வொரு மனிதனின் (சிப்பாயின்) தனித்தன்மையைக் கொல்ல விரும்புகிறார்கள். உயரதிகாரிகள் சொல்வதுபோல் அங்கே நடந்துகொள்ள வேண்டும். ஏன் என்று கேட்கத் தோன்றக்கூடாது.

தெருவில் போகும் ஒருவனைப் பார்த்து 'லெஃப்ட், ரைட்' திரும்பு என்றால் அவன் ஏன் என்று கேட்பான். இது இயற்கையே. ஆனால் இராணுவத்தில் ஏன் என்று கேட்டால் தப்பான கேள்வியாகக் கருதப்படும். அங்கு கட்டளையைப் பின்பற்றுவது மட்டுமே தேவை. உன்னிடம் சொல்லப்படுவதை நீ யோசிக்காமல் செய்து முடிப்பதற்கு ஏற்றதாக உன் மூளையைச் செதுக்குவதே ராணுவப் பயிற்சியின் நோக்கம். அப்படிப் பணிந்து போனால்தான் உனக்குச் செயல்திறமை உள்ளதெனக் கருதப்படும். யோசித்தால் நேரம் செலவாகிறது. இடது–வலது என்று சொன்னதுமே பின்பற்றாவிடில் நீ சிப்பாய் ஆக முடியாது. சிப்பாயாவதன் அர்த்தம் என்ன? அதாவது, உன் உள்ளத்தில் ஒரு சிந்தனை அலைகூட எழக்கூடாது; நீ ஜடம்போல, உணர்ச்சியற்றவனாகிவிட வேண்டும். நீ இயந்திரம்போல் செயல்பட வேண்டும். லெஃப்ட், ரைட் என்னும் போதெல்லாம் சுயசிந்தனையின்றி அவ்வாறே சட்டென்று திரும்புவாய். உன்னை உன்னாலேயே தடுக்க முடியாது.

மனத்தத்துவ நிபுணரான வில்லியம் ஜேம்ஸ்* ஒரு சம்பவம் கூறுகிறார். அவர் முதல் உலகப் போர் சமயம் ஒருநாள் ஒரு ஹோட்டலில் உட்கார்ந்திருக்கிறார். வெளியே ஒரு சிப்பாய் முட்டைகள் நிறைந்த கூடையைத் தலையில் தூக்கி வைத்துச் செல்வதைப் பார்த்தார். ஒரு மனிதன் எந்த அளவிற்கு இயந்திரம் போல் இயங்கக்கூடும் என்பதை ஜேம்ஸ் நிரூபிக்க விரும்பினார். அவர் உரக்க, 'அட்டென்ஷன்' என்று முழங்கினார். அந்த சிப்பாய் பணியிலிருந்து ஓய்வுபெற்று பத்து ஆண்டுகள் ஆகியிருக்கும். 'நிமிர்ந்து நில்' என்ற ஆணை கேட்டதும் அவன் சட்டென்று கைகளைத் தொங்கவிட்டு விறைப்பாக நின்றான். கூடை சரிந்து, முட்டைகள் தரையில் விழுந்து நொறுங்கி விட்டன. அவனுக்குக்

* William James (1842-1910), U.S. philosopher and psychologist, author of 'The Varieties of Religious Experience.'

கோபம் பொங்கியது. "எந்த முட்டாள் அட்டென்ஷன் சொன்னது?" என்று கத்தினான். ஜேம்ஸ் அதற்கு, "யார் சொன்னால் என்ன? அட்டென்ஷன் என்ற சொல்லை உபயோகிக்க எனக்கு உரிமை உண்டு. உன்னைக் குறிப்பிட்டு அட்டென்ஷனில் நிற்கச் சொல்லவில்லையே," என்றார்.

அவன் சொன்னான், "முப்பது வருஷம் பணிக்காலத்தில் அட்டென்ஷன் கேட்டுப் பழகி விட்டேன். அதற்குக் கீழ்ப்படிவது ரத்தத்தில் கலந்துவிட்டது. அதை நீங்கள் கேலிசெய்தது சரியில்லை."

இத்தகைய இயந்திரத்தனத்தை சிப்பாயிடம் நிலைநாட்ட வேண்டியுள்ளது. ஆகவே சிப்பாயைப் பார்த்து 'கொல், ஷூட்' என்று ஆணையிட முடிகிறது. அவன் மறுப்பதில்லை; எதிர்ப்பதில்லை. எதிரிப் படை ஆளை ஏன் கொல்ல வேண்டும்; அவன் ஒரு கெடுதலும் செய்யவில்லையே என்று சிப்பாய் கூறுவதில்லை. அவன் எதுவும் யோசிப்பது இல்லை. 'எனக்கு வீட்டில் குழந்தைகள் — மனைவி இருப்பதுபோல் எதிரி சிப்பாய்க்கும் இருப்பார்கள். வயதாகிப் போன இவன் தாயார் இவனையே நம்பி வாழ்ந்து கொண்டிருப்பாள். இவன் தந்தை கிழவராகியிருப்பார். பார்வை இழந்தவராகவும் இருக்கலாம். இவன்தான் அவருக்கு முதுமையில் ஊன்றுகோல், சகாயம். ஆனால் 'ஷூட்' என்று ஆணை கிடைத்ததும் சுட்டு விடுகிறான். ஏனெனில் அவன் இயந்திரம்போல் ஆகிவிட்டான்.

எந்த ராணுவ அதிகாரி ஹிரோஷிமாவில் அணுகுண்டு வீசி,* பத்து நிமிடத்தில் ஒரு லட்சம் பேரைச் சாம்பலாக்கினானோ அவன் முகாமுக்குத் திரும்பி வந்து நன்றாகத் தூங்கினானாம்! மறுநாள் காலை பத்திரிகை நிருபர்கள் அவனால் தூங்க முடிந்ததா என்று விசாரித்ததற்கு அவன், "ஏன் கேட்கிறீர்கள்? ஆழ்ந்து தூங்கினேன். கட்டளையை நிறைவேற்றினேன். என் பணி முடிந்துவிட்டது. எத்தனை பேர் செத்தார்கள் — எத்தனை பேர் சாகவில்லை என்பதற்கும் எனக்கும் என்ன சம்பந்தம்? குண்டு வீசக் கொள்கையளவில் முடிவு செய்தவர்கள் கணக்கப் போட்டுக் கொள்ளட்டும். இரண்டு குறிப்பிட்ட இடங்களில் குண்டுபோடு என்று என்னிடம் சொல்லப்பட்டது. அதை நிறை வேற்றியாகிவிட்டது." என்று பதறாமல் கூறினான்.

---

* 6 ஆகஸ்ட் 1945 அன்று ஹிரோஷிமாவிலும், மூன்று நாள் கழித்து நாகசாகியிலும் அணுகுண்டு வீசப்பட்டது.

அவன் கையால் வீசிய குண்டினால் லட்சக் கணக்கானவர்கள் இறந்துவிட்டனர், சாம்பலாகி விட்டனர் என்றாலும் அவனுக்கு இரவில் தூக்கம் வந்ததாம். இதற்கு என்ன அர்த்தம்? யோசியுங்கள். இவர்களில் யாரையும் அவனுக்குத் தெரியாது. யாரும் அவனுக்குக் கெடுதல் செய்யவில்லை. அவனிடம் யாருக்கும் பகைமை இல்லை. கொல்லப்பட்டவர்களில் எத்தனையோ பேர் தாய்ப்பால் குடித்துக் கொண்டிருந்தவர்கள். அந்தக் குழந்தைகள் விரும்பினாலும் யாருக்கும் கெடுதல் செய்திருக்க முடியாது. எத்தனையோ கர்ப்பவதிகளும் கொல்லப்பட்டனர். கர்ப்பத்திலிருந்த சிசுக்கள் யாருக்கு என்ன கெடுதல் செய்தன? ஒரு சிறுமி 'ஹோம் வர்க்' எழுத மாடிப்படியில் ஏறிக் கொண்டிருக்கிறாள். அந்த இடத்திலேயே உடம்பு உருகிச் சுவற்றில் ஒட்டிக் கொண்டது. அவளது புத்தகப்பை, புத்தகங்களும் சாம்பலாக உருகி அந்த இடத்தில் ஒட்டிக் கொண்டு விட்டன. இப்படி வெவ்வேறு வகையில் லட்சம் மனிதர்கள் சாம்பலாகி விட்டனர். ஆனால் இந்த சிப்பாயோ அன்றிவு ஆனந்தமாகத் தூங்கினேன் என்கிறான்!

ஏனெனில் அவன் ராணுவ வீரன். கட்டளையை நிறை வேற்றுவதுதான் அவனது தலையாய பணி. விசித்திரம் என்னவெனில் உலகத்தில் கட்டளையை நிறைவேற்றுபவர்களால்தான் அதிகக் கெடுதல்கள் விளைந்திருக்கின்றன. கட்டளைகளைப் புறக்கணித்தவர் களால் அதிகக் கெடுதல் உண்டானதில்லை. நல்லதோர் உலகத்தைப் படைக்க வேண்டுமாயின் கட்டளைகளைக் கண்மூடித்தனமாகப் பின்பற்றுவதைக் கைவிட வேண்டும். எப்பொழுது கட்டளைகளைக் கடைப்பிடிப்பது, எப்பொழுது மீறுவது என்று நமக்கு விவேகம் இருக்க வேண்டும்.

அணுகுண்டு வீசியவன் மறுத்திருக்க முடியும். "வேண்டு மானால் என்னைச் சுட்டுக் கொல்லுங்கள். ஆனால் நான் லட்சம் மனிதர்களைக் கொல்ல இசைய மாட்டேன். என்னைக் கொல்வதால் அவர்கள் பிழைப்பார் களெனில் அப்படியே ஆகட்டும்," என்று கூறியிருக்கலாம். இப்படி ஒவ்வொரு சிப்பாயும் அணுகுண்டு வீசமாட்டேன் என்று மறுத்திருந்தால் உலகில் ஒரு புரட்சியே நிகழ்ந்திருக்கும். மனிதனிடம் இத்தனை மனோபலம் கிடையாதா? சிந்தனை ஆற்றல் கிடையாதா? ஆனால் 'டிரில்' என்ற பெயரால் மணிக்கணக்காய் பயிற்சி கொடுக்கப்பட்டு, கொஞ்சம் – கொஞ்சமாக சிப்பாய் சாவி கொடுத்த பொம்மைபோல் ஆகிவிடுகிறான்.

சிப்பாயும் சந்நியாசியும் சிந்தனையிலும் செயலிலும் எதிரெதிர் துருவங்கள். தனக்கு எது நியாயமாகப் படுகிறதோ அதையே சந்நியாசி செய்வார். விளைவு குறித்து அலட்டிக் கொள்ள மாட்டார். சிப்பாயோ மற்றவர்கள் சொன்னதைச் செய்வான். விளைவு பற்றிக் கவலைப்படுவதில்லை. சந்நியாசி அடிப்படையிலேயே புரட்சியாளராகத்தான் இருப்பார். அதாவது உண்மையான சமயவாதி புரட்சிக்காரனாக இருப்பான். புரட்சி மனப்பான்மையற்றவன் உண்மையான பக்தனில்லை. சிப்பாய் போலவே இந்த பக்தனும் சொல்லப்பட்டதைச் செய்வான். அவன் கோயிலுக்குப் போவான். அர்ச்சனை — பூஜை முடித்துவிட்டு வருவான். அதுவும் 'டிரில்' போலச் செய்வான். இப்படி பூஜைசெய், தண்ணீர் தெளி, கங்கைநர் தெளி, இப்படி மணி அடி, நெற்றியில் நாமம் — விபூதி — பொட்டு இப்படித் தரித்துக்கொள் என்று சொன்னால், ஏன் என்று கேட்காமல் அப்படியே செய்வான். இதெல்லாம் 'டிரில்' மாதிரிதான். உண்மையான மதவாதி தனது உள்விவேகத்தின் அடிப்படையில் வாழ்கிறான்.

இந்த உலகம் வெளிப்பார்வைக்கு எப்படியிருந்தாலும் மதத்திற்கு மிகவும் முரணானது. உலகில் முன்னூறு மதங்கள் உள்ளன. ஆனால் இந்த முன்னூறும் உண்மையான மதத்தை அழித்துப் போட்டுவிட்டன. நீ கண்மூடித்தனமாக ஆணையைப் பின்பற்றினால் உண்மை மதம் அழிந்து போகிறது. அதற்காக நீ ஒவ்வொரு கட்டளையையும் எதிர்க்க வேண்டும் என்று நான் சொல்ல மாட்டேன். என் பேச்சிற்குத் தப்பர்த்தம் கொள்ளக் கூடாது. விவேகத்துடன் செயல்படவே சொல்கிறேன். கட்டளை நியாயமானதாக இருந்தால் நிறைவேற்று. கட்டளை நியாயமானதில்லை என்று நீ நினைத்தால் அதை நீ செய்யாதே. உன் மறுப்பினால் உனக்கு என்ன கஷ்டம் வந்தாலும் பொறுத்துக் கொள். இதனால் உன் வாழ்வில் மறுபடியும் ஆச்சரிய உணர்வு பிறக்கும். உன் உயிரின் மீது படிந்திருந்த சாம்பல் உதிரும். தணல் தென்படும், ஜொலிக்கும். அந்த ஜொலிப்பின் வழியே ஒருவன் கடவுளைச் சென்றடைகிறான்.

ஆகவே கடவுளைச் சென்றடைவதற்கான வழி சிப்பாய் ஆவதன்று. அதற்கான வழி சந்நியாசி ஆவதுதான். சந்நியாசியின் குணம் என்ன? எத்தகைய ஆபத்து வந்தாலும் சரி, தன் விவேகத்தை விற்கமாட்டேன் என்று சந்நியாசி கூறுவார். எல்லா ஆபத்தையும்

எதிர்கொள்வார்; உயிரை விட்டுவிடவும் தயாராக இருப்பார்; ஆனால் தன் ஆத்மாவின் சுதந்திரத்தை விற்க மாட்டார்.

சுதந்திரம் என்றால் தான்தோன்றித்தனம் என்று பொருளில்லை. அதன் பொருள் விவேகம் என்பதாகும்; தன் பொறுப்பை உணர்வதாகும். சுதந்திரத்தைப் புரிந்து கொண்டவன் என்ன சொல்வான்? 'நான் என் பொறுப்பை உணர்ந்து சுயமாக வாழ்வேன்; என் ஒளியில் வாழ்வேன். கடன் வாங்கிய கொள்கைகள், பழைமையாகிப் போன பரம்பரை நம்பிக்கைகள், பிறர் போட்ட தடம் ஆகியவற்றின் அடிப்படையில் வாழ மாட்டேன். ஏனெனில் பழைய தடங்கள் அப்படியே நீடிக்கின்றன. உலகம் தினமும் மாறிவருகிறது. அதன் வரைபடங்கள் மாறி வருகின்றன. ஆனால் கட்டளைகளோ முற்காலத்தைச் சேர்ந்தவை. நீ வேதங்களிலிருந்து, புனித குரானி லிருந்து, பகவத் கீதையிலிருந்து கட்டளைகளை மேற்கொள்கிறாய். நீ எங்கும் போய்ச் சேராமல் அலைந்து கொண்டே இருக்க வேண்டியதுதான். இவற்றை யெல்லாம் ஆழ்ந்து படி, புரிந்து கொள். ஆனால் கட்டளைகளை உன் ஆத்மாவிடமிருந்து மட்டுமே பெறு. உபதேசம் எங்கு வேண்டுமானாலும் பெறு. கட்டளைகளை மட்டும் யாரிடமிருந்தும் பெறாதே. உபதேசத்திற்கும் கட்டளைக்கும் இதுதான் வேறுபாடு.

எங்கெல்லாம் சுபமான அறிவுரை கூறப்படுகிறதோ அதை கவனமாகக் கேள். அதிலுள்ள சிறப்பை எடுத்துக் கொள். அதைப் புரிந்துகொள். ஆனால் எங்கிருந்தும் கட்டளை ஏற்காதே. கட்டளை பிறப்பிக்க உனக்குள் கடவுள் வீற்றிருக்கிறார். அவரிடமிருந்து மட்டுமே பெறு.

உன்னிடம் பிறவியில் இருந்த வியப்பாற்றல் செத்துவிட்டது. ஏனெனில் நீ அகங்காரத்தை விரும்பினாய். மறுபடியும் ஆச்சரிய சக்தி உன்னிடம் விழிப்புற வேண்டுமானால் அகங்காரப் பாறைகளை அகற்று. நீர்வீழ்ச்சிபோல் ஆச்சரியம் வெளிப்படும். அது உனக்குப் புத்துணர்ச்சி தரும்; இளமை தரும்; உன்னைப் புதியவனாக்கும். பிறகு உலகை எப்படிப் பார்ப்பது சரியோ அப்படி நோக்குவாய். பசுமையான மரங்கள் புதிய வகையிலான பசுமை பெற்றதுபோல் தெரியும். இதுவரை பார்த்த ரோஜாப்பூ புதிய அழகுடன் தென்படும்.

இந்த உலகம் எழில் நிறைந்தது. ஆனால் உன் கண்கள் ஆச்சரியப்படுவது நின்றுவிட்டது. அவை கல்லால் மூடப்பட்டிருக் கின்றன. இந்த உலகம் அபூர்வமானது. ஏனெனில் இங்கே கடவுள் பிரசன்னமாகி இருக்கிறார். இவ்வுலகம் கடவுளால் நிறைந்துள்ளது. இங்கே ஒவ்வொரு கல்லிலும் கடவுள் மறைந்துள்ளார். ஆகவே எதுவும் சாதாரணக்கல் அன்று. ஒவ்வொன்றுமே கோஹினூர் வைரம்.* ஒவ்வொரு கல்லிலும் கடவுளின் பேரொளி. (நூர்) தான் வெளிப் படுகிறது. ஆனால் உனக்கு ஆச்சரியப்படும் கண்கள் வேண்டும்.

ஆகவே ஏசுநாதர் சொன்னார், "குழந்தைகளைப் போன்றவர்கள் போற்றத் தக்கவர்கள். ஏனெனில் அவர்களே என் பரமபிதாவின் நாட்டில் பிரவேசிக்க முடியும்." இந்த மேற்கோளில் ஆச்சரியப்படும் ஆற்றல்தான் சுட்டிக் காட்டப்படுகிறது.

**மூன்றாம் கேள்வி:**

**குரு சில சமயங்களில் தன்னுடைய சீடர் களுடன் கண்ணாம்பூச்சி விளையாடுகிறார். இது பற்றி விளக்குங்கள்.**

குரு–சீடன் சம்பந்தம் முழுமையாகவே கண்ணாம்பூச்சி விளையாட்டுதான். சில சமயம்தான் அத்தகைய விளையாட்டு நடைபெறுவதாக நினைப்பது சரியாகாது. குரு–சீடன் மட்டுமல்ல, பரமாத்மாவுக்கும் படைப்புக்குமுள்ள சம்பந்தமும இப்படித்தான். இந்த இருவகை கண்ணாம்பூச்சி விளையாட்டில் விளையாடுபவர்களின் பரிமாணம்தான் வெவ்வேறு. அடிப்படையில் விளையாட்டு ஒன்றே.

கடவுள் எல்லா இடங்களிலும் ஒளிந்து நிற்கிறார். ஆங்காங்கே யிருந்து குரல் கொடுக்கிறார். 'வாருங்கள், என்னைத் தேடுங்கள், கண்டுபிடித்துத் தொடுங்கள்' என்கிறார். என்றைக்கு அவர் குரல் உன் காதில் கேட்கிறதோ, நீ அவரைத் தேட ஆரம்பிக்கிறாயோ, அன்றிலிருந்து நீ அவரைத் தேடுவதேகூட அளவற்ற ஆனந்தம்

* கோஹினூர் 14ஆம் நூற்றாண்டில் கிடைத்த வைரம். ஆரம்பத்தில் 191 காரட். தீட்டப்பட்ட பின் 109 காரட். இங்கிலாந்து அரசியின் கிரீடத்தில் பதிக்கப்பட்டுள்ளது. கோஹ்-இ-நூர் எனில் மலையளவு வெளிச்சம் (ஒளி மலை) என்று பொருள்.

தருவதை உணர்வாய். ஆகவே நீ கடவுளிடம் 'நீங்கள் வெளிப் படுவதைச் சற்றுத் தள்ளிப் போடுங்கள்' என்றுகூட சொல்லக்கூடும்!

நீ சிறுவயதில் மற்ற சிறுவர்களுடன் சேர்ந்து ஒளிந்து விளையாடியிருப்பாய். ஓர் அறையில் வெவ்வேறு இடங்களில் சிறுவர்கள் ஒளிந்து கொள்வர். ஒருவன் கட்டிலின் கீழ், ஒருவன் நாற்காலியின் பின்புறம் என்றெல்லாம் மறைந்து கொள்வார்கள். எல்லோருக்கும் யார் எங்கே உள்ளனர் என்பது தெரியும். ஏனெனில் கண்களைத் திறந்துவைத்து விளையாடுகின்றனர். தேடுபவனும் அந்த மறைவிடங்களை ஊகித்து விடுகிறான். மறைந்துள்ளவர்களைப் பிடித்து விட்டால் சட்டென்று விளையாட்டு முடிந்துவிடும். ஆகவே அவன் தேடுவதுபோல் தாமதிக்கிறான். மறைந்துள்ளவர்களும் அவன் இங்குமங்கும் செல்வதைக் காண முடிகிறது. விளையாட்டை நீட்டிக்க எல்லாச் சிறுவர்களும் நடிக்கிறார்கள்.

இதுதான் லீலை என்பதன் ஆழமான அர்த்தம். யாருக்கும் கிடைக்காமல் போகும் அளவிற்குக் கடவுள் தன்னை மறைத்துக் கொள்ளவில்லை. ஆனால் நீ கை நீட்டி அலசித் தேட வேண்டும். ஆனால் மிக அருகில்தான் அவர் மறைந்துள்ளதை நீ புரிந்து கொண்டதும், 'அவசரமில்லை. இன்னும் சிறிது நேரம் இந்தத் தேடல் விளையாட்டு நடக்கட்டும்' என்று கூறுவாய்.

**உனது கிரணச் செவ்வம்புகள்**
**மென்மையாகத் துளைத்ததும்**
**ஒவ்வொரு துணுக்கிலிருந்தும்**
**வெடித்துக் கிளம்பியது**
**தேனை நிகர்த்த கண்ணீர்ப் பாட்டு.**

**எனது குறுகிய வாழ்க்கை அதனில்**
**துளியும் திருப்தி வேண்டியதில்லை**
**கண்ணீர்க் கடலை நிரப்பியும் தமக்குள்**
**தாகத்துடனே இருக்கட்டும் கண்கள்.**

**நீ என் மனத்தில் குடியேறிவிடு,**
**துக்கத் திரையின் பின் ஒளிந்துநில்;**
**நான் உன்னைத் தேடும் பாவனையில்**
**ஒவ்வொரு துணுக்குடனும் அறிமுகம் ஆவேன்.**

**நீரால் நிறைந்த என்னுடைய கண்களில்**
**கறுப்பு-வெள்ளைக் கண்ணாடியாக**
**நீதான் இருக்க,**

**உன் மூலம் அனைத்தையும் பார்க்கும் நான்**
**உன்னை மட்டும் வேண்டுமென்றே**
**பார்க்காதவனாக இருந்து விடுவேன்.**

பக்தன் சொல்கிறான்: 'நீ என் கண்களில் வந்து அமர்ந்துகொள். உன் மூலமாகவே நான் எல்லாவற்றையும் பார்ப்பேன். ஆனாலும் உன்னை நான் பார்ப்பதைத் தவிர்ப்பேன்.' அப்போதுதான் கண்ணாம்பூச்சி விளையாட்டு தொடர்ந்து நடைபெறும்.

நான் உன்னைத் தேடி—தேடி அலைய வேண்டும். இயற்கையின் ஒவ்வோர் அம்சத்திலும் நான் உன் பெயர் சொல்லிக் கூப்பிட வேண்டும். ஒவ்வோர் அலையிலும் உன்னைக் காண வேண்டும். இதைச் சாக்காக வைத்து, படைப்பு முழுவதுடனும் நான் அறிமுகம் பெற வேண்டும்.

கடவுளின் விருப்பமும் அதுவாகத்தான் இருக்கும். அவர் ஒளிந்து நிற்பதற்கு ஒரு ரகசியக் காரணம் இருக்கும். அதாவது, அவரைத் தேடும் முகத்தான் நீ படைப்பின் ரகசியத்தைப் புரிந்து கொள்ள முடியும். உலகம் சம்பந்தமான முழு ரகசியத்தையும் நீ அறிந்து கொள்ளும்வரை கடவுள் மறைந்தே இருப்பார். நீ ஓரிடத்தில் அவரைத் தேடி அடைந்தால் அவர் வேறோர் இடத்தில் ஒளிந்து கொள்வார். அப்பொழுதும் நீ அந்த இரண்டாமிடம் பற்றியும் அறிந்து கொள்வாய். இங்கே நீ அவரைத் தேடினால் அவர் அங்கே ஒளிந்து கொள்வார். இதனால் இரண்டிடங்களையும் நீ தெரிந்து கொள்வாய். இவ்வாறு அவர் உன்னை இழுத்துக் கொண்டே செல்கிறார்; உன்னைப் பின்னால் ஓடிவரச் செய்கிறார்.

இது லீலை அல்லது விளையாட்டு என்று பக்தன் சரியாகப் புரிந்து கொள்ளும்போது உடனே அவனது கவலை நீங்கி விடுகிறது. பிறகு, தேடும் செயல் மன இறுக்கம் தராது; ஆனந்தமாக இருக்கும். தேடுதலில் பதற்றமும் இருக்காது.

தனக்கு திருப்தி ஏற்படக்கூடாது என்றும் பக்தன் கூறுகிறான். ஏனெனில் தனக்குத் திருப்தி உண்டானால் பிறகு தேடுதல் நின்றுவிடும்

என அஞ்சுகிறான். ஏனெனில் தேடுதலில் இருக்கும் சுவை திருப்தியில் இருக்காதென நினைக்கிறான். எதிர்பார்ப்பில் இருக்கும் சுவையைவிட வேறு எது அதிகம் சுவையாக இருக்க முடியும்?

அவன் சொல்கிறான்: 'என் கண்களின் கண்ணீர், கடல் அளவு ஆனதற்கு வருந்தாதே. இதில் எனக்கு ஆனந்தம் கிடைக்கிறது. அந்தச் சுவையில் நான் ஆழ்ந்துள்ளேன். நான் துக்கம் காரணமாக அழவில்லை.'

பக்தன் ஆனந்தம் காரணமாக அழுகிறான். 'அஹோ' உணர்ச்சி மேலிட்டு அழுகிறான். அவனது கண்ணீரில் பூக்களே உள்ளன; புகார் இல்லை. பிரார்த்தனை உள்ளது; நன்றி தெரிவிக்கப்படுகிறது.

பெரிய அளவில் கடவுளுக்கும் படைப்புக்கும் இடையே நடைபெறும் லீலையே சிறிய அளவில் குரு—சீடன் இடையே நிகழ்கிறது. சிறிய அளவில் நீ விளையாடக் கற்றுக் கொண்டால், பெரிய அளவில் விளையாடுவதற்கு உபயோகமாக இருக்கும். உதாரணமாக, ஒருவன் நீச்சல் கற்கச் செல்கிறான். முதலில் கரை ஓரமாக நீந்தக் கற்கிறான். எடுத்த எடுப்பிலேயே நதியின் ஆழப்பகுதிக்குப் போகமாட்டான். போனால் மூழ்கி விடுவானே. முழங்காலளவு தண்ணீரில் கற்றபின் கழுத்தளவு தண்ணீரில் பயிற்சி செய்ய முடியும்; ஆழத்திற்குப் போக முடியும்.

குரு கடவுளின் கரை போன்றவர். குருவிடம் கொஞ்சம் விளையாட்டு கற்றுக்கொள். அங்கே கொஞ்சம் விளையாடு. நீந்துவதில் திறமை பெற்ற பிறகு, விளையாட்டின் விதிமுறைகளைக் கற்ற பிறகு, லீலையின் அர்த்தத்தைப் புரிந்து கொண்ட பிறகு, ஆழத்தில் இறங்கு; கடலில் இறங்கு. ஆகவே குரு என்பவர் கடவுளினுள் ஆழ்வதைக் கற்பிக்கும் பாடம் போன்றவர். படைப்பில் பெரிய அளவில் நிகழ்வதுதான் சிறிய அளவில் குரு—சீடன் இடையே நடக்கிறது.

குரு ஒரு விஷயம் சொல்கிறார். நீ அதை நிறைவேற்றத் தொடங்குகிறாய். சட்டென அவர் இன்னொரு விஷயம் கூறுகிறார். நீ முதல் விஷயத்தை ஏறத்தாழ ஒப்புக் கொள்ளும் நிலையை அடைந்து விட்டபோது அவர் அதைப் பிடுங்கி எறிந்து விடுகிறார். நீ வீடு கட்டிவரும்போது அவர் அஸ்திவாரத்தைத் தகர்க்கிறார். நீ

எப்படியாவது தீர்வு கண்டுபிடிக்கும் அவசரத்தில் உள்ளாய். அவருக்கு அத்துணை அவசரமில்லை. சீக்கிரம் தீர்வு கண்டுபிடிக்க முடிந்தால் அது சரியான தீர்வாக இருக்காது என்கிறார். வாழ்க்கையின் அடி ஆழத்தின் ரகசியத்திற்கு விரைந்து தீர்வு காண இயலாது. இது பருவகாலப் பூ போன்றதில்லை. இது ஆகாயத்தையே தொடக்கூடிய மரம். ஆயிரக்கணக்கான ஆண்டுகள் வாழும். சந்திரன் – நட்சத்திரங்களுடன் உரையாடும் மரம்.

**க**ச்யப முனிவரின் மனைவி வினிதை மகாத்மா போன்ற மகனைப் பெற்றெடுக்க மிகவும் விரும்பினாள். குறைந்தபட்சம் தன் கணவர் மாதிரிச் சான்றோனாக இருக்க வேண்டுமென எதிர்பார்த்தாள். ஆகவே கடவுளைத் தீவிரமாக வழிபட்டாள். கடவுள் மகிழ்ந்தார். அவளிடம் கரு முட்டை ஒன்று கொடுத்து, அது உத்தம புத்திரனைப் பிறப்பிக்கும் என்றும் தெரிவித்தார். மாதம் ஒன்பது ஆகியும் குழந்தை பிறக்காததால் அவள் குழப்பமடைந்தாள். பிறகு பல்லாண்டுகளும் கழிந்தன. வினிதை ஏறத்தாழக் கிழவியாகி விட்டாள். அவளுக்கோ அவசரம். கடவுள் தந்த முட்டையை உடைத்தாள். முட்டை பாதியாக உடைந்ததால் குழந்தையும் பாதியாகவே பிறந்தது. அவனுக்கு அருணன் என்று பெயர் வைக்கப்பட்டது. அவன் வளர்ந்து சூரியனின் சாரதியானான்.

அருணன் தன் தாயாரைக் கோபித்துக் கொண்டான். "நீ மகாத்மாவான மகன் பிறக்க வேண்டுமென ஆசைப்பட்டாய். ஆனால் அதற்குத் தேவையான மகாபொறுமையைக் கடைப்பிடிக்கும் சக்தி உன்னிடம் இல்லாமல் போனது. நீ நடுவில் முட்டையை உடைத்து விட்டாய். ஆகவே நான் பாதிதான் வளரமுடிந்தது," என்றான்.

எத்தனையோ வருஷங்களாகக் குழந்தையின் பிறப்பை எதிர்பார்த்துக் காத்திருந்ததைத் தாயார் விவரித்தாள். அதற்கு அருண், "பொறுமையில்லாத போது ஏன் பெரிய ஆசையை வளர்த்துக் கொண்டாய்? நீ சாதாரணக் குழந்தைக்கு ஆசைப்பட்டிருந்தால் ஒன்பது மாதத்தில் பிறந்திருக்கும். மகத்தான குழந்தை வேண்டுமென்றால் நீ மகத்தான பொறுமையைக் கடைப்பிடித்திருக்க வேண்டும்," என்று சுட்டிக்காட்டினான்.

சீடர்கள் மிகவும் அவசரப்படுகிறார்கள். இறைஞானம் உடனே கிடைத்து விட்டால், யாராவது கொடுத்து விட்டால் பிரச்சினை தீர்ந்துவிடும் என நினைக்கிறார்கள். உனக்கு தேடுவதில் முதலில் சுவை தெரியாமல் இருக்கலாம். குரு உனக்கு அந்தச் சுவையை ஏற்படுத்தி விட்டால் நீ அதை உணர்ந்து அனுபவிப்பாய் என்று அவருக்குத் தெரியும். பிறகு இறைஞானம் கிடைத்தாலென்ன, கிடைக்காவிடில் என்ன, தேடுவதே இவ்வளவு சுவையாக இருக்கும்போது மற்றவை பற்றி என்ன கவலை என்று முடிவு கட்டுவாய். அன்றே உனக்கு இறைஞானம் கிடைத்துவிடும். இதை முடிச்சுப்போட்டு நினைவில் வை.

என்றைக்கு நீ, 'இறைவா, நீ தெரிந்துகொள். நாம் சந்திப்பது பற்றி எனக்கு அவசரமில்லை. தேடுதலே மிக ஆனந்தமாக உள்ளதால் நான் தேடிக்கொண்டே இருப்பேன். நீ வேண்டுமானால் ஒளிந்துகொள்,' என்று சொல்ல முடிகிறதோ அன்றே தேடுதல் முடிந்துவிடும்; மறைந்திருத்தல் பயனின்றிப் போய்விடும். தேடுதலே சந்திப்பின் ஆனந்தமாகிவிடும். வழியே சேரிடம் ஆகிவிடும். சேரிடம் அதற்கு மேல் மறைந்திருக்காது. அன்றே சேர்க்கை நிகழ்ந்துவிடும். இதற்கெல்லாம் மகாப்பொறுமை தேவை.

நீயோ அமர சத்தியம்
நான் ஒரு விரகப் பயணி
பாதையில் மெல்ல நடக்கும் நான்
வழியின் முடிவை அடைய முடியாமல்
பயணத்திலேயே தேய்ந்தழிவேன்

கிடைத்தால் உன்னை இழப்பேன்
இழந்தால் மீண்டும் பெறுவேன் உன்னை
நிரந்தர அதிருப்தியே வாழ்க்கையாகட்டும்
அழிவதே நிரந்தர விருப்பமாகட்டும்.

மேகங்களில் ஒளிரும் மின்னல்போல
அவரது அழகொளி மின்னி மறைகிறது.
கண்களின் ஓவியச்சீலையில்
அதனை மதிப்பிட இயலவில்லை.
நிலா கிரணங்களின் வலைக்கோடுகளில்
அழகாகய் தோன்றி மறைகிறார் அவர்.

**ஒவ்வொரு கணுவிலும் தேடியும் அவரை**
**அடையாளம் நான் கண்டேனில்லை.**

எனவே எல்லையற்ற பொறுமையுடன் எதிர்பார்ப்பு தேவை. குரு தம்முடைய சொற்களால் உரமூட்டுகிறார். 'கொஞ்சம் பொறுப்பா. இதோ ஞானம் கிடைத்துவிடும். எனவே தொடர்ந்து தேடுதல் செய். பொறுமையில் உறுதியாக இரு. இதோ அடைந்துவிடப் போகிறாய். பார், கரை நெருங்கி வருகிறது. பறவைகள் பறப்பது தெரிகிறது. சற்றுத் தொலைவில் மரங்களும் தென்படுகின்றன. இதோ நாம் சென்றடைய வுள்ளோம்' என்கிறார். நீ பொறுமை குலையாமல் இருக்க முயலுகிறார்.

உனக்கு மனவுறுதி குறைவு. நீ ஒரு கட்டத்தில் நிலைபெற முயலும்போது, ஓரிடத்தில் வீடு கட்டத் தொடங்கும்போது, ஒரு முகாமைச் சேருமிடம் என்று நினைக்கும்போது குரு அனைத்தையும் பிடுங்கி எறிகிறார்; கூடாரத்தைக் கலைத்து விடுகிறார். 'போதுமப்பா. சேருமிடம் வெகுதொலை விலுள்ளது. இங்கே வீடு கட்ட வேண்டிய தில்லை. இப்படிக் கண்ணாம்பூச்சி நிகழ்கிறது. காலப்போக்கில் நீ இந்த ரகசியத்தைப் புரிந்து கொள்கிறாய். இது அனுபவத்தால்தான் சாத்தியம். உண்மையான சந்தோஷம் ஓரிடத்தைச் சேர்வதிலோ, ஒன்றைப் பெறுவதிலோ இல்லை; தேடுவதில்தான் அது அடங்கியுள்ளது என்பது உனக்குத் தெரியவருகிறது. சுவை, பயணத்தில்தான் உள்ளது, சேருமிடத்தில் அல்ல.

எப்படியாவது இலக்கை அடைந்துவிட வேண்டும் என்பதில் உனக்குள்ள அவசரம் எனக்குப் புரிகிறது. மாளிகையில் நுழையக் கள்ளக் கதவு இருக்குமா, வாயில் காப்பவருக்கு லஞ்சம் தரமுடியுமா, வேறு குறுக்குவழி உள்ளதா என்றெல்லாம் அவசரப்படுகிறாய். இறைவனின் மாளிகையில் இதற்கெல்லாம் வாய்ப்பில்லை. அங்கே புண்ணியமும் தவமும்கூட குறுக்குவழிக்கு உதவாது.

கடவுள் என்பது நெடிய, முடிவற்ற பயணம். கடவுளைச் சேருமிடம் என்று நினைத்தால் அது தவறான எண்ணம். சேருமிடம் என்றால் உட்கார்ந்து ஓய்வெடுக்கும் இடமாகும். பிறகு ஒன்றும் கிடையாது. கடவுளோ, இடைவிடாது நடைபெறும் வாழ்க்கை இயக்கம். ஆகவே உட்கார்வது என்பது சாத்தியமில்லை. பயணம் நிறைவுறாது தொடரும் தன்மையுடையது. கடவுள் என்பது ஒரு பொருளில்லை.

அது ஓர் இயக்கம். வஸ்து என நீ நினைப்பது ஒரு பிரமையே. அது தவறு. கடவுள் என்பது ஒவ்வொரு செயலிலும் நடப்பதில், வாழ்வதில், பிரவாகிப்பதில் தென்படும் இயக்க சக்தி. நதி கடலை நோக்கிப் பாய்ந்தோடுகிறது. கடல் பொங்கி—பொங்கி நதியை வரவேற்கிறது. இப்படித்தான் சாதகர்கள் கடவுளைத் தேடியபடி உள்ளனர். கடவுளும் சாதகர்களைத் தேடுகிறார். இந்தக் கண்ணாம்பூச்சி விளையாட்டு தொடர்கிறது.

இது வெறும் விளையாட்டு என்று புரிந்துகொண்டதும் மன இறுக்கம் நீங்கி விடுகிறது. பிறகு விளையாட்டின் முழு இன்பமும் கிடைக்கும். ஆனால் நாமோ சாதாரண விளையாட்டைக்கூட மன இறுக்கத்துடன் விளையாடுகிறோம். சீட்டு விளையாடும் இருவர் தலையில் சுமை ஏறியதுபோல் விளையாடுகிறார்கள். இவ்விளையாட்டு சில சமயம் கைகலப்பு ஏற்படுத்தி விடுகிறது. சதுரங்க விளையாட்டில் சில சமயம் கத்தியெடுத்துச் சண்டை போடுகிறார்கள். உண்மையில் சதுரங்கத்தில் யானையோ, குதிரையோ, ராஜாவோ எல்லாம் கிடையாது. வெறும் மரப்பொம்மைகள்; அதிகபட்சம் தந்தத்தாலான உருவங்கள். எல்லாம் போலி. ஆனால் விளையாட்டின் சுவை விளையாடு பவர்களை மிகையாகப் பாதித்து உயிரையே பணயம் வைத்து விளையாடும் வெறியை ஏற்படுத்துகிறது.

சாதாரண மனிதர்கள் விளையாட்டைக்கூட தீவிரமான விஷயமாக எடுத்துக் கொள்கிறார்கள். சாதகர்களோ கம்பீரமான விஷயத்தையும் அலட்டிக் கொள்ளாமல் அணுகுகிறார்கள். சம்சாரி எனப்படுபவன் எதையும் தீவிரமாகக் கருதுகிறான். சந்நியாசியோ எதையும் விளையாட்டாகப் பார்க்கிறான்.

பக்தன் கடவுளைத் தேடுவதிலேயே தன்னை அழித்துக் கொள்ள விரும்புகிறான். தேடுதலில் நாட்டம், தேடுதலின் தாகம் நீடிக்க வேண்டுமென விரும்புகிறான். கடவுளைப் பெற்று திருப்தியடைய அவன் விரும்பவில்லை. அவரை இன்னும் அடையவில்லை என்னும் அதிருப்தி உணர்வேகூட இனிமையாக உள்ளது.

திடீர்—திடீரெனக் கடவுளின் பேரெழில் தென்படும், மறைந்துவிடும். அதன் வேகம் காரணமாக அதை உன் மனத்தில் நிறுத்தி மதிப்பிட முடிவதில்லை. அதற்கு உன் மனத்தில் ஓர் உருவம்

தர முடிவதில்லை. உனது 'அஹோ' உணர்வு அப்படியே நீடிக்கிறது. 'நான் இறைஞானம் அறிந்து கொண்டேன்' என்று உன்னால் கூற இயலாது. ஆகவே உபநிடதம் சொல்கிறது. "அறிந்து கொண்டேன் என்று சொல்பவன் அறிந்திருக்க மாட்டான். தனக்கு ஒன்றும் தெரியாது என்பவன் ஒருவேளை அறிந்திருப்பான்.'

கடவுளின் பேரெழில் மேகங்களிடையே மின்னல்போல் வேகமாகத் தோன்றி மறைவதால் அதை நீ உள்ளங்கையில் பிடிக்க முடிவதில்லை. உள்ளங்கையை உடனே மூடினாலும் அது காலியாகவே இருந்து விடுகிறது. பரமாத்மாவை உள்ளங்கையில் பிடிக்க முடியாது. வார்த்தைகளிலும், கொள்கைகளிலும், சாஸ்திரங் களிலும் அடக்க முடியாது. எங்கும் அதன் எழிலைக் கட்டிப்போட முடியாது. அது அருவமாகவே நீடிக்கிறது. தரிசனம் தந்தாலும் மீண்டும் அருவமாகி விடுகிறது. கிடைக்கப் பெற்றாலும் இன்னும் கிடைப்பதற்கு மிஞ்சியே உள்ளது.

பக்தனுக்கு அவசரமில்லை. யாருக்கு அவசரமில்லையோ அவனுக்கு அவன் விரும்புவது சீக்கிரமே நிகழ்கிறது. யாருக்கு மிகவும் அவசரமோ அவன் நெடுங்காலம் அலைய வேண்டியுள்ளது. அப்படியும் அவன் எதிர்பார்ப்பது நிகழ்வதில்லை.

கடவுள் உனக்கு உடனே கிடைக்க வேண்டுமென நீ விரும்பினால் காலவரையறை வகுக்காமல் நிரந்தரமான எதிர் பார்ப்பிற்குத் தயாராக இரு. 'கிடைக்க வேண்டிய தருணத்தில் கிடைக்கட்டும். அவசரம் எதுவும் இல்லை' என்று கூறிவிடு. நாம் தேடிக்கொண்டே இருப்போம். தேடுதலில் நமக்கு மிகவும் திருப்தியாக உள்ளது. கிடைக்கவில்லை என்ற அதிருப்தி நிலையிலும் திருப்தியாக உள்ளோம். நம் விரகக் கண்ணீரும் ஆனந்த அனுபவமாக இருக்கிறது.

**கடைசிக் கேள்வி:**

**நீங்கள் உள்ளொளி பற்றி நிறையப் பேசு கிறீர்கள். என் அனுபவம் வேறாக உள்ளது. தியானத்தில் என் எண்ணங்கள் சாந்தப்படும் போது என் உள்ளத்தில் அடர்ந்த இருள் படர்கிறது. அது குளிர்ச்சியாகவும் இதமாகவும் தோன்றுகிறது. ஏன் இப்படி?**

**பொ**ழுதுவிடிவதற்கு முன்னால் இருட்டு அதிகபட்ச அளவு அடர்த்தியாக இருக்கும். இருட்டின் கர்ப்பத்திலிருந்துதான் காலைப்பொழுது பிறக்கிறது. உன்னிடம் எப்பொழுதும் ஒளி பற்றி பேசுகிறேன் அல்லவா? நீ ஆழ்மனத்தில் இறங்கியதும் அக்கணமே உள்ளொளி தோன்றி விடுமென நினைக்க வேண்டாம். முதலில் அடர்ந்த இரவு வழியாகப் பயணிக்க வேண்டும். அந்த இரவின் முடிவில் விடியல் இருக்கிறது; ஒளி இருக்கிறது.

கிறிஸ்தவத் துறவிகள் இக்கட்டத்தை ஆத்மாவின் இருண்ட இரவு (dark night of the soul) என்று குறிப்பிடுகின்றனர். இது இனிமையான பெயர். எல்லா சாஸ்திரங்கள், புனித குரான், வேதங்கள், உபநிடதங்கள் கடவுளின் ஒளிமயமான வடிவம் பற்றி உரைக்கின்றன. ஆனால் சாதகர் மனத்தினுள் இறங்கும்போது உடனடியாக ஒளி கிடைத்துவிடாது. உடனே ஒளி தெரிந்தால் அது சந்தேகத்திற்குரியது. ஒருவேளி நீ ஒளியைக் கற்பனை செய்கிறாய். அது உண்மையாக இருக்காது. பலர் உபதேசிப்பதைக் கேட்டும் சாஸ்திரங்கள் படித்தும் பரமாத்மா ஒளிவடிவமானவர் என்பதை நீ அறிந்திருப்பதால் அது உன் கற்பனையைத் தூண்டியிருக்கும். இப்படி ஏமாறியவர்கள் எத்தனையோ பேர்.

சில நாள் முன் ஒருவர் சந்நியாசியானார். அவர் பாலயோகேஸ் வரரிடம் தீட்சை பெற்றதாகச் சொன்னார். கண்ணைக் கட்டைவிரலால் அழுத்துவதன் மூலம் ஒளி அனுபவம் கிடைக்குமென்று பாலயோகி தெரிவித்திருக்கிறார். அந்தப் புதிய சந்நியாசி என்னிடம் கேட்டார், "நான் அவ்வாறே கண்களை அழுத்தினால் அருமையான அனுபவம் கிடைக்கிறது. இதை நான் தொடரட்டுமா, நிறுத்திவிடவா?"

இது என்ன பைத்தியக்காரத்தனம்! கண்களை விரலால் அமுக்கினால் திமிறுதல், போன்ற உணர்வால் ஒளியை உணர்ந் திருப்பார். இதைப் போய் ஆன்மிக ஒளி என்று கருதியிருப்பார். அவர் இரண்டாண்டுகளாக இந்தப் பயிற்சி செய்திருக்கிறார். இதனால் கண்கள் பழுதடைந்துவிட்டன. ஆனால் இதை ஆன்மிக ஒளியென நினைத்துச் சுவை கண்டதால் மேலும் அழுத்திப் பயிற்சி செய்திருக்கிறார். ஏனெனில் எவ்வளவு அழுத்துகிறோமோ அப்படி ஒளி மின்னுவதுபோல் தெரியும். இதை பாலயோகேஸ்வர் ஞானம்

என்கிறார். கண்களை அமுக்குவதால் கிடைக்கும் சாதாரண மினுமினுப்பை ஞான ஒளி என்கிறார்.

நீ எவனது கண்ணையும் அழுத்திப்பார். அவனுக்கு மின்னல் ஒளிபோல் தெரியும். அவன் அசந்துபோவான். கேள்விப்பட்டது சரியாகத்தான் இருக்கிறதென நினைப்பான். ஞான ஒளி காண இவ்வளவு சுலபமான உபாயம் இருப்பது இதுவரை தெரியாமல் போய்விட்டதே என அவன் வருந்துவான்.

சிலர் வேறு வழி ஒன்று சொல்கிறார்கள். ஒளியை உள்ளே பெற்றுக் கொள்ளச் சொல்கிறார்கள். கண்களை மூடிக்கொண்டு அவற்றின் மையத்தை உள்நோக்காகக் காணச் சொல்கிறார்கள். அங்கே தென்படும். விளக்கொளி அல்லது ஒளிப்புள்ளியை தியானிக்கச் சொல்கிறார்கள். நீ அவ்விதமாகக் கற்பனை செய்தால் அது வலுவடைந்து ஒளி தெரிவதுபோல் நினைப்பாய். ஆனால் அது பொய் ஒளி.

காலைப் பொழுதை நீயாகக் கொண்டுவர முடியாது. அது தானாகவே வருகிறது. ஆனால் இரவுப் பொழுதின் வழியாக அதைக் கடந்துதான் விடியல் வருகிறது. நீ அமைதியாக இரவைக் கட. விடியலுக்குமுன் அதிக இருட்டாக இருப்பது வழக்கம். ஆகவே உனக்கு நல்லபடியாகவே நடக்கிறது. இருட்டில் குளிர்ச்சியும் இதமான உணர்ச்சியும் இயற்கையாகவே இருக்கும். இருட்டு என்று பயப்பட வேண்டாம். இருட்டை நேசி. விடியல் தொலைவில் இல்லை என்பதை உணர். பயப்பட்டால் தப்பி ஓடுவாய். ஓடினால் விடியலைவிட்டு வெகுதூரம் விலகி விடுவாய்.

குளிர்ச்சியும் மென்மையும். உண்மையில் நன்மை தருபவை. இவை இருட்டு தரும் அனுபவம். அந்த இனிய அனுபவத்தை நாம் பயத்தின் காரணமாக உணர முடியவில்லை. சிறு வயதிலிருந்தே இருட்டைப் பற்றி நமக்குத் தப்பான அபிப்பிராயங்கள் ஏற்பட்டு விடுகின்றன. தனிமையிலிருக்கும் சிறுவன் இருட்டிடம் பயப்படுகிறான். தெரியாதவர் யாரும் வந்துவிடக் கூடாதே. யாரும் அடித்துவிடக் கூடாதே. காயம் ஏற்படுத்தக் கூடாதே. எதுவும் மேலே விழக் கூடாதே என்றெல்லாம் அஞ்சுகிறான். அந்த பயம் மனத்துக்குள் இறங்கி உட்கார்ந்து விடுகிறது.

மானிட வாழ்க்கையின் வரலாற்றில் பத்து–இருபது ஆயிரம் ஆண்டுகள் முன் மனிதன் காடுகளில், குகைகளில் வசித்தான். நெருப்பு கண்டுபிடிக்கப்படாத காலம். இரவு பயமூட்டுவதாக இருந்தது ஏனெனில் இரவில் காட்டு விலங்குகள் தாக்கின. பகல் எப்படியாவது கழிந்தது. அந்நேரத்தில் சூரிய வெளிச்சம் கிடைத்தது. அந்த வெளிச்சத்தில் மனிதன் தன்னைக் காப்பாற்றிக் கொண்டான், தப்பித்து ஓடினான். இரவில் சிங்கம் கர்ஜிக்கும், தாக்கும். ஆயிரக் கணக்கான காட்டு விலங்குகள். அவற்றினிடமிருந்து தப்பித்து வாழ்தல் மிகவும் கடினம். இந்த ஆதிகால வாழ்க்கை இரவுடன் இணைந்து விட்டது.

மனத்தத்துவ வல்லுநர்களின் கருத்துப்படி மனிதனின் ஆழ்மனத்தில் குகை வாழ் மனிதனின் அனுபவம் நீடிக்கிறது; கால ஓட்டத்தில் மறையவில்லை. உடலின் அணுக்களிலும் அது பரவி நிற்கிறது. ஆகவே நாம் இருட்டென்றால் பயப்படுகிறோம். இன்றைக்கு இது பொருந்தாது. நாம் வீடுகளில் வசிக்கிறோம். மின்சார வசதி கையருகே உள்ளது. பட்டனைத் தட்டினால் உடனே வெளிச்சம் கிடைக்கிறது. இதில் சிரமமோ, சிக்கலோ இல்லை. சமூகத்தில் பெரிய உபத்திரவம் இல்லை. பயப்பட காரணம் இல்லை. அறையில் உட்கார்ந்துள்ளோம். ஆனால் இருட்டிடம் அஞ்சுகிறோம். இருபதாயிரம் ஆண்டுகள் முன் வாழ்ந்த மனிதனின் அனுபவம் உன் நரம்பு–நாடிகளிலெல்லாம் ஊடுருவியுள்ளது. நீயும்கூட அந்த ஆதிமனிதனிடமிருந்து தோன்றியவன்தான். அவனுடன் நீ நுணுக்கமான சங்கிலி வரிசையால் இணைக்கப்பட்டுள்ளாய். அவனது பய அனுபவம் மறக்கப்படவில்லை. உன் மனத்தின் ஆழத்தில் அது பதிந்துள்ளது. ஆகவே இருட்டினால் மனிதன் பயப்படுகிறான்.

இவ்வாறு பயப்படுபவன் மனத்தினுள் இறங்க முடியாது; உள்முகப் பயணம் செய்ய முடியாது. உள்பயணம் என்பது மனக் குகைக்குள் புகுவதாகும். அப்படிப் பயணித்துதான் இருட்டைக் கடக்க முடியும்.

உனக்கு நல்லது நடந்து கொண்டிருக்கிறது. ஆனந்தமும் சாந்தியும் கிடைக்கிறது. விடியல் அருகில்தான் உள்ளது. இருட்டு அதிகமானால் விடியல் நெருங்கி விட்டது என்றே அர்த்தம். ஒரு விஷயம் நினைவில் வை. இருட்டின் மீது மோகம் கொண்டு விடாதே.

ஒருபுறம், பயத்தால் மனிதன் ஓடிப்போய் விடும் அபாயம் உள்ளது. இன்னொரு புறம், இருட்டு குளிர்ச்சியாக, இதமாக உள்ளது என்பதற்காக அதனை மோகிக்கும் அபாயம் உள்ளது. இந்த இருநிலைகளிலும் விடியல் தோன்ற வாய்ப்பில்லை. நீ இருட்டின் இதத்திலேயே சிக்குண்டு ஆழ்ந்து கிடப்பாய். இப்படித் தேங்கி விட்டவர்கள் ஏராளம்.

என்னைச் சந்திக்க வருபவர்களில் சிலர் சோகமாக உள்ளனர். அவர்கள் சோகத்தால் கட்டுண்டவர்கள். எங்களுக்கு சோகம் வேண்டாம் என்பார்கள். ஆனால் அவர்கள் செய்யும் காரியமெல்லாம் சோகத்தைத் தூண்டி விடுவதாகவே உள்ளன. தங்களை சோகத்திலிருந்து மீட்குமாறு என்னைக் கேட்டுக் கொள்கின்றனர். இது சம்பந்தமாக நான் அறிவுரை வழங்கும்போது அவர்கள் சரியாகக் காதுகொடுத்துக் கேட்பதில்லை. என் பேச்சைக் கேட்டும்கூட சோகமாகவே இருப்பார்கள். சிலர் என்னிடம், “நாங்கள் ஏற்கெனவே சோகமாக இருந்தோம். உங்கள் பேச்சைக் கேட்டபின் எங்கள் சோகம் முன்பைவிட அதிகரித்து விட்டது!” என்றும் கூறியிருக்கின்றனர்.

“நான் உங்கள் சோகம் அதிகரிக்கும்படி என்ன சொல்லி விட்டேன்?” என்று விசாரித்தேன்.

“நீங்கள் பேரொளி பற்றியும், பேரானந்தம் பற்றியும் ஏராளமான விஷயங்கள் சொன்னீர்கள். அடேடே, இதெல்லாம் நாம் கவனிக்கத் தவறிவிட்டோமே என்று தோன்றியது. எங்கள் வாழ்க்கை வீணாகி விட்டதே என்று எங்கள் சோகம் அதிகரித்து விட்டது,” என்று விளக்கினர்.

“ஆம், நான் கடவுளின் பேரொளி பற்றிதான் பேசுகிறேன், விழி, எழு, தேடு என்கிறேன். நீங்களோ என் பேச்சு உங்களை மந்தமாக்கி விட்டதாகக் கூறுகிறீர்கள். எல்லாம் சரியாகத்தான் உள்ளது. நாங்கள் மேலும் சோகமாகி விட்டோம் என்று எப்படிக் கூறுகிறீர்கள்?”

மக்கள் சோகத்துடன் சம்பந்தம் ஏற்படுத்திக் கொள்கிறார்கள். அந்த சம்பந்தம் பிறகு பழக்கமாகி விடுகிறது. விரும்பினாலும் அதைக் கைவிட முடிவதில்லை. ஒரு கையால் விட்டாலும் இன்னொரு கையால் பிடித்துக் கொள்கிறார்கள். இது பற்றி சிறிது சிந்தித்துப் பார்.

சிலருக்கு சோகமும் தனிமையும் பிடித்துள்ளது. ஏனெனில் யாருடன் வசித்தாலும் ஏதாவது பிரச்சினை உள்ளது. ஆகவே மனிதன் சேர்ந்து வசிப்பதிலிருந்து தப்பித்து ஓடுகிறான். ஏனெனில் இரண்டு பாத்திரங்கள் இருக்கும் இடத்தில் உரசல், சத்தம், மோதல் ஏற்படத் தொடங்குகிறது. அங்கே சவாலும் உள்ளது. ஆனால் மனிதன் இதற்கெல்லாம் பயந்து தனிமையே மேல் என ஓடிவிடுகிறான். தனிமை சிக்கல் இல்லாதது.

ராமன் தனிமைக்கு ஏகலாம். ஆனால் சவால், எதிர்ப்பு இல்லாமல் போய் விடுகிறது. சீதை இல்லை, ராவணனும் இல்லை என்றால் ராம்லீலா விழாவும் இல்லை. ராமனுடைய தனித்தன்மை மெருகேறியதற்குக் காரணம் அவர் தனிமையை நாடவில்லை என்பதுதான். அவரது வாழ்க்கை எல்லா பக்கங்களிலிருந்தும் போராட்டங்களால் சூழப்பட்டிருந்தது. அவற்றை அவர் சமாளித்த விதத்தால் அவருடைய சிறப்புகள் வெளிப்பட்டன. தனிமையில் உணரும் அமைதி சடலத்தின் அமைதி போன்றது.

**சோகமான தனிமை உணர்வு**
**வாழ்க்கையில் எனக்குப் பிடித்துள்ளது**
**உள்ளத்தில் உன்மீது விருப்பம்கூட**
**சோக வண்ணத்தில் வந்தது**
**எத்தனையோ கோப்பைகள் காலியாயின**
**எத்தனையோ கோப்பைகள் நிரம்பி வழிந்தன**
**ஆனால் என் சுபாவமோ**
**ஒளியைக் கண்டு அஞ்சுகிறது**

நீ இந்த சோக உணர்வில் பிரியம் கொள்ளாதே; உறவு—தோழமை வைத்துக் கொள்ளாதே; கை கோக்காதே; மணந்து கொள்ளாதே. இது குளிர்ச்சியுடன் இதமாக உள்ளது. இதனுடன் அதிக சம்பந்தம் வைத்துக் கொண்டால் நீ ஒளியைக் கண்டு அஞ்சத் தொடங்குவாய். சிலர் இருட்டிடம் பயப்பட்டுத் தப்பி ஓடுகிறார்கள். ஆனால் வெளிச்சம்வரை போய்ச் சேருவதில்லை. சிலர் வெளிச்சத்திற்குப் பயப்படுகிறார்கள். ஏனெனில் அவர்கள் இருட்டை நேசிக்கிறார்கள்.

இந்தக் கேள்வியைக் கேட்டவர் (பெயர் தர்மஜோதி) இந்த நிலையில் எச்சரிக்கையாக இருக்க வேண்டும். அவர் இந்த இருட்டு.

சோகம், சாந்தி ஆகியவற்றுடன் நெருங்கிய தொடர்பு கொள்ளலாகாது. மிகையான தொடர்பிருந்தால் விடியல் ஏற்பட சாத்தியமில்லாமல் போய்விடும்.

ஆகவே இருட்டைக் கடந்துசெல். ஆனந்தமாக, பாட்டுப் பாடியபடியே கடந்துசெல். இருட்டு நிச்சயமாகக் குளிர்ச்சியானது; சிரமம் தணிவிப்பது. ஆனால் இருட்டு என்பது ஒளியின் கர்ப்பம் மட்டும்தான் என்பதை நினைவில் வை. இருட்டு எதிர்மறை; வெளிச்சம் — நேர்மறை. சேரவேண்டிய இடம் வெளிச்சம். இருட்டின் வழியே செல்; மேலும் மெருகு பெறு; இருட்டில் நனை; ஆனால் முன்னேறி ஒளியை அடைய வேண்டும். இருட்டிலேயே ஒருவன் நீடித்தால் அவன் சாந்தமாக இருக்கலாம். ஆனால் அவன் வாழ்க்கையில் அன்பு தோன்றாது. சாந்தம்—ஜடம்; அன்பு—ஜீவன்.

தியானத்தில் ஈடுபட்டும் கருணை உணர்வு தோன்றாவிடில் எங்கோ குறைபாடு உள்ளதென்று பொருள். முழுமை அடையவில்லை என்று பொருள். இருட்டில் ஒருவனுக்கு தியானம் கைகூடலாம். ஆனால் ஒளி தோன்றிய பிறகே அன்பு கிடைக்கும்.

தியானமும் அன்பும் ஒன்றாக உண்டாகும்போது வாழ்க்கை வெற்றியடைகிறது; பலன் தருகிறது.

கேள்வி கேட்ட தர்மஜோதி அன்பு என்றாலே மிகவும் பயப்படுகிறாள். அவள் வாழ்க்கையில் அன்பை அறிந்திருக்கவில்லை. அவள் முன்பே பொருத்தமில்லாத குருக்களிடம் சென்றதால் அல்லல்பட்டிருக்கிறாள். அவர்கள் என்ன சொல்லிக் கொடுத்தார்கள்? அன்பு காட்டுவது பாவம்; உடல் பாவமயமானது; உலகத்தைத் துறந்து கடந்து செல்ல வேண்டும் என்றெல்லாம் அவளை மிகவும் பயமுறுத்தி யிருக்கிறார்கள். அவர்களிடமிருந்து அவள் விலகிவந்து விட்டாள் தான். ஆனால் அவளது ஆழ்மனத்தில் அந்த அபிப்பிராயங்கள் பதிந்துவிட்டன. ஆகவே அவளுக்கு இருட்டுடன் உறவுகொண்டு விடக்கூடாது என்ற பயம் இருக்கிறது.

ஒளியைக் கண்டு அஞ்சாதே. அது உன்னை நெருங்கும்போது கண்களை மூடிக் கொண்டு விடாதே; கதவை மூடித் தடுக்கக் கூடாது. கடவுளிடம் இட்டுச்செல்லும் பாதை இருள் சூழ்ந்திருக்கலாம். கடவுள்

வசப்படும்போது ஒளிவீசுகிறது. இருண்ட இரவிலும் அந்த ஒளியை அடையாளம் காண முயன்று கொண்டே இரு.

**அல்லி இதழிலிருந்து வேதனையின் கறையை**
**கண்ணீரின் கிரண ஒளி வழித்துத் துடைக்கையில்,**

**காற்றின் சுவாசம் பட்டு அறிந்திராத திகைப்புடன்**
**தாரகைகள் திடுக்கிடும்போது,**

**மண்ணும் விண்ணும் சேர்ந்த அழகிய சிப்பியில்**
**அசையும் முத்துப்போல் கடல் துடிக்கும் வேளையில்,**

**நிலவொளியின் வெள்ளிக் கடலில்**
**பனித்திரள் போன்ற மேகங்கள்**
**மென்மையாக நீந்தும்போது,**

**உறக்கத்தின் ஆழ்ந்த சுவாசம்போல்**
**நறுமண உருவில் தட்டிக்கொடுப்பவன் யார்?**

அவன் உன்னை உறக்கத்திலும் சூழ்ந்து கொள்கிறான். அவன்தான் பரமாத்மா. இருட்டைப் போல் உன்னை சூழ்ந்து கொள்பவனும் பரமாத்மாதான். இருட்டில் குளிர் நிழல் போல் நாம் உணர்வதும் அவனது குளிர்ந்த நிழல்தான். இருட்டிலே நாம் உணரும் இனிமையான, அமைதி தருகின்ற, சிரமம் நீக்குகின்ற உணர்வு அவன் நம் அருகே வந்துவிட்டதன் அறிவிப்பு. அவன் எங்கோ அருகில்தான் உள்ளான். அவனை மறக்காதே. தொடர்ந்து தேடு. இன்று தூங்குபவன் நாளை விழிப்பான். இருட்டில் அழுந்தியிருப்பது நாளை வெளிப்படும். அடிவானத்தில் அவனது செம்மை விரைவிலேயே காட்சியளிக்கத் தொடங்கும்.

**எனக்கு இவ்வாறு தோன்றுகிறது**
**வேண்டுமென்றே என் கடவுள்**
**அலட்சியமாகத் தூங்குகிறார் என.**

**எனது புகார் என்னவெனில்**
**என்னுள்ளம் காலம் காலமாக அழுவதால்**
**வாழ்க்கையின் சௌபாக்கியம்**
**கொள்ளை போனது.**

**எனினும் ஒரு நம்பிக்கை என்னவெனில்**
**என்றாவது விழிப்பார் தூங்கும் அவரும்**
**எனது சோகம் எல்லாவற்றையும்**
**விடியலின் பேரொளி அழித்துவிடும்.**

அந்த விடியல் ஏற்படும் — ஏற்படத்தான் போகிறது. அது நிச்சயம். இரவு வேளை வந்துவிட்டதால் விடியற்காலை தொலைவில் இல்லை. இருட்டு அடர்த்தியாகும் போது, நட்சத்திரங்கள் ஆழ்ந்து ஜொலிக்கும்போது, சூரியன் நெருங்குகிறான் என்பது தெளிவு. சீக்கிரமே அவனுடைய செங்கிரணங்கள் அடிவானத்தில் பரவும்.

எதிர்பார். பிரார்த்தனை செய். நம்பிக்கையை உயிரோட்டத்துடன் வை. கண்களைத் திற. கூப்பிடு அவனை. இருட்டும் அவனது, ஒளியும் அவனது. சாவும் அவனது, வாழ்வும் அவனது. எனவே எங்கும் அவனே பிரசன்னமாகியிருப்பதை உணர்.

**ஹரி ஓம் தத்ஸத்**

ஜனகர் மொழிகிறார்:

**ஹந்தாத்மக்ஞஸ்ய தீரஸ்ய கேலதோ போகலீலயா |**
**ந ஹி ஸம்ஸா வாஹீகைர்மூடை: ஸஹ ஸமானதா || 60**

**யத்பதம் ப்ரேப்ஸவோ தீனா: ஸக்ராத்யா: ஸர்வதேவதா:**
**அஹோ தத்ர ஸ்திதோ யோகி ந ஹர்ஷமு பகச்சதி || 61**

**தஜ்ஞஸ்ய புண்யபாபாப்யாம் ஸ்பர்ஷோ ஹ்ருயந்தர்ந ஜாயதே |**
**ந ஹ்ருயகாஷஸ்ய தூமேன த்ருஷ்யமானோஅபி ஸங்கதி: || 62**

**ஆத்மவேதம் ஜகத்ஸர்வம் க்ஞாதம் யேன மஹாத்மனா |**
**யத்ருச்சயா வர்த்தமானம் தம் நிஷேத்தம் க்ஷமேத க: || 63**

**ஆப்ரஹ்மஸ்தம்ப பர்யந்தே பூதக்ரமே சதுர்விதே |**
**விக்ஞஸ்யைவ ஹி ஸாமர்த்யமிச்சானிச்சாவிவர்ஜனே || 64**

**ஆத்மானமத்வயம் கஸ்சிஜ்ஜானதி ஜகதீஸ்வரம் |**
**யத்வேதி தத்ஸ குருதே ந பயம் தஸ்ய குத்ரசித் || 65**

**அ**ஷ்டாவக்கிரர் ஜனகரைக் கடுமையாகச் சோதிக்கிறார். ஜனகர் இப்பொழுது தான் ஆத்மஞானம் பெற்றுள்ளார். இப்பொழுதுதான் அவருக்குள் ஞான ஒளி இறங்கியிருக்கிறது. அதன் பாதிப்பை ஜனகரால் இன்னும் சமாளிக்க முடியவில்லை. அவர் மனத்தில் ஆச்சரிய அலைகள் எழுகின்றன. தனக்கு நேர்ந்த அரிய அனுபவத்தை அவரால் நம்ப முடியவில்லை. நம்பிக்கை வேரூன்ற அதிக காலம் எடுத்துக் கொள்கிறது. எத்தகைய பெரிய சம்பவமோ, சரியாகப் புரியாத சம்பவமோ, அதே அளவிற்கு அதிக காலம் நம்பிக்கை ஏற்படத் தேவைப்படுகிறது. இந்தத் தருணத்தில் ஜனகர் நெகிழ்ந்து போயிருக்கிறார். இதயத்தில் புதுப்புது அலைகள். என்ன நிகழ்ந்ததோ அது நிகழக்கூடும் என்ற நம்பிக்கை ஏற்பட்டதில்லை.

என்ன நிகழ்ந்ததோ அது தனக்கு நிகழ்ந்தது என்றும் நம்ப முடியவில்லை. என்ன நிகழ்ந்ததோ அது ஒரு நொடியில் நிகழக்கூடும் என்பதையும் எப்படி நம்புவது?

ஆழ்ந்த 'அஹோ' உணர்ச்சியால் ஜனகர் நிரம்பியிருந்தார். புதிய ஞானியாகப் பிறந்த அவரை அஷ்டாவக்ரர் கடுமையாகச் சோதிக்கிறார். ஆனால் அந்தக் கடுமையில் கருணை கலந்திருந்தது. அந்தக் கடுமையில் ஜனகரின் முழு எதிர்காலமும் அடங்கியிருந்தது. அந்தப் பரீட்சையை உடனடியாக நடத்த வேண்டியிருந்தது. தாமதித்தால் ஞானத்தின் புதுமலர்ச்சி நீங்கிப்போய் பரிசோதிப்பது கடினமாகியிருக்கும்.

ஞானம் புதுமலர்ச்சியுடன் இருக்கும்போது திரவ நிலையில் இருக்கும். அதற்கு அப்போது புதிய உருவம் கொடுக்க முடியும்; புதிய வார்ப்புத் தரமுடியும். செடி முளைவிடும் நிலை போன்றது இது. வளரத் தொடங்கும் தளிரை வளைக்க, திருப்ப முடியும். பெரிய பழைய மரத்தை நாம் வளைக்க முடியாது. அது முறியுமே தவிர வளையாது.

ஆகவே ஞானம் உதிக்கும் நேரத்தில்தான் அதை நெறிப்படுத்த வாய்ப்புள்ளது. தாமதித்தால், ஆச்சரிய உணர்வு மறைந்து போனால், ஞானம் கெட்டிப் பட்டுவிட்டால் அதன் நெகிழும் தன்மை மறைந்துவிடும். திடீரென மூண்ட அக்னி அணைந்து விடும் எரிமலைக் குழம்பாக இருந்த ஞானம் உறைந்து பாறையாகி விடும். பிறகு அதை ஆராய்வது மிகவும் கடினம். சரியான பலனும் விளையாது. ஏனெனில் நிறையக் கொத்தும் வேலை, உடைக்கும் வேலை இருக்கும். ஆகவே அஷ்டாவக்ரர் ஒரு நொடிகூட தாமதிக்க வில்லை. ஜனகருக்கு ஆச்சரியம் மேலிட்டதும் அஷ்டாவக்ரர் அவரைக் கேள்விகளால் கட்டிப்போடத் தொடங்கினார்.

ஜனகர் மேலேயுள்ள சுலோகங்கள் மூலம் பதில் தெரிவிக்கிறார். தான் பதில் சொல்ல வேண்டிய பரீட்சை குறித்துத் தன் இதய உணர்வுகளை வெளியிடுகிறார். அவை அபூர்வமானவை. ஜனகர் கோபப்படவில்லை. சிறிது கோபப்பட்டிருந்தால் கூட அவர் தோல்விக்குள்ளாகியிருப்பார். அவர் படபடப்பாகியிருந்தாலும் தோல்வியுற்றிருப்பார். அவர் பரீட்சையை எந்த விதத்தில் எடுத்துக் கொண்டார் என்பது அவ்வளவு முக்கியமான கேள்வி இல்லை. அவர்

அஷ்டாவக்ரரின் கடுமையைக் கவனித்தாரா அல்லது கருணையை கவனித்தாரா? கருணையை மறந்து கடுமையைக் கவனித்திருந்தால் ஜனகரின் அஹங்காரம் அழியவில்லை என்று பொருள்படும். அஹங்கார உணர்வுக்குத்தான் கடுமை கவனத்தில் படும். அஹங்காரம் இழக்கப்பட்ட பிறகு மகாகருணைதான் உணரப்படும். இந்நிலையில் குரு கழுத்தில் கத்தியை நாட்டினாலும் பூமாலை சூட்டியது போல்தான் தோன்றும். குரு கொல்லத் துணிந்தாலும் சீடன் இறக்கத் தயாராக இருப்பான். குருவின் கையால் இறப்பதைவிட பெரிய புண்ணியம் வேறென்ன உள்ளது? அது இறப்பன்று; முன்பைவிட உயர்ந்த வாழ்க்கை. உன் கழுத்தை உடலிலிருந்து நீக்கி, நீ கூண்டிலிருந்து விடுதலை பெற குரு உதவுவது பெருங்கருணை அல்லவா? குரு மரணத்தைக் கொடுத்தாலும் உன்னிடம் அஹங்காரம் இல்லாவிடில் நீ கருணையை தரிசிப்பாய். அஹங்காரம் இருந்து குரு பெருவாழ்வு தந்தாலும் அது சந்தேகத்திற்கு உரியது.

ஜனகரின் மனத்தில் எத்தனையோ சந்தேகங்கள் எழ வாய்ப்பிருந்தது. முதல் விஷயமாக என்னைப்போய் அஷ்டாவக்ரர் சந்தேகப்படுகிறாரே என நினைத்திருக்கலாம். அப்படி சந்தேகம் தோன்றியிருந்தால் அவரது சிரத்தை நீங்கியிருக்கும். குரு–சீடன் என்ற முறையில் அவர்கள் நிகழ்த்திய உரையாடல் அறுந்து போயிருக்கும். இரண்டாவது விஷயம், ஒருவேளை அஷ்டாவக்ரருக்குப் பொறாமையோ என்று சந்தேகப்பட்டிருக்க முடியும். தன்னிடம் – சீடனிடம் – புரட்சிபோல் ஞானம் உதித்ததைக் கண்டு அஷ்டா வக்ரருக்கு வயிற்றெரிச்சல் உண்டாகியிருக்குமோ என நினைக்கலாம். அப்படி நினைத்திருந்தால் அவர் சீடன் ஸ்தானத்தில் நீடித்திருக்க முடியாது. குருவுக்கும் சீடனுக்குமிடையே ஆயிரக் கணக்கான மைல்கள் இடைவெளி தோன்றியிருக்கும். ஒருவர் குரலை மற்றவர் கேட்க முடியாத நிலை உண்டாகி யிருக்கும். அவர்கள் வெவ்வேறு உலகவாசிகள்போல் ஆகியிருப்பர்.

ஜனகர் அப்படியெல்லாம் நினைக்கவில்லை. குருவிற்குத் தன்மீது சந்தேகம் அல்லது பொறாமை ஏற்பட்டிருக்கும் என்று அவர் நினைக்கக்கூட இல்லை. அவர் எதுவும் பேசாமலேயே இருந்தார். ஏனெனில் ஒருவன் எப்போதாவது ஏதாவது உன்னிடம் சொன்னால்,

அவன் உன்னை பரீட்சிப்பதுபோல் தோன்றினால், நீ உடனே உன்னைப் பாதுகாத்துக் கொள்வதில் ஈடுபடுவாய். நீ தர்க்கம் செய்வாய். வாத விவாதத்தில் ஈடுபடுவாய். ஏராளமான தத்துவங்களை முன்வைத்து நீ சொல்வதுதான் சரி என்று வலியுறுத்துவாய்.

ஜனகர் தான் சொல்வது சரி என்று சிறிய அளவில் நிலைநாட்ட முயன்றிருந்தால் கூட அவர் கூறுவது தவறு என்ற முடிவுதான் ஏற்பட்டிருக்கும். ஏனெனில் எவனிடம் தவறு உள்ளதோ அவன் தான் செய்தது சரி என்று நிரூபிக்க முயல்வான். ஜனகர் தர்க்கத்தில் இறங்கியிருந்தால், ஏட்டறிவின் அடிப்படையில் 'நீங்கள் சொல்வது தவறு, நான் சொல்வது சரி' என்று நிரூபிக்க முயன்றிருந்தால், இந்த முயற்சியே அவர் பக்கம் தவறு உள்ளது என்பதைக் காட்டிவிடும்.

வாழ்க்கைக் கணிதம் முரண்பாடு நிறைந்தது. தான் சொல்வது சரியென்று நிரூபிக்கப் புறப்படுபவன் தோல்வி காண்பான். அவன் சொல்வது தவறென்று முடிவு கிடைக்கும். நீ சொல்வது சரி என்று நிரூபிக்கும விருப்பம் உனக்கு எப்பொழுது எழுகிறது? உன் ஆழ்மனத்தில் உன் கருத்து தவறு என்ற எண்ணம் தோன்றியிருந்தால் அதை மறுக்க உன் பேச்சை நீ நியாயப்படுத்துகிறாய். சுயபாதுகாப்பு முயற்சி உள்ளே பலகீனத்தை உணரும்போது எழுகிறது. உன் பலகீனம் தெரிந்து விடுமோ, குட்டு வெளிப்பட்டு விடுமோ என்று நீ பயப்படுகிறாய். குரு சும்மா இல்லாமல் பர்தாவை நீக்குகிறாரே, நிர்வாணமாக்குகிறாரே என்ற கூச்சம் சுயபாதுகாப்பு உணர்வைத் தூண்டி உன்னை எதிர்வாதம் செய்ய வைக்கிறது.

ஜனகரின் சூத்திரங்கள் வியப்பளிக்க வல்லவை. கடுமையான தேர்வு. குருவின் கண்கள் கூர்வாள்போல் ஊடுருவுகின்றன. குரு சிறிதளவும் இரக்கம் காட்டவில்லை. குரு கருணையற்றவராகத் தெரிகிறார். குரு வலுவாகத் தாக்கியுள்ளார். அவர் எல்லா வாயில்களிலிருந்தும் தாக்கியுள்ளார். தப்பி ஓட வழியில்லாமல் அடைத்து விட்டார். முதலில் போகத்தின் கதவுகளை மூடினார். பிறகு தியாகத்தின் கதவையும் மூடினார். குரு இறுகக் கட்டிப் போட்டுவிட்டார். நாலாபுறத்திலும் கட்டிவிட்டார். ஜனகரின் மனத்தில் சிறிதளவாவது இருட்டு மிஞ்சியிருந்தால் இந்த சூத்திரங்கள் தோன்றியிருக்க முடியாது. ஆனால் அத்தகைய இருட்டிற்கு வாய்ப்பு இருக்கவில்லை.

ஜனகரின் பதிலில் சுயபாதுகாப்புத் துடிப்பு துளிக்கூட இல்லை. பதில்கள் தர்க்க சாஸ்திர அடிப்படையிலும் இல்லை. ஜனகர் சொன்னதைப் பதில் என்று எடுத்துக் கொள்ள வேண்டியதில்லை. அதை எதிரொலி எனலாம். குரு கண்ணாடியை முன்னால் காட்டினார். ஜனகர் அதன் எதிரே தன் இதயத்தை வைத்தார். அந்தக் கண்ணாடியில் பிரதிபலிப்பான தோற்றங்களே இந்த சூத்திரங்கள். அவர் தன்னைக் கொஞ்சம்கூட மறைத்துக் கொள்ள முயலவில்லை. சிறிதுகூட திடுக்கிட்டு சந்தேகப்படவில்லை. தர்க்கம் செய்வதை மேற்கொள்ளவில்லை. குரு பரீட்சை செய்யவே இல்லையோ என எண்ணும்படி ஜனகரின் பதில்கள் அமைந்தன.

ஜனகர் அஷ்டாவக்ரரை 'ஹந்த' என அழைத்து, 'போகங்களை விளையாட்டாக அலட்சியப்படுத்தும் ஆத்மஞானியை உலகத்தைத் தலையில் வைத்து கொண்டாடும் மூடர்களுடன் சமமாக ஒப்பிட முடியாது.' என்று முதல் சுலோகத்தில் கூறுகிறார்.

'ஹந்த' என்னும் சொல் மூலம் ஜனகர் குருவிடம் தமக்குள்ள முழு சிரத்தையையும் வெளிப்படுத்துகிறார். 'ஹந்த்' என்பது சிறப்பான சொல். ஜைனர்கள் அதன் முழுமையாக 'அரிஹந்த்' என்கிறாகள். பௌத்தர்கள் 'அர்ஹத்' என்றும் இந்துக்கள் 'ஹந்த' என்றும் அழைக்கிறார்கள். இச்சொல்லிற்கு எதிரிகளை வென்றவன் என்று பொருள். காமம், குரோதம், லோபம், மோகம், தியாகம், போகம், இவ்வுலகம், மறு உலகம் எல்லாமே வெல்ல வேண்டிய எதிரிகள். எவன் எல்லா ஆசைகளையும் வென்று விட்டானோ, இவ்வாறு எவன் ஆசைகளற்ற நிலையை அடைந்து விட்டானோ அவனே 'அரிஹந்த்'.

ஜனகர் இதைச் சுருக்கி 'ஹந்த' என்று அஷ்டாவக்ரரை அழைக்கிறார். இதைவிடச் சிறப்பான அழைப்புச் சொல் மொழியில் கிடையாது. அரிஹந்த் என்பதன் விரிவாக்கம் பகவான். இதுதான் இறுதியான உன்னத உணர்வு நிலை. இதற்கப்பால் வேறு எதுவும் கிடையாது. விலக்க வேண்டியவற்றை விலக்கியாயிற்று; கீழே தள்ள வேண்டியவற்றை எறிந்தாயிற்று; அழிக்க வேண்டியவற்றை அழித்தாயிற்று; வெல்ல வேண்டியவற்றை வென்றாயிற்று. மேற்கொண்டு எதுவும் மிஞ்சியிருக்கவில்லை. சுத்த பரஞான உணர்வுக் கடலே எங்கும் பரவித் தெரிகிறது. இந்த அரிய நிலையின் பெயர் 'அரிஹந்த்'.

'ஹந்த' என்பதற்கு இன்னொரு உயர்வான அர்த்தமும் உண்டு. பேச்சு வழக்கில் இதற்கு சாதாரணமாக 'கொல்லுதல்' என்று பொருள் கொள்கிறோம். தன்னைக் கொல்பவனை, தற்கொலை செய்து கொள்பவனை 'ஆத்மஹந்தா' என்பர். 'ஹந்த' என்பதற்குத் தன்னை அழித்துக் கொண்டவன், தன்னை முழுமையாக முடித்துக் கொண்டவன், 'நான்' என்ற உணர்வு இல்லாது போனவன், அஹங்காரமற்றவன், உருவரை விட்டுச் செல்லாதவன், பெயர்—முகவரி தொலைந்து போனவன், சூன்யமாகி விட்டவன், நிர்வாண நிலையை அடைந்தவன், ஒருவகையில் இவ்வாறு தற்கொலை செய்து கொண்டவன் என்றெல்லாம் விளக்கம் சொல்லிக் கொண்டே போகலாம்.

தற்கொலையை ஆத்மஹத்யா என்றும் கூறுகின்றனர். இது சரியன்று. தற்கொலையில் உடலுக்குத்தான் சேதம் விளைகிறது. ஏனெனில் ஆத்மா இறப்பதில்லை. அஹங்காரம் அழிவதில்லை. உண்மை என்னவெனில் அஹங்காரத்தால் தான் ஒருவன் உடலை அழித்துக் கொள்கிறான். அஹங்காரம் தாக்கப்பட்டால் துடிக்கிறான். செல்வம் அழிந்து திவாலாகி விட்டான், மனைவி ஓடிப்போனாள், காரியத்தில் தோல்வி, தேர்தலில் தோல்வி என்பது போன்ற சூழ்நிலையில் தற்கொலை செய்து கொள்கிறான். அந்த சமயம் மனத்தில் அஹங்காரம் அதிகம் இயங்குவதால் மறுபடியும் பிறவி எடுப்பான். விரைவிலேயே இன்னொரு உடலினுள் இறங்குவான்.

ஞானி செய்து கொள்வதும் ஒருவகைத் தற்கொலைதான். அவன் 'நான்' என்னும் உணர்வை முழுமையாக அழித்துப் போடுகிறான். அப்போது கடவுள் நிலையைப் பெறுகிறான். நீ உன்னை இழக்கும் போது கடவுள் ஏற்பட்டு விடுகிறார். 'நீ' என்பவன் இல்லாத இடத்தில் கடவுள் பிரசன்னமாகி விடுகிறார். நீ தேடிக் கொண்டிருக்கும் வரை அலைந்து கொண்டிருப்பாய். ஆகவே நீ கடவுளுடன் இணைய முடியாது. ஏனெனில் தேடும் சமயம் நீ உன்னை இழக்காமல் நீயாகவே இருக்கிறாய்.

**இ**ங்கிலாந்திலிருந்த வந்த ஓர் இளைஞன் சொன்னான், "எனக்கு இயயேசுநாதரிடம் அபாரமான நம்பிக்கை உண்டு. நீங்கள் என் நம்பிக்கை மேலும் வலுப்பெறச் செய்ய முடியுமா? நான் சந்நியாசி ஆவதற்குத் தயாராக உள்ளேன்."

நான் பதிலளித்தேன்: "முதலில் ஒரு விஷயத்தைத் தெளிவுபடுத்திக் கொள்வோம். உனது நம்பிக்கையை வலிமைப்படுத்து வதற்கு உன்னை முதலில் வலுப்படுத்த வேண்டும். நீ இயேசுவை நம்புவதாக நினைக்கிறாய். உனக்கு இயேசுவிடமிருந்து ஏதாவது உபயோகம் உண்டா? உன் நம்பிக்கையா வலுப்பெற வேண்டும்? 'நான்' என்பது சம்பந்தமான உன் எல்லா உணர்வுகளும் அழியாத வரையிலும் இயேசுவுடன் உனக்கு எந்த சம்பந்தமும் அமைய முடியாது. நீ என்னைச் செயல்பட விட்டால் உன்னுடைய பழைய நம்பிக்கைகளை முழுமையாக அழிக்கவே முயற்சி செய்வேன். ஏனெனில் அந்த நம்பிக்கைகளைப் பற்றிக் கொண்டுதான் நீ நிற்கிறாய். அவை சரிந்தால் நீ விழுந்துவிடுவாய். நீ விழும் இடத்தில் சிலுவை நாட்டப்படும். அந்த இடத்தில் இயேசுவுடன் உனக்கு சம்பந்தம் ஏற்படும்.

"நீ கிறிஸ்தவனாக இருப்பினும் மேற்கண்ட நிலைவரை இயேசுவுடன் நெருக்கம் ஏற்பட முடியாது. உன் இயேசுவையும் முழுமையாக அழித்து விடுவேன். ஏனெனில் இயேசு உன்னை நிரப்பியிருக்கிறார். நீ இல்லாமல் போனால் உன் இயேசு, கிறிஸ்தவம், உன் திருக்கோயில், உன் சாஸ்திரங்கள் ஆகிய எல்லாம் சரிந்துவிடும். ஏனெனில் இவை அனைத்தின் ஆதாரமான நீயே இல்லாமல் போய்விடுவாயே. பிறகு தோன்றுபவர் யாரோ அவரை உன் விருப்பப் படி இயேசு, புத்தர், மகாவீரர் என்று எப்பெயரால் வேண்டுமானாலும் அழை. என்னைப் பொறுத்தவரை பெயர் முக்கியமில்லை.

இயேசு, புத்தர், மகாவீரர் இவையெல்லாம அவரவர் பெயரல்ல. அவை பரமாத்ம உணர்வின் வெவ்வேறு பெயர்கள். இறுதி நிலையின் பெயர்கள். மகாவீரரை 'ஜின்' என்பர், இதன் பொருள் வென்றவன், வெற்றி பெற்றவன் என்பதாகும். புத்தர் என்றால் விழிப்புற்றவர் எனப் பொருள். கிறிஸ்து எனில் சிலுவையில் ஏற்றியும் இறக்காதவர் என்று பொருள். அதை விரிவுபடுத்தினால், சாவைக் கடந்து பெருவாழ்வை அடைந்தவர் என்று பொருள் கூறலாம். சிலுவை ஊடுருவியும் அவரை அழிக்க முடியவில்லை. நிரந்தரமானது எதுவோ அது நீடித்தது — தேவையற்றது எதுவோ அது கைவிடப்பட்டது. சிலுவையில் மரித்தவர் இயேசு. மிஞ்சியவர் கிறிஸ்து. இதுதான் திருமீட்டெழுச்சியின் மறைபொருள்.

'ஹந்தா' என்பதன் பொருள் – தன்னைத் துடைத்து அழித்துக் கொண்டவன், அஹங்காரத்தை நசுக்கி அரைத்தவன், அதன் கழுத்தை நெரித்தவன் என்று பொருள். பிறகு மிஞ்சியிருப்பவன் எல்லை யற்றவனாக, முடிவற்றவனாக, நிரந்தரமானவனாக இருப்பான்.

ஜனகர் செய்தது சரி. அவர் பதிலளிக்கும்போது கூறிய முதல் சொல்லாகிய 'ஹந்த' என்பதில் எல்லாவற்றையும் சொல்லி மாட்டார். "நீங்கள் என்னை திசை திருப்பவோ, கோபப்பட வைக்கவோ முடியாது. என்னை எவ்வளவு வேண்டுமானாலும் சோதித்துப் பாருங்கள். நீங்கள் ஞானத்தை அடைந்து விட்டவர். உங்கள் கடுமைக்கு காரணம் பொறாமை உணர்வு என்று என்னால் நினைக்கவே முடியாது. 'நீங்கள்' என்பவரே இல்லையே. பிறகு பொறாமைக்கு இடமேது? அஹங்காரத்திற்கு இடமேது? கடுமை என்று எப்படி எடுத்துக் கொள்வது?" என்று அஷ்டாவக்ரரிடம் சொல்லாமல் சொல்கிறார்.

ஆகவே ஜனகர் முதலில் 'ஹந்த' என்கிறார். அதிலேயே அவர் எல்லாவற்றையும் சொல்லி விட்டார். அதிலேயே முக்கிய விஷயம் முடிந்துவிட்டது. மீதி சுலோகம் அதன் விளக்கமாகும். அதன்பின் வருகின்ற சுலோகங்களில் இதே விஷயம் விரிவாகத் தரப்படுகிறது.

ஜனகர் தனிப்பட்ட முறையில் தான் பரீட்சிக்கப் படவில்லை என்று உணர்ந்திருந்தார். ஆகவே தன்னை அறிவிலிகளுக்கு சமமாகக் கருதுவதாக அவர் அஷ்டாவக்ரரைத் தன் பதிலில் குறை கூறவில்லை. 'நான், என்னை' போன்ற சொற்களைப் பயன்படுத்தவில்லை. தனி நபா சாராத பதில் அளிக்கிறார்.

ஞானியும் அறிவிலியும் ஒரே உலகில்தான் வாழ்கின்றனர். ஒரே கடைத்தெருவில் தான் நின்று கொண்டிருக்கின்றனர். ஆனால் அவர்கள் நிற்கும் தோரணையில் வித்தியாசம் உள்ளது. இருவர் இருக்கும் இடம் ஒன்று; ஆனால் இருக்கும் நிலை வெவ்வேறு. ஞானி மூட்டையைத் தேரில் கீழே இறக்கி வைக்கிறான். அறிவிலி தேரிலும் மூட்டையைத் தலையில் சுமந்து செல்கிறான்.

**ஓ**ர் அரசன் வேட்டையாடத் தேரில் போய்க் கொண்டிருந்தான். பாதையில் ஒரு பிச்சைக்காரன் ஒரு சிறு மூட்டையைத் தலையில்

வைத்துக் கொண்டு செல்வதைப் பார்த்தான். அவன் போக வேண்டிய இடம்வரை அழைத்துச் செல்வதாகக் கூறித் தேரில் ஏற்றிக் கொண்டான். பிச்சைக்காரன் தடுமாறினான். நடுக்கத்துடன் தேரில் ஏறி உட்கார்ந்தான். தேரில் ஏறத் தனக்குத் தகுதியில்லை என்று சொல்லவும் பயந்தான். அரசன் கோபித்துக் கொண்டால் என்ன செய்வது? தங்க ஆசனத்தில் ஒடுங்கி ஓரமாக உட்காருகிறான். தன்னால் தேர் அழுக்காகிவிடும் என்று கூசுகிறான். ஆனால் அவன் தலையில் வைத்திருந்த மூட்டையைக் கீழே இறக்கித் தேர்த்தரையில் வைக்கவில்லை!

அரசன் அதைக் கவனித்துச் சொன்னான், "ஏ பைத்தியம்! மூட்டையைக் கீழே வை. இன்னமும் ஏன் தலையில் வைத்துக் கொண்டுள்ளாய்?" பிச்சைக்காரன் பதிலளித்தான்," மகாராஜா, தாங்கள் இவ்வளவு கருணை காட்டியதே பெரிய விஷயம். என்னை உட்கார வைத்ததே பெரிய கௌரவம். என் மூட்டையின் பாரத்தையுமா தங்கள் தேரின்மேல் சுமத்துவேன்? அவ்வாறு செய்வது அதிகப்பிரசங்கித்தனம் ஆகிவிடும்; அநாகரிகம் ஆகிவிடும். நான் ஏழை என்பதை ஒப்புக் கொள்கிறேன். ஆனால் எனக்குக் கொஞ்சமாவது புத்தி உள்ளது. மூட்டை தலைமேலேயே இருக்கட்டும். இந்த விஷயத்தில் மட்டும் தங்கள் ஆணையை ஏற்க இயலவில்லை. நான் தேரில் ஏறுவதேகூட மிகையான செயல். நீங்கள் கோபித்துக் கொள்வீர்களோ என்ற பயத்தால் ஏறி உட்கார்ந்தேன். நான் ஏழை. நடந்தே எங்கும் செல்லப் பொருத்தமானவன். தேர் சவாரி எனக்கு ஏற்றதில்லை. இங்கே உட்கார்ந்திருப்பது எனக்கு சங்கடமாக உள்ளது. ஆகவே இந்த மூட்டையையாவது என் தலையிலேயே இருக்க அனுமதியுங்கள். இதன் சுமையையும் உங்கள் தேரில் ஏற்ற நான் விரும்பவில்லை."

நீ தேரில் உட்கார நேர்ந்தால் மூட்டையை உன் தலையில் வைத்துக் கொண்டாலும், அல்லது அதை இறக்கித் தேரில் வைத்தாலும் ஒன்றுதானே. ஆகவே ஜனகரின் சுலோகப்படி, ஞானி, அஞ்ஞானி இருவருமே தேரில் அமர்கின்றனர். அறிவிலி தன்னிடமுள்ள மூட்டையைத் தலையிலேயே வைத்திருக்கிறான். ஞானி மூட்டையை இறக்கிக் கீழே வைத்து விடுவான். ஆகவே உலகத்தைத் தலையில் தூக்கி வைத்திருக்கும் மூடனோடு ஞானியை ஒருபொழுதும் ஒப்பிட முடியாது.

ஏன் என்றால் ஞானி போகங்களை விளையாட்டுப் போல் நினைக்கிறான். அவை விளையாட்டு (லீலை) என்றே இவ்வுலகில் நிலவுகின்றன. ஞானிக்கு இவ்வுலகில் சுவை இல்லை. தன் தரப்பு—எதிர்த்தரப்பு, விருப்பம்—வெறுப்பு ஆகியவை அவன் மனத்தில் இல்லை. அவன் கடவுளின் விருப்பம் காரணமாக உலகுடன் சேர்ந்துள்ளான். உலகமே அவனுக்கு விளையாட்டு மைதானம்தான்.

ஒரு கடை. அங்கே உட்கார்ந்து அதை இருவகையாக நிர்வாகிக்க முடியும். அறிவிலி அந்த வேலையையே முழு வாழ்க்கை என்று நினைப்பான். ஞானியோ அதை ஒருவகை விளையாட்டாகக் கருதுவான். அது அவசியமான விளையாட்டென்றும், அதுவும் வாழ்க்கையின் ஓர் அம்சம் என்றும் எடுத்துக் கொள்வான். ஆனால் எல்லாம் விளையாட்டுதான் என்பதை மறக்க மாட்டான். ஒரே கடையில் அறிவிலியும் ஞானியும் உட்கார்ந்துள்ளனர். ஆனால் அவர்கள் வெவ்வேறு மனநிலையில் உள்ளனர். எல்லாம் விளையாட்டெனக் கருதுவதால் ஞானி சாட்சிபோல் உள்ளான். ஆனால் வாழ்க்கை நிகழ்ச்சிகளைத் தீவிரமாக எடுத்துக் கொண்டு அனுபவிப்பவன் கர்த்தா நிலைக்குப் போகிறான்.

அறிவிலி உலக வாழ்க்கையை தீவிரமாக எடுத்துக் கொள்கிறான். ஞானியோ விளையாட்டுதானே என்று சிரித்தபடி எடுத்துக் கொள்கிறான். மனைவி இறந்து விட்டாள். உடலுடன் அறிவிலி சுடுகாடுவரை செல்கிறான் – அழுதபடி, கத்திக் கொண்டு, கூக்குரலிட்டபடி. ஞானியும் உடலுடன் சுடுகாடு செல்கிறான். ஓர் ஆட்டம் முடிவு பெற்றது. ஒரு நாடகம் முடிவடைந்தது. திரை இறங்கி விட்டது. அழுதல், புலம்புதல், கத்துதல் ஆகிய எதுவும் கிடையாது. உள்ளத்தில் அவன் சாட்சியாகவே நீடிக்கிறான். தான் ஒரு பார்வையாளன் மட்டுமே என்னும் உணர்வை அவன் ஒரு நொடிகூட இழப்பதில்லை.

ஞானி உலக வாழ்க்கையை விட்டு ஓடக்கூடாது. ஓடினால் அவன் வாழ்க்கையைத் தீவிரமாக எடுத்துக் கொள்கிறான் என்று பொருள்படும். ஆகவேதான் எல்லாவற்றையும் விட்டு ஓடுகிறான் என்று நினைக்க நேரிடும். ஏன் ஓடுகிறான்? அவன் இன்னும் உலகத்தைச் சரியாக அறிந்திருக்கவில்லை. அவனுடைய கண்களின்

பார்வை ஆழமாக இல்லை. இன்னமும் வாழ்க்கையின் ஆழத்தில் அவன் இறங்கவில்லை. செய்பவனும் அனுபவிப்பவனும் தான் இல்லை, தான் சாட்சி மட்டுமே என்று அவன் பக்குவம் பெறவில்லை — அதனால்தான்.

**அ**மெரிக்காவில் ஆப்ரஹாம் லிங்கன்[1] முதல் நூற்றாண்டு விழா நடைபெற்றது. ஒரு நடிகனின் முகம் லிங்கனின் முகத்தை ஒத்திருந்தது. அவன் ஒரு நாடகத்தில் லிங்கன் பாத்திரம் ஏற்று நடித்தான். அந்த நாடகக் குழு ஓராண்டிற்கு அமெரிக்கா முழுவதும் சுற்றியது. நகரங்களிலும் கிராமங்களிலும் லிங்கன் நாடகம் நடித்துக் காட்டப்பட்டது. லிங்கன் பாத்திரமேற்றவன் நீண்ட கால அனுபவம் காரணமாக அசல் லிங்கன் என்று புகழப்படலானான்.

போகப்போக அந்த மனிதனிடம் ஏதோ பிரச்சினை வளர்வதாக மக்களுக்குத் தோன்றியது. நாடகத்தில் அணியும் லிங்கன் பாத்திர உடைகளை அவன் மற்ற சமயங்களிலும் அணிந்து வெளியே செல்ல ஆரம்பித்தான். லிங்கனைப் போலவே மேடையில் விந்தி நடந்த அவன் வெளியிடங்களிலும் அதே பாணியில் விந்தி நடந்தான். லிங்கனுக்குச் சிறிது வாய் திக்கும். அதுபோல் மேடையில் பேசிய நடிகன் வெளியிலும் திக்கிப் பேசலானான். இதென்ன கூத்து என்று முதலில் சிரித்த மக்கள் பிறகு கவலைப்பட்டார்கள். ஏனென்றால் அந்த நடிகன் தன்னை ஆப்ரஹாம் லிங்கன் என்றே நினைத்துக் கொண்டு விட்டான்.

ஓராண்டு கழித்து அவன் லிங்கனாகவே வீடு திரும்பினான். தான் அடிப்படையில் ஒரு நடிகன் என்பது அவனுக்கு மறந்துவிட்டது. மக்கள் இதைக் கண்டு மக்கள் பழமொழிபோல் சொன்னார்கள், 'சுட்டால்தான் புத்தி வரும்.' லிங்கன் சுடப்பட்டுத்தான் கொல்லப் பட்டார்.[2] இவனையும் கொன்றால்தான் இந்தப் பிரச்சினை தீரும் என்று மக்கள் வேடிக்கையாகப் பேசினார்கள்.

அவனுக்கு எல்லா வகையான சிகிச்சைகளும் செய்யப்பட்டன. டாக்டர்களும் மனத்தத்துவ வல்லுநர்கள் பலவகையில் அவனைச்

1. ஆப்ரஹாம் லிங்கன் (1809-1865) அமெரிக்காவின் 16ஆம் அதிபர்.
2. 15.4.1865

சரிப்படுத்த முயன்றுக் களைத்துப் போயினர். அவன் சிரித்தபடி பதிலுக்கு அவர்களைக் கேட்டான், "கிண்டலா செய்கிறீர்கள்? நான் ஆப்ரஹாம் லிங்கன் இல்லை என்கிறீர்களே. உங்களுக்கு மூளைக் கோளாறா? என்னிடம் என்ன குறை கண்டு நான் லிங்கன் இல்லை என்கிறீர்கள்?"

லிங்கன் பாத்திரம் என்ற முறையில் அவனிடம் குறை இல்லைதான். அவனது நடிப்பு முழுமையாக இருந்தது. அவன் லிங்கனைப் போலவே நடந்தான், பேசினான், உட்கார்ந்தான், எழுந்தான், தாடி—மீசை வைத்துக் கொண்டான். அவனைக் குணமாக்க முடியாது என்று டாக்டர்களுக்கு உறுதிப்பட்டு விட்டது.

அந்த சமயம்தான் பொய் பேசுவதைக் கண்டுபிடிக்கும் கருவி* உபயோகத்தில் வந்தது. நீதிமன்றங்களில் அது அறிமுகமானது. ஓர் ஆளுடன் அதை இணைத்து அவனால் பொய் பேசமுடியாத சில கேள்விகளைக் கேட்பார்கள். உதாரணமாக, கடிகாரத்தைக் காட்டி மணி என்ன; துணியைக் காட்டி இது காவி நிறமா, பச்சையா; புத்தகத்தைக் காட்டி இது குரானா, பைபிளா என்றெல்லாம் ஐந்தாறு கேள்விகள் கேட்பார்கள். பதில் கூறும்போது ஒரு கருவி வரைபடம் தயாரிக்கிறது. இதயத் துடிப்பைப் பதிவு செய்வதுபோல்தான் இது.

வழக்கமான சாதாரணக் கேள்விகளின் இடையே, 'நீதான் திருடினாயா?' என்று ஒரு திடீர்க் கேள்வி எழும். இதயத்துடிப்பு 'கடக்' என்று தடுமாறும். ஏனெனில் அவன் திருடியிருப்பான். சமாளித்துக் கொண்டு 'திருடவில்லை' என்பான். ஆனால் வரைபடத்தில் ஓர் அதிர்வு பதிந்திருக்கும். இதுவரை அவன் சொன்னதும் சொல்ல விரும்பியதும் ஒன்றாக இருந்ததால் சீராக இருந்த வரைபடம் இப்போது பொய் சொன்னதால் கோட்டில் தடுமாற்றம் தெரியும். ஏனெனில் இதயத் துடிப்பும் சுவாசமும் ஒரு நொடி அதிர்ச்சிக் குள்ளாகின்றன.

லிங்கன் என்று நினைத்தவனையும் இக்கருவி மூலம் பரிசோதிக்க முடிவு செய்யப்பட்டது. மருத்துவர்களும் குடும்பத்தினரும் இந்நிகழ்ச்சியைக் காணத் திரண்டுவிட்டனர். அந்த மனிதனும் களைத்துப் போயிருந்தான். தினமும் பலர் 'நீ லிங்கன் இல்லை' என்று

* Lie detector or polygraph

சொல்லிச் சொல்லித் துன்புறுத்தியிருந்தனர். பரிசோதனை அன்று அவன் இந்தச் சித்திரவதையிலிருந்து விடுபட முடிவெடுத்தான். ‘நான் ஆப்ரஹாம் லிங்கன்தான். ஆனால் என்ன செய்வது? இதை உலகம் ஒப்புக் கொள்ளவில்லையே. நான் லிங்கன் இல்லை என்று சொல்லி விடலாம். இந்த பிரச்சினையை ஒரு முடிவுக்கு கொண்டு வரலாம்’ என அவன் நினைத்தான்.

கருவியில் அவன் இணைக்கப்பட்டதும் அவனிடம் சாதாரண மான சில கேள்விகள் கேட்கப்பட்டன. திடீரென, ‘நீ ஆப்ரஹாம் லிங்கனா?’ என்று கேட்கப்பட்டது. இத்தனை காலமாக ‘ஆம்’ என்று எல்லோரிடம் சொல்லிப் பழகியவன் இப்போது முதல் முறையாக ‘நான் லிங்கன் இல்லை’ என்றான்! இத்தனை நாளாக உறுதியுடன் பேசிய அவன் இம்முறை அவன் ஒரு நொடி தடுமாறியதால் கருவி அவன் பேசுவது பொய் என்று பதிவு செய்து விட்டது! அவன் தன்னை லிங்கன் என்று நினைத்துக் கொண்டது அவன் மனத்தில் அவ்வளவு அழுத்தமாக, ஆழமாகப் பதிந்து போயிருக்கிறது. ஆகவே கருவியும் அவனை லிங்கன் என்று ஒப்புக் கொண்டுவிட்டது!

நமது நிலையும் இதுவேதான். நடிகன் ஓர் ஆண்டுதான் லிங்கன் வேஷம் தரித்தான். நாமோ எத்தனையோ பிறவிகளாக கர்த்தாவாகவும் போக்தாவாகவும் (செய்பவனாயும் அனுபவிப்பவனாயும்) இருந்து வருகிறோம். நம்மையும் அக்கருவி பிடிக்க முடியாது. நாம் சாட்சி மனப்பான்மை உள்ளவன் என்று சொன்னாலும் அக்கருவி ஒப்புக் கொள்ளாது. கர்த்தா—போக்தா என்ற முடிவிற்கே வரும். அப்படித்தான் நம்பும் பழக்கம் புராதன காலத்திலிருந்து நீண்ட காலமாக, நூற்றாண்டுகளாக நம் மனத்தில் பதிந்துவிட்டது.

மனிதன் ஞான விழிப்பு பெறும்போது எங்கேயும் ஓடிப்போய் விடுவதில்லை. அவனிடம் ஏற்படும் மாறுதல் நுணுக்கமானது. யாராலும் கண்டுபிடிக்க முடியாது. நீ குருவின் முன்னிலையில் நிற்கும்போது அவர் காட்டும் கண்ணாடியில்தான் மாறுதல் தெரியும். நீ ‘சாட்சி’யாக மாறிவிட்டாய் என்பதை ஒருவேளை உன் மனைவியால்கூட கண்டுபிடிக்க முடியாது. நீ பெண்ணாக இருந்தால் என்றைக்கு, எத்தனை மணிக்கு, எந்த நொடியில் நீ சாட்சியாக மாறிய புரட்சி நிகழ்ந்தது என்பதை உன் கணவரும், குழந்தைகளும், அல்லது உன்

இதயத்திற்கு நெருக்கமானவரும்கூட அறிய முடியாது. ஏனெனில் இது மிகவும் நுணுக்கமான புரட்சியாகும். உனக்கோ, குருவுக்கோதான் இந்தப் புரட்சி நிகழ்ந்ததே தெரியும்.

வேறு யாருமே உனக்குள் நிகழ்ந்த புரட்சியை அடையாளம் காண முடியாது. ஏனெனில் உன்னிடம் வெளிப்படையாக எந்த மாற்றமும் தெரியாது. நீ கடையில் வியாபாரம் செய்து வருகிறாய். அந்தப் புரட்சிக்குப் பிறகும் உன் தொழில் தொடரும். தராசு எடுத்துப் பொருள்களை எடை போடுவாய்; அவற்றை விற்பாய்; வாடிக்கை யாளர்களுடன் பேரம் பேசுவாய். வீடு திரும்புவாய். குழந்தைகளைத் தட்டிக் கொடுத்துக் கொஞ்சுவாய். மனைவிக்குப் பூ, ஐஸ்கிரீம் வாங்கித் தருவாய். எல்லாம் முன்புபோலவே நடைபெறும். ஒருவேளை முன்பைவிட நன்றாக நடைபெறலாம். ஏனெனில் உனக்கு முன்பைவிட ஆழமாக எதையும் புரிந்து கொள்ளும் ஆற்றல் ஏற்பட்டுவிட்டது. இனி நீ யாருக்கும் வீணாக கஷ்டம் தருவதை விரும்ப மாட்டாய்.

ஆனால் உனக்குள்ளே ஒரு புரட்சி ஏற்பட்டுவிட்டது. நீ சராசரியிலிருந்து வெகுதொலைவு சென்று விட்டாய். அன்றாட நடவடிக்கைகளைக் கைவிடவில்லைதான். ஆனால் அவற்றில் ஒட்டுதல் இருக்காது; தீவிரம் காட்டமாட்டாய். எல்லாம் நாடகம் என்று நினைப்பாய். எல்லாம் ராம்லீலா நாடகம் என்று கருதுமளவு விழிப்புப் பெற்றுவிட்டாய். நீ சுயநினைவை அடைந்து விட்டாய். இதேபோன்ற நிலையை அடைந்த வேறொருவன்தான் உன் நிலையைப் புரிந்து கொண்டு பரீட்சிக்க முடியும். ஆகவே குரு அவசியம் தேவைப் படுகிறார். அவர்தான் பாரபட்சமின்றி சாட்சியாக இருந்து உன் சாதனையை மதிப்பிட முடியும்.

ஜனகர் தமது பதிலில் 'நான்' என்ற சொல்லைப் பயன்படுத்த வில்லை என்பதைக் கவனிக்கவும். அவரிடம் சிறிதளவாவது அறியாமை மிஞ்சியிருந்தால் 'என்னை உலகத்திலுள்ள முட்டாள் களுக்கு சமம் என்றா கருதுகிறீர்கள்?' என்று அஷ்டாவக்ரரிடம் கேட்டிருப்பார். 'நான் ஞானி. எனக்கு ஞானோதயம் ஏற்பட்டுவிட்டது' என்று கூறியிருப்பார். அவர் அப்படிப் பேசவில்லை. ஏனெனில் ஞானம் தோன்றியிருந்தால் 'நான்' மறைந்து போயிருக்கும். ஆகவே ஜனகர் நேரடியாக சித்தாந்த விளக்கத்திற்குச் சென்றுவிட்டார். ஹே

ஹந்த. அரிஹந்த். ஞானி போகத்தை லீலையாக நினைத்து விளையாடுகிறான். அதைத் தலையில் தூக்கிவைத்துக் கொள்வதில்லை. உலக வாழ்க்கை ஒரு விளையாட்டு; அது தீவிரமான தொழிலன்று.

அறிவிலியும் விளையாடுகிறான் ஆனால் சிக்கிக் கொள்கிறான். தீவிரம் கொள்கிறான். ஞானியும் செயல்புரிகிறான். ஆனால் எந்த பந்தத்திலும் மாட்டிக் கொள்ளாமல் விழிப்புடன் உள்ளான். தான் சாட்சியாக மட்டுமே இருக்க வேண்டும் என்பதை அவன் அறிந்திருக்கிறான். மனத்துக்குள் இடைவிடாமல் 'நான் சாட்சி மட்டுமே' எனப் பின்னணியில் ஒலித்துக் கொண்டிருக்கிறது. அவன் எல்லா நடவடிக்கைகளையும் பார்க்கிறான். பிறப்பு—இறப்பு, வெற்றி—தோல்வி, மானம்—அவமானம் எல்லாம் நடக்கிறது. வசிக்கக் குடிசை அல்லது மாளிகை. ஞானி இவற்றை விளையாட்டு என்ற வகையிலேயே எடுத்துக் கொள்கிறான்.

நீ குறிப்பிட்ட பாதை வழியாக உலாவச் செல்கிறாய். சிறிது நேரம் கழித்து அதே பாதையில் அலுவலகம் செல்கிறாய். நண்பகல் உணவிற்குப்பின் மீண்டும் அதே பாதையில் அலுவலகத்திற்குப் போகிறாய். அதே பாதை, வழியில் அதே சாலை ஓர மரங்கள், அதே சூரியன், அதே வானம், அதே அண்டை அயலார், எல்லாம் அதேதான். ஆனால் நீ அலுவலகம் செல்லும்போது உன் நடையில் இறுக்கம் தெரிகிறது. அந்த சமயம் உன் மனத்தில் கவலை பரவியிருக்கிறது. காலையில் அதே சாலையில் நீ உலாவச் செல்கையில் மனத்தில் கவலையோ, இறுக்கமோ உணரவில்லை. ஏனெனில் அந்த சமயம் குறிப்பாக ஓரிடத்தை நோக்கி நீ செல்லவில்லை. விளையாட்டாக, உலாவுவதற்காக, காற்றை அனுபவிக்கக் கிளம்பினாய். போய்ச் சேருமிடம் இல்லையாதலால் எப்பொழுது வேண்டுமானாலும் நீ எந்த இடத்திலிருந்தும் திரும்பிவிட முடியும். எங்கேயும் போவதற்காக அல்ல, உலாவக் கிளம்பினாய். ஆகவே ஆனந்தம் கிடைத்தது. ஆனால் ஒரு வேலையை முடிப்பதற்காகச் செல்லும்போது அந்த ஆனந்தம் நீங்கிவிடுகிறது.

ஞானி தன் எல்லா வேலைகளையும் விளையாட்டாக ஆக்கிக் கொள்கிறான். அஞ்ஞானி விளையாட்டையும் வேலைபோல் தீவிரமாகக் கருதுகிறான். இதுதான் இருவரிடையேயும் உள்ள வேறுபாடு. ஞானிக்குத் தனது தொழில் ஒரு நடிப்பாகத் தெரிகிறது.

அஞ்ஞானிக்கு நடிப்பதுகூட தொழில்போல் பாரமாகிறது. ஞானி வாழ்க்கையில் எதையும் பற்றுவதில்லை. ஆகவே விடுவதற்கும் அவனிடம் எதுவும் இல்லை. பிடித்தல்—விடுதல் என்ற பிரச்சினையே அவனுக்கில்லை. எது வந்தாலும், எது நடந்தாலும் சரியென்பான். பார்வையாளனாக மட்டும் இருந்து விடுவான்.

**யத்பதம் ப்ரேப்ஸவோ தீனா: ஸக்ராத்யா: ஸர்வதேவதா: |**

எந்தப் பதவி அல்லது கௌரவத்திற்கு ஆசைப்பட்டு ஸக்ர (இந்திரன்) மற்றும் தேவர்கள் பரிதாப நிலையில் காணப்படு கிறார்களோ அந்நிலையில் யோகி இருக்க நேர்ந்தாலும் அவன் விசேஷ மகிழ்ச்சி கொள்ள மாட்டான் — இது ஆச்சரியமான விஷயம். இங்கும் ஜனகர் தன்னை முன்னிலைப்படுத்திக் கொள்ளவில்லை.

இந்திரன் முதலான தேவர்களும் இன்னும் வேண்டும், மேலும் வேண்டும் என்று கெஞ்சுகிறார்கள். தம்மிடம் எல்லாம் நிறைந்திருக்கப் பெற்றவர்களும் மேன்மேலும் ஆசைப்படுகிறார்கள். கேட்பதற்கு முடிவில்லை. பரிதாபநிலை மாறவில்லை. தாழ்வு மனப்பான்மை நீங்கவில்லை. மாபெரும் பதவியிலிருந்தாலும் அதற்கும் மேற்பட்ட பதவி வேண்டும்; கூடுதலான வலிமை வேண்டும்; தமது நாட்டின் எல்லை விரிவடைய வேண்டும்; பொக்கிஷம் பெரிதாகி நிரம்ப வேண்டும். இந்த விருப்பப் பட்டியலுக்கு எல்லையில்லை.

**அஹோ தத்ர ஸ்திதோ யோகி ந ஹர்ஷமுபகச்சதி |**

தேவர்கள் அடைவதற்குக் கெஞ்சுகின்ற உன்னத நிலையை யோகி அடைந்து அங்கே வீற்றிருக்கிறான். ஆனால் அவனிடம் விசேஷமான சந்தோஷமோ, அதற்கு மேலும் வேண்டும் என்ற ஏக்கமோ தென்படவில்லை. இதைப் புரிந்துகொள்.

உனக்கு சுகம் ஏற்படுவது சாத்தியமானால் துக்கம் ஏற்படுவதும் சாத்தியமேயாகும். சுகமும் துக்கமும் அருகருகே உள்ளன. பகலும் இரவும்போல் மாறி—மாறி வருகின்றன. இரண்டில் ஒன்றை மட்டும் நீ வைத்துக் கொள்ள முடியாது. பகலை வைத்துக் கொண்டால் இரவும், சுகத்தை வைத்துக் கொண்டால் துக்கமும், பிறப்பை வைத்துக் கொண்டால் சாவும், நண்பர்களை ஏற்படுத்திக் கொண்டால் எதிரிகளும் என்று தவிர்க்க முடியாத நிலை ஏற்படும். பரஸ்பர மோதல்களிலிருந்து

நீ தப்பிக்க முடியாது. இந்த இரட்டைகள் எல்லாம் ஒரே காசின் இரண்டு பக்கங்களே என்று எப்பொழுது நீ புரிந்து கொள்கிறாயோ அப்பொழுது முழுக்காசும் கையிலிருந்து விழுந்துவிடும். ஆகவே யோகி உயரிடத்தில் அமர்ந்தும் விசேஷமாக எதுவும் உணர்வதில்லை.

ஏன்? அந்த உயர்ந்த நிலை அவனுக்கு இயற்கையானது. கிடைக்க வேண்டியதுதான் கிடைத்துள்ளது. பிறகு சந்தோஷப்பட என்ன உள்ளது. தனக்குச் சொந்தமான சொத்தை அனுபவிப்பதில் என்ன விசேஷ சந்தோஷம் இருக்கும்?

யோகிக்கு எல்லாம் கிடைத்தும் அவன் விசேஷமாக சந்தோஷப் படவில்லையே என்று ஜனகர் வியக்கிறார். ஆனந்தமும் இன்பமும் வெவ்வேறானவை. இன்பம், காய்ச்சல் போன்றது. அது விரைவில் நம்மைக் களைத்துப் போகச் செய்கிறது. இன்பம் அலைகளாக எழுகிறது. கவலை அலைகள், துன்ப அலைகள் போலவே சந்தோஷ அலைகளும் உள்ளன. ஒரே வித்தியாசம் என்னவென்றால் நீ துன்ப அலைகளை விரும்புவதில்லை; இன்ப அலைகளை விரும்புகிறாய். ஆனால் இரண்டும் அலைகளே. இவற்றால் மனம குழப்பமடைகிறது. உடைகிறது. துண்டுகளாகிறது. மனத்தின் சாந்த ஏரி பாதிப்படைகிறது. மனக் கண்ணாடி மாசுறுகிறது.

ஜனகர் ஆச்சரியத்துடன் அஷ்டாவக்ரரிடம் கூறுகிறார் — எதை அடைய உலகம் ஓடி அலைகிறதோ, பிறவிகள் தோறும் யாத்திரை மேற்கொள்ளப் படுகிறதோ, முடிவே இல்லாமல் முடிவற்ற பொருளின் தேடல் நடைபெறுகிறதோ, அது கிடைத்தும், அந்த அரியணையில் அமர்ந்தும் யோகியிடம் மகிழ்ச்சி வெளிப்படவில்லையே. இந்த நிலையிலும் அவன் சாட்சிபோல் எல்லாவற்றையும் பார்க்கிறான். அவன் மனத்தில் ஓர் அலைகூட எழுவதில்லை. அவனது மன ஆகாயம் நிர்மலமாக உள்ளது. அங்கே துக்க மேகமோ, சுகத்தின் மேகமோ திரிந்து கொண்டிருக்கவில்லை.

**தஜ்ஞஸ்ய புண்யபாபாப்யாம் ஸ்பர்ஷோ ஹ்ருயந்தர்ன ஜாயதே |**
**ந ஹ்ருயகாஷஸ்ய தூமேன த்ருஷ்யமானோஅபி ஸங்கதி: ||**

ஆகாயத்துடன் சம்பந்தப்படும் அளவிற்குப் புகை எழுந்தாலும் ஆகாயம் பாதிப்படைவதில்லை. அதுபோல அந்த உயர் நிலையை அறிந்தவனின் உள்மனத்தை புண்ணிய பாவங்கள் ஸ்பரிசிப்பதில்லை.

எரியும் அடுப்பிலிருந்து புகை எழுகிறது. வானத்தில் பரவுகிறது. ஆனால் அது வானத்தைத் தொடுவதில்லை, அழுக்காக்குவதில்லை. எவ்வளவு புகை எழுந்தாலும் எங்கோ போய் மறைகிறது. பெரும் எண்ணிக்கையில் பரவும் மேகங்களும் காணாமல் போகின்றன. வானம் சிறிதுகூட மாசடைவதில்லை. வெள்ளை மேகங்களால் வானம் தூய்மைப்படுவதில்லை; கறுப்பு மேகங்களால் களங்கப்படுவதுமில்லை.

இதேபோல ஞானியின் சாட்சி மனப்பான்மை என்னும் வானம் எந்த சூழ்நிலையிலும் எதனாலும் மங்குவது இல்லை. அவனது உள்ளத்தின் ஜோதி புகையின்றி ஒளிவீசுகிறது. மாளிகை அவனைப் பணக்காரனாக்குவதில்லை; குடிசை அவனை ஏழையாக்குவதுமில்லை. அவன் அரியணையில் அமர்ந்தாலும் சுவர்க்கம்போல் நினைப்பதில்லை; தெருக்களில் அலைந்தாலும் பிச்சைக்காரன்போல் உணர்வதில்லை. இவ்வாறு முழு உலகத்தையும் தனது ஆத்மாவைப் போல் கருதுகின்ற ஞானி தனது உள்மனத் தூண்டுதலின்படி இயங்குவதை யார் தடுக்க முடியும்? புகை தொடாத ஆகாயம்போல் அவன் ஆகிறான். 'நான்' என்பது அழிந்ததால் உலகத்தைத் தனது ஆத்மாபோல் அவன் அறிந்திருக்கிறான்.

வீட்டைச் சுற்றி வேலி அமைக்கிறாய். இதனால் நீ பக்கத்து வீட்டுக்காரனிடமிருந்து வேறுபட்டு விடுகிறாய். ஒரே பூமிதான் எப்போதும் உள்ளது. நீ வேலி போட்டால் அது பிரிகிறது. அதை அகற்றினால் பூமி மறுபடி இணைந்துவிடும்.

'நான்' என்பது ஒரு வேலி. அது நம்மை நான்கு புறத்திலும் சூழ்ந்திருக்கும் எல்லை. அது லட்சுமண ரேகை. அதைக் கடந்து நாம் செல்வதில்லை. யாரையும் அதன் உள்ளேயும் வரவிடுவதில்லை. என்றைக்கு இந்த எல்லைக்கோடு அழிக்கப்படுகிறதோ அன்றிலிருந்து வெளியே எதுவுமில்லை, உள்ளேயும் எதுவுமில்லை. உள்ளே– வெளியே என்ற வேறுபாடும் நீங்கிவிடுகிறது.

வீடு கட்டுகிறாய். செங்கற்சுவர்கள் எழுப்புகிறாய். மேலே பார்த்தால் ஆகாயத்தைச் சுவர்கள் பிரிப்பது போலுள்ளது. சுவர்

விழுந்துவிட்டால் உள்ளே—வெளியே என்று பிரிக்க முடிவதில்லை. அந்தப் பிரிவுகளும் சேர்ந்து விழுகின்றன.

**ஆத்மவேதம் ஜகத்ஸர்வம் க்ஞாதம் யேன மஹாத்மனா |**
**யத்ருச்சய வர்த்தமானம் தம் நிஷேத்தும் க்ஷமேத க: ||**

ஜனகர் சொல்வது என்னவெனில், பிரிந்தவர் சேர்ந்து ஒன்றானால் யாரால் இனி தடுக்க முடியும்? நடக்க வேண்டியது நடந்தே தீரும். அதிர்ஷ்டம், விதி, கடவுட்சக்தி என்று எந்தச் சொல்லை வேண்டுமானாலும் உபயோகி. அது செய்விப்பதே நடைபெறும். நம் வசத்தில் எதுவுமில்லை. ஏனெனில் நாமே இல்லாமல் போனோம். என்ன நடக்கிறதோ அதைப் பார்த்த வண்ணம் இருப்போம். மாளிகையில் வைத்தால் அங்கே வசிப்போம். மாளிகை பிடுங்கப் பட்டால் அச்செயலையும் பார்த்தபடி இருப்போம்.

ஒரு குரு தன் சீடனுக்குப் பல்லாண்டுகளாகக் கடுமையாக முயன்றும் தியான நிலை கைகூடவில்லை என்பதைக் கவனித்தார். "நீ ஜனகரிடம் போய்ப் பயிற்சி செய்," என்று கட்டளையிட்டார். சமாதி கைகூடாதவன் அஹங்காரியாக இருந்திருப்பான். அவன் கேட்டான்: "நானா? ஜனகரிடம் போவதா? அவரா எனக்குப் பயிற்சி தருவார்? அவர் முதலில் முழுமையாகக் கற்கட்டும். தியாகம் செய்யட்டும். அரண்மனைவாசி. கேளிக்கைகளின் நடுவே வாழ்கிறார். அப்படிப் பட்டவர் எனக்கு என்ன சொல்லித்தர முடியும்? சரி, போகிறேன், குருவின் கட்டளையாயிற்றே. எப்படி மீறுவது?" வேறு வழியின்றிக் கிளம்பினான். திமிருடன் சென்றான்.

சீடன் ஜனகரின் மாளிகையை அடைந்தான். கேளிக்கைகள், இசைக் கச்சேரிகள், நடனமாதர்களின் நிகழ்ச்சிகள், மது விருந்து என எங்கும் ஆரவாரமாக இருந்தது. நடுவே அமர்ந்திருந்தார் ஜனகர். சீடன் யோசித்தான் – ஜனகர் இந்த சூழ்நிலையில் ஏன் இங்கு உட்கார்ந் துள்ளார்? இவர் ஞானி என்றால் அஞ்ஞானி யார்? இவரிடம் நான் கற்பதா? தலைகீழாக அல்லவா தோன்றுகிறது. நானே இவருக்கு ஏதாவது கற்றுக்கொடுக்க முடியுமே.

ஜனகர், ஓர் அந்தணர் சபாமண்டபத்தில் நுழைவதைப் பார்த்து விட்டார். உடனே எழுந்து சென்ற காலைத் தொட்டு வணங்கி, "நீங்கள்

ஓய்வெடுத்துக் கொள்ளுங்கள். பிறகு தாங்கள் வந்ததன் காரணத்தைத் தெரிவியுங்கள். தங்களுக்கிருக்கும் சந்தேகங்களைப் போக்கிக் கொள்ளுங்கள்,''என்றார். சீடன் கர்வமாக, ''எனக்கா சந்தேகம்? நீங்களா போக்குவீர்கள்? நீங்கள் உங்களைப் பற்றி என்ன நினைத்துக் கொண்டிருக்கிறீர்கள்? உங்களிடமா நான் சந்தேகங்களைப் போக்கிக் கொள்ள வேண்டும்?'' என்று கேட்டான். ஜனகர் பதிலுக்கு, ''தங்கள் இஷ்டம். என்னிடம் சந்தேகம் கேட்க விரும்பவில்லையெனில் விடுங்கள். தற்பொழுது உணவுண்டு ஓய்வெடுங்கள்,'' என்று கேட்டுக் கொண்டார்.

ஜனகர் அவனது உணவிற்கும் ஓய்விற்கும் தகுந்த ஏற்பாடு செய்தார். வந்தவனுடைய பிரச்சினை என்ன, அவனுடைய குரு ஏன் இங்கே அனுப்பினார் என்பது ஜனகருக்குப் புரிந்து விட்டது. வந்தவன் போகத்தைக் கைவிட்டவன், தியாகியானவன் என்பதை அவர் உணர்ந்தார். போகியை தியான வழிக்குக் கொண்டு வருவதே சிரமம். தியாகியை தியானம் செய்ய வைப்பது அதைவிட கடினம். தியானத்தில் தடை ஏற்பட அஹங்காரம் முக்கிய காரணம். தியாகியிடம் அஹங்காரம் அதிகமாக இருக்கும். எஃகுபோல் வலுவாக இருக்கும். அஹங்காரம் காரணமாக தியாகி சர்வாதிகாரி ஸ்டாலின்போல் ஆகியிருப்பான். ஸ்டாலின் என்ற பெயர் ஸ்டீல் (எஃகு) என்பதிலிருந்து வந்தது. இவ்வாறு ஸ்டாலின் ஆனவனை வளைப்பது மகாகஷ்டம்.

ஜனகரே தனக்கு பாதபூஜை செய்ததால் தியாகியான அந்தச் சீடன் மேலும் கர்வப்பட்டான். அவன் நினைத்தான், 'இந்த அறிவில்லாத அரசரால் எனக்கு எதுவும் சொல்லித் தரமுடியாது என்று எனக்கு ஏற்கெனவே தெரியும். அதனால்தான் என் காலைக் கழுவி விடுகிறார். அவர் என்னிடமிருந்து கற்பதில் ஆர்வமாக உள்ளார் என்பதை இச்செயல் காட்டுகிறது. நாளை இவர்தான் என்னிடம் சந்தேக விளக்கம் கேட்கப் போகிறார்.'

சீடன் நன்றாகத் தூங்கினான். இன்னொருவரிடம் புதிதாக எதுவும் கற்க நேரிடுமோ என்று அவனுக்கிருந்த கவலை நீங்கியது. அஹங்காரம் எப்பொழுதுமே கற்பதற்கு விரும்பாது. அஹங்காரி கற்றுக் கொடுப்பதில்தான் இன்பம் காண்கிறான். குரு ஆவதற்கு

வாய்ப்பிருந்தால் அவன் உடனே தயாராகி விடுவான். சீடனாக இருப்பதைத் தொந்தரவானதாக, கஷ்டமானதாக நினைப்பான்.

மறுநாள் காலை. ஜனகர் சீடனின் ஓய்வறைக்குச் சென்று எழுப்பினார். “வாருங்கள், குளிக்கப் போவோம். அரண்மனையின் பின்புறம் நதி ஓடுகிறது. அதில் குளித்துவிட்டு வருவோம்,” என்றார். இருவரும் புறப்பட்டனர். சீடன் அணிந்திருந்த கோவணத்துடன் நதியில் இறங்கினான். அவனிடம் மேற்கொண்டு ஒரு கோவணம்தான் இருந்தது. அதை அரண்மனைச் சுவரோரம் வைத்திருந்தான். ஜனகரும் ஆற்றில் இறங்கினார். இருவரும் நீராடிக் கொண்டிருந்தபோது சீடன் திடீரெனக் கூச்சலிட்டான், “ஜனகரே, திரும்பிப் பாரும். உமது அரண்மனையில் தீப்பிடித்துவிட்டது. வெளிப்பக்கம் எரிந்து கொண்டிருக்கிறது.”

ஜனகர் அமைதியாகச் சொன்னார், “என்னுடைய அரண்மனை என்று எதுவும் கிடையாதே. அரண்மனையில் தீப்பற்றிக் கொண்டது என்று பொதுவாகச் சொன்னால் போதுமே. வரும்போது நாம் எதையும் கொண்டு வரவில்லை. போகும்போது எதையும் எடுத்துச்செல்லப் போவதில்லை.”

சீடன் பதறினான். “உமக்கு உமது மாளிகை பற்றி அக்கறை இல்லை எனில் தொலையும். ஆனால் எரிகிற சுவர் ஓரம் என் கோவணம் உள்ளதே,” என்று கூறிக்கொண்டே சுவரை நோக்கி ஓடினான்.

அவன் கோவணத்துடன் திரும்பியதும் ஜனகர் கூறினார், “நான் சொன்னதைச் சிந்தித்துப் பார். இந்த மாளிகை பற்றி எரிகிறது. நானோ மாளிகை இல்லாமல் வந்தேன், மாளிகை இல்லாமல் போவேன் என்கிறேன். ஆகவே மாளிகை எரிந்தால் என்ன, இருந்தால் என்ன? இரண்டிற்குமிடையே என்ன வித்தியாசம்? உன்னிடம் எவ்வளவு சொத்துள்ளது என்பது அடிப்படை விஷயமில்லை. அது கோடிக் கணக்கிலோ, பைசாக் கணக்கிலோ இருக்கலாம். அந்த சொத்தைக் குறித்த உன் கண்ணோட்டம்தான் முக்கியம். நீ அதை அனுபவிப் பவனா அல்லது பார்ப்பவன் மட்டுமா என்று முடிவு செய்ய வேண்டும்.

ஜனகரே சிறிய அளவில் தீ வைக்கச் சொன்னதாகக் கருதப்படுகிறது. இதைச் சாக்காக வைத்து அவர் அந்தச் சீடனுக்கு

நல்லுபதேசம் செய்கிறார். அந்தச் சீடனைத் தன்னிடம் அனுப்பி அந்த குரு மறைமுகமாகத் தன்னையும் சோதிப்பதாக நினைக்கிறார். ஆகவே தனக்குள் கூறுகிறார், 'நான் என்பவனோ இல்லை. தாங்கள் யாரை பரீட்சிக்கிறீர்கள்? யாரை சோதிக்க வேண்டுமோ அவனாகிய நான் போயாகிவிட்டது. நான் என்பது இல்லாததால் நான் ஏன் இப்படிச் செய்கிறேன், ஏன் அப்படிச் செய்யவில்லை என்றுகூட கேட்க முடியாது. ஏனெனில் கட்டுப்படுத்த யார் உள்ளனர்? நடக்க வேண்டியது நடைபெற்று வருகிறது. இது மிக உன்னத நிலையாகும்.'

குழந்தைகளை பாவம் ஒட்டிக் கொள்ளாது என்று நம்புகிறோம். அவர்கள் தவறிழைத்தாலும் நீதிமன்றத்தில் வழக்கு தொடரப் படுவதில்லை. அபராதம் விதிக்கப்படுவதில்லை. ஏனெனில் சிறுவயதில் நல்லது—கெட்டதை அறியும் பக்குவம் இருக்காது. பைத்தியங்களுக்கும் அபராதம் போடப்படுவதில்லை. ஏனெனில் அவர்களுக்கு சுய உணர்வு இருக்காது. புத்த நிலை பெற்றவர்களுக்கும் அபராதம் கிடையாது. ஏனெனில் அவர்கள் புத்தி கடந்த நிலையில் உள்ளவர்கள். அவர்களிடம் 'கர்த்தா' உணர்வு கிடையாது. தங்களை சாட்சியாக மட்டுமே உணர்கிறார்கள். விலங்குகளையும் பாவிகள் என்று கூற முடியாது. ஏனெனில் அவை பாவ—புண்ணிய அறிவு பெற்றிருக்க வில்லை. இந்த வகைகளுக்கு உட்படாமல் நடுவில் நிற்கும் சராசரி மனிதனுக்குத்தான் இந்த பிரச்சினை உள்ளது.

**மு**ல்லா நஸ்ருத்தீன் குளிர்காலம் காரணமாக வீட்டு வாசலில் உட்கார்ந்து வெயிலை அனுபவித்துக் கொண்டிருந்தார். அருகில் அவர் மகன் பள்ளிக்கூடப் பாடம் எழுதிக் கொண்டிருந்தான். இடையிடையே அவன் காதைத் திருகித் திட்டிக் கொண்டிருந்தார். எதற்கும் லாயக்கற்றவன், உன்னைப் பெற்றவன் ஒரு முட்டாள் என்று கத்தியபடி இருந்தார். பக்கத்து வீட்டுக்காரர் இதைக் கேட்டுச் சிரித்தார். ஏனென்றால் இந்தத் திட்டெல்லாம் முல்லாவுக்கே பொருந்தும்.

சிறுவயதினர், பைத்தியக்காரர்கள், விலங்கு—பறவைகள், தாவரங்கள் ஆகிய இனங்களுக்கு பாவம் என்பது கிடையாது. ஏனெனில் சரியாகப் புரிந்து கொள்ளும் அறிவு இங்கு செயல்படுவ தில்லை. புத்தர், அஷ்டாவக்ரர், இயேசு, மகாவீரர் ஆகியோர் ஆழ்ந்த ஞானம் பெற்றவர்கள். 'கர்த்தா' உணர்வு நீங்கியவர்கள். நடுவிலே

இருக்கும் பண்டிதர்களுக்கு, ஏட்டறிவில் மட்டும் தேர்ந்தவர்களுக்கு, பாவம் உண்டு. நீ செய்ததாக நினைக்கிறாயா? ஆம் எனில் நீ பாவி, புண்ணியவான், போகி, தியாகி என்று உன்னை வகைப்படுத்தலாம். நீ எதுவுமே செய்யவில்லை; நடக்க வேண்டியது நிகழ்கிறது; நீ பார்வையாளன் மட்டுமே, சாட்சி என்று புரிந்து கொண்டால் பாவம்–புண்ணியம், யோகம்–போகம் ஆகிய எல்லாம் அடிபட்டுவிடும். அஷ்டவக்ரர் சொல்வது பரமயோகம்; யோகத்தையும் கடந்த நிலை. இந்த பரமயோக நிலையில் எந்தக் கட்டாயமும் கிடையாது, மறுப்பும் கிடையாது.

மாற்றத்தை எதிர்பார்ப்பதும் அஹங்காரத்தின் விருப்பமே யாகும். சாதகம் (தவ முயற்சி), சடங்குகள் (யாகம் போன்றவை) ஆகியவையும் அஹங்காரத்தின் விளைவுகளே. இவை எல்லாம் ஒருவகைத் தடைகளே. செய்வதற்கு எதுவும் மிஞ்சியிருக்கவில்லை. ஏனெனில் செய்பவனே மிஞ்சியிருக்கவில்லை! செயலும் அவசிய மில்லை என்று பொருள்கொள்ளக் கூடாது. செயல் (கர்மம்) நிகழ்ந்தபடி இருக்கும். கர்ம பிரவாகம் தொடரும். உன் உடலுக்குப் பசிக்கும். உன் உடல் உணவு கேட்கும். வித்தியாசம் என்னவென்றால் இதை நீ வெளியிலிருந்து பார்ப்பவன்போல் காண்கிறாய். ஆகவே உடலுக்குப் பசிக்கிறது என்று கண்டதும் உடலுக்கு உணவுகொடு. ஆனால் பசி ஏற்படுவதும் உடலுக்கு; உண்டபின் திருப்தி ஏற்படுவதும் உடலுக்கு. ஆனால் நீ உடல் அல்லன். பசியைப் பார்ப்பவன்; பசி நீங்கிய திருப்தியைப் பார்ப்பவன்; எல்லா சூழ்நிலைகளிலும் நீ பார்வையாளன் மட்டுமே. செயல்கள் நடைபெற்ற வண்ணம் இருக்கும். அது இயற்கையின் நியதி. அது படைப்பிற்கே பொதுவானது. தனிமனிதனுடன் மட்டும் சம்பந்தப்பட்டவை அல்ல. அவற்றைக் கடவுள் நிகழ்த்துகிறார். ஆயிரக் கணக்கில் செயல்களை நிகழ்த்துகிறார். உன் மூலம் நடைபெற வேண்டியதை அவர் நிகழ்த்திக் கொள்வார். ஆனால் நீ கர்த்தா (செய்பவன்) இல்லை. நீ காரணம் மட்டுமே, கருவி மட்டுமே. ஆகவே ஜனகர் கேட்கிறார் – யார் தடுப்பது? எப்படித் தடுப்பது? யார் கட்டுப்படுத்துவது? யோகப் பயிற்சி செய்வது யார்? மேற்பார்வை செய்வது யார்?

ஞானி நிகழ்காலத்தைச் சேர்ந்தவன். ஞானி கடந்த காலத்தில் உண்டானவன் இல்லை; எதிர்காலத்தில் உண்டாகப் போகிறவனும்

இல்லை. ஞானம் உதிப்பது நிகழ்காலத்தில் நடைபெறும் சம்பவம். அது உடனே இக்கணம் நிகழ வேண்டும். இன்றேல் என்றும் நிகழாது. ஏனெனில் இக்கணமே உயிரோட்டமுடையது. போனது போனதுதான். வராதது இன்னும் வரவில்லை. இந்த இரண்டின் இடையே மெல்லிய கோடுபோல் உயிரோட்டமுள்ள பிரவாகத்தில் ஞானம் உதிக்கிறது. நிகழ்காலத்தவனான ஞானி தனது உயிர்த் துடிப்பால் வாழ்கிறான். அந்த உயிர்த் துடிப்பு எல்லாமான கடவுளிடமிருந்து வருகிறது. நாம் அதைப் பிறப்பிக்க, கட்டுப்படுத்த முடியாது.

பறவைகள் பாடுகின்றன. செடிகளில் பூக்கள் மலர்கின்றன. இவை தாமாகவே நடைபெறுகின்றன. இந்த உயிர்த் துடிப்பு உலகெங்கும் நிலவுகிறது. மரங்களுக்கும் செடிகளுக்கும் மமதை கிடையாது. நாங்கள்தாம் பூவை உண்டாக்குகிறோம் என்று அவை கர்வப்படுவதில்லை. மனிதனும் இப்படி இருந்தால் வாழ்க்கைச் சுழற்சியில் ஒரு கட்டத்தில் அவன் புத்தத் தன்மையை, அரிஹந்தத் தன்மையைப் பெறுகிறான்.

புத்தர் நடந்து செல்வதைப் பார்த்து “நீங்கள் நடந்து போகிறீர்களே’ என்று கேட்டால், நான் என்று யாரும் இல்லையே. நான் எப்படி நடப்பேன்? ‘அவன்’தான் நடக்கிறான்; எல்லாவற்றிலும் இயங்குகிறான்; பூவைப்போல் மலர்கிறான்; நதியைப் போல் பிரவாகிக்கிறான்; பறவைபோல் வானில் பறக்கிறான்; ஆகாயம் போல் அடிவானம்வரை பரந்து விளங்குகிறான்” என்பார்.

புத்தரிடம் “நீங்களா பேசுகிறீர்கள்?” என்று கேட்டால் அவர் சொல்வார், “இல்லை, ‘அவன்’ பேசுகிறான்” என்று. உண்மைதான். கபீர்தாசர் சொன்னதுபோல், நாம் புல்லாங்குழல் போன்றவர்கள். ‘அவன்’ பாடுவதை நாம் வெளிப்படுத்துகிறோம். அவ்வொலி பரவ நாம் வழி அமைத்துத் தருகிறோம். அதைத் தடுப்பதில்லை. நாம் ஓர் ஊடகம் மாத்திரமே.

ஞானி நிகழ்காலத்தவன். இக்கணத்தில் அவன் மனத்தில் சாட்சி மனப்பான்மை உதித்துவிட்டது. நீ சாட்சியாகி எல்லாவற்றையும் இதேபோல் பார்க்க முடியும். எந்தத் தடையும் இல்லை. உலக் இயக்கங்கள் நடைபெற்ற வண்ணம் இருக்கும். உடலிருந்தால் பசி எடுக்கும்; தாகம் உண்டாகும்; வெயிலில் சூடேறும்; குளிரில்

நடுக்கமேற்படும். உணவெடுத்துக் கொண்டால் உடல் திருப்தியடையும். கம்பளி உடை அணிந்தால் குளிர் போய்விடும். நிழலில் உட்கார்ந்தால் வெயிலின் கடுமை நீங்கும். இப்படி எல்லா வேலையும் நடக்கும். ஆனால் கர்த்தா உணர்வு மட்டும் இருக்காது. அதற்குப் பின் 'எனக்குக் கவலையாக உள்ளது. துன்பப்படுகிறேன். எனக்குப் பசிக்கிறது' என்றெல்லாம் கூறாமல், 'உடம்புக்குப் பசியெடுக்கிறது. அதற்கு உணவளிக்க வேண்டும்' என்பாய்.

உடம்புக்குப் பசியெடுக்கிறது. அதில் உனக்குத் துளிக்கூட சம்பந்தமில்லை. உடலின் இயற்கையால் பசி உண்டாகிறது. வெயிலில் உட்கார்ந்தால் உடல் சூடாகிறது. கடவுள்தான் அப்படிச் சூடேற்றுகிறார். இதில் உனக்கு என்ன பங்குள்ளது? ஆனால் நீ வேண்டுமென்றே வெயிலில் உட்கார்ந்து கொண்டு உடம்பை வெயிலில் வாட்டினால் அது அஹங்காரம் திரும்பி வருவதன் அடையாளமாகும். 'அப்படித்தான் வாட்டுவேன். ஏனெனில் நான் தியாகி. உடலை வருத்தாமல் தவம் எப்படிச் செய்வது? நான் உட்கார்ந்து கொண்டு உடலை வாட்டுவேன்' என்றெல்லாம் சொன்னால் நீ கட்டுப்பாட்டாளர்போல் நடுவில் வந்துவிட்டதாக அர்த்தம். சுயமாக நடந்து கொண்டிருந்தை நீ நடைபெற முடியாமல் செய்துவிட்டாய். நீ இயற்கையின் போக்கில் விட்டால் உடல் வெயிலில் உட்காராமல் தானாகவே எழுந்துவிடும்.

வேண்டுமானால் நீ செய்துபார். உடலை அதன் போக்கில் விடு. வியந்து போவாய். நீ வெயிலில் உட்கார்ந்திருக்கிறாய். உடல் மீது வெப்பம் படுகிறது. நீ வெறுமனே பார்த்தபடி இரு. திடீரென உடல் தானாகவே எழுந்து நிற்பதை நீ காண்பாய். தானாகவே அது நிழலை நாடிச் செல்லும்! நான் விரும்பாமல் இது தானாக எப்படி நடக்கும் என்று கேட்பாய். நீ சொல்வது தவறு. இந்த விஷயத்தை நீ அறிந்திருக்கவில்லை; சோதித்துப் பார்த்ததில்லை. பசியெடுத்ததும் உடல் தானாகவே ரெஃப்ரிஜரேடரிடம் சென்றுவிடும். நீ பார்த்துக் கொண்டிரு. உடலை இயக்கவும் வேண்டாம்; தடுக்கவும் வேண்டாம். உயிர்த் துடிப்பை மட்டும் உணர். நடப்பதை நடக்கவிடு. சுபம்—அசுபம் என்று பிரிக்காதே. பாவ—புண்ணியக் கணக்குப் போடாதே. இதெல்லாம் உன் வேலை இல்லை. வாழ்க்கை பிரவாகத்தில் அதன் போக்கில் செல்.

பிரம்மாவிலிருந்து ஆரம்பித்து எறும்புவரையிலான நான்கு வகை உயிரினங்களில் ஞானி மட்டுமே விருப்பு–விலக்கு உணர்வுகளை நிச்சயமாகத் தடுக்கும் சாமர்த்தியம் பெற்றுள்ளான். விருப்பு என்றால் போகம்; விலக்கு என்றால் தியாகம். விருப்பம் – விருப்பமின்மை இரண்டுமே தடைப்பட்டு விடுகின்றன. தேர்ந்தெடுப்பது நம் கையில் இல்லை என்பான் ஞானி: நடப்பவை இயற்கையாகவே நடைபெறும். அதைப் பார்த்தபடி இருப்போம். அது நடைபெற விடுவோம். எதிர்த்துக் குறைகூற மாட்டோம். போகி திருப்தியடைவதில்லை. மேன்மேலும் இன்பம் வேண்டுகிறான். பசி நீங்கிய பிறகும் அவன் உண்பதை நிறுத்துவதில்லை. உடம்பு போதும் என்று சொல்கிறது. உயிர்த்துடிப்பும் இதற்கு மேல் சாப்பிடாதே என்கிறது. ஆனால் போகி நிறுத்துவதில்லை. போகம் உணவில் இல்லை. உடம்பு போதும் என்று உணர்ந்த பிறகும் நீ சாப்பிட்டுக் கொண்டே சென்றால் அப்போது அது போகமாகிறது. உடம்பு பசியை உணர்கிறது; அதனால் கதறுகிறது. தியாகி சொல்கிறான், 'எனக்கு உபவாசம். ஒன்றும் சாப்பிட மாட்டேன். நன்றாகக் கத்து, கதறு.'

வயிற்றுக்குப் பசியெடுப்பது இயற்கையான நிகழ்ச்சி. ஆனால் அதை வலிந்து அடக்க முயன்றால் அங்கே அஹங்காரம் தலை தூக்குகிறது. பலவந்தப் படுத்துவதில் அஹங்காரம் உள்ளது. வன்முறையில் அஹங்காரம் உள்ளது.

வன்முறை இரண்டு வகையானது – போகியின் வன்முறை, தியாகியின் வன்முறை. சிலர் என்னிடம், "உங்கள் சீடர்களான சந்நியாசிகளுக்கு ஏன் தியாகம் குறித்துக் கற்பிப்பதில்லை?" என்று காரணம் கேட்கிறார்கள். இது கஷ்டமான கேள்வி. நான் என்னுடைய துறவிகளுக்கு இயல்பாக இருப்பது எப்படி என்பதைக் கற்பிக்கிறேன். போகமும் தியாகமும் மிகையென்பதால் தவிர்க்கச் சொல்கிறேன். உனது உயிர்த்துடிப்பு சகஜமாக (இயல்பாகக்) கேட்கும் அளவு சாப்பிடு, உறங்கு, உழை, பேசு, மௌனமாயிரு. இயல்பைக் கைவிடாமல் இரு. கைவிட்டால் நடுவுநிலைமை சேதமுறும். சந்நியாசத் தன்மையையும் இழப்பாய்.

இரு வகைகளில் துறவறம் இழக்கப்படுகிறது. துறவறத்தின் அடிப்படை உள்ளம் சமநிலையில் இருத்தல். துல்லியமாக நடுவில்

இருத்தல். இப்பக்கமோ, அப்பக்கமோ சாயாமல் இருத்தல். தியாகியை சந்நியாசி என்று கூற முடியாது. ஆகவே அவன் சந்நியாசி ஆகவும் முடியாது. போகியைப் போலவே அவனுக்கும் துறவறம் கிட்டாது. போகமும் தியாகமும் வளைந்து கொடுப்பவை. துறவறம் அவற்றின் நடுவில் நேராக நிற்கிறது. இயல்பான தன்மை அதைக் கட்டுப்படுத்துகிறது. ஆன்மிகத் துடிப்பு துறவியின் வாழ்க்கையை ஒழுங்குபடுத்துகிறது; வாழ்க்கை நெறியாக அமைகிறது.

**ஜென்** துறவி போகோஜு என்பவரிடம் ஒருவர், "நீங்கள் எவ்வகைத் தவம் செய்கிறீர்கள்? உங்கள் யோக சாதனை எத்தகையது?" என்று கேட்டார்.

"பசிக்கும்போது சாப்பிடுகிறேன். அசதியாக இருக்கும்போது தூங்குகிறேன்," என்று துறவி பதிலளித்தார்.

கேள்வி கேட்டவன் திகைத்துவிட்டான். "இதுகூட ஒரு பதிலா? நாம் எல்லோருமே சாப்பிடுகிறோம், தூங்குகிறோம். இதிலென்ன விசேஷம் இருக்கிறது?" என்று கேட்டான்.

போகோஜு சிரித்தார். "இதுவரை வெகுசிலரே இவற்றைச் சரியாகச் செய்வதை நான் பார்த்துள்ளேன். பசியெடுத்தால் சாப்பிடுவதில்லை அல்லது பெருந்தீனி சாப்பிடுகிறாய். தூக்கம் வந்தால் தூங்குவதில்லை அல்லது மிகையாகத் தூங்குகிறாய். எதையும் குறைவாகச் செய்கிறாய் அல்லது கூடுதலாகச் செய்கிறாய். குறைவாக என்றால் தியாகம்; அதிகமாக என்றால் போகம். சந்நியாசியின் சமநிலையில்தான் எதுவும் எவ்வளவு தேவையோ அது அவ்வளவு மட்டுமே என்பது சுபாவமாக அமையும் வாய்ப்புள்ளது.

"இயல்பாக இருத்தல் என்பதை உன் வாழ்க்கையின் கொள்கையாகக் கொண்டு முன்னேறு. மோட்சம் தொலைவில் இல்லை. சமாதிநிலையும் தொலைவில் இல்லை. இப்படி இயல்பாக வரும் சமாதிநிலையே சிறந்தது. ஜனகர் குறிப்பிடுவது இந்த சகஜ சமாதியைத்தான். பிற்காலத்தில் இதையே பதஞ்சலி வலியுறுத்துகிறார்."

ஜனகர் குருவிடம் சொல்கிறார். "நான் புரிந்து கொண்டேன். நீங்கள் என்னை அசைத்துப் பார்த்தாலும் எனக்குப் பாதிப்பு ஏற்படாது. எனக்கு நேர்ந்தது உண்மையான அனுபவம். அதை நன்றாக,

உணர்ந்து கொண்டேன். நீங்கள் என்னை திசை திருப்ப எவ்வளவு முயன்றாலும் என்னை ஏமாற்றி வெல்ல முடியாது. நான் சாட்சி என்பதும், அந்த மனப்பான்மை என் உயிரின் துடிப்பாக உள்ளது என்பதும் எனக்குத் தெளிவாகிவிட்டது. நான் அதைக் கொண்டு வரவில்லை; அதை நான் தடுப்பவனும் அல்லன். எந்தக் கொடுக்கல் – வாங்கலுடனும் எனக்குச் சம்பந்தமில்லை. நான் தொலைவில் நிற்கிறேன். பசித்தால் சாப்பிடுகிறேன்; களைத்தால் தூங்குகிறேன்.''

இன்னொரு சமயம் ஒருவன் போகோஜுவிடம், ''உங்களுக்கு ஞானம் கிடைப்பதற்கு முன்னால் உங்கள் அன்றாட வாழ்க்கை எப்படி அமைந்திருந்தது?'' என்று விசாரித்தான். அதற்கு அவர், ''அப்போது நான் குருவின் ஆசிரமத்தில் வசித்தேன். காட்டிலிருந்து விறகு வெட்டிக் கொண்டு வருவேன். கிணற்றிலிருந்து தண்ணீர் இறைத்து வைப்பேன்,'' என்று தெரிவித்தார்.

கேள்வி கேட்டவன் விடவில்லை. ''அது அப்போது சரி. இப்போது நீங்களே ஒரு குருவாக இருக்கிறீர்கள். ஞானம் பெற்று விட்டீர்கள். தற்காலத்தில் உங்கள் அன்றாட வாழ்க்கை எப்படி அமைந்துள்ளது?'' என்று கேட்டான்.

''இப்பொழுதும் நான் காட்டிலிருந்து விறகு வெட்டி எடுத்து வருகிறேன். கிணற்றிலிருந்து தண்ணீர் இறைத்து பாத்திரங்களில் நிரப்புகிறேன்.'' என்றார். கேள்வி கேட்டவனுக்குத் திகைப்பாகி விட்டது. ''அப்படியானால் ஞானம் பெற்றதால் உங்களிடம் மாறுதல் ஏற்படவில்லையா?'' என்று விசாரித்தான்.

போகோஜு விளக்கினார், ''மாறுதல் ஏற்பட்டுள்ளது. ஆனால் உள்ளத்தின் ஆழத்தில் ஏற்பட்டுள்ளது. ஆகவே வெளியே தெரியவில்லை. அந்த மாறுதல் எனக்கும் குருவுக்கும்தான் தெரியும். வேலையில் வித்தியாசம் இல்லை. ஆனால் தியானத்தில் மாறுதல் உண்டாகியிருக்கிறது. இப்போதும் அதே கடமைகள் உள்ளன. விறகு வெட்டுதல், தண்ணீர் இறைத்து நிரப்புதல் ஆகியவை தொடர்கின்றன. ஆனால் கர்த்தா நான் இல்லை என்பதை உணர்ந்திருக்கிறேன். நான் ஒரு சாட்சி மாத்திரமே. அன்றாட வேலைகளைக் கடந்து மனத்தில் ஒரு புதிய உணர்வு, புதிய கண்ணோட்டம் உருவாகியிருக்கிறது. மனமென்னும் புதிய சூரியன் உதயமாகியிருக்கிறது.

**விக்ஞஸ்ய ஏவ இச்சாநிச்சா விவர்ஜனே ஹி ஸாமர்த்யம் |**

ஞானியிடம் ஒரு திறமைதான் உண்டு என்று சொல்வர். ஞானி விருப்பம் – விருப்பமின்மை ஆகிய இரு நிலைகளிலிருந்தும் விடுதலை பெற்று விடுகிறான். அவன் இப்படி நடக்க வேண்டும் என்று சொல்வதில்லை. இப்படி நடக்கக் கூடாது என்று தடுப்பதும் இல்லை. எப்படி நடந்தாலும் எனக்கு சம்மதம் என்பான். 'நடப்பதை நான் பார்த்தபடி இருப்பேன்; பார்வையாளனாக இருப்பேன் என்பான். தோல்வியா, சரி; வெற்றியா, சரி என்று ஏற்றுக் கொள்வேன். கடவுளே, தோல்வியும் உன்னுடையது. வெற்றியும் உன்னுடையதே. பார்வையாளனாக மட்டும் இருந்து கொண்டு வாழ்க்கையைப் பார்ப்பேன்; சாவையும் பார்ப்பேன்.' சாட்சி உணர்வு வேரூன்றி விட்டால் வாழ்க்கை அடியோடு மாறிவிடும். கடவுள் சித்தம், என் பாக்கியம் என்ற முடிவுக்கு வந்து விடுவோம்.

இயேசுநாதர் சிலுவையில் அறையப்பட்டிருக்கிறார். அந்த இறுதிக் கணத்தில் அவர் சொல்கிறார்: 'பரமபிதாவே! இதென்ன சித்திரவதை? என்னைக் கைவிடத் தோன்றிவிட்டதே.' உடனே திடுக்கிடுகிறார். இப்படிச் சொல்லியிருக்கக் கூடாது. தான் புகார் செய்வது போலிருக்கிறதே என்று அவர் நினைத்தார். 'நான் சொன்ன விதப்படி என் விருப்பத்தை நீ நிறைவேற்றவில்லை என்றாகிறது. என் விருப்பத்தை மேல்தட்டிலும், கடவுளின் விருப்பத்தைக் கீழ்த்தட்டிலும் வைத்தது – போலாகிறது. நான் கடவுளுக்கு ஆலோசனை கூறுவதுபோல் தோன்றுகிறது. எல்லாம் வல்ல ஒன்றை என் கட்டுப் பாட்டுக்குள் கொண்டுவர முயல்வதுபோல் ஆகிறது. அது சரியில்லை. மன்னியுங்கள். தப்புசெய்து விட்டேன். உமது விருப்பம் எதுவோ அதுவே நிறைவேறுவதாக. முதலில் கூறிய என் விருப்பத்தை மறந்து விடுங்கள். நான் முதலில் சொன்னதைக் கவனத்தில் கொள்ள வேண்டாம்.' என்று இயேசு விளக்குகிறார்.

கடவுள் (பிரபு) என்னும் சொல்லை உபயோகிப்பது உனக்கு ரசிக்கவில்லை என்றால் சர்வ சக்தியின் விருப்பம் என்று மாற்றிக் கொள்ளலாம். அனைத்தையும் ஒருங்கிணைக்கும் சக்தி எனலாம். தனி மனிதனின் விருப்பத்தை அடிப்படையாகக் கொள்ளாமல் சமூகக் கூட்டமைப்பின் விருப்பத்திற்கு விட வேண்டும். தனிமனித விருப்பப்படி வாழ்ந்தால் சராசரி உலக வாழ்க்கையாகிறது.

கூட்டமைப்பின் விருப்பத்திற்கு இணங்க வாழ்ந்தால் கிடைப்பது முக்தி, விடுதலை. தன்னிலிருந்து, நான் என்பதிலிருந்து விடுதலை. பிறகு நம் மனத்தில் பின்வருமாறு தோன்றும் – 'இருப்பது இருக்கிறது. என்ன நடக்குமோ நடக்கட்டும். நான் நடுவில் குறுக்கிட மாட்டேன். காண்பதற்கு எக்காட்சி கிடைக்குமோ பார்த்து விடலாம். பாலைநிலமா, சரி; பாலைநிலச் சோலையா, சரி. சர்வ சக்தியின் விருப்பம் தவிர எனக்கென்று விருப்பம் – விருப்பமின்மை கிடையாது.' செய்ய வேண்டிய முறை, செய்யக்கூடாதவை, கட்டளை – தடை ஆகியவற்றிற்கு ஞானி அடிமையாக இருக்க மாட்டான். அவன் யார் விதிக்கும் கட்டுப்பாட்டையும் அறிந்திருப்பதில்லை. சர்வ சக்தியின் உலகளாவிய கட்டுப்பாட்டில் அவன் லயித்து விடுகிறான்.

அரிதினும் அரிதாக யாரோ ஒருவன்தான் ஆத்மா இரண்டாகப் பிளவு படாதது, ஜகதீஸ்வர சொரூபமானது என்று அறிந்திருக்கிறான். அவன் எதைச் செய்வது உசிதமென நினைக்கிறானோ அதையே செய்வான். அவனுக்கு எங்கும் பயம் கிடையாது.

**ஆத்மானம்த்வயம் கஸ்சிஜ்ஜானாதி ஜகதீஸ்வரம் |**
**யத்வேதி தத்ஸ குருதே ந பயம் தஸ்ய குத்ரசித் ||**

அரிதாக யாரோ ஒருவன்தான் சிறுதுளியைக் கடலில் சேர்ப்பிக்கும் புண்ணியம் பெறுகிறான். அவன் 'நான்' உணர்வை சூன்யத்தில் கரைக்கிறான். எல்லையை எல்லையற்றதுடன் கலக்கிறான். இந்த அரிய நிகழ்ச்சி எப்பொழுதாவதுதான் நடைபெறுகிறது. அதில் வெற்றி காண்பவன் மகாபாக்கியசாலி. எல்லோருக்கும் இந்த நிலை ஏற்பட்டிருக்க முடியும். ஆனால் நாம் ஏற்பட விடுவதில்லை. இடைஞ்சல் செய்கிறோம். இந்நிலையைப் பெற சுபாவமாகவே உரிமை இருந்தும் நாம் அதை நிகழ விடுவதில்லை.

நீ எதை அடை விரும்புகிறாயோ அதை அடைவதை நீயே தடுக்கிறாய் என்பது வேடிக்கையான விஷயம். உன்னைத் தவிர உனக்கு வேறு எதிரி இல்லை. நீ ஆனந்தத்தை விரும்பியும் அது கிடைப்பதைத் தடுக்கிறாய். ஏனெனில் ஆனந்தம் இயல்பான தன்மையில்தான் கிடைக்கும். நீ சுதந்திரத்தை விரும்பியும் அது கிடைக்க விடுவதில்லை. ஏனெனில் சர்வ சக்தியின் துடிப்போடு இணைந்து ஒன்றானால்தான் சுதந்திரம் கிடைக்கும். நீ கவலையையும்

துக்கத்தையும் விரும்புவதில்லை. ஆனால் அவற்றை நீ சிருஷ்டித்த படியே செல்கிறாய். ஏனெனில் இயற்கையுடன் முரண்படுவதால், எதிர்ப்பதால் கவலையும் துன்பமும் விளைகின்றன.

இயற்கையின் பிரவாகத்துடன் இணைந்து மிதந்தால் பிறகு உனக்குக் கவலையும் துக்கமும் கிடையாது. கடலை நோக்கி முன்னேறும் கங்கையுடன் நீயும் சேர்ந்துகொள். அப்போது நீ துடுப்புக்கூட போட வேண்டாம். படகை அப்படியே மிதந்துசெல்ல விடு. பிரவாகத்தை எதிர்த்துச் செல்ல முயலாதே. எதிர்ப்புறமாக கங்கோத்ரிக்கு (கங்கை தோன்றும் இடம்) போக முயலாதே. மீறினால் உன் படகு உடையும். உனக்கு துக்கம் விளையும்.

இயற்கைக்கு எதிராகச் செயல்படுபவன் சிதைந்து விடுகிறான். இயற்கை அவனை அழிப்பதில்லை. அவன் தன் செயலால் சேதமடைகிறான். இயற்கையோடு இசைந்து செல்பவனுக்கு எந்த பிரச்சினையும் இல்லை. அவன் இயற்கையோடு மோதுவதில்லை. போரிடாதவன் தோற்பது எங்ஙனம்? வெற்றி வேண்டும் என்று ஆசைப்படாதவனுக்குத் தோல்வியும் கிடையாது. அதோ கங்கை பிரவாகிக்கிறது. அதனுடன் சேர்ந்து செல்.

இந்துக்கள் தங்கள் புனிதத் தலங்களை நதிக்கரையில் அமைத்துக் கொண்டார்கள். அதற்கான பல காரணங்களில் நதி தம் கண்ணெதிரே இருக்க வேண்டும் என்பதும் ஒன்று. கடலை நோக்கி ஓடுவதை நதி நமக்கு நினைவூட்டும். 'தான்' என்பதை இழந்து அது கடலுடன் கலக்கிறது. நாமும் நம்மை இழந்து கடவுளென்னும் கடலில் கலந்துவிட வேண்டும்.

நதி எந்த வேலையும் செய்வதில்லை. தன்போக்கில் அது ஓடிக்கொண்டே இருக்கிறது. அவ்வாறு முன்னேறிப் பாய்வதற்கு அது எந்த முயற்சியும் செய்வதில்லை. வரைபடத் துணையுடனும் அது பாய்வதில்லை. கங்கை கங்கோத்ரியிலிருந்து சுரந்து பெருகும்போது கடல் எங்கே இருக்கிறது என்பதைக்கூட அது அறிந்திருப்பதில்லை. வரைபட உதவியின்றி அது கடலைச் சென்றடைந்து விடுகிறது. எல்லா நதிகளும், சிற்றாறுகளும், அருவிகளும், கால்வாய்களும் அவ்வாறே போய்ச் சேருகின்றன. தாமே வழியைத் தேடிக் கொள்கின்றன. அதற்கு எந்த சாஸ்திரத்தின் உதவியையும் நாடுவதில்லை. ஒரு முக்கிய

விஷயம் அவை அறிந்துள்ளன. திரும்பிப் பாராதே, பின்பக்கம் திரும்பிப் பாயாதே, உயரத்தை நோக்கிப் பாயாதே, பள்ளங்களையெல்லாம் நிரப்பிக் கொண்டே செல் என்பதை அவை அறிந்துள்ளன.

கீழ் நோக்கிப் பாய்வது நதியின் சுபாவம். தனது இந்த சுபாவம் பற்றி மட்டுமே நதி அறிந்து வைத்துள்ளது. நதிக்கரையில் அமர்ந்து தவம் செய்தவர்கள், சந்நியாசிகள், மகான்கள் எல்லோருமே அறிந்துகொண்ட ஒரே மாதிரியான பேருண்மை என்னவெனில் நாம் நதியைப் போல் வாழ்க்கையில் மிதந்தபடி செல்ல வேண்டும். ஒருநாள் மாகடலை அடைந்தே தீருவோம்.

ஜகதீஸ்வரனுடைய சொரூபத்தை அறிந்துகொள்ள நீ உன் உருவத்தை – தனித்தன்மையை – இழக்க நேரிடும். இதுவே நிபந்தனை, இதுவே பேரம். உன் தனித் தன்மையையும் இழக்காமல் கடவுளையும் அறிந்து கொள்வேன் என்பது நடைமுறைக்கு ஒத்துவராது. உன்னைத் தக்க வைத்துக்கொள் – கடவுளை இழ; அல்லது உன்னை இழ – கடவுளைப் பெற்றுக்கொள். இந்த இரண்டில் ஒன்றைத் தேர்ந்தெடுத்துக் கொள். உன் விருப்பப்படி செய். தன்னை இழந்து கடவுளைப் பெறுவது அளவு மீறி விலைகொடுத்துப் பெறுவதைப் போன்றதென நினைக்காதே. இதற்கு மாறாக உன்னை வைத்துக் கொண்டு கடவுளைக் கைவிட்டால் கூழாங்கல்லை உன்னிடம் வைத்துக் கொண்டு வைரத்தை வெளியில் எறிவது போன்றதாகும்.

நீ ஞானி என அழைப்பவர்கள் நஷ்ட வியாபாரம் செய்ததில்லை. அவர்கள் எல்லாம் மகா கெட்டிக்காரர்கள். அவர்கள் கூழாங்கல்லைக் கைவிட்டு வைரக்கல்லைத் தக்க வைத்துக் கொண்டார்கள். உன்னிடம் துக்கத்தையும் நரகத்தையும் தவிர வேறு என்ன உள்ளது? வேதனையும் வலியும் தவிர வேறு என்ன உள்ளது? நீ உன் மார்பிலேயே முள்போல் உறுத்துகிறாய். இத்தகைய உன்னைக் காப்பாற்றிக் கொள்வதால் என்ன பயன்? தன் தனித் தன்மையை சமர்ப்பித்து விடுபவர்கள் எங்கோ ஓரிருவர் என அரிதாக உள்ளனர்.

அவ்வாறு அறிந்தவன் பிறகு தனக்காக எதுவும் செய்வதில்லை. அவன் தன்னை யாரிடம் ஒப்படைத்து விட்டானோ 'அவர்' அவன் செய்ய வேண்டியவை என்று நினைப்பதை மட்டும் நிறைவேற்றுகிறான்.

அவனுக்கென்று தனியான விருப்பம் ஏதும் இருப்பதில்லை. கடவுள் அவனைச் செய்ய வைப்பதை அவன் செய்கிறான்.

ஜனகர் அருமையாகப் பதில் கூறிவிட்டார்; சரியான பதில் கூறிவிட்டார். இதைக் கேட்டு அஷ்டாவக்ரரின் இதயம் குதூகலித்திருக்கும், மலர்ந்திருக்கும். இந்தப் பதிலுக்காகத்தான் அவர் காத்திருந்தார். இந்த பதிலைத்தான் எதிர்பார்த்திருந்தார். இப்படிப் பதில் கூறக்கூடியவன் எதற்கு அஞ்சுவான்? தன்னைப் பரமாத்மாவிடம் ஒப்படைத்தவன் எதற்கு பயப்படுவான்? சர்வ சக்தியுடன் மோதிக் கொண்டிருக்கும் வரைதான் பயம் நீடிக்கும். அந்த பயம் இயற்கையானதுதான். ஏனெனில் சர்வ சக்தியை நீ வெல்ல முடியாது. இந்தப் போரில் உனக்கு ஒருவகையான மரணம் நேரவுள்ளது; தோல்வி விளையவுள்ளது. உன் யாத்திரையில் முன்கூட்டியே தோல்வி நிச்சயிக்கப்பட்டிருந்தது. சர்வ சக்தியுடன் மோதி எவன் எப்பொழுது வெற்றியடைந்திருக்கிறான்? சிறுவன் அப்பாவை அடிப்பான், குத்துவான், உதைப்பான். ஆனால் வெல்ல முடியுமா? அதே சிறுவன் தன் தந்தையின் கையைப் பிடித்தபடி நடைபோட்டால் தோல்வி அடைவானா?

பரமாத்மாவுடன் தன்னை இணைத்துக் கொண்டு லயித்து விட்டவனுக்குப் பிறகு பயமில்லை. 'பிரம்மவித் பிரம்மேவ பவதி' என்று சாஸ்திரங்கள் கூறுகின்றன. எவன் பிரம்மத்தை அறிகிறானோ அவன் சுயமாகவே பிரம்மமாகி விடுகிறான் என்று இதற்குப் பொருள். நாம் எதை அறிகிறோமோ அதை அறிந்ததும் அதுவாகவே ஆகிறோம். பிறகு பயம் எப்படி? யாருக்கு?

நீ அற்பமானதை நினைத்தால் அற்பமாகி விடுவாய். விசாலமானதை நினைத்தால் நீயும் விரிவடைவாய். அறிவதுபோலவே நீ ஆகின்றாய். சாஸ்திரங்கள் மேற்கொண்டு 'தரதி ஸோகமாத்மவித்' என்கின்றன. தன்னை அறிந்தவன் எல்லா சோகங்களையும் கடந்தவ னாகிறான். பிறகு அவனுக்கு பயமில்லை, துக்கம் இல்லை, வேதனை இல்லை.

எல்லா வகையான துக்கங்கள், வேதனைகள், நரகங்கள் ஆகியவை அஹங்காரத்தை மையமாகக் கொண்டுள்ளன. அஹங்காரம் அகன்றால் இவை எல்லாம் சீட்டாட்டச் சீட்டுகள் காற்று வீசினால்

பறப்பதுபோல் காணாமல் போய்விடும். ஞானக் காற்று சிறிது வீசினாலும், சாட்சி மனப்பான்மை காற்றுபோல் சிறிதளவு பட்டாலும் அஹங்கார இலைகள் பறந்து போய்விடும்.

ஜனகர் நேரடியான பதில் தரவில்லைதான். நேரடியான பதில் எதிர்பார்க்கப்படவும் இல்லை. ஜனகர் தனி நபர் சாராத பதிலைத் தந்தார். விலகி நின்று பதிலளித்தார். தான் பரீட்சிக்கப்படுகிறோம் என்கிற உணர்வே இல்லாதவர்போல் பேசினார். ஏனெனில் நாம் பரீட்சிக்கப்படுகிறோம் என்று எண்ணினால் இறுக்கம் ஏற்பட்டு விடுகிறது. இறுக்கம் ஏற்பட்டிருந்தால் ஜனகர் தேர்வில தோல்வி கண்டிருப்பார். தன்னைக் காத்துக்கொள்ள, தன் கருத்து சரியென நிலைநாட்ட மிகவும் கவலைப்பட்டிருப்பார். இதனால் குழப்பம் அதிகமாகியிருக்கும். ஆனால் நடந்தது என்ன? அவர் துளிக்கூட சங்கடப்படவில்லை; கவலைப்படவில்லை. விலகி நின்றுகொண்டு அவர் வேறு யாருக்கோ தேர்வு நடப்பதுபோல் பார்க்கிறார். தனக்கும் அதற்கும் இடையே எந்தக் கொடுக்கல்—வாங்கலும் இல்லை என்பதுபோல் காணப்படுகிறார்.

குரு ஏன் சீடனை பரீட்சிக்கிறார் என்று பலர் காரணம் கேட்கிறார்கள். சீடன் ஞானம் அடைந்து விட்டானா, இல்லையா என்பதை குரு தாமாகவே ஊகித்துக் கண்டுபிடிக்க முடியாதா? குருவோ எல்லாம் அறிந்தவர் – சர்வக்ஞர். பிறகு ஏன் சீடனை பரீட்சைக்கு உட்படுத்துகிறார்?

பரீட்சை என்றால் சோதிப்பது மட்டுமில்லை. அது மேற்கொண்டு முன்னேறுவதற்கான உபாயமும்கூட. அஷ்டாவக்ரர் கேட்ட கேள்விகளை சாதாரண பரீட்சை வினாக்களாகக் கருதக்கூடாது. சாதாரணத் தேர்வின் நோக்கம் இதுவரை கற்றதை உரைத்துப் பார்ப்பதாகும். இந்தப் பரீட்சை மட்டுமே நடத்தினால் அது வீண் முயற்சியாகும். ஜனகர் இதுவரை அறிந்துகொண்டதை அஷ்டாவக்ரரும் ஊகித்து உணர்ந்து கொண்டார். அதை அவர் பரீட்சித்துப் பார்க்கவில்லை. ஆனால் ஜனகர் இதுவரை அறிந்ததைப் பற்றிக் கேள்வி கேட்டு அவருடைய நடவடிக்கைகள் எதிர்காலத்தில் எப்படி அமையும் என்பது தெரிந்தால் மேற்கொண்டு அவர் அடையக்கூடிய முன்னேற்றத்தைக் கணிக்கலாம்.

இவ்வாறு பரீட்சை இரண்டு முகங்களைக் கொண்டுள்ளது. ஒருமுகம் கடந்த காலத்துடன் தொடர்புடையது. இது அவ்வளவாக முக்கியமில்லை. இது அஷ்டாவக்ரருக்கும் தெரியும். ஜனகருக்கு என்ன நேர்ந்தது என்பதை அவர் சுயமாகவே உணர்ந்திருக்கிறார். எனினும் அவர் கேட்கும் கேள்விகளுக்கு ஜனகர் என்ன பதில் சொல்கிறார். அவற்றை எப்படி எதிர்கொள்கிறார் என்பதைப் பொறுத்து மேற்கொண்டு ஞானக் கதவுகள் திறக்கும்.

இரு விதமான விளைவுகள் ஏற்படலாம். ஜனகர் தவறாகப் பதிலளித்தால் பின்புறம் திறந்திருந்த கடந்த காலக் கதவுகள் மூடிக்கொண்டு விடும். அவர் சரியான பதிலளித்தால் ஏற்கனவே திறந்திருந்த கதவுகள் திறந்தபடி இருக்கும். மேற்கொண்டு அமைந்துள்ள கதவுகளும் திறந்துகொள்ளும். எல்லாம் அவர் பதிலைப் பொறுத்தது. குருவின் முன்னிலையில் ஜனகருக்கு நிகழ்ந்தது தெளிவாகத் தெரிகிறது. ஆனால் மேற்கொண்டு நடக்கப் போவது என்ன என்று யாருக்கும் தெரியாது. நடக்கப்போவது இன்னும் நிகழவில்லை. எதிர்காலம் சூன்யமாக உள்ளது. அது இன்னும் நிகழவில்லை. கடந்த காலம் பற்றி எல்லோருக்கும் தெரியும். அனைவரையும்விட, ஜனகரையும்விட, அஷ்டாவக்ரர் கடந்த காலம் குறித்துக் கூடுதலாகவே அறிந்துள்ளார். ஜனகர் தன்னைப் பற்றி எவ்வளவு சொல்ல முடியுமோ அதைவிட அதிக விவரத்தை அஷ்டாவக்ரர் தமது ஞானக் கண்ணால் பார்க்க முடியும்.

நிச்சயமாக அஷ்டாவக்ரரின் பார்வை விசாலமானது, ஆழமானது. அவரால் அதிக ஆழம்வரை பார்வையைச் செலுத்திப் பார்க்க முடியும். அதைப் பற்றி சந்தேகம் இல்லை. சந்தேகம் அல்லது கேள்வி எதிர்காலம் குறித்துத்தான். அடுத்த நொடி நடக்கப் போவதைக்கூட ஊகிக்க முடியாது. ஏனெனில் வாழ்க்கை இயந்திர விதிகளுக்குக் கட்டுப்பட்டிருக்க வில்லை. வாழ்க்கை சர்வ சுதந்திரமானது. நடைபெற்றுவரும் ஒரு நிகழ்ச்சி திடீரென நின்றுவிடக்கூடும். ஒரு திசையில் போய்க் கொண்டிருப்பவன் கடைசிக் கட்டத்தை நெருங்குகையில் சட்டென்று திரும்பிவந்து விடக்கூடும்.

ஒருவன் உயரத்திலிருந்து குதிப்பதைப் பார்த்தேன். சிறுவயதில் எனக்கு உயரத்திலிருந்து நதியில் குதிப்பது பிடித்தமான விளையாட்டாக இருந்தது. அதிக உயரமானால் அதிக சந்தோஷம்

அடைந்து வந்தேன். என் நண்பர்கள் இது கண்டு சங்கடப் பட்டார்கள். ஏனெனில் என்னால் குதிக்க முடிகிறது, அவர்களால் குதிக்க முடியவில்லை என்றால் அவர்களது அஹங்காரத்தில் அடி விழுந்ததுபோல் இருந்தது. ஆனால் உயிருக்கு ஆபத்து என்பதால் குதிக்கவும் பயந்தார்கள். சில சமயம் யாராவது துணிச்சலுடன் என்னோடு சேர்ந்து குதிக்க ஓடிவருவார்கள். ஐம்பதடி உயரத்தி லிருந்துகூட நான் குதிப்பேன். பிறகு ரயில் பாலத்திலிருந்து நதியில் குதிப்பது எனக்குப் பிடித்துப் போயிற்று. அது அபாயகரமான முயற்சிதான். அப்பொழுதும் சிலர் என்னுடன் சேர்ந்து ஓடிவருவார்கள். நான் குதிப்பேன். ஆனால் அவர்கள் பயந்து அப்படியே நின்று விடுவார்கள்.

ஒருமுறை என் ஊரிலிருந்து சிறிது தொலைவிலுள்ள பஞ்சமரி என்னும் மலைப்பகுதிக்குச் சென்றோம். அங்கு ஓர் அருவி உள்ளது. அதில் குதித்து விளையாடுவதாக எங்கள் திட்டம். என் நண்பன் ஒருவன், என்னோடு சேர்ந்து பல இடங்களில் நீரில் குதித்தவன், இந்த முறை பயந்துவிட்டான். குன்றின் உயரம் அதிகமாக இருந்தது. நான் குதித்ததால் அவனும் வேறு வழியின்றி அவனும் தாவினான். நடுவில் பயந்து வழியில் தென்பட்ட வலுவான வேரைப் பிடித்துத் தொங்கினான். நான் தண்ணீரில் நன்றாக முழுகி வெளியே வந்தேன். நண்பனை வேரிலிருந்து விடுவித்துக் கரைக்குக் கொண்டுவர மிகவும் சிரமமாகி விட்டது.

எது நடந்ததோ அதை அஷ்டாவக்ரரால் காண முடிந்தது. நடக்கப் போவதை அறியத்தான் உபாயம் இல்லை. எதிர்காலம் இன்னும் உருவம் பெறவில்லை. எது வேண்டுமானாலும் நடக்கலாம், நடக்காமல் போகலாம். ஆகவே அஷ்டாவக்ரர் நடத்தியதை பரீட்சை என்று மட்டும் கருதாதே. அது பரீட்சியைவிட கூடுதலான நோக்கம் கொண்டது. அது எதிர்காலத்தைச் சுட்டிக் காட்டுவதாகவும் இருந்தது. எதிர்காலத்தைக் குறிப்பிட்ட திசையில் கொண்டு வருவதாகவும் இருந்தது. எதிர்காலத்தைப் பிறப்பிக்க அதற்கு வடிவம் தரும் உபாயமாகவும் இருந்தது.

ஜனகர் கூறிய பதில்களிலிருந்து அவர் உலகியலின் எல்லையைத் தாண்டிக் குதித்து விட்டார் என்பது நிச்சயமாகத் தெரிகிறது. அவர் குரு வைத்த தேர்வில் முழுமையாகத் தேர்ச்சி பெற்று

விட்டார். அவரது எதிர்காலப் பயணத் திட்டமும் தெளிவாகி விட்டது. புதிய கதவுகள் திறந்துவிட்டன.

குரு எது செய்தாலும் சரியாகவே செய்வார். சீடனின் தேர்ச்சி குறித்து அறிய குருவிடம் சுயமாகவே சாமர்த்தியம் இல்லையா என்று உன் மனத்தில் கேள்வி எழலாம். இத்தகைய கேள்வி ஜனகரின் உள்ளத்தில் தோன்றியிருந்தால் அவர் தேர்வில் தோற்றிருப்பார். அவர் நினைத்திருந்தால் அஷ்டாவக்ரரைப் பார்த்து, "குருதேவரே, தாங்கள் எல்லாமறிந்தவர். அப்படியிருந்துமா என்னை பரீட்சிக்கிறீர்கள். தாங்கள் என்மீது சூட்சுமப் பார்வை வீசினால் போதும். எனது சாதனை பற்றி சுயமாகவே ஊகித்துக் கொள்வீர்கள்." என்று கூறியிருக்க முடியும்.

ஆனால் ஜனகர் அவ்வாறும் கூறவில்லை. குரு பரீட்சித்துப் பார்க்கிறார் எனில் அதில் ஏதோ ரகசியமிருக்க வேண்டும். இதைக் கருதியும், அந்த ரகசியம் இதுவரை தனக்குத் தெரியாது என்பதாலும் ஜனகர் மௌனமாக அஷ்டாவக்ரர் நடத்திய தேர்வை ஏற்றுக் கொண்டார்.

குரு எத்தனை தேர்வுகள் நடத்தினாலும் அவற்றை ஏற்றுக் கொள்வதுதான் அர்த்தமுள்ள செயலாகும். ஏனெனில் உன்னிடமுள்ள புரிந்து கொள்ளும் ஆற்றலுக்கு ஏற்ற அளவில்தான் உனக்குக் கற்பிக்க முடியும். பரீட்சை என்பது கற்றலில் ஒரு கட்டம். குரு அந்தக் கட்டத்தில் சீடனைக் கொணர்ந்து நிறுத்துகிறார். இந்த சூழ்நிலையில் ஜனகர் எவ்வாறு பதில் கூறுகிறார், அவரது உள்ளத்தில் எத்தகைய எதிரொலி கேட்கிறது என்பதை அறிய பரீட்சை மூலம் ஒரு வாய்ப்புக் கிடைக்கிறது. அதன் மூலம் கடந்த காலம் எளிதில் அறியப்பட்டு விடும். மேலும், எதிர்காலமும் உறுதிப்படும். ஒரு தெளிவான கோடுபோல் பாதை தெரியும். அதன் பரிமாணம் புலப்படும்.

குரு ஏன் சோதிக்கிறார் என்று பலரும் என்னிடம் கேட்டிருக்கின்றனர். நான் இதுவரை பதில் தராமல் இருந்தேன். அவர்கள் முதலில் ஜனகரின் பதிலைத் தெரிந்து கொள்ள வேண்டும் என்பது என் விருப்பம்.

இப்படி குரு பரீட்சை வைத்தால் சீடன் சுபாவமாகவே வருந்துவான் என்று ஒரு நண்பர் சொன்னார். சீடன் வருந்தினால் அவன் தேர்வில் தோற்றவனாக எண்ணப்படுவான் என்று நான் பதிலளித்தேன். சீடன் கோபப்படவும் கூடாது. அவன் சினந்தால், 'யானை வெளியேறிவிட்டது. ஆனால் வால் மிஞ்சிவிட்டது. தலையை மொட்டையடித்துக் கொண்டாகி விட்டது. ஆனால் குடுமி மிஞ்சியுள்ளது' போன்ற நிலைமை என்பேன். மிஞ்சிய வாலின் மூலம், மிஞ்சிய குடுமியின் மூலம் அஹங்காரம் தேங்கிவிட்டதை அறியலாம்.

ஜனகரின் சுபாவம் குரு பரீட்சை செய்வதைத் தப்பாக நினைக்கவில்லை, வருத்தப்படவில்லை. புரிந்து கொள்ளவே முயன்றார். இதனால் 'யானை வெளியேறி விட்டது. வால் பகுதி மிஞ்சியிருந்தால் அதுவும் வெளியேறிவிடும்' என்ற நிலை உண்டானது. ஜனகரின் சுபாவம் சரியாகத்தான் நடந்து கொண்டது என்று முடிவு கூறலாம்.

**ஹரி ஓம் தத்ஸத்!**

முதல் கேள்வி:

நீங்கள் உலகில் எழுந்தருளியுள்ள நிலையிலும் மனிதன் தாழ்ந்து கொண்டே, சரிந்து கொண்டே போகிறான். உண்மையில் உங்களைப் போன்ற புத்த நிலையிலுள்ளவர்களின் வருகை சமயம் மானிடம் உயர்ந்து சிகரத்தைத் தொட வேண்டுமல்லவா? ஆயிரக் கணக்கானோரின் பார்வை உங்கள் மீது பதிந்துள்ளது. உங்கள் மூலம் உலகில் புதிய விழிப்பு தோன்றும் என்றும் அறத்தின் அடிப்படையிலான உலகம் நிர்மாணமாகும் என்றும் எதிர்பார்ப்பு உள்ளது. தங்கள் மூலம் ஆன்மிக வெடிப்பு எப்பொழுது நிகழும்? எவ்வகையில் நிகழும்? உங்கள் வழிகாட்டுதலின்படி மக்கள் மாறாவிட்டாலும் பரவாயில்லை. ஆனால் உங்களுக்கு எதிர்ப்பு அல்லவா தொவிக்கிறார்கள்!

முதல் விஷயம் – மனிதர்கள் எப்பொழுதுமே இப்படித்தான் இருந்து வந்திருக்கிறார்கள். அரிதாகவே சிலரே மாறுகிறார்கள். வெளிச்சூழ்நிலைகள், வாழ்க்கை அமைப்புகள்தான் மாறுபாடு அடைகின்றன. ஆனால் மனிதர்கள் துளிக்கூட மாறுவதில்லை. உள்ளுக்குள் மனிதன் முன்பு போலவேதான் உள்ளான். ஆகவே இன்றைய மனிதன்தான் தரம் தாழ்ந்து விட்டான் என்று நீ கொண்டிருக்கும் பிரமையைக் கைவிடு.

மனிதன் எப்பொழுதுமே இப்படித்தான் இருந்திருக்கிறான். புத்தரிடமும் மக்கள் அக்காலத்து மனிதன் கெட்டுப்போய் விட்டான்

என்றும், அவனைச் சீர்திருத்த அவர் முயல வேண்டும் என்றும் கேட்டுக் கொண்டார்கள். லாவோத்சுவிடமும்[1] கன்ஃப்பூஷியசிடமும்[2] இவ்வாறே வேண்டப்பட்டது. புராதனமான சாஸ்திரங்களை அலசிப்பார். அவற்றிலும் மனிதன் பாவியாகி விட்டான் என்றே புலம்பியிருக்கிறார்கள்.

பாபிலோன் நகரில் ஆறாயிரம் வருஷங்களுக்கு முற்பட்ட செங்கல் துண்டு (ஓடு) கிடைத்துள்ளது. அதில் சில எழுத்துகள் பொறிக்கப்பட்டுள்ளன. அதிலுள்ள தகவல் ஆறாயிரம் வருஷங் களுக்கு முற்பட்ட மக்களைப் பற்றியது. அது கூறுகிறது – இக்கால மனிதனுக்கு என்ன நேர்ந்துவிட்டது. இந்த அளவிற்குக் கெட்டுப் போயிருக்கிறானே!

இவ்வாறு ஒவ்வொரு காலத்திலும் சமகால மக்களின் தரம் தாழ்ந்து விட்டதாகவே கூறப்பட்டு வருகிறது. இதன் பின்னணியில் சில மனத்தத்துவக் காரணங்கள் உள்ளன. கடந்த கால மனிதர்களைப் பற்றி நீ எதுவும் அறிந்திருக்கவில்லை. புத்தரைப் பற்றி உனக்குக் கொஞ்சம் தெரியும்தான். ஆனால் அவர் கால மக்களைப் பற்றி நீ எதுவும் அறிந்திருக்கவில்லை. புத்தர் சம்பந்தமான சாஸ்திர நூல்கள் உள்ளன. அவர் பெருமையை உரைக்கும் பாடல்களும் உண்டு. ஆனால் அந்தப் பெருமைக்கு புத்தர் கால மக்களும் உரியவர்கள் என்று நினைக்க வேண்டாம். அக்கால மக்கள் சர்வோத்தமர்களாக இருந்திருந்தால் புத்தரை யார் மதித்திருப்பார்கள்? இருண்ட மேகங்களின் இடையேதான் மின்னல் ஒளிவீசுகிறது. சமகால மனிதர்கள் சராசரி நிலையில் இருந்ததால்தான் புத்தர் பிரம்மாண்டமாகத் தெரிந்தார். புத்தரைப் போன்றே ஏராளமான மக்கள் அவர் காலத்தில் வாழ்ந்திருந்தால் பிறகு புத்தரை யார் லட்சியம் செய்திருப்பார்கள்?

கோஹினூர் வைரம் விலை மதிக்க முடியாதது. ஏனெனில் அது தனியானது. இணையற்றது. கிராமங்களில், சந்துபொந்துகளில், சாலை ஓரங்களில், நதிகளின் கரைகளிலெல்லாம் கோஹினூர் குவியலாகக் கிடைக்கத் தொடங்கினால் அதைப் பிறகு யார் சீண்டுவார்கள்?

---

1. **Lao-tzu:** சீன தத்துவ ஞானி, கி.மு. 6ஆம் நூற்றாண்டு
2. **Confucius:** சீன தத்துவ ஞானி, கி.மு.551-கி.மு.479

இன்றும் ராமனின் நினைவு உள்ளது; கிருஷ்ணனின் நினைவு உள்ளது. ஏனெனில் அவர்களின் சமகால மக்கள் அவர்கள் அளவிற்கு உயர்ந்தவர்களாயில்லை. பெரும்பான்மையோர் ராவணன் அல்லது கம்சனைப் போல் இருந்திருப்பார்கள்.

மனிதன் எப்பொழுதுமே அப்படித்தான் இருந்து வந்திருக் கிறான். ஆனால் கடந்த காலம் சிறப்பாக இருந்தது. அது ஒரு பொற்காலம் என்று ஓர் எண்ணம் மக்களிடையே நிலவுகிறது. ஏனெனில் அக்காலத்திய உயர்ந்த மனிதர்கள் பற்றிய செய்திகள் உன்வரையில் வந்து சேர்ந்துள்ளன. அக்காலத்திய இனிய பாடல்கள் நூற்றாண்டுகளைக் கடந்து உன்னை வந்தடைந்துள்ளன. கடைத் தெருவின் கூட்டம் – மோதல் – ஆரவாரம் ஆகியவை காலப்போக்கில் மறைந்து விடுகின்றன. உயர்ந்தது மட்டும் மிஞ்சுகிறது. பூ மிஞ்சுகிறது. முள் தூக்கி எறியப்பட்டு விடுகிறது.

இக்காலத்தவனாகிய நீ உன்னைச் சுற்றியுள்ளவர்களைப் பார்த்தால் அவர்களிடம் உனக்கு முள்தான் தென்படும். எங்கும் முள்தான். உன் சமகாலத்திய புத்தரைப் போன்ற மாமனிதர் உன் கண்ணில் படுவதில்லை. இத்தனை முள்களிடையே ரோஜாப்பூ மலரக்கூடும் என்று நம்புவதே சிரமம். ஆகவே ஒரு மாமனிதர் எதிர்ப்பட்டால் அவர் மீது நம்பிக்கை உண்டாவதில்லை. ஏனென்றால் மாமனிதர் தென்படுவது அரிது. கோடிக்கணக்கில் சாதாரண மக்கள்தான் உலகை நிரப்பியுள்ளனர். ஆனால் காலப்போக்கில் அந்த ஒரு மாமனிதரின் நினைவுதான் நீடித்து எதிரொலித்துக் கொண் டிருக்கிறது. மற்ற கோடிக் கணக்கானவர்கள் மறக்கடிக்கப்பட்டு விடுகிறார்கள். உன் மதிப்பீடுகள் தவறாகப் போய்விடும்.

மனிதன் என்றும் ஒரேமாதிரிதான் உள்ளான். பழங்கால மனிதன்தான் சிறந்தவன் என்றோ, இக்காலத்தவனாகிய நீ தாழ்ந்தவன் என்றோ கூறலாகாது. அவன் அதிகம் அறிந்திருக்கவில்லை, ஆகவே நீ உயர்ந்தவன் என்று நினைப்பதும் தவறு. இக்காலப் பொருள்கள் முன்பு இருக்கவில்லை. ஆனால் மனிதன் மாறவில்லை. முற்கால மனிதன் ஃபியட் காருக்கு ஆசைப்பட்டிருக்க மாட்டான். ஏனெனில் அப்போது அவ்வகை கார் கிடையாது. ஆனால் இக்கால மனிதன் ஃபியட் காருக்கு ஆசைப்பட்டால் அவன் பாவியாகிவிட மாட்டான். முற்காலத்தவன் ஜாதிக் குதிரைக்கு, சாரட்டு வண்டிக்கு, தேருக்கு

ஆசைப்பட்டான். ஆசைப்படுதல் இன்றும் அப்படியேதான் உள்ளது. சாரட்டு வண்டிக்குப் பதிலாக ஃபியட் வந்துவிட்டது. பொருளில்தான் வித்தியாசம், ஆசைப்படுதலில் அன்று.

இன்றுள்ளவனைப் போலவே அன்றைய மனிதனும் பேராசைக் காரனாக, காமம் உள்ளவனாக, கோபக்காரனாக இருந்தான். இல்லா விட்டால் அந்தந்தக் காலத்துப் புனிதர்கள் மக்களை நோக்கி 'கோபம் கொள்ளாதீர்கள், காமவசப்படாதீர்கள், பேராசையைக் கைவிடுங்கள்' என்று உபதேசித்திருப்பார்களா? உன் சாஸ்திரங்கள் எல்லாமே இப்படித்தானே உபதேசிக்கின்றன. அவை அந்தந்தக் காலத்து மக்களுக்காகத்தானே. அவர்கள் பேராசைக்காரர்கள் அல்லர் எனில் அவர்களுக்கு உபதேசித்த புத்தர் பைத்தியக்காரர் என்றாகிவிடுமே. 'எங்களில் யாரும் லோபி இல்லை' என்றல்லவா அவர்கள் பதிலளித்திருப்பார்கள்.

புத்தர் நாற்பது ஆண்டுகள் ஊர் ஊராக அலைந்து மக்களைச் சந்தித்து, 'பேராசை, பொறாமை, பெரிய ஏக்கம், அஹங்காரம் ஆகியவற்றைக் கைவிடுங்கள்' என்று வேண்டிக் கொண்டார். அப்படியானால் இந்தத் தீய குணங்கள் மக்களிடம் இருந்திருக்கத்தான் வேண்டும். நோயில்லாவிடில் மருந்துகளை யார் விநியோகிப்பார்கள்?

சாஸ்திரங்களே சாட்சி. அவை மக்கள் பின்பற்ற வேண்டியவை குறித்துக் கூறுவதால் அந்த அம்சங்கள் மக்களிடையே இருந்திருக் காது. எந்த வகை நோயோ அதற்குரிய சிகிச்சைக்கு ஏற்பாடு செய்ய வேண்டும். பிரம்மசரியம் இத்துணை புகழப்பட்டதெனில் மக்களிடம் காமம் அதிகமாக வெளிப்பட்டிருக்கும். மக்கள் புலனடக்கத்துடன் வாழ்ந்திருந்தால் பிரம்மசரியம் போற்றப் பட்டிருக்காது.

மக்கள் அறவழியில் செல்பவர்களாயின் தர்ம சாஸ்திரங்கள் தேவைப்பட்டிராது என்று லாவோத்சு கூறினார். அவர் சொன்னது சரியாகத்தான் உள்ளது. 'எப்பொழுதெல்லாம் தர்மத்துக்கு ஆபத்தோ அப்போது நான் வருவேன்' என்று கிருஷ்ணன் சொன்னாரே. அந்த சமயம் ஏன் வந்திருந்தார்? அவர் காலத்தில் தர்மம் சேதப்பட்டிருக்க வேண்டும் என்பது தெளிவு. 'அதர்மத்தின் இருள் சூழ்ந்து சாதுக்கள் துன்புறுத்தப்படும் போதெல்லாம் நான் வருவேன்' என்று கிருஷ்ணன்

அறிவித்ததால் அவர் வாழ்ந்த காலத்தில் சமூகத்தில் அத்தகைய இழிநிலை ஏற்பட்டிருக்கும்.

தர்க்கப்படி யோசித்துப் புரிந்துகொள். உன் வீட்டில் யாருக்காவது நோய் என்றால்தான் மருத்துவரை அழைப்பாய். ஒரு சமூகம் தாழ்ந்து இழிந்து போனால்தான் அதைத் தூக்கி விடுவதற்கான முயற்சி மேற்கொள்ளப்படுகிறது. இத்தனை அவதாரங்கள் ஏன் ஏற்பட்டன? இத்தனை தீர்த்தங்கரர்கள் (ஜைன அவதாரங்கள்) ஏன் தோன்றினர்? அந்தந்தக் கால மனித சமூகம் தவறான வழியில் சென்றிருக்க வேண்டும்.

ஆகவே மனிதன் எக்காலத்திலும் ஒரே மாதிரியாகவே இருந்து வந்திருக்கிறான். நம் சொந்த வாழ்க்கையிலேயே கூட இம்மாதிரி பிரமை உண்டு. நம்முடைய குழந்தைப் பருவம் பொற்காலமாக இருந்ததாக இப்போது நடுவயதில் நினைவு கூர்கிறோம். ஆனால் வளர்கின்ற குழந்தைகள் இதை ஒப்புக்கொள்ள மாட்டார்கள். குழந்தைகள் சீக்கிரமாகவே பெரியவர்களாக வளர்ந்துவிட விரும்புகிறார்கள். தந்தை நாற்காலியில் உட்கார்ந்திருப்பார். மகன் அவர் அருகில் நின்றுகொண்டு, "அப்பா, பார், நான் உன்னைவிட பெரியவன்," என்பான். இவ்வாறு அவன் கூறுவது அவனது விருப்பத்தின் பிரதிபலிப்புத்தான்.

பள்ளிக்கூடத்தில் ஒரு சிறுவன் குறும்பு செய்ததற்காக ஆசிரியர் அடித்து விட்டார். பிறகு அவனைக் கொஞ்சி சமாதானப்படுத்தினார், "எனக்கு உன்மீது மிகவும் பிரியம். அதை நிரூபிக்கத்தான் உன்னை அடித்தேன்," என்று விளக்கினார். சிறுவன் கண்ணீரைத் துடைத்துக் கொண்டே, "சார், எனக்கும் உங்கள் மீது மிகவும் பிரியம். ஆனால் அதைத் தற்சமயம் உங்கள் வழியில் நிரூபிக்க இயலாதவனாக இருக்கிறேன்," என்றான்.

சிறுவர்களிடம் கேட்டுப்பார். அவர்கள் விரைவாகப் பெரியவர் களாக விரும்புகிறார்கள். ஆனால் பெரியவர்களானபின் குழந்தைப் பருவம் சொர்க்கமாக இருந்தது என்று நினைப்பார்கள். அது உண்மையில்லையே. சிறுவயதில் உனக்கு சுதந்திரம் என்பதே இருந்தது கிடையாதே. நீயாக, தனியாக எதுவும் செய்ய சக்தியற்றவனாய் இருந்தாயே. உன் ஒவ்வொரு தேவையையும் நிறைவேற்றிக் கொள்ள

நீ யாரையாவது நம்பியிருக்க வேண்டியிருந்தது. இத்தகைய அடிமை வாழ்வு எப்படி அழகாக இருந்திருக்க முடியும்? ஆனால் வளர்ந்தபின் சிறு வயதில் பட்ட சிரமங்கள் நினைவிலிருப்பதில்லை.

மனத்தத்துவ அறிஞர்கள் இதற்கொரு காரணம் கூறுகின்றனர். மனித வாழ்க்கையில் துன்பங்கள் அடுக்கடுக்காக வருவதால் சமீபத்தியத் துன்பம் முந்தியத் துன்பத்தை மறக்கடித்து விடுகிறது. எல்லாத் துன்பங்களையும் ஞாபகத்தில் வைத்துக் கொண்டால் நாம் உயிர்வாழ முடியாது; வெடித்து விடுவோம். ஆகவே மேலே அழுத்தும் துன்பங்கள் கீழே உள்ள துன்ப நினைவுகளை ஆழ்மனத்தின் பள்ளத்தில் தள்ளிவிடுகின்றன. மனம் சுகமான நினைவுகளைப் பூமாலைபோல் தொடுக்கிறது. வளர–வளர சுகமான நினைவுகளைச் சேகரித்துக் கொண்டே செல்கிறோம். இன்பமாக இல்லாததைப் பின்னால் தள்ளி விடுகிறோம். எனவேதான் கடந்த காலம் பற்றி நாம் விடும் அறிக்கைகள் தப்பாகவே உள்ளன.

தனிமனிதனின் இந்த நிலை சமூகத்தில் பெரிய அளவில் காணப்படுகிறது. பழைய சமூகம் அழகாக இருந்ததாக, பொற் காலமாகத் திகழ்ந்ததாக நினைக்கிறோம். இது தவறான கண்ணோட்டம். கடந்த காலம் உண்மையிலேயே சிறந்ததாக இருந்திருந்தால் அதிலிருந்து தோன்றிய தற்காலம் கூடுதல் சிறப்புடன் அல்லவா விளங்க வேண்டும். சிறுவயதுக் காலம் இன்பமானதெனில் அதிலிருந்து உருவான நடுவயதுப் பருவம் கூடுதலாக இன்பமாக அல்லவா இருக்க வேண்டும். இளமைக் காலம் அருமையாக இருந்ததாக நீ கருதினால் அதிலிருந்து வெளிப்பட்ட முதுமை இளமையைவிட அழகாக அல்லவா இருக்கும். ஒட்டுமொத்தமாக வாழ்க்கையே இனியதாக இருந்தால் மரணம் ஆனந்த நடனமாக, உற்சவமாகக் கருதப்பட வேண்டும். ஏனெனில் மரணம் என்பது வாழ்க்கையின் முடிவில் பிழிந்தெடுக்கப்படுகின்ற சாரம் ஆகும்.

ஆனால் நீ பார்க்கும் விதம் எதிரானது. இளமையைவிட குழந்தைப் பருவத்தை, முதுமையைவிட இளமைக் காலத்தைச் சிறந்ததாக நினைக்கிறாய். மரணமோ உனக்கு ஒருபொழுதும் அழகானதாகத் தெரிந்ததில்லை. ஏனெனில் துக்கங்களை ஒவ்வொன்றாக மறந்து, சுகத்தைச் சேகரித்து வருகிறாய். சுகம் புதிதாகக் கிடைக்காவிடில் பழைய இனிய நினைவுகளைப் பாதுகாக்கிறாய்.

மக்கள் அவ்வப்பொழுது போற்றிய பொற்கால சமூகங்களைக் கடந்துதான் நீ இன்றைய சமூகத்திற்கு வந்திருக்கிறாய். முன்பிருந்த காலத்தை சதயுகம் (சத்ய யுகம்) என்பார்கள். அந்த யுகத்திலிருந்துதான் இன்றைய கலியுகம் தோன்றியிருக்கிறது. பழத்தை வைத்து மரத்தை அறியலாம் என்னும் பழமொழிக்கு இணங்க, கலியுகத்தை வைத்து அதற்கு முன்பிருந்த யுகங்களின் தரத்தைப் புரிந்து கொள்ளலாம். எனவே மனித குலத்தின் கடந்த காலம் அனைத்தும் எச்சூழ் நிலையிலும் உனது நிகழ்காலத்தைவிட உயர்ந்ததாக இருந்திருக்க வாய்ப்பில்லை. உன்னைவிட கடந்த காலத்தவன் மோசமா யிருந்திருக்கலாம். உன்னைவிடச் சிறந்தவனாக மட்டும் இருக்க முடியாது. ஏனெனில் நீ அவனிடமிருந்து வந்தவன்.

நான் இன்னொரு பிரமையையும் உன் உள்ளத்திலிருந்து அகற்ற விரும்புகிறேன். அதாவது, நீ கடந்தகாலத்தவர்களைவிட உயர்ந்தவன் என்றும் நான் கூற விரும்பவில்லை. நீ அவர்களைவிட மோசமும் இல்லை. மனிதன் எப்பொழுதும் எப்படி இருந்து வந்துள்ளானோ அப்படியேதான் நீயும் இருக்கிறாய் என்று தெளிவாகக் கூறுகிறேன். ஆகவே இந்த ஒப்பீட்டுக் கவலை, எண்ணங்களைக் கைவிடு. எந்த சூழ்நிலையிலும் மனிதர்களில் சிலர் அவ்வப்பொழுது புரட்சி நிகழ்த்தியுள்ளார்கள் என்பதைக் கவனி. மற்றவர்களைப் பற்றிய கவலையைவிடு. உன் உள்ளத்தில் ஞான தீபம் எரிந்தால், அதன் மூலம் உன் வாழ்க்கையில் ஒளி பரவினால் அதுவே போதும்.

'நீங்கள் இருந்தும் மனிதன் தரம் தாழ்ந்து போகிறானே' என்று கேட்கிறாய்.

நான் யாரும் தரம் குறைந்து சரிவதாகவோ, தரம் மேம்பட்டு உயர்வதாகவோ காணவில்லை. மக்கள் செக்குமாடுபோல் ஒரே இடத்தை ஒரே விதமாகச் சுற்றி வருகிறார்கள். அவர்களின் கண்கள் கட்டப்பட்டிருக்கின்றன. எங்கேயோ முன்னேறிச் சென்று கொண்டிருப்பதாக அவர்கள் நினைக்கிறார்கள். ஆனால் உண்மையில் யாரும் எங்கும் போகவில்லை. அவர்களின் கண்களைப் பழைய நம்பிக்கைகள், கொள்கைகள், தத்துவங்கள், மதங்கள், அரசியல் முதலியவை கட்டுத்துணியாக மூடியுள்ளன. எப்போதாவது எவனாவது ஒருவன் அந்தக் கட்டை அவிழ்த்துப் பார்க்கிறான். 'அடேடே, நான் செக்குமாடுபோல் வட்டப் பாதையில் அல்லவா சுற்றிவருகிறேன்.

அவன் அந்த வட்டப் பாதையிலிருந்து வெளியேறுகிறான். அவ்வாறு வட்டத்தைத் தாண்டிக் குதிப்பதே சந்நியாசம் என்பது.

சமூகத்தில் அறப்புரட்சி வராது. சந்நியாசிகள் சிலரின் வாழ்க்கையில் புரட்சி ஏற்படும் வாய்ப்புண்டு. அற உலகில் ஏற்படுவது மகாபுரட்சி. அது தனிமனிதனிடம்தான் வெளிப்படும். சமூகத்தில் சிறிய அளவிலான சீர்திருத்தங்களே நிகழ்கின்றன. மேற்பூச்சாக மாற்றம் நிகழ்கிறது. வீடு அப்படியேதான் உள்ளது. பிளாஸ்டர் விழுந்திருந்தால் மறுபடியும் ஒட்டப்படுகிறது. நிறம் வெளிறிப் போயிருந்தால் மறுபடியும் வண்ணம் பூசப்படுகிறது. கூரை சேதமாகியிருந்தால் ஓடு மாற்றப்பட்டு வேயப்படுகிறது. சுவர் சரியத் தொடங்கினால் முட்டுக் கொடுக்கப்படுகிறது. இவ்வாறு மொத்தத்தில் வீடு அப்படியேதான் உள்ளது. ஆனால் புரட்சி அல்லது தீவிர மாறுதல் என்பது தனி மனிதனிடம் நிகழ்கிறது. புரட்சி முழுமையாகத் தனிநபரையே சார்ந்தது.

எனவேதான் யாரும் உயர்வதாக அல்லது தாழ்வதாக என்னால் கருத முடியவில்லை. சமூகம் அன்றுபோல்தான் இன்றும் உள்ளது.

புத்தர் போன்ற புனிதர்கள் உலகில் வருகை தரும்போது மானிடம் சிகரத்தைத் தொடுகிறது என்று சொன்னாய். ஆனால் மானிடம் மொத்தமும் சிகரத்தைத் தொடாது. மனிதர்களில் சிலர் சிகரம் தொடுகின்றனர். அவர்களிடம் மறைந்துள்ள மனிதத் தன்மை உன்னதத்தைத் தொடுகிறது. ஆனால் சிகரம் தொடாதவர்கள்தான் அதிக எண்ணிக்கையில் உள்ளனர். எப்பொழுதாவது கோடியில் ஒருவர் அந்த புத்த ஞானியர்களுடன் எல்லையற்ற யாத்திரையில் சேர்ந்து கொள்கிறார். புத்தர் காலத்தில், மகாவீரர் காலத்தில் மாபெரும் ஆன்மிகப் புரட்சிகள் நடந்ததாக இக்காலத்தில் நீ கருதலாம். ஆனால் விகிதாசார முறையில் ஆராய்ந்தால் நீ அதிசயப்படுவாய். புத்தர் சென்ற ஊரில் பத்தாயிரம் பேர் வசித்தால் அவர்களில் பத்து பேர் அவர் உபதேசத்தைக் கேட்க வந்தாலே போதும். அந்த பத்து பேரில் ஒருவராவது ஆழ்ந்து கேட்டிருந்தால் அது பெரிய விஷயம். உபதேச உரை கேட்க வருபவர்கள் எல்லோரும் காது கொடுத்தும் கேட்பார்கள் என்று நிச்சயமில்லை. நிறையப் பேர் புத்தர் பேச்சைக் கேட்டார்கள் என்று இக்காலத்தில் நீ நினைப்பது வேறு விஷயம்.

தற்சமயம் என் சொற்பொழிவைக் கேட்பவர்கள் குறைவு. அதன் அர்த்தத்தைப் புரிந்து கொண்டவர்கள் அதைவிடக் குறைவு. என்னைப்

புரிந்து கொண்டு தங்கள் வாழ்க்கையை மாற்றியமைத்து வருபவர்கள் மிகவும் சொற்பம்.. ஆனால் சிறிது காலம் கழித்து நிறையப் பேர் திரண்டு என் பேச்சைக் கேட்டு வாழ்க்கையை மாற்றியமைத்துக் கொண்டதுபோல் பிரமை உருவாகும்.

இப்போது ஜைனர்களின் எண்ணிக்கை முப்பது லட்சம் இருக்கும். மகாவீரர் முப்பது பேர்களைத் தமது சம்பிரதாய வழிக்கு மாற்றியிருந்தால். இந்த இரண்டாயிரம் ஆண்டுகளில் முப்பது லட்சமாக வளர்ந்திருக்கிறது. ஆகவே மகாவீரர் குறைந்த அளவில் சிலரைத்தான் தமது வழிக்கு மாற்ற முடிந்திருக்கிறது. மாறுதல் எப்பொழுதும் குறைந்த எண்ணிக்கையில்தான் நிகழும். அந்தச் சில மனிதர்களிடம் மறைந்துள்ள மனிதத் தன்மைதான் உன்னத நிலையைத் தொடுகிறது. இதைப் பற்றியெல்லாம் நீ ஆராய்ந்து கொண்டிராமல் உன் உள்ளம் ஞான சிகரத்தைத் தொட முயலுகிறதா இல்லையா என்பதைப் பற்றி மட்டும் கவலைப்படு. மற்றவர்களைப் பற்றிய கவலையில் உன்னை மறந்துவிடப் போகிறாய், ஜாக்கிரதை. மற்றவர்களின் முன்னேற்றம் குறித்து நீ ஆராய்ந்து கொண்டிருந்தால், நீயும் முன்னேற மாட்டாய், மற்றவர்களுக்கும் லாபம் இல்லை.

ஆயிரக்கணக்கான கண்கள் என்னை நோக்கியே உள்ளதாகவும், ஒருவேளை என் மூலமாக உலகில் புதிய விழிப்புத் தோன்றலாம் என நீ நினைப்பதாகவும் கூறுகிறாய்.

இந்த பிரமைகளைக் கைவிடு. யார் மூலமும் புதிய விழிப்பு தோன்றியதில்லை, தோன்றப் போவதில்லை. எத்தனையோ சான்றோர்கள் உலகில் உதித்துள்ளனர். என்ன செய்ய முடிந்தது? என்னை பற்றிய பிரமையையும் கைவிடு. பிரமைகள் உன்னை வழிதவறச் செய்கின்றன. நீயே புரட்சியைக் கொண்டுவர முடியும். அவ்வாறு செய்யாமல் நீ வேறு யார் வருகையையோ எதிர்பார்த்துக் காத்துக் கொண்டிருக்கிறாய். அது இன்னொருவரது வேலையென நினைக்கிறாய். குறிப்பாக, புரட்சி செய்வது எனது கடமையென்றும், நான் முயற்சி செய்யாவிடில் அது எனது குற்றமாகிவிடும் என்றும் நீ கருதுகிறாய். அப்படியானால் எனக்கு முன்பே தோன்றிய புத்த புருஷர்களும் குற்றவாளிகளே என்று நீ முடிவுசெய்ய நேரிடும். ஏனெனில் இதுவரையில் மறுமலர்ச்சி அல்லது புதுவிழிப்பு ஏற்பட்டதில்லை. புதுவிழிப்பு ஒருபோதும் ஏற்படாது என்றும் நான் சொல்வேன்.

புது விழிப்பிற்கான ஆங்கிலச் சொல் உடோபியா* இதன் பொருள் – 'என்றும் வந்ததில்லை, என்றும் வராது' என்பதாகும். அது உன் விருப்பம் மட்டுமே. ஒரு கனவு மட்டுமே. அது நிறைவேற முடியாத விருப்பமுமாகும். நீ வேறொருவர் மூலமாக, உதாரணமாக என் மூலமாக, புரட்சி வரும் என ஏன் எதிர்பார்த்துக் கொண்டிருக் கிறாய்?

இதேபோல் என்னிடம் பலர் வந்து அடுத்த அவதாரம் எப்போது நிகழும் என்று கேட்கிறார்கள். நீயும் கேட்கிறாய். நீ ஏன் சும்மா இருக்கிறாய்? உனக்குள் ஓர் அவதாரத்தை ஏன் பிறப்பிக்கக் கூடாது? நீ இந்தப் பொறுப்பை ஏன் தள்ளிப் போடுகிறாய்? யார்மீது தள்ளி விடுகிறாய்? என்னிடம் பலர் வந்து புகார் கூறுகிறார்கள், "பகவான் நம் கஷ்டங்களைக் காது கொடுத்துக் கேட்பதில்லை. ஏராளமான மக்கள் ஏக்கப் பெருமூச்சு விடுகிறார்கள். பகவான் எங்கே இருக்கிறார்? அவர் ஏன் வருவதில்லை?" இம்மாதிரிப் பேசுவது தன்னையே ஏமாற்றிக் கொள்ளும் சதியாகும். இதன் மூலம் நீ எதுவும் முயற்சி செய்ய வேண்டியதில்லை என்றொரு கருத்தை உனக்குள் உருவாக்கிக் கொள்கிறாய். ஓரிடத்தில் அமர்ந்து பாதையைப் பார்த்துக் கொண்டிருக்கிறாய். இறைத்தூதர், மகான் அல்லது அவதார புருஷர் வருவார் என்று காத்துக் கொண்டிருக்கிறாய். எல்லோரும் வந்து போயாகிவிட்டது! புதிய விழிப்புதான் இன்னும் வரவில்லை. புரட்சி எதுவும் ஏற்படவில்லை. அவதாரங்கள், மதஸ்தாபகர்கள் வந்துபோய் விட்டனர். நீ எப்போது விழிக்கப் போகிறாய்?

நீ பிரமைக்கு ஆளாகியுள்ளாய். புரட்சி இன்னொருவர் மூலம் எழாது. அது உனக்குள் விளைய வேண்டும். சமூக அளவில் புதிய விழிப்பு என்றும் தோன்றாது. சமூகத்தில் நிகழும் மாறுதல் அரசியலுடன் சம்பந்தப்பட்டது. தனிமனித அளவில் நிகழும் புரட்சி அறவகை யானது. அதை தர்மம் என்கிறோம். நீ அரசியலை தர்மநெறியின் மீது திணிக்காதே. மக்கள் தூங்குவதையே விரும்பினால் யார் எழுப்ப முடியும்? எப்படி எழுப்ப முடியும்? எழுப்புபவன் அளவு மீறித் தொந்தரவு செய்தால், தூங்குபவர்கள் எரிச்சல்பட்டு அவனைக் கொன்று போடுவார்கள். அதுதானே நடந்தது. இயேசுநாதரைச் சிலுவையில்

---

* Utopia = கற்பனை நாடு. உயர்ந்த குறிக்கோள்களைக் கொண்டது. முன்மாதிரியான நாடு. சர் தாமஸ் மோர் 1516இல் எழுதிய தத்துவ நூலில் சித்திரிக்கப்பட்டுள்ளது.

அறைந்தனர். சாக்ரடீஸிற்கு விஷம் கொடுத்தனர். ஏனெனில் இந்த இருவரும் சமூகத்தைத் தட்டியெழுப்ப அதிக ஆரவாரம் செய்தனர்.

ஒருவன் தூங்குகிறான். நீ சென்று காலையிலிருந்தே மணியடித்து, 'பொழுது விடிந்து விட்டது, எழுந்திரு' என்று கூவுகிறாய். அவன் எரிச்சலுடன் 'தூங்குவதற்கும் எழுந்திருப்பதற்கும் எனக்குக் குறைந்தபட்சமாவது சுதந்திரம் உள்ளது' என்று பதிலளிக்கிறான். தூங்கவிடாமல் மணியடிக்கப்பட்டால் அவனுக்குக் கோபம் வருவது நியாயம்தானே. மேலும், தூங்குபவர்கள்தான் பெரும்பான்மையோராக இருக்கிறார்கள். மணியடிப்பவர்கள் வந்துபோகிறார்கள். தூங்குவோர் புரண்டுகூட படுப்பதில்லை. சிலர் புரண்டு மறுபடி தூக்கத்தில் ஆழ்கிறார்கள். சிலர் கோபிக்கிறார்கள். சிலர் கைகூப்பி, "ஐயா ஞானியாரே, உமக்கு வணக்கம். நீங்கள் பெரிய மகாத்மா என்பது எனக்குத் தெரியும். நான் அற்பமானவன். என்னைத் தொந்தரவு செய்யாமல் விட்டுவிடுங்கள். இப்போது எழுந்திருப்பது எனக்கு சௌகரியமாக இல்லை. கட்டாயம் ஒருநாள் எழுந்திருப்பேன். நீங்கள் சொல்லும் விஷயம் சரிதான். ஆனால் இப்போது எனக்கு வேண்டாம்," என்பார்கள். ஞானி சொல்வது சரியென்பவர்கள் ஆளை விட்டால் போதும் என்றும் கூறுகிறார்கள்.

இதற்குமேல் எப்படி வாதம் புரிவது? தூங்க விரும்புபவனை எப்படித் தடுப்பது? அவன் சொல்கிறான்: "இது விழிப்பதற்குரிய பிரம்ம முகூர்த்தம் என்று எனக்குத் தெரியும். இன்றில்லை, கட்டாயம் என்றாவது ஒருநாள் இந்த நேரத்தில் எழுவோம். உங்கள் பேச்சை நினைவில் வைப்போம். உங்கள் பெயரை ஓதுவோம். உங்களை வழிபடுவோம். உங்கள் புகைப்படத்தைச் சுவரில் மாட்டுவோம். சிலை கூட செய்து வைப்போம். ஆனால் தற்சமயத்திற்கு என்னை இப்படியே விட்டுவிடுங்கள். இப்பொழுது எனக்குத் தூக்கம் வருகிறது. ஞானம் பெறுவதற்கான யோக்யதை எனக்கு இன்னும் அமையவில்லை. தற்சமயத்திற்கு வீடு, மனைவி, குழந்தைகளைப் பராமரிக்க விடுங்கள். ஒரு நாள் மோட்சத்தை நோக்கி நடைபோட்டுத்தான் ஆகவேண்டும். நீங்கள் சரியாகத்தான் சொல்கிறீர்கள்."

ஆகவே நீ பூஜை செய்கிறாய். கோயில் கட்டுகிறாய். உன் பூஜைகளும் உன் கோயில்களும் நீ தப்பித்துக் கொள்வதற்காக மேற்கொள்ளும் முயற்சிகளுள் அடங்கும். தீயவர்களாக இருந்தால்

சண்டை போட எழுந்து நிற்பார்கள். நல்லவர்களாக இருந்தால் பூஜை செய்ய ஆரம்பித்து விடுவார்கள். மொத்தத்தில், யாரும் தூக்கத்தைக் கைவிட மட்டும் தயாரில்லை.

நம் நாட்டில் சிலுவையில் ஏற்றவில்லை — இது பண்பாளர்களின் நாடு. அடி — உதை — தகராறு — ஏமாற்று வேலைகளில் நமக்கு நம்பிக்கை இல்லை. ஏனெனில் இது அஹிம்சாவாதிகளின் தேசம். நமது பரம்பரை புராதனமானது. கைகூப்பி, காலைத் தொட்டு வணங்கி ஒருவரைத் தவிர்க்க முடியுமானால் அவரை ஏன் சிலுவையில் மாட்ட வேண்டும்?

சிலுவையில் தொங்கவிட்டால் பிரச்சினைதான் அதிகரிக்கும். ஆகவே யூதர்கள் இயேசுநாதரைச் சிலுவையில் பூட்டியதுபோல் நாம் புத்தரைக் கொடுமைப் படுத்தவில்லை. யாராவது ஒன்றிரண்டு பைத்தியக்காரன் அவர் மீது கல்லெறிந்திருக்கக் கூடும். ஆனால் பொதுவாக இந்திய சமூகம் அவரை அவதாரம் என்று போற்றியது. மகாவீரரும் திட்டு — வசவுகளுக்கு உள்ளாகியிருக்கலாம். ஆனால் சாக்ரடீசுக்கு விஷம் கொடுத்ததுபோல் மகாவீரருக்கு யாரும் விஷம் தரவில்லை. மன்சூரை எதிர்ப்பாளர்கள் வெட்டியதுபோல் நாம் கபீர்தாசைத் தாக்கவில்லை. பாரதம் பண்பாளர்களின் தேசம். நாம் நுணுக்கமான உபாயங்கள் அறிந்தவர்கள். ஊசியால் ஒரு காரியத்தைச் செய்து முடிக்க முடியுமானால் அங்கே கத்தி தேவைப்படுவதில்லை. கோயில் கட்டுகிறோம்; அங்கு பிரதிஷ்டை செய்ய சிலைகள் செதுக்கு கிறோம்; பூமாலை அணிவிக்கிறோம்; சாஸ்திரங்கள் உருவாக்குகிறோம்; வேறென்ன வேண்டும்? எங்களை எழுப்பாமல் மட்டும் இரு.

சமூகம் ஒரு காலத்திலும் விழிப்படையாது. சமூகம் என்பது தூங்குமூஞ்சிகளின் கூட்டம். இந்தக் கூட்டத்தினரில் எப்பொழுதாவது அரிதாகத்தான் எவனாவது ஞான விழிப்புப் பெறுகிறான். என்னால் உலகம் மாற்றமடையும் என நீ நினைப்பது ஒரு பிரமை. நான் உன்னுடைய பிரமையை ஊக்குவிக்கத் தயாராக இல்லை. என் மூலம் புதிய விழிப்பு ஏற்படும் என்று நான் சொல்ல மாட்டேன். என் மூலம் உலகில் புரட்சி எதுவும் விளையாது. நான் ராமராஜ்ஜியத்தை நிலைநாட்டுவேன் என்றா நினைக்கிறாய்? ராமனால் ஸ்தாபிக்க முடியாத ராமராஜ்ஜியத்தை, கிருஷ்ணனால் முடியாததை, புத்தரால் முடியாததை நான் மட்டும் எப்படி நிறைவேற்றி வைக்க முடியும்?

இல்லை, இல்லை, புத்தரோ, ராமனோ, கிருஷ்ணனோ தர்ம சாம்ராஜ்ஜியம் ஏற்படுத்தப் போவதாக பிரமை கொண்டிருக்கவில்லை. புத்தர் அடிக்கடி சொன்னார் – நீயே உனக்கு விளக்காக ஆகுக. என் மூலம் எதுவும் நடைபெறுவது சாத்தியமில்லை. மகாவீரர் சொன்னார் – நீ உன்னையே சரணடைவாயாக. என் பாதங்களைப் பணிவதால் உனக்கு என்ன நன்மை விளைந்து விடப்போகிறது?

மகாவீரர் மேலும் தெளிவாக, 'நான் விழிப்புப் பெற்று விட்டேன்தான். ஆனால் நான் உனக்கு நன்மை செய்வதற்காக உலகில் வரவில்லை,' என்று அறிவித்தார். உலக நன்மைக்காகத்தான் அவர் பிறந்ததாக சமண மதத்தினர் நம்பியபோதிலும் மகாவீரரோ 'ஒருவனுக்கு இன்னொருவன் எப்படி ஆன்மிக உதவி செய்ய முடியும்?' என்று கேட்கிறார். இன்னொருவன் உனக்கு ஆன்மிக நன்மை செய்ய முடியும் என்றால் அது பைசா பெறாது. அதனால் உனக்கு ஆன்மிக வளர்ச்சி ஏற்படாது. உன் உள்மனத்தில் புரட்சி எழாது. மற்றவனது தூண்டுதல் கடன் வாங்குவது போன்றது. ஊசிப் போனது. ஆகவே மகாவீரர் தன்னை அணுகியவர்களை 'நீ உன்னையே சரணடைக. உன்னைப் புரிந்துகொள். உன்னை எழுப்பிக் கொள்,' என்று ஒதுக்கி விட்டார்.

'அறத்தின் அடிப்படையிலான உலகம் எப்பொழுது நிர்மாணிக்கப்படும்?' என்று நீ கேட்டாயல்லவா? அப்படிப் பொய்க் கனவு காணாதே. உலகம் பொதுவாக தர்ம வழியில் இயங்குவதில்லை. தர்மாத்மாக்கள் சிலரே இதில் ஞான விழிப்புடன் உள்ளனர். இரவு என்பது இருட்டாகத்தான் இருக்கும். இதில் எப்பொழுதாவது சில நட்சத்திரங்கள் ஒளிவிடும். இரவு எப்பொழுது முழுமையாகக் கழியும் என்று எதிர்பார்த்தபடி இராதே. நீ ஒளிவிடுகிறாயா, உன்னிடம் ஞான ஒளி தோன்றியுள்ளதா என்பதை மட்டும் கவனி. நீ ஒளிவீசினால் உன்வரையில் இரவுப்பொழுது முடிந்துவிட்டது. உனக்கு ஞான விடியல் ஏற்பட்டுவிட்டது.

இந்தப் புரட்சிகரமான மாறுதல் தனிமனிதனின் ஆழ்மனத்தில் நிகழ்கிறது. இது உள்முகமானது. ஒவ்வொருவனுக்கும் தனிப்பட்டது. கூட்டத்துடன், சமூகத்துடன் இந்தப் புரட்சிக்கு சம்பந்தமில்லை. இந்த விஷயத்தை நான் மீண்டும் – மீண்டும் தெரிவிக்க விரும்புகிறேன்.

'எப்பொழுது ஆன்மிக வெடிப்பு நிகழும்? எந்த விதமாக நிகழும்? அதற்கேற்ப மாறாமல், மக்கள் உங்களை எதிர்ப்பது போலுள்ளதே' என்றும் நீ கேட்டாய்.

மக்கள் இவ்விஷயத்தில் எப்பொழுதும் எதிர் அணியில்தான் இருக்கிறார்கள் இதில் புதுமை இல்லை. அவர்கள் எதிர்க்கா விட்டால்தான் ஆச்சரியப்பட வேண்டும். அவர்கள் எதிர்க்கத்தான் வேண்டும். அதுதான் அவர்களுக்குப் பழக்கமானது.

**ஜை**ன சாஸ்திரக் கதை ஒன்றில், ஆற்றில் குளிக்கச் சென்ற முனிவர் தண்ணீரில் ஒரு தேள் மிதப்பதைப் பார்த்தார். அது செத்துவிடக் கூடாதே என்று அவர் அதைக் கையிலெடுத்துக் கரையில் விட்டார். தேள் அவரை இரண்டு, மூன்ற முறை கொட்டிவிட்டது. ஓர் எறும்பைத் தடுத்து வேறு திசைக்கு மாற்றினால் அது பழைய திசைக்கே திரும்பி விடுவதைப் பார்த்திருப்பாயே. எறும்புகள் மிகவும் பிடிவாதமானவை. ஏனெனில் அவற்றிடம் அத்துணை முட்டாள்தனம் உள்ளது. தேளும் அப்படியே. பழைய திசைக்கே திரும்பி மீண்டும் தண்ணீரில் விழுந்தது. முனிவர் பரிதாபப்பட்டு அதைத் தூக்கிக் கரையில் வைத்தபோது அது மறுபடியும் அவரை இரண்டு – மூன்று முறை கொட்டியது.

இதைக் கண்டு ஒரு மீனவர் முனிவரிடம், "இந்தத் தேள் உங்களை மீண்டும் – மீண்டும் கொட்டுகிறதே. சனியனைத் தண்ணீரில் உதறிவிடுங்கள். செத்துத் தொலையட்டும்," என்றார். முனிவர் சிரித்தார். "அது தனது வழக்கத்தைக் கைவிடவில்லை. நான் மட்டும் ஏன் என் வழக்கத்தைக் கைவிட வேண்டும். தேள் என்றால் அது கொட்டத்தான் செய்யும் என்பதை ஒப்புக்கொள்ள வேண்டும். அது என்னைக் கொட்டாமல் எனக்கு நன்றி கூறினால்தான் பயப்பட வேண்டும். அவ்வாறு அது செய்தால் நம்பவே முடியாது," என்று முனிவர் விளக்கினார்.

தூங்குகின்ற மக்களை எழுப்ப யாராவது முயன்றால் அவர்கள் கோபமுற்றுத் தேள்போலக் கொட்டுவார்கள். அவர்களது செயலை என்னால் புரிந்துகொள்ள முடிகிறது. அதை நான் ஆட்சேபிக்கவு மில்லை. தூங்குபவர்களை எழுப்பினால் அவர்கள் கோபிக்கத்தான் செய்வார்கள். அன்றாட வாழ்க்கையிலும் பார்க்கலாம். ஒருவன்

வெளியூர் செல்ல ரயில்வண்டி நான்கு மணிக்கு என்பதால் அதற்கு முன்பே எழுப்பச் சொல்லுவான். அவ்வாறே அவனது நன்மைக் காகவே எழுப்பினாலும் அவன் கோபிக்கிறான். எழுப்புபவரை எதிரி போல் பார்த்து முறைக்கிறான். "ஆமாம், எழுப்பச் சொன்னேன்தான். அதற்காக இப்படியா அவசரப்படுத்துவது?" என்று கேட்கிறான்.

இதேபோல், நோயாளிக்கு மருந்து கொடுக்கும்போது அவனும் தகராறு செய்கிறான். பெரும்பான்மையோர் குழந்தைத்தனமாகவே நடந்து கொள்கிறார்கள். அவர்கள் எதிர்ப்பது இயற்கைதான். அவர்களின் எதிர்ப்புக்கான காரணத்தை மனத்தத்துவ அடிப்படையில் நீ ஆராய்ந்தால் அசந்து போவாய். அவர்கள் எதிர்க்கும் விஷயத்தில் சிறிதளவாவது உண்மை உள்ளது என்கிற நியாயத்தால்தான், அது வெளியே தெரிந்து விடக்கூடாது என்று நினைப்பதால்தான் அவ்வாறு நடந்து கொள்கிறார்கள். இந்த மகாத்மா நம்மை எழுப்பிவிடப் போகிறாரோ என்று பயப்படுகிறார்கள். அவர்களுக்கு சந்தேகம். இந்த ஆள் பேசுவது இதயத்தில் இறங்கிவிடக் கூடாது; அப்பேச்சு ஆத்மாவில் விதைபோல் பதிந்து விடக்கூடாது என்று அஞ்சுகிறார்கள்.

அவர்கள் மேற்கொள்வது அடையாள எதிர்ப்பு. அவர்களுக்கு இரண்டு வழிகள்தான் உள்ளன. எதிர்த்துப் போராட வேண்டும் அல்லது உண்மையை ஒப்புக்கொண்டு சேர்ந்து செல்ல வேண்டும். அவர்கள் எதிர்ப்பு வழியையே தேர்ந்தெடுத்தனர். அவர்களது எதிர்ப்பை நான் குறைகூற மாட்டேன். அவர்களது நடவடிக்கை இயற்கையானது என்று ஒப்புக் கொள்கிறேன். ஞானியர்கள் சொல்வதை அவர்களது மனசாட்சி ஏற்றுக் கொள்கிறது என்கிற நுணுக்கமான ரகசியத்தையே அந்த எதிர்ப்பு மறைமுகமாகத் தெரிவிக்கிறது.

இன்னொரு விஷயம். அப்படி அவர்கள் ஞானியர்களுக்கு எதிர்ப்புத் தெரிவிக்காவிடில் அவர்களுக்கு ஞான விழிப்பில் ஆர்வமில்லை என்று பொருள்படும். ஞானி ஒருவர் தோன்றியும் மக்கள் அவரை எதிர்க்காவிடில் அது கெடுதலாகும். "ஐயா ஞானி யாரே! நீங்கள் சொல்ல விரும்புவதை ஆனந்தமாகச் சொல்லுங்கள்; செய்ய விரும்புவதைச் செய்யுங்கள். அதைக் கேட்டும் பார்த்தும் எங்களுக்கு நன்றாகப் பொழுது போகிறது." இவ்வாறு கூறி மக்களின் ஞானியின் உபதேசம் முடிந்ததும் கைதட்டிப் பாராட்டிவிட்டு, எதிர்ப்பே காட்டாமல் வீட்டுக்குத் திரும்பி விட்டால், அதனால் பிரச்சினை ஏற்படும்.

எதிர்ப்பு இருந்தால் மறைமுகமான பிடிப்பு ஏற்பட்டு விட்டது என்பதைக் கவனத்தில் வை. வெறுப்பு என்பது அன்பின் வகைகளுள் ஒன்று. எவன் ஒன்றை வெறுக்கத் தொடங்குகிறானோ அதை அவன் கூடிய விரைவில் நேசிக்கவும் வாய்ப்புள்ளது.

ஆனால் உதாசீனம், அலட்சியம் ஆபத்தானது. ஞானியர் எதிர்ப்பட்டும் மக்களுக்கு அக்கறை இல்லை எனில் ஒரு நன்மையும் விளையாது. யாரும் அவர்களை எதிர்க்கவில்லை, நேசிக்கவும் இல்லை என்றால் மன மாற்றம் ஏற்பட வாய்ப்பும் இல்லை. மக்கள் ஞானியரைப் பார்த்து, "உங்கள் விருப்பப்படி இருங்கள்; உங்கள் மனம் கூறுகின்றபடி வாழுங்கள்; எங்களுக்கு ஆட்சேபம் இல்லை. உங்களை எதிர்க்கவும் இல்லை, தாங்கவும் இல்லை," என்று கூறினால் — புத்தரைப் போன்ற மகான் ஒருவர் வந்து உலகில் தடம் பதிக்க முடியாமல் போனால் — அது உலகிற்குக் கெட்ட காலம்தான். புத்தத் தன்மையில்கூட மக்களுக்கு ஆர்வமில்லாமல் போனதால்தான் எதிர்ப்புக் காட்டவில்லை என்று பொருள் கொள்ள நேரிடும். எதிர்ப்போ, விரோதமோ தப்பில்லை. அதனுள் அன்பு நுணுக்கமாக மறைந்திருக்கிறது.

**ஹ**ஸீது என்பவர் புரட்சிக்கார ஞானி. அவர் புரட்சிகரமான ஒரு நூல் எழுதினார். அதைத் தன் மனைவியின் மூலம் யூதர்களின் தலைமை குருவிற்கு அனுப்பினார். "அந்த குரு இந்நூலைப் பார்த்து எப்படி நடந்து கொள்கிறார் என்பதை மட்டும் கவனித்து என்னிடம் வந்து சொல். அங்கு எதுவும் தகராறு செய்யாதே" என்று சொல்லி அனுப்பினார்.

தலைமை குருவிடம் அவள் நூலைச் சேர்த்ததும் அவர் யார் ஆசிரியர் என்று புரட்டிப் பார்த்தார். நூலாசிரியர் ஹஸீது என்று தெரிந்ததும் கையில் தணல் வைக்கப்பட்டதுபோல் துடிதுடித்துக் கடுங்கோபம் கொண்டார். புத்தகத்தை வீட்டிற்கு வெளியே வீசி எறிந்தார். "இதைத் தொட்டதால் என் கை தீட்டாகி விட்டது. நான் உடனே குளிக்க வேண்டும்," என்று நெற்றியில் தட்டிக் கொண்டார்.

அருகில் அவருக்கு அடுத்த குரு இருந்தார். அவர் சொன்னார், "அந்த ஹஸீது சாமியார் புரட்சிக்காரர் என்பது தெரிந்த விஷயம்தான். ஆனால் அவர் அன்பளிப்பாக நூலை அனுப்பியிருக்கிறார். நீங்கள்

சிறிது நேரம் பொறுத்திருந்தபின் நூலைத் தூக்கிப் போட்டிருக்கலாம். குறைந்தபட்சம், அந்தப் பெண்மணி போனபிறகு அவ்வாறு செய்திருக்கலாம். ஏன் இவ்வளவு அவசரப்பட்டீர்கள்? உங்கள் வீட்டில் ஏராளமான புத்தகங்கள் உள்ளன; பெரிய நூலகம் உள்ளது. இந்த நூலும் அதில் கிடந்தால் என்ன கெடுதல்?"

மனைவி வீடு திரும்பியதும் ஞானி ஹஸீது என்ன நடந்ததென விசாரித்தார். அவள் விவரித்தாள்: "தலைமை குரு நூலைச் சட்டென்று வெளியே எறிந்து விட்டார். என்னைத் தாக்குவார்போல் ஆத்திர மடைந்தார். அவர் கையில் நான் நெருப்பைத் துண்டை வைத்தது போல் துடித்தார். பக்கத்திலிருந்த குரு சொன்னார். – நீங்கள் அப்படிச் செய்திருக்கக் கூடாது. அந்தப் பெண்மணி போனபிறகு தூக்கிப் போட்டிருக்கலாம். உங்கள் வீட்டில் புத்தகங்கள் கொட்டிக் கிடக்கும்போது இதையும் வைத்துக் கொண்டால்தான் என்ன? எதிரி மதங்களின் நூல்கள்கூட உங்களிடம் உள்ளன. என்ன இருந்தாலும், புரட்சியாளராக இருந்தபோதிலும், இந்த ஹஸீது நம்மைப்போல் யூதர்தானே. இந்த நூலும் உங்கள் நூலகத்தில் கிடந்துவிட்டுப் போகட்டுமே. அதனாலென்ன கெடுதல் வந்துவிடும்?"

ஹஸீது கருத்துச் சொன்னார்: "புத்தகத்தை தூர எறிந்தவனை என்றாவது ஒருநாள் நம் வழிக்கு மாற்றிவிட முடியும். அதை ஆட்சேபித்த இரண்டாவது குருவுடன் நமக்கு சம்பந்தம் ஏற்பட வாய்ப்பில்லை.

"புத்தகத்தை எறிந்தவருடன் நமக்கு உணர்ச்சி வகையிலான தொடர்பு ஏற்பட்டு விட்டது. அவருக்கு வந்த ஆவேசம் நம்மை அவருடன் இணைக்கிறது. அவர் ஏதோ செய்தார். ஓர் அலை எழுந்தது. ஆனால், 'புத்தகத்தை வைத்துக்கொள். நூலகத்தில் ஒரு மூலையில் கிடந்துவிட்டுப் போகட்டும்,' என்று அமைதியாகச் சொன்னவர் நம்மை அலட்சியப்படுத்துகிறார் என்று பொருள். அவருடன் எக்காலத்திலும் நட்பு ஏற்பட முடியாது. முதல் தர்மகுருவைக்கூட நம் வழிக்குக் கொண்டு வரலாம். இரண்டாவது குரு நம்மைப் பொருட்படுத்தவே இல்லையே."

இந்த விளக்கம் கேட்டு மனைவி திகைத்துப் போனாள். அவள் முதல் குருவைக் கெட்டவர் என்றும், இரண்டாமவரை நல்லவர் என்றும்

முடிவு கட்டியிருந்தாள். ஆனால் கணவரோ வரிசையை மாற்றிச் சொல்கிறார்! ஹஸீது தொடர்ந்தார்: "தூக்கி எறிந்த முதல் குரு பிறகு நூலை எடுத்துப் படிப்பார் என்று உறுதியாகக் கூறுகிறேன். ஆவேசத் துடன் அவர் எறிந்ததால் அவரால் அதை எடுத்துப் படிக்காமல் இருக்க முடியாது. இல்லாவிடில் அந்த ஆவேசம் எப்படித் தணியும்? அவருக்கு ரகசியமான ஆர்வம், குறுகுறுப்பு ஏற்பட்டிருக்கும். நான் அவருடைய மன உலகில் பின்தொடர்வேன். இரவில் அவரது கனவில் தென்படுவேன். தலைமாட்டில் அருவமாகச் சுற்றுவேன் (அதாவது, அவர் என்னைப் பற்றியே யோசிப்பார்). 'தூக்கி எறிந்தோம், சரி. ஆனால் அந்த நூலில் என்னதான் எழுதியிருக்கிறது என்று ஒருமுறை பார்த்துவிட்டால் என்ன?' என்ன என்று அவர் நினைப்பார்.

"யாரெல்லாம் என்னை எதிர்க்கிறார்களோ அவர்கள் நிச்சயமாக என் நூலைப் படிப்பார்கள். ஏனெனில் ஏதோ ஒருவகையில் அவர்களுடன் எனக்குத் தொடர்பு ஏற்பட்டு விட்டது. அவர்கள் என்னை இதயத்தால் நெருங்கி விட்டார்கள். கொஞ்சம் — கொஞ்சமாக அவர்களை என் பக்கம் இழுத்து விடுவேன்.எதிர்க்காதவர்களை, அலட்சியம் செய்பவர்களை அணுகக்கூட முடியாது. அவர்களின் இதயக் கதவுவரை என்னால் சென்றடைய முடியாது. அக்கதவு மூடப்பட்டிருக்கிறது.

இது இயற்கையானதுதான். புரட்சியைப் பற்றி பேசப்பேச மக்களின் ஆதரவு கிடைப்பது சிரமம்தான். மக்கள் பரம்பரைச் சிந்தனையின் அடிப்படையில் வாழ்கிறார்கள். ஏனெனில் பரம்பரை வழிதான் வசதியானது, பாதுகாப்பானது என்று மக்கள் உணர்கிறார்கள். துணிச்சல் பேர்வழிகள்தான் மாறுதலை வரவேற்பவர்கள்; மாறுதலுக்கு அஞ்சாதவர்கள். பெரும்பான்மையோரிடம் அவ்வளவு தைரியம் கிடையாதாகையால் மாறுதலை எதிர்க்காமல் என்ன செய்வார்கள்? அவர்களின் எதிர்ப்பைப் புரிந்து கொள்ள வேண்டும். எதிர்ப்பவன் தன்னிடம் போதுமான அளவு துணிச்சல் இல்லை என்பதைத் தெரிவிக்கிறான். அல்லது ஞானி சொல்லும் விஷயம் தவறு; அவர் காட்டும் வழியில் போக வேண்டியதில்லை என்கிறான். இங்கே அஹங்காரம் பேசுகிறது. ஞானி சொல்லும் பாதை சரியாயினும், அதில் செல்ல முடியாதபடி தான் கோழையாக இருப்பதை ஒப்புக் கொள்வதையும் அஹங்காரம் தடுக்கிறது.

ஆனால் நான் வேண்டுமா அல்லது அஹங்காரத்தை வைத்துக் கொள்வதா என்னும் பிரச்சினை ஒருவனுக்கு ஏற்பட்டால் என்றாவது ஒருநாள் அவன் என் பக்கம்தான் வர நேரிடும். ஏனெனில் அஹங்காரம் நரக வேதனை ஒன்றையே தருகிறது.

**இரண்டாவது கேள்வி:**

**ஒருமுறை நீங்கள் எல்லோரிடமிருந்தும் ஆன்மிக ஆலோசனை (உபதேசம்) பெற வேண்டும்; ஆனால் கட்டளையை ஆத்மாவிட மிருந்து, விவேகத்திடமிருந்து, பெற வேண்டும் என்றீர்கள். ஆனால் ஒரு சிக்கல் உள்ளது. விவேகம் போதாவிடில், உள்ளேயிருந்து வரும் கட்டளைக் குரல் விவேகத்தால் எழுகிறதா அல்லது மனத்தின் திருவிளையாடலா என்பதை எப்படி அறிவது?**

**உ**ன் கேள்வி நியாயமானது. ஆம். அறிவுரை எல்லோரிட மிருந்தும் பெற்றுக் கொள்ளவும். ஆனால் கட்டளை உன்னிடமிருந்தே பெறு. அந்தக் கட்டளை பற்றிய உன் சந்தேகம் நியாயமானது. ஒரு கட்டளையைக் கேட்டு நாம் என்ன செய்கிறோமோ, அது சரியென்று கருதி எவ்வழியில் செல்கிறோமோ, எந்த திசையைத் தேர்ந்தெடுக் கிறோமோ அது ஆத்மாவிலிருந்து எழுகிறது எப்படி நம்புவது என்று கேட்கிறாய்.

என் பதில் 'துணிந்து நடைபோடு' என்பதுதான். மேற்கொண்டு நடந்தால்தான் தெரியும். நீ எப்பொழுதும் சரியாக நடைபோடுவாய் என்று நான் கூறவில்லை. பலமுறை வழி தவறுவாய், தடுமாறுவாய். அப்போதுதான் எது சரி, எது தவறு என்று உனக்குத் தெரியவரும். பலமுறை தடுக்கிவிழுவாய். அப்போதுதான் விழாமல் எப்படி நடப்பது என்பதைக் கற்பாய்.

குழந்தை நடக்க ஆரம்பிக்கிறது. அது விழவே கூடாது என்பதற்காக உபாயம் தேடினால், ஒருநாளும் அது நடக்கக் கற்றுக் கொள்ளாது. எப்பொழுதும் தாயாரின் மடியிலேயே கிடக்கும். தாயார் அதை நடக்கத் தூண்டுகிறாள். நடுவில் கொஞ்சம் விழுந்தாலும் பயப்படாமல் நடக்கச் சொல்கிறாள். குழந்தை தடுக்கி விழும் என்று

அவளுக்குத் தெரியும். ஆனால் கீழே விழாமல் நடக்கக் கற்றுக் கொள்வதற்கு வேறு உபாயம் இல்லை.

நீ சைக்கிள் ஓட்டுவது சம்பந்தமான புத்தகம் படிக்கிறாய். அதில் எல்லா விவரமும் சொல்லப்பட்டுள்ளது. 'பாலன்ஸ்' செய்வது, பெடல் அழுத்துவது, ஹேண்டில் பாரைப் பிடித்துக் கொள்ளும் விதம் ஆகிய விவரம் தரப்பட்டுள்ளது. இந்நூலைப் படிப்பதால் மட்டும் ஒரு பயனும் இல்லை. புத்தகத்தில் சைக்கிளின் பாகங்களைப் படமாகப் பார்ப்பதற்குப் பதிலாக நிஜமான சைக்கிளில் ஓட்டிப் பழக வேண்டும். ஆரம்பத்தில் சில முறை விழுவாய்; காயம் ஏற்பட்டுக் கட்டுப்போட நேரிடும்; சிராய்ப்பு ஏற்பட்டுத் தோல் உரியும். இப்படி விழுந்தால்தான் 'பாலன்ஸ்' என்பது புரியவரும். புத்தகத்தைப் படித்து இதைத் தெரிந்து கொள்ள முடியாது.

இரண்டே சக்கரம் கொண்ட சைக்கிள் விழாமல் ஓடுவது அதிசயம். அது சாதாரணமாக விழுவதுதான் இயற்கை. எனினும் ஆரம்பத்தில் சில முறை விழுந்து சைக்கிளின் சூட்சுமத்தைப் புரிந்து கொள்கிறாய். அந்தத் திறமையை நீண்ட காலமாக சைக்கிள் ஓட்டுபவனும் உனக்கு எடுத்துத் தரமுடியாது. நீ சில முறை விழுந்துதான் அத்திறமையைப் பெற முடியும்.

சைக்கிள் ஓட்டிகள் பலரிடம் சைக்கிள் ஓட்டும் கலை பற்றி விசாரித்துப் பார். இந்தக் கேள்வி ஞானம் மூலம் உனக்கு சைக்கிள் ஓட்ட வந்துவிடாது. நீதான் சைக்கிளில் ஏற வேண்டும். ஒருமுறை கூட நீ விழமாட்டாய் என்று உத்தரவாதம் தரமுடியாது. ஆனால் சில முறை விழுந்த பிறகு சரியாக ஓட்டுவாய் என்று உறுதி கூறுகிறேன். சில சமயம் வழி தவறி விடுவாய். நீ சுயமாக வழிமாற்றிப் போனால் திரும்பி வந்துவிடுவாய். இன்னொருவர் சொல்லி வழி தவறினால் திரும்பமாட்டாய். இன்னொருவரைப் பின்பற்றிச் சென்றால் நீ சரியான வழியில் செல்கிறாயா அல்லது வழி தவறிவிட்டாயா என்பதுகூட உனக்குத் தெரியாமல் போய்விடும்.

நீ சைக்கிள் ஓட்டுபவரின் பின்னாலுள்ள இருக்கையில் உட்கார்ந்திருந்தால் நீ 'பாலன்ஸ்' பற்றி அறிய முடியாது. நீயும் சைக்கிளில் இருந்தாலும் சரிசமநிலையைக் கற்க முடியாது. பல பிறவிகளுக்கு நீ பின்னிருக்கையில் இருந்தாலும் பயணம் செய்ய

முடியுமே தவிர, சரிசமநிலையைக் கற்க முடியாது. ஆனால் சமநிலைதான் முக்கியமான விஷயம்.

நீ ஒருவரைப் பின்பற்றிச் செல்கிறாய். ஏனெனில் உனக்கு ஒரு பயம் உள்ளது. சுயமாகப் போனால் வழி தவறிவிடும் என்றும், ஏற்கெனவே அவ்வழியில் செல்பவனைப் பின்தொடர்வது பாதுகாப்பு என்றும் நினைக்கிறாய். ஆனால் முன்னால் செல்பவனும் உன்னைப் போலவே அறிவு குறைந்தவனாக இருந்தால் என்ன செய்வது? அவன் இன்னொருவர் பின்னால் சென்று கொண்டிருப்பான். இப்படி ஒருவர் பின்னால் ஒருவராகப் பெரும்பான்மையோர் செல்கின்றனர். முதல் இடத்தில் இருப்பவன் யாரோ இறந்தவரின் வழியில் சென்று கொண்டிருப்பான். இறந்தவர் அவருக்கு முன்னால் இறந்தவரைப் பின்பற்றிச் செல்வார். இப்படி இறந்தவர்களின் வரிசை ஒன்றும் உருவாகிறது. இப்படிச் செல்பவர்கள் எந்த இடத்தில் என்ன தவறு நிகழ்ந்தது என்பதை அறிய முடிவதில்லை. ஆரம்பக் கட்டத்தில் என்ன நடந்தது என்பதைப் பின்னால் நிற்பவர்கள் அறியமாட்டார்கள்.

அஷ்டாவக்ரரைப் பின்பற்றி ஜனகர் சென்றார். ஜனகரைப் பின் தொடர்ந்தனர் சிலர். கடந்த ஐயாயிரம் ஆண்டுகளில் இப்படிப் பின்பற்றுவோரின் நீண்ட வரிசை உண்டாகி விட்டதால் எந்த இடத்தில் என்ன தவறு ஏற்பட்டிருக்கும் என்று யாராலும் ஊகிக்க முடியாது. முதல் ஆளான அஷ்டாவக்ரருக்கே இடறிவிட்டிருந்தாலும் பின்னால் வந்தவர்களுக்குத் தெரியாது. ஏனெனில் எல்லோரும் ஆட்டுமந்தை போல் முன்னால் செல்லும் ஆட்டை மட்டும் வழிகாட்டியாகக் கொண்டு நடைபோடுகிறார்கள். இவ்வாறே முன்னேறி அஷ்டா வக்ரருக்கு இடறிய இடத்தில் உனக்கும் இடறும்போதுதான் எங்கே, என்ன தவறு என்பது உனக்குத் தெரியவரும். ஆனால் இனி ஒன்றும் செய்ய முடியாதபடி காலதாமதம் ஆகியிருக்கும்.

ஆகவே மறந்தும் இன்னொருவரைப் பின்பற்றாதே. கேள், அறி, புரிந்துகொள். ஆனால் பொறுப்பை உன் கையிலேயே வைத்திரு. இதனாலென்ன லாபம் எனில் நீ எந்த வரிசையிலும் (க்யூ'விலும்) நிற்க வேண்டியிராது. நீ இடறி விழுந்தால் உடனே உனக்குக் காரணம் தெரிந்துவிடும். அடுத்த முறை அதே காரணத்தால் விழுந்துவிடக் கூடாது என்பதைப் புரிந்துகொள்வாய். சிலமுறை விழுந்து நீ சைக்கிள் ஓட்டும் கலையைக் கற்றுக் கொள்கிறாய். ஆம், அது கலைதான்,

விஞ்ஞானமில்லை. விஞ்ஞானமாயிருந்தால் அதை ஒருவன் இன்னொருவனுக்கு எடுத்துத் தரமுடியும். கலையை அவ்வாறு யாரும் தரமுடியாது. அனுபவத்தால் கலையைக் கற்க நேரிடுகிறது.

நீ கேட்டாயே—உள்ளேயிருந்து வரும் குரல் விவேகத்தின் விளைவா அல்லது மனத்தின் திருவிளையாடலா என்பதை எப்படி அறிவது என்றொரு கேள்வி. ஆம், அதைக் கண்டுபிடிக்க உபாயம் இல்லைதான். அனுபவத்தின் மூலமாகத்தான் நீ கொஞ்சம் — கொஞ்சமாகத் தெரிந்து கொள்வாய். மனத்தின் விளையாட்டாக இருந்தால் நீ கஷ்டத்தில் மாட்டிக் கொள்வாய். உள்ளேயிருந்து, ஆத்மாவிலிருந்து குரல் கிளம்பினால் ஆனந்தமாக உணர்வாய். சச்சிதானந்தம் என்னும் இதுதான் குரல் தோன்றும் இடத்தைக் கண்டுபிடிக்கும் ஆதாரம். குரலைக் கேட்டு ஒரு காரியத்தைத் தொடங்கிய பிறகு தான் நாம் துன்பமாக உணர்கிறோமா, ஆனந்திக்கிறோமா, சத்தியத்தை நோக்கி முன்னேறுகிறோமா, பொய்மையை நோக்கிப் பயணிக்கிறோமா என்பதை வைத்துக் குரல் தோன்றிய இடத்தை உணரலாம்.

நரகத்தில் துன்பம் நிறைந்துள்ளதாக நீ படித்தும் கேட்டு மிருக்கிறாய். இதைச் சிறிது மாற்றித் துன்பத்தில் நரகம் இருப்பதாகக் கூறலாம். ஆகவே எங்கெல்லாம் துக்கம் விளைகிறதோ அது நரகத்தின் பாதை என்று நீ புரிந்துகொள். எங்கெல்லாம் சுகமாக உள்ளதோ, சமாதி உணர்வு போல் தோன்றுகிறதோ, மென்மையான அலை எழும்புகிறதோ, பாடல் பிறக்கிறதோ, மனத்தில் வானவில் உதிக்கிறதோ, நறுமணம் பரவுகிறதோ, இசைமயமாக உள்ளதோ, அந்நிலையில் நீ சுவர்க்கத்தை நோக்கி முன்னேறுகிறாய் என்பதைப் புரிந்துகொள்.

நடந்து—நடந்து, விழுந்து—எழுந்து மனிதன் எதையும் கற்கிறான். ஆனால் ஒரு தப்பு மட்டும் செய்துவிடாதே. அது என்ன? ஏதாவது தவறு நேர்ந்து விடுமோ என்று அஞ்சிச் சும்மா உட்கார்ந்திருக்காதே. தவறு ஏற்படத்தான் செய்யும். ஆனால் ஒரே தவறை இரண்டாம் முறையாகச் செய்யக்கூடாது என்பது முக்கியம். அதிலிருந்தும் பாடம் கற்க வேண்டும். ஒரு தவறு நேர்ந்துவிட்டால் அது தெரிந்து வருத்தத்தில் ஆழ்ந்துவிடாதே. அதை ஓர் அனுபவமாக, லாபமான பாடமாக எடுத்துக் கொள். அந்தத் தவறு மறுபடியும் செய்ய மாட்டேன்

என்று முடிச்சுப் போட்டு வைத்துக்கொள். பிறகு நாளடைவில் தவறு ஏற்படுவது குறைந்துவிடும். ஒரு கட்டத்தில் உன்னிடம் தவறே இருக்காது. உன் வாழ்க்கையில் அப்போது விவேகம் உதயமாகி இருக்கும்.

நீ சந்தேகம் கேட்டாய் — இன்னொருவரிடமிருந்து நாம் உபதேசம் பெறாவிடில் எது சரி— எது தவறு என்று நமக்கு எப்படி உறுதியாகத் தெரியும்? மனத்தின் சேட்டையா அல்லது விவேகத்தின் குரலா என்று எப்படித் தெரிந்து கொள்வது? என்று. என் பதில் என்னவெனில், நீ உபதேசம் கேட்கும் அந்த இன்னொருவரை அங்கீகரிக்கலாமா, வேண்டாமா என்பதை விவேகம் தோன்றாமல் நீ எப்படி நிச்சயிக்க முடியும்?

ஆயிரக்கணக்கில் அறிஞர்கள், சாஸ்திரங்கள், சமயநெறிகள், சித்தாந்தங்கள் பரவியுள்ள, ஒன்றிலிருந்து மற்றொன்று வேறுபடுகின்ற சூழ்நிலையில், நீ எதைத் தேர்ந்தெடுப்பாய்? உதாரணமாக, மகாவீரரையா, கிருஷ்ணனையா? எப்படித் தேர்ந்தெடுப்பாய்? மகாவீரர் சொல்கிறார் — உன் மூலம் ஓர் எறும்புகூட சாகக்கூடாது. நீ எறும்பை நசுக்கினால் நரகத்தில் கிடந்து அழுகுவாய். ஆனால் கிருஷ்ணன் என்ன சொல்கிறார் — கவலையேபடாதே. எல்லாம் பகவானின் லீலை. நீ தயங்காமல் கொல். ஆனால் கொல்பவன் நீ இல்லை. ஆத்மாவை ஒருபொழுதும் கொல்ல முடியாது. உடல்தான் பிறக்கிறது. இறந்து விழுகிறது. கத்தி வீசினாலும் ஆத்மாவை வெட்ட முடியாது. எல்லாம் விளையாட்டே.

நீ யார் உபதேசத்தை ஏற்பாய்? அதை எப்படி முடிவு செய்வாய்? இந்த இரண்டு உலக குருக்களில் யார் சொல்வது சரியானது? பாமர ஜனங்கள் அதற்கு ஒரு சுலபமான வழி கண்டு பிடித்துள்ளார்கள். எந்தக் குடும்பத்தில் பிறப்பு நிகழ்ந்தது என்பதுதான் அந்த வழி. ஜைன குடும்பத்தில் பிறந்திருந்தால் மகாவீரரை ஏற்றுக்கொள்ள வேண்டும். இந்து குடும்பமெனில் கிருஷ்ணரை ஏற்க வேண்டும். இதெல்லாம் ஒரு வழியா? முடிவு குடும்பத்தின் பின்னணியில் இல்லை. உன் கையில்தான் உள்ளது.

நீ குருவைத் தேர்ந்தெடுக்கையில் அதற்கான கட்டளை ஆத்மாவிலிருந்து எழுந்ததா அல்லது மனத்திலிருந்தா என்பதை

எப்படி முடிவு செய்கிறாய்? நீ பதில் சொல்வதிலிருந்து நழுவ முடியாது. இது நீ எடுத்த முடிவாகத்தான் இருக்கும். நீ என்னை குருவாகத் தேர்ந்தெடுத்தால் அதன் அடிப்படை என்ன? 'இவர் பேச்சில் சிக்கிக் கொண்டோம்; இவரிடம் மயங்கி விட்டோம்; இவரது பேச்சு இன்பமாக இருந்தது; தர்க்கப்படி பேசுகிறார்,' என்பதாலா? அல்லது இவர் ஞான விழிப்புப் பெற்றவர் என்பதாலா? எப்படி முடிவு செய்வாய்? அதற்கு என்ன உபாயம்? என்ன உரைகல்? நீதானே எல்லாவற்றையும் நிச்சயிக்கிறாய்.

இதிலிருந்து ஒரு விஷயம் தெளிவுபடுகிறது. எதையும் நிச்சயிக்கும் ஆற்றலை பரமாத்மா ஒவ்வொருவருக்கும் கொடுத்திருக் கிறார். ஆகவே முடிவு செய்வதை இன்னொருவர் மீது தள்ளிவிட முடியாது. நீதான் எதையும் நிர்ணயிப்பவன்.

என் சொற்பொழிவைக் கேள். என் கருத்துகளைப் புரிந்துகொள். இதயபூர்வமாக, முழுமையாகப் புரிந்துகொள். ஆனால் கடைசியில் முடிவு நீதான் எடுக்க வேண்டும். 'இவர் சொல்வது சரியா, தப்பா? இவரது பேச்சின்படியே செல்வதா? வேண்டாமா?' என்று நீ தடுமாறலாம். நீ என்ன வேண்டுமானாலும் செய்; யார் பின்னால் வேண்டுமானாலும் செல் அல்லது போகாதிரு. உன் விருப்பப்படி உன் காலால் செல் அல்லது இன்னொருவர் தோளில் ஏறிச் செல். நீதான் நிர்ணயிப்பவன். பொறுப்பு உன்னுடையதுதான்.

ஆனால் நீ என்னைப் பின்பற்றி நடந்து பள்ளத்தில் விழுந்துவிட்டால் நீ' என் கழுத்தையல்லவா நெரிப்பாய்? 'என்னை இப்படிப் பள்ளத்தில் தள்ளிவிட்டீர்களே' என்று புகார் கூறுவாய். ஆகவேதான் என் பின்னால் வருவதில் அர்த்தமில்லை என்று முன்கூட்டியே கூறுகிறேன். பள்ளத்தில் நீதானே விழப்போகிறாய். நான் மேற்புறம் நின்று உன்னைப் பார்த்துச் சிரிப்பேன். நான் சொல்லியும், நீ அதைக் கேட்டும், நீதானே என் பின்னால் வந்தாய்? நான் உன்னைக் கட்டாயப்படுத்த வில்லையே. என்னை உன் மீது சுமத்தவில்லையே. ஆகவே நான் உன்னைத் தள்ளிவிடவில்லை. நீயே போய் பள்ளத்தில் விழுந்தாய்.

ஆனால் மனிதன் பொறுப்பேற்பதிலிருந்து நழுவவே விரும்புகிறான். அவன் பொறுப்பை இன்னொருவர் தோளிலேயே

சுமத்த விரும்புகிறான். அப்போதுதானே உலக நீதிமன்றத்திலும், கடவுளின் நீதிமன்றத்திலும் அவன் 'நான் குற்றமற்றவன். என் காவி உடையை இந்த சாமியார்தான் உடுத்திவிட்டார்' என்று கூறமுடியும். ஆனால் கடவுள் காவி உடையை ஆதரிப்பார் என்று எப்படி நிச்சயமாகக் கூறமுடியும்? புத்தர் மஞ்சள் ஆடைகளைத் தேர்ந்தெடுத்தார். பார்ஸ்வநாதர் வெள்ளை ஆடைகளை ஆதரித்தார். மகாவீரர் ஒரு சமயம் திகம்பரராக (ஆடைகளற்றவராக) இருந்தார். கடவுள் எந்த நிறத்தை ஆதரிக்கிறார்? நிர்வாணத்தை ஆதரிக்கிறாரா? கடவுள் நேரில் வந்து சொன்னால்தான் தெரியும். அவருக்கு மற்ற நிறமே பிடிக்கும் எனில் நீ அவரிடம் "இந்த சாமியார்தான் காவி ஆடை அணியச் சொன்னார்" என்று கூறித் தப்பிக்க முடியுமா?

முடியாது. நீதான் சுயமாகப் பதில் கூற வேண்டும். நீதான் தேர்ந்தெடுக்கிறாய். நீ என்னிடம் சமர்ப்பணம் ஆக வேண்டும் என்பதைத் தேர்ந்தெடுத்தால், அதுவும் உன் முடிவுதான். அது நீ விரும்பியதுதான். இவ்வாறு நீதான் நிச்சயிப்பவன், நீதான் பொறுப்பாளி என்பதை எப்பொழுதும் நினைவில் வை. என்ன பலன் கிடைத்தாலும், என்ன நிகழ்ந்தாலும் அந்தப் பெருமையெல்லாம் உனக்குத்தான். இவ்வாறு கருதிச் செயல்படும் மனிதன் சத்தியத்தைத் தேடுபவனாக இருப்பான்.

ஆபத்தான முயற்சிதான். ஆனால் வாழ்க்கையே ஆபத்து நிறைந்ததுதான். ஒருவன் எந்தளவிற்குத் துணிந்து ஆபத்தை எதிர்க்கிறானோ, அந்த அளவு சத்தியத்தை அறிவதில் வெற்றி யடைகிறான். ஆபத்தை எதிர்க்கத் துணவில்லாதவர்கள் மண் பொம்மைகள். அவர்களது வாழ்க்கையில் பிரவாகம், இயக்கம் துடிப்பு, பிரகாசம், மேதைமை ஆகிய எதுவும் கிடையாது.

நீ அங்குமிங்கும் சென்றால் இத்தகைய மண்பொம்மைகள் ஆசிரமங்கள் அமைத்து வசிப்பதைப் பார்க்கலாம்; கோயில்களில் அமர்ந்திருப்பதைக் காணலாம். மணியடிக்கிறார்கள், பூஜை செய்கிறார்கள், விரதம் இருக்கிறார்கள் – இந்த மண்பொம்மைகள். அவர்களின் கண்களில் ஒளி, தீட்சண்யம் இருக்காது. சத்தியத்தைத் தேடிப் பெறுவதற்கான விசேஷ சக்தி தென்படாது. அவர்கள் நடமாடும் பிணம்போல் உனக்குத் தோன்றுவார்கள்.

நீயும் அவ்வாறு ஆகிவிடக்கூடாது என்று நான் எச்சரிக்கிறேன். நீ உன் தனித்தன்மையைக் காப்பாற்றிக்கொள். அதற்கு மெருகேற்று. எவ்வளவு சிரமங்கள் ஏற்பட்டாலும் உன் தனித்தன்மையை, நிஜத்தன்மையை இழக்காதே. அந்த நிஜத்தன்மைதான் உனது ஆத்மா. அந்த ஆத்மாவில்தான் சத்தியம் மறைந்திருக்கிறது.

**சீ**டர் ஆனந்தரிடம் புத்தர் கடைசியாகச் சொன்னது 'அப்ப தீவோ பவ!' — நீயே உனக்கு விளக்காக இரு. புத்தரின் உயிர் பிரியும் நேரம் வந்துவிட்டதை உணர்ந்து ஆனந்தர் அழுதார். அவர் பயந்துவிட்டார். சுமார் நாற்பத்து இரண்டு ஆண்டுகளாக அவர் புத்தரைப் பின்பற்றியிருக்கிறார். தனது வாழ்க்கை முழுவதையும் இதற்கே அர்ப்பணித்தார். புத்தரின் முதுகையே கவனித்தவர்போல் பின்பற்றியுள்ளார். புத்தர் எழுந்தால் தானும் எழுந்து, அவர் உட்கார்ந்தால் தானும் உட்கார்ந்திருக்கிறார். இன்றோ புத்தர் உலகை விட்டுக் கிளம்புகிறாரே. ஆனந்தர் அழத் தொடங்கினார். அது இயற்கைதான்.

ஆனந்தர் சொன்னார், "நான் இன்னும் பூரண ஞானம் பெறவில்லை. அதற்குள் நீங்கள் புறப்படும் நேரம் வந்துவிட்டதே." புத்தர் இதற்குப் பதிலளித்தார்: "நான் உன்னை ஞானத்தில் கொண்டுபோய் விடுவேன் என்று ஒருபொழுதும் சொன்னதில்லை. நீயே உனக்கு விளக்காக மாறு. ஒரு விதத்தில் என்னால்தான் நீ ஞானம் அடைவதில் தடையும் தாமதமும் ஏற்படுகிறது. நான் கிளம்பிவிட்டால் அந்தத் தடை நீடிக்காது. இனி உனக்கு முன்னால் எந்த முதுகும் இருக்காது. உன் எதிரே திறந்த வானம் இருக்கும்."

ஆச்சரியம் என்னவெனில் அடுத்த இருபத்து நான்கு மணி நேரம் கழிந்ததும் ஆனந்தருக்கு ஞானம் கிடைத்துவிட்டது. நாற்பத்து இரண்டு ஆண்டுகளாகக் கிடைக்காதது ஒரே நாளில் கிடைத்து விட்டது. இந்த நிகழ்ச்சி ஆனந்தரின் உள்ளத்தை அம்புபோல் ஊடுரு வியது. புத்தர் சொன்னதன் அர்த்தம் புரிந்தது. 'இனி நான் தனியாகத் தான் ஞானத்திற்கு முயல வேண்டும்' என நினைத்ததும் வழிபிறந்தது.

நாம் எப்பொழுதுமே தனிமையில்தான் உள்ளோம். இன்னொருவர் பின்னால் சென்றாலும் தனிமை நீடிக்கிறது. இந்தத் தனிமை உணர்வை நீ முதலிலேயே ஞாபகம் வைத்துக்கொள்.

புத்தர் கடைசியில் சொன்னார்: "ஆனந்தா, நீயே உனக்கு விளக்காக மாறு" என்று ஆரம்பத்திலிருந்தே நான் சொல்லி வருகிறேன். நான் மறைந்து இருபத்து நான்கு மணி நேரத்தில் உனக்கு ஞானம் கிடைத்து விடும் என்று கட்டாயமில்லை. நான் உயிருடன் இருக்கையிலேயேகூட, இருபத்து நான்கு நொடிகளில்கூட உனக்கு ஞானம் கிடைக்கலாம். ஞானம் கிடைத்து விட்டது என்பதன் அர்த்தம் – 'இந்த வாழ்க்கை என்னுடையது. நான்தான் இதற்கு முழுப் பொறுப்பு. என் வாழ்வில் நிகழும் தவறுகளுக்கும் குறைபாடுகளுக்கும் நானே காரணம். இந்த உடலென்னும் சொத்துக்கு நானே உரிமையாளன், தலைவன்' என்று உணர்வதாகும். இதனால்தான் சந்நியாசிகளை ஸ்வாமி (தலைவன்) என்கிறோம். உன் சொத்து உன் கையில். அதன் தலைவன் (சுவாமி) நீயே. உனக்கு வேறு சுவாமி கிடையாது.

'நீயே உனக்கு சுவாமி' என்ற அறிவிப்புடன் சத்தியத்தை நோக்கிய பயணம் தொடங்குகிறது. விளைவாக, நீ சேரிடத்தை, உன் இல்லத்தைச் சென்றடைவாய். உயிரோட்டமுள்ள சத்தியம் உனக்குள் பிறக்கும். வெளியிலிருந்து நீ கொண்டுவந்த அறிவெல்லாம் குப்பைகூளம்தான். வேறு யாரோ வைத்திருந்த குப்பையை நீ வாங்கிக் கொண்டு வந்துள்ளாய். எல்லாம் கடன் வாங்கிய அறிவு, ஊசிப் போனது, வீணானது. அதை நெருப்பில் போடு.

உனது சத்தியம் என்பது உனக்குள்ளே பிறக்கும். உனது சத்தியத்தின் பிறப்பிற்கான பிரசவ வேதனையை நீதான் அனுபவிக்க வேண்டும். ஏனெனில் நீதான் சத்தியத்தை உன் கர்ப்பத்தில் தாங்குகிறாய்.

உலக வாழ்க்கையில் ஒரு பெண்ணிற்குக் குழந்தை பிறக்காவிடில் அவள் இன்னொருத்தியின் குழந்தையைத் தத்தெடுத்துக் கொள்கிறாள். ஆனால் நீ பிறரது சத்தியத்தைத் தத்தெடுத்துக் கொள்ளாதே. அது உடனே பொய்யாகி விடும். அப்படித் தத்தெடுத்துக் கொண்டதால்தான் சிலர் இந்துக்கள், சிலர் கிறிஸ்தவர்கள், சிலர் இஸ்லாமியர்கள் என்று ஆகியுள்ளனர். இதெல்லாம் சத்தியத்தைக் கடன் வாங்கியதன் விளைவு.

குருநானக்கின் சத்தியத்தைக் கடன் வாங்கி நீ சீக்கியன் ஆகிவிட்டாய். ஆனால் அது உன் சத்தியமன்று. நானக் சத்தியத்தைத் தேடித் துன்பம் அனுபவித்தார். அதை கர்ப்பம்போல் பேணினார். பிறகு

தனது சத்தியத்தைப் பிறப்பித்தார். நீ அதை இலவசமாக எடுத்துக் கொண்டுள்ளாய். அதைப் பெற நீ எந்த முயற்சியும் செய்யவில்லை. நெருப்பில் இறங்கவில்லை, அலைந்து திரியவில்லை, உயரத்திலிருந்து விழவில்லை. துன்பம் மெருகேற்றுகிறது. இலவசமாகக் கிடைப்பது மெருகேறுவதில்லை.

சத்தியத்தைத் தத்தெடுக்காதே. நீயே பிறப்புக்கொடு. பிறப்பிப்பதில் வல்லமை பெற்றுவிட்டால், உன் ஆழ்மனத்தில் தனித்தன்மையின் அலை எழும்பும். நீ இணையற்றவனாவாய். இந்த இணையற்ற தன்மைதான் தர்மநெறியின் கடைசிப் பலன்.

நீ திடீரென்று இன்றே சத்தியத்தைப் பெறமுடியாது என்பதை நான் அறிவேன். அங்குலம் — அங்குலமாக முன்னேற வேண்டும். தேய்ந்து — தேய்ந்து முன்னேற வேண்டும். உயர்ந்த மலை. செங்குத்தான ஏற்றம். மூச்சுவாங்கும். எல்லாச் சுமையையும் கைவிட நேரிடும். சிறிதளவு பொருள்கூட மலையுச்சிக்கு எடுத்துச் செல்ல முடியாது. உயரம் ஏற — ஏற, மூட்டை முடிச்சைக் குறைக்க நேரிடும். எட்மண்ட் ஹிலேரி எவரெஸ்ட் சிகரத்தை அடைந்தபோது அவரிடம் எந்தப் பொருளும் இல்லை. தண்ணீர் புட்டியைக்கூட சிறிது தொலைவு இருக்கும்போது விட்டுச்செல்ல நேர்ந்தது. சிகரத்தருகே இத்துணை சிறிய சுமையைக் கூட தூக்கிச் செல்வது இயலாததாக இருந்தது. ஹிலேரி எத்தனையோ பொருட்களைத் தன்னுடன் எடுத்து வந்தார். கொஞ்சம் — கொஞ்சமாக அவை எல்லாம் நழுவி விட்டன. சிலவற்றைத் தூக்கி எறிய நேர்ந்தது. சிலவற்றைப் பாதையோரம் விட்டார். ஏனெனில் அவற்றை இழுப்பதுகூட கஷ்டமாகி விட்டது. கடைசியில் சிகரத்தை அடைந்தபோது கை காலியாக இருந்தது. அவர் மட்டுமே மிஞ்சினார்.

இதேபோல் ஆன்மிக உலகிலும் கௌரிசங்கர்' சிகரமுண்டு. அது வாழ்வின் கடைசி முகடு. அதை அடையவும் அங்குலம் — அங்குலமாக பிரயாசைப்பட வேண்டும். அதற்கு எல்லாவற்றையும் விடவேண்டும் என்பதை நினைவில் வைத்துக் கொண்டால் பிறகு கொஞ்சம் — கொஞ்சமாக விட்டுவிடுவாய்.

**மூங்கில் உயரத்திற்கு**
**எழுகின்றன அலைகள்**

அழகிய நிலவைப் பார்த்திருப்பாய்
அதைக் குட்டைக் கை எட்டவில்லை
கை பிசைந்து நிற்கின்றன அலைகள்

குளிர்ச்சியை நன்கு சிதற விடுகின்றன
தண்ணீரிலேயே நெருப்பு மூட்டுகின்றன
அணைந்தும் எரிந்தும் உள்ளன அலைகள்

சொப்பன உலகின் யாத்திரைப் பாதையில்
உணர்ச்சி ஒரு சுயம்வரம் அமைத்தது
அதில் தோல்வியடைந்த அலைகள்
தலையில் தட்டிக்கொள்கின்றன

உபதேசம் கேட்டால் சந்திரன் தென்படுகிறது. நீ மூங்கில் உயரத்திற்குத் துள்ளிக் குதிக்கிறாய். ஆனால் இதனால் சந்திரன் கைக்குக் கிடைப்பதில்லை. என்ன செய்வது? நீ உன் வாழ்க்கைக்கு ஒரு கட்டுப்பாடும் கட்டளையும் கொடுக்க வேண்டும். எல்லோரிட மிருந்தும் உபதேசம் கேள். ஆனால் கட்டளை உன்னிடமிருந்தே பெறு என்று நான் கூறுவதன் அர்த்தம் இதுதான். மகாவீரர், கிருஷ்ணன், இயேசு, புத்தர், குரு நானக், கபீர்தாசர் ஆகியோரின் உபதேசம் உனக்கு ஆன்மிக உலகின் சந்திரனை நினைவூட்டும். தரையில் பதிந்திருந்த உன் கண்கள் முதல் தடவையாக வானத்தை நோக்கும். நீ மகிழ்ச்சியால் துள்ளுவாய். வாழ்க்கையில் குதூகலம் நிறைந்து விளங்கும்.

சத்குருவின் அருகில் இருப்பதேகூட அபூர்வமான அனுபவம். பிறகு சத்தியத்தைச் சென்றடைவது என்பது எத்துணை அபூர்வமானது! யோசி. குரு சத்தியத்தை அறிந்தவர் என்பதால்தான் அவருடனான பழக்கம் அபூர்வமாக உள்ளது. அப்பொழுது இதயம் துள்ளுகிறது. மனத்தில் அலைகள் எழும்புகின்றன. சந்திரன் காட்சி தருகிறது.

ஆனால் உபதேசம் கேட்பதுடன் எல்லாம் முடிந்து விட்டதாக நீ நினைக்காதே. இது ஆரம்பக் கட்டம்தான். நீ சந்திரன்வரை நடக்க வேண்டும்; சந்திரனை அடைய வேண்டும். உன் கால்களால்தான் முன்னேற வேண்டும். இன்னொருவர் கால்களைப் பயன்படுத்தி நீ எங்கும் செல்ல முடியாது. நீயே உனக்கு விளக்கு ஆக வேண்டும்.

**மூன்றாம் கேள்வி:**

நான் ஒரு கண்ணீர் அருவி
ஆயினும் காலங்காலமாகத்

**தடைப்பட்டுள்ளேன் நான்.**
**புத்தி என்னும் பாறை**
**எப்பொழுது எப்படி அகலும்**
**எக்காலத்தில் நான்**
**வெடித்துக் கிளம்ப முடியும்?**

இந்தக் கேள்வியைக் கேட்பவர் யோகபிரீதம் என்பவர். இவர் கவிஞர். கவிஞர்களுக்கு எப்பொழுதும் ஒரு பிரச்சினை உண்டு. கவிஞனின் வாழ்வாதாரம் இதயம். எண்ண வெளிப்பாடோ புத்தி வழியாக வருகிறது. ஆகவே கவிஞனின் உள்ளத்தில் எப்பொழுதும் போராட்டம். அவன் சொல்ல விரும்புவது சொற்களைக் கடந்தது. அவன் சொல்வதற்குக் கிடைத்துள்ள ஊடகமோ சொற்கள்தான். அவன் அவற்றின் மூலம் வெளிக்காட்ட விரும்புவது இதயத்தை. கைவசமிப்பதோ புத்திவழியில் பெற்ற மொழி. ஆகவே இந்த முரண்பாடால் எல்லா வெளிப்பாடுகளும் துண்டாகிச் சிதறுகின்றன.

ஆகவே கவிஞன் எப்பொழுதும் வேதனையுடன் இருக்கிறான். அவன் ஒருபொழுதும் திருப்தியடைவதில்லை. அப்படித் திருப்தி யடைந்தானாகில் அவன் சாதாரணமான, பெயரளவிற்குக் கவிஞனாக இருப்பான். எதுகை மோனையால் வரிகள் அமைப்பவனாக இருப்பான். மகாகவி மகா அதிருப்தியுடன் விளங்குவான். ஏதோ முக்கியமானதை, விசேஷமானதைச் சொல்லத் துடிப்பான். ஆனால் கையிலகப்படுவதோ முழுமையற்ற சிறு சொற்கள். தன் கருத்தை அச்சொற்களில் அவனால் நிரப்ப முடிவதில்லை. இதயம் என்பது பரந்து விரிந்த ஆகாயம். அதைச் சொற்களில் அடக்க முடியாது.

இவ்வாறாக நிறையச் சொல்லியும் கவி முழுவதையும் சொல்ல முடிவதில்லை. வாழ்க்கை முழுதும் பாடல்கள் பாடியும் சொல்வதற்கு இன்னும் பாக்கி உள்ளது. அவன் எதைப் பாட வந்தானோ அது பாடப்படாமலே இருந்து விடுகிறது. எக்கருத்துகளை வெளியிட அவன் வாழ்க்கை முழுதும் விரும்பினானோ அவை வெளியிடப் படாமலே மிஞ்சிவிடுகின்றன.

ஆகவே கவிஞனுக்கு மனப்போராட்டம் உள்ளது. அவன் வெளியிட வேண்டியது உணர்ச்சி. ஆனால் புத்தியின் வழியாக அவன் வெளியிட வேண்டியுள்ளது. இந்தப் போராட்டத்தில் சிக்கியுள்ள கவிஞன் எப்பொழுதும் அமைதியிழந்த வனாகவும் அதிருப்தியுள்ள வனாகவும் காணப்படுகிறான்.

கவிஞன் ஒரே சமயத்தில் இரு வேறு உலகில் வாழ நேரிடுகிறது. ஆகவே அவனுக்கு மன அழுத்தம் உண்டாகிறது. ஐரோப்பாவில் கவிஞர்கள் பலர் தற்கொலை செய்து கொண்டனர்; பலருக்குப் பைத்தியம் பிடித்தது; பெரும்பாலோர்க்குக் குடிப்பழக்கம் அமைந்துள்ளது. காரணம் என்ன? அவர்களது உள்ளத்தில் பதற்றமும் பரபரப்பும் மிகுந்திருப்பதால் அதைத் தணிக்க, அதை மறைக்க மதுப்பழக்கம் உதவியது. மன இறுக்கம் பாரமாக உள்ளதால் அதை எப்படியாவது மறக்கக் கவிஞர்கள் விரும்பினார்கள்.

கவிஞன் துறவு மனப்பான்மையை மேற்கொள்ளும்வரை இப்படித்தான் இறுக்கமாக இருப்பான்; அதிருப்தியுடன் காணப்படுவான். காவி ஆடை அணிய வேண்டுமென்று அர்த்தமில்லை. எதையும் புத்தியின் துணைகொண்டு வெளிப்படுத்தும் முயற்சி நீங்குவது அவசியமாகிறது. சிந்தனை வழியைக் கைவிட்டு வேறு வகையைக் கவிஞன் நாடுகிறான். மீராபாய் அதனால்தான் நடனமாடினாள், சிதார் வாசித்தாள். சைதன்ய மகாபிரபுவும் ஆடிப்பாடினார். அவர் சொல்ல விரும்பியதை நடனத்தின் மூலம்தான் சுலபமாகச் சொல்வதற்கு சாத்தியமிருந்தது. சொற்கள் சரியான ஊடகமாக அவருக்கு அமையவில்லை. கவிஞன் தன் உணர்ச்சிகளை முழுமையாகப் பதியாத வரையிலும் தன்னை ஏதோ ஒன்று தடுப்பதாகவே உணர்வான்.

கவிஞர் யோக பிரீதம் தன் உணர்ச்சி வெளிப்பாட்டை ஏதோ ஒன்று தடுப்பதுபோல் உணர்வதாகக் கூறுகிறார்.

நீ கண்ணீர் அருவியாயிருந்தும் பாறை தடுக்கிறது. எப்படியாவது கண்ணீர் வெளிவந்தால் அது புன்சிரிப்பாகி விடும். தடுக்கப்படும் புன்சிரிப்புதான் கண்ணீர் என்பது. இதனால்தான் நீ எப்பொழுதாவது அழுதால் மனம் லேசாகி விடுகிறது. நீ முழுமையாக அழுது தீர்த்துவிட்டால் உன் முகத்தில் சிரிப்பு உதிக்கிறது. ஓர் இதமான உணர்வு உள்ளத்தில் இறங்குகிறது. உன் மீது ஆசிர்வாத மழை பொழிகிறது. அழுகையில் இவ்வளவு நன்மை இருக்கிறது.

ஆண்கள் இந்த வாய்ப்பை இழந்துவிட்டனர். பெண்கள் பரவாயில்லை. அவர்கள் அழும் சுபாவத்தை ஒருபொழுதும் இழக்கவில்லை. வேறு எத்தனையோ திறமைகளைப் பெண்கள் இழந்திருக்கலாம். அழும் ஆற்றல் என்னும் விலை மதிக்க முடியாத

ஒன்றை அவர்கள் காப்பாற்றி வைத்துள்ளனர். ஆண்கள் வலிமை, பதவி, கௌரவம், அந்தஸ்து ஆகியவற்றைக் காப்பாற்றிக் கொண்டார்கள். ஆனால் அனைத்திலும் மதிப்புமிக்க அழும் ஆற்றலை இழந்து விட்டனர். அவர்களின் கண்கள் ஈரமாவதே இல்லை. யாருடைய கண்கள் ஈரமாவதில்லையோ அவர்களின் இதயம் காலப்போக்கில் பாறாங்கல் ஆகிவிடுகிறது.

ஆனால் கவிஞர் பிரீதம் எப்படிப் பாறையை அகற்றுவது என்று கேட்டார். 'எப்படி?' என்பது புத்தி சம்பந்தப்பட்ட கேள்வி. புத்தியால் புத்தியை அகற்ற முடியாது. அழு. உளமார அழு? யார் தடுப்பார்? முதலில் கூச்சமாக இருக்கலாம். அப்படியானால் தனியானதோர் இடத்திற்குச் செல். மரத்தடியில் உட்கார். மரங்கள் உன்னைப் பார்த்து 'பெண்பிள்ளைபோல் அழுகிறானே' என்று அவமானம் செய்யாது. அவை உன்னிடம், "பிரீதம், அழாதேப்பா, ஆண்கள் அழலாமா? நீ தைரியசாலி. நீயா அழுவது?" என்று கேட்காது. ஆகவே மலைக்குப் போ, நதிக்கரைக்குப் போ. அழு. மரங்களும், மலைகளும் ஆறுகளும் உன்னை ஏற்றுக் கொள்ளும். உள்ளத்தை காலியாக்கி அழு. எப்படி அழுவது என்றா கேட்பது? அழ ஆரம்பி. தானாக வரும்.

அழுதல் இயற்கையான நிகழ்வு. எப்படி அழுவது என்ற கேள்வி எழ வாய்ப்பில்லை. 'எப்படி' என்பதற்கு முன்கூட்டியே ஏற்பாடு செய்தல், விதிகளைக் கடைப்பிடித்தல், சடங்குகள் செய்தல் என்றெல்லாம் அர்த்தம் கிடைக்கிறது. மிளகாயை அரைத்துக் கண்ணில் வைத்தா அழுகையை வரவழைப்பது? அதெல்லாம் பொய் அழுகை. நடிகர்கள் செயற்கையாக அழுகையை வரவழைத்துக் கொள்கிறார்கள்.

ராம்லீலாவில் (ராமாயணக்கூத்தில்) சீதையின் பிரிவால் ராமன் அழவேண்டும். சீதையாக வருபவன் ராமன் நடிகனின் கிராமத்தைச் சேர்ந்த இளைஞனாக இருக்கலாம். இரு இளைஞர்களிடையேயும் விரோதம் இருக்கக்கூடும். ஆகவே சீதையைப் பிரிந்த வேதனையை ராமன் இயற்கையான அழுகை மூலம் வெளிக்காட்ட முடியாமல் போகலாம். ஆகவே அழும் காட்சி வந்ததும் ராமன் பாத்திரக்காரன் கையில் மறைத்து வைத்திருந்த மிளகுப்பொடியைக் கண்ணில் சேர்ப்பான். உடனே கண்ணீர் பொங்கும்.

முன்னேற்பாடு மூலம் பெறப்படும் அழுகை பொய்யானது. வலிந்து முயன்று பெறப்படும் அழுகையும் நெகிழ வைக்காது. நாலாபுறமும் எத்தனை வகையான துன்பங்கள், வேதனைகள், ஆனந்தம், மலர்ந்த பூக்கள், சந்திரன் – நட்சத்திரங்கள் – இவற்றையெல்லாம் பார்த்து அழலாமே. அழுவதற்கு எத்தனையோ சூழ்நிலைகள் முன்னதாகவே உள்ளன. அழுதபடியே அசைந்தாடு, நடனமாடு, கண்ணீர் பெருக்கெடுத்து ஓடட்டும்.

ஆரம்பத்தில் திடீரென அழுவது சிரமம்தான். ஏனெனில் நீண்ட காலமாக அழுகை வெளியேற முடியாமல் அடைப்பு உள்ளது. நீ அழுவதை மறந்துகூட போயிருக்கலாம். தனிமையில் உட்கார்ந்து கண்ணீரை எதிர்பார். திடீரென ஒரு நாள் காரணமில்லாமலே உனக்கு அழுகை வரத் தொடங்கும்.

அழுவதற்கு காரணம் தேவை என்று மக்கள் நினைக்கிறார்கள். குடும்பத்தில் யாராவது இறந்தால் அழுகிறார்கள். சாவு தினமும் நிகழ்கிறது. உன் வீட்டில் சாவு ஏற்பட்டால்தான் அழுகை வரும் என்று எதிர்பார்க்கிறாயா? வாழ்வைச் சுற்றிலும் சாவு சூழ்ந்திருக்கிறது. மயானத்திற்குப் போய்ப்பார். புத்தர் தன் சீடர்களான பிட்சுக்களை மயானத்தில் மூன்று மாதம் தியானம் செய்ய அனுப்பி வந்தார். நீயும் போய்ப் பார்த்தால் பிணங்கள் வந்து கொண்டேயிருக்கும்.

அழவேண்டுமென்று ஒருவன் நினைத்தால் அதற்கான வசதிகள் எல்லா இடங்களிலும் உள்ளன. காரணத்தை விசேஷமாகத் தேட வேண்டியதில்லை. எல்லா காரணங்களும் ஆங்காங்கே கிடைக்கின்றன. மரத்தில் இலையைப் பார்க்கிறாய். நேற்றுவரை பசுமையாக இருந்தது. இன்று மஞ்சளாகி விட்டது. அதைப் பார்த்தபடியே சிந்தனை செய். உன் கண்களில் நீர் நிறையும். பச்சை இலை மஞ்சளாகி, மரத்திலிருந்து பிரிந்து, இப்போது தரையில் கிடக்கிறது. இவ்வாறு எல்லாமே தரையில் விழும். நீயும் விழுவாய். அப்படித்தான் ஆகப்போகிறது. பழுத்தது எல்லாம் விழும். பிறந்தது எல்லாம் இறக்கும். இங்கு சுற்றிலுமுள்ள பசுமையான மரங்களையும் சாவின் கருநிழல் சூழ்ந்து நிற்கிறது.

துக்கம்தான் தேவை என்ற கட்டாயமில்லை. சுகத்தாலும் கண்ணீர் வரலாம். இப்படிச் சாவு வளைத்து நின்றபோதிலும் வாழ்க்கை

அழியவில்லையே. இது ஆச்சரியமான விஷயம் அல்லவா? எத்தனை – எத்தனை முள்கள்! ஆனால் மேலும் மேலும் பூக்கள் மலர்வதை நிறுத்தவில்லையே. சாவு தினமும் உலகிற்கு விஜயம் செய்கிறது. ஆனால் குழந்தைகளும் பிறந்துகொண்டே உள்ளன. கடவுள் களைப்படைவதில்லை. சாவு தேவதையால் அவரை வெல்ல முடிவதில்லை. வாழ்க்கை தோல்வியுறுவதில்லை. அது வளர்ந்து முன்னேறியபடியே செல்கிறது. எவ்வளவு சாவு நேர்ந்தாலும் வாழ்க்கை மறுபடியும் புதிய அலைகளை ஏந்தி எழும்புகிறது.

இந்த ஆனந்த நிலையைக் கவனி. நீ உயிருடன் இருப்பது பற்றி யோசி. நீ உயிருடன் இருப்பதே ஆச்சரியமான விஷயம். உன்னால் பார்க்க, சிந்திக்க, அனுபவிக்க முடிகிறது. நீ இருக்கிறாய் என்பதுவே கூட போதுமே. இந்த உணர்வு உன்னை நெகிழச் செய்துவிடும்.

தனிமையில் அமர். தளர்த்தியாக இரு. அபிப்பிராயங்களை மற. பார் – வானத்தில் தாரகைகளை, வனத்தில் நிமிர்ந்து நிற்கும் மரங்களை, ஓடும் நதியை, அலைந்து திரியும் மேகங்களை. இந்த இயற்கை வாழ்வின் ஆச்சரியங்களால் சூழப்பட்டு இரு. உன் கண்களிலிருந்து உன்னை அறியாமல் நீர் பெருகும்.

'எப்படி அடைப்பை அகற்றுவது?' என்று நீ கேட்டாய். அது பற்றிய விதிமுறைகளைப் பற்றிய பேச்சு வேண்டாம். 'எப்படி' என்பதில்தான் அந்த அடைப்பு உள்ளது. அந்த அணுகுமுறைதான் தடுக்கிறது. வெடித்துத் தண்ணீர் கிளம்புவதைத் தடுப்பது புத்தி இல்லை. நீ புத்தியைப் பிடித்தபடி உள்ளாய். அதுதான் தடையாக உள்ளது. இதையும் நினைவில் கொள்.

சைதன்ய மகாபிரபுவிடம் குறைந்த அளவா புத்தி இருந்தது? என்ன வித்தியாசம் என்றால் அவர் புத்தியைப் பிடித்தபடி அதைச் சார்ந்து இருக்கவில்லை. புத்தி அது இருக்க வேண்டிய இடத்திலேயே இருக்க, இதயம் அதை மூழ்கடித்து முன்னேறுகிறது. புத்தி முட்டுக்கட்டை போடுவதில்லை. உண்மை என்னவெனில் பாறைகள் இருக்கும் இடத்தில் நதியின் ஓட்டம் சங்கீதமாகக் கேட்கிறது. பாறைகளில் குதித்து அருவி பாயும்போது எழும் இனிய ஒலியை நீ கேட்டிருப்பாயே. பாறைகள் இல்லை எனில் இசை ஒலியும் இல்லை. பாறைகள் இல்லாத அருவி மூளியாகத் தோன்றும். அந்த அருவி

ஒலிச எழுப்பாது: அதிலிருந்து இசை கிளம்பாது. அது குரலிழந்து ஊமையாக இருக்கும்.

ஆகவே புத்தி விஷயத்தில் அக்கறை காட்டாதே. புத்தி பாறாங்கல்லைப்போல் இருந்து விட்டுப் போகட்டும். புத்தியின் மீது பிரவாகமாகப் பெருகு. புத்தியைச் சூழ்ந்து செல். உன் இதயமென்னும் அருவி புத்தி என்னும் பாறைகள் வழியே பாயும்போது இசை பிறக்கும். அதுவே உண்மையான கவிதை.

உணர்ச்சிகளால் கவிதை பிறக்கிறது. நீ முயன்று அதை புத்திவழிச் சொற்கள் மூலம் வெளியிடுகிறாய். அதுதான் பிரச்சினை. இன்னொரு வகையான கவிதையும் உண்டு. அது சரளமாகப் பெருக்கெடுத்து ஓடும். புத்தியெனும் பாறைகளில் உரசும். அப்பொழுது கிளம்பும் ஒலியே ஒரு கவிதையாகும். அதில் அர்த்தம் குறைவாக இருக்கலாம். ஆனால் இனிமை மிகுந்திருக்கும். அதில் இலக்கணம் குறைவாக இருக்கலாம். ஆனால் இசை மிகுந்திருக்கும். அதை புத்தியின் அடிப்படையில் புரிந்துகொள்ள முடியாமல் போகலாம். ஆனால் அது இதயத்தைத் துடிக்க வைக்கும்.

நவீன காலக் கவிதையின் சிறப்பு இதுதான். அது இலக்கணத்தைக் கைவிட்டது மாத்திரை, யாப்பமைப்பு முதலிய வற்றைத் துறந்தது. புதுக்கவிதையை சுத்தமான கவிதை எனலாம். பழங்காலக் கவிதையைவிட புதுக்கவிதை அதிக உயரத்தைத் தொட்டுள்ளது. அது நிறைய மக்களுக்குப் புரிவதில்லை. பெரும் பான்மையோரால் எல்லை கடந்த ஒன்றைப் புரிந்துகொள்ள முடிவதில்லை. இலக்கணத்தைக் கடந்ததை, கவிதையின் பழைய விளக்கத்தைக் கடந்ததைப் புரிந்துகொள்ள முடிவதில்லை.

இதே நிலைமை புதிய பாணி ஓவியங்களுக்கும் புதுமையான சிலைகளுக்கும் நேர்ந்துள்ளது. உலகெங்கும் ஒரு பெருவெடிப்பு ஏற்பட்டுள்ளது. அது இதயத்தை ஊடகமாகக் கொண்டு எழுந்தது. புத்தி என்னும் கற்கள் அப்படியே கிடக்கட்டும். இவற்றால் லாபமேதும் இல்லை.

கவிஞனுக்குத் தேவை அன்பு, காதல், பிரார்த்தனை, கடவுள். இல்லாவிடில் அவன் ஓர் அடைப்பை உணர்வான். கவிதை ஒரு பாசுரம்போல, பிரார்த்தனைபோல, அருச்சனைபோல, படையல்போல ஆகாதவரையில் இந்தத அடைப்பு நீடிக்கும்.

அங்குசமாக அடக்குபவர் யாரென
நான் அறிந்திருக்கவில்லை.
ஆயினும் ஏரிக் கரையில் இருந்தும்
தொண்டையில் எரியும் தாகத்தை,
வேதனையை நானறிவேன்
இது நெருப்பன்று தணிந்துபோக.
ஆசைகள் உடைந்து வீழ்கின்றன
தழுவிய கைகள் தளர்ந்துபோயின.
உருவத்தை வழிபடும் வழி
ஆலிங்கனமன்றி வேறென்ன?
அழகிற்கு அன்பு தரும் பரிசு
ரசமய முத்தமன்றி வேறென்ன?
ரத்தத்தின் உஷ்ண அலைகளுக்கப்பால்
ஏதேனும் சத்தியம் இருக்குமாயின்
அதன் ரகசியம் அறிய விழைகிறேன்.
எவ்வளவு உயரம் நான் பறந்தாலும்
எனது கேள்விக்கு விடையில்லை.

மண்பிண்டம் நான்
வானில் உறைவது சாத்தியமில்லை
பூமியிலும் எனக்கு திருப்தியில்லை.

மண்ணில் துடிக்கும் என் இதயத்திலிருந்து
வானம் ஒருபோதும் விலகியதில்லை.

துன்பம் எல்லாம் சகித்தபடி
கவலையுடன், குழப்பத்துடன்,
எல்லையற்ற ஆகாயத்தில்
எங்கும் திரிந்து அலைகிறேன்
ஆனால் எதுவும் வசப்படவில்லை.
நான் செதுக்கும் கேள்வியானது
வான சூனியத்தில் எதிரொலித்து எங்கும்
எனது செவிக்கே திரும்பிவிடுகிறது.
என்னால் எங்கும் நிலைபெற முடியவில்லை.

போரில் உயிர் தப்பி ஓடிய வீரன்
அம்புபோல் நேராய்க் காதலி மடியில்
அமைதி குலைந்து விழுவதைப்போல்

ஏக்கத்துடன் நானும் திரும்புகிறேன்.
துக்கம் என்பது நீரின் அருவி
அடர்ந்த நிழல், குளிர்ந்த காற்று
சியாமள மேகம்.

ஆனால் விழித்துப் பார்க்கையிலே
மெழுகுவர்த்திபோல் விருப்பங்கள்
முழுமை பெறாமல் எரிகின்றன

மண்ணிலிருந்து விண்வரை அலையினும்
அன்பெனும் பிரவாகத்தில் நனையாதவரை
ஏமாற்ற நெருப்பிலேயே எரிய நேரிடும்
இதுவே சாவுலக மனிதனின் தலைவிதியாகும்.

காவியம் என்பது ஒரு யாத்திரையின் ஆரம்பம். அது ஒரு முடிவன்று. காவியத்தின் பூர்ணாஹூதி (முழுமை பெறுதல்) அன்பில் முடிவதுதான். அன்பு ஏற்பட வலுவான சூழ்நிலை இருப்பினும் அது தோன்றவில்லை. எனவே அன்பு செலுத்தத் தொடங்கிவிடு.

அன்பு காட்டுவது எப்படி என்று நீ கேட்கலாம். அன்பு விஷயத்தில் ‘எப்படி’ என்ற பேச்சுக்கு இடமில்லை. எப்படியாவது ஆரம்பி. புதிதாக நீச்சல் கற்பவன் முதலில் இஷ்டப்படி கைகால்களால் தண்ணீரைத் துளாவுவதுபோல் நீயும் ஏதோ விதத்தில் அன்பு செலுத்த ஆரம்பி. யாரும் எதையும் பிறந்தபோதே கற்றவனாக வருவதில்லை.

அன்பு காட்டு. மரங்களை, விலங்குகளை, பறவைகளை, நண்பர்களை, உறவினர்களை நேசி. வாய்ப்புக் கிடைக்கும் போதெல்லாம் நேசி. சந்தர்ப்பத்தை நழுவ விடாமல் நேசி.

நாம் விசித்திரமானவர்கள். அன்பு விஷயத்தில் கருமிகள். நமக்கு யாரெல்லாம் பிடிக்கும் என்று கூறுகிறோமோ அவர்களிடமும் சரியாக அன்பை வெளிக்காட்டுவதில்லை. அன்பு செலுத்தினால் ஏதாவது குறைந்துவிடும், தொலைந்துவிடும் அல்லது இழந்து விடுவோம் என்பதுபோல் நடந்து கொள்கிறோம். அன்பு அம்மாதிரியான சொத்தன்று. அது மனிதர்களின் பணப்பெட்டி மாதிரி இல்லை. பணப்பெட்டியிலிருந்து பத்து ரூபாய் எடுத்து யாருக்காவது கொடுத்தால் இருப்பு குறைகிறது.

அன்பெனும் உலகத்தின் நடவடிக்கைகள் வேறு விதமானவை. அன்பு செலுத்துவது கிணற்றிலிருந்து நீரெடுப்பது போன்றது. தற்போதுள்ள தண்ணீரை வெளியே எடுத்தாலும் மீண்டும் உள்ளே புதிதாகச் சுரக்கும். பழையதை, அழுகியதை, கெட்டுப் போனதை அகற்று. மீண்டும் புதிதாக நீர் ஊறும். கிணற்றிலிருந்து எவ்வளவு இறைத்தாலும் அது உயிரோட்டத்துடனேயே இருக்கிறது. அருவிகள் பொழிந்த வண்ணம் உள்ளன. புதிய — புதிய ஓடைகள் வெடித்துக் கிளம்புகின்றன. எங்கோ தொலைவிலுள்ள கடலும் கிணற்றை நிரப்புகிறது. வழியிலுள்ள மண் கடல்நீரை வடிகட்டித் தூய்மையாக்கு கின்றது. கடல் நீரை அப்படியே குடித்தால் செத்துப் போவாய். ஆனால் வழியிலுள்ள நிலம் உப்பை நீக்கி விடுகிறது. நீ உனக்காகவும் கிணற்றிலிருந்து தண்ணீர் இறைக்காமல், பிறர் இறைக்கவும் விடாமல், 'தண்ணீர் எடுத்தால் நீர் தீர்ந்து போகும்' என்று நீ கூறினால், உன் கிணறு அழுகும், வறண்டு போகும்.

அருவியைத் தடைபடாமல் ஓடச்செய்வது எப்படி என்று கேட்கிறாய். அதாவது, நீண்ட காலமாக நீ தடுக்கப்பட்டுள்ளதுபோல், அடைபட்டதுபோல் உணர்கிறாய். உன்னையே எப்படித் திறந்துவிடுவது என்று கேட்கிறாய். எனது பதில் இதுதான் — அன்பைப் பிரித்தளி. மக்கள் உன்னை நெருங்க அழைப்புவிடு. வாய்ப்புக் கிடைக்கும் போதெல்லாம், தெரிந்தவர் — தெரியாதவரிடம், உன்னிடம் — பிறரிடம் அறிமுகமானவருடன் — அறிமுகமற்றவருடன் அன்பு காட்டிப் பழகு. அன்பு செலுத்துவதால் செலவு கிடையாது. நீ எதுவும் பிறருக்குத் தரவேண்டுமென்ற கட்டாயமில்லை.

**டா**ல்ஸ்டாய் தமது வாழ்க்கை வரலாற்றில் ஒரு சம்பவம் குறிப்பிடுகிறார் — நான் ஒருநாள் சர்ச்சில் பிரார்த்தனை முடித்துத் திரும்பிக் கொண்டிருந்தேன். வழியில் ஒரு பிச்சைக்காரன் கைநீட்டிப் பிச்சை கேட்டான். காலை நேரம், சூரியோதய சமயம், பிரார்த்தனையால் புனிதமான மனது ஆகியவற்றில் மகிழ்ச்சி கொண்டு நான் காசுபோட நினைத்தேன். அந்த சமயம் அந்தப் பிச்சைக்காரன் உருவில் கடவுள்தான் கைநீட்டி என்னைச் சோதிக்கிறார் என்றும் தோன்றியது. நான் சட்டைப்பைகளில் கைவிட்டேன். ஒரு காசுகூட இல்லை! அவமானம் மேலிட்டுப் பதற்றமடைந்தேன். பிச்சைக்காரன் சொன்னான், "ஐயா, கவலைப்படாதீர்கள். நீங்கள் நிஜமாகவே தர்மம்

செய்யத்தான் விரும்பினீர்கள் என்பதே போதுமே. சட்டைப் பைகளில் தேடிப் பார்த்தீர்கள். அந்த அக்கறையே நீங்கள் எனக்கு நிறையப் பிச்சை போட்டதற்கு சமமாகி விடுகிறது." தான் அவன் கைகளைப் பற்றிக் கொண்டேன். என் கண்களில் நீர் நிறைந்தது. நான் அவனுக்கு எதுவும் கொடுக்க முடியவில்லை. அவன்தான் எனக்கு நிறையக் கொடுத்த விட்டதுபோல் நான் உணர்ந்தேன்.

கொடுக்காவிடிலும் கொடுத்தல் நிகழலாம். சில சமயங்களில், கொடுத்தும் கொடுக்காததுபோல் தோன்றலாம். மனமில்லாமல் கொடுத்தால் கொடுக்காமைக்கு சமம். மனபூர்வமாகக் கொடுக்க விரும்பியும் கொடுக்க முடியாது போனால் அப்படியும் கொடுத்தல் நிகழ்ந்து விட்டதாகக் கருதலாம். இது வாழ்க்கையின் ரகசியம்.

அன்பைப் பங்கிட்டுக் கொண்டே செல். அன்பெனும் சக்தியை பங்கிட்டுச் சென்றால், சிறிது – சிறிதாக பரமாத்மா என்னும் மாகடல் உன்னை நிரப்பிக் கொண்டே செல்லும். புதிய சக்தி அலைகள்போல் எழுகிறது. இது உலகில் வழங்கும் பொருளாதார சாஸ்திரப்படி இருக்காது. இது கடவுள் ஆமோதிக்கும் பொருளாதார சாஸ்திரம். மக்கள் சொல்வது – கையிலிருப்பதைக் காப்பாற்றாவிடில் எதுவும் மிஞ்சாது; பிச்சை எடுப்பாய். கடவுளின் பொருளாதாரக் கோட்பாடு சொல்வது – கொடுக்கக் கொடுக்க வளரும்.

**ஒ**ரு பிச்சைக்காரன் முல்லா நஸ்ருத்தீனின் வீட்டு வாசலில் நின்று பிச்சை கேட்டான். முல்லா அவனுக்கு முழுமனத்துடன் தர்மம் செய்தார். உணவும் உடையும் கொடுத்து, பத்து ரூபாய் நோட்டும் கொடுத்தார். அவன் கிளம்புகையில் முல்லா கேட்டார், "நீ பார்ப்பதற்கு வசதியான குடும்பத்தைச் சேர்ந்தவன்போல் தெரிகிறது. உன் முகத்திலும் பண்பாட்டின் களை தெரிகிறது. உன் உடை கிழிந்தும், சாயம் போயிருந்தும் விலை உயர்ந்ததாகத் தோன்றுகிறது. இத்தகைய நிலைமை உனக்கு எப்படி உண்டானது?"

அவன் சொன்னான், "நீங்கள் இப்பொழுது என்ன செய்கிறீர்களோ அதே போல்தான் நானும் செய்தேன். நீங்களும் விரைவில் இந்த நிலைக்கு வந்துவிடுவீர்கள். கொடுத்துக் கொடுத்து இப்படியானேன். எல்லோருக்கும் பிரித்தளித்து எனது செல்வமெல்லாம் கொள்ளை போனது." இது வெளியுலகப் பொருளியல். இங்கே பிடுங்கினால் கிடைக்கும்; கொடுத்தால் இழப்பு நேரிடும்.

ஆனால் உள்ளுலகப் பொருளியலும் ஒன்றுண்டு. கபீர்தாசர் சொல்கிறார்: 'இரண்டு கைகளாலும் தண்ணீரை வாரி விலக்குங்கள். புதிய தண்ணீர் வந்து சேரும். பிரித்துக் கொடுங்கள், தேடி வந்துசேரும். சேமிப்பது போய்விடும். எடுத்துக் கொடுப்பது சேமிப்பாக இருக்கும். எதைப் பிரித்துக் கொடுக்கிறாயோ அதுதான் உன் சொத்தாக உள்ளுலகில் தங்கும்.

ஆகவே நீ செய்யவேண்டிய வேலைகள் இரண்டு: அன்பைப் பங்கிடு, கண்ணீரை வரவிடு. இரண்டும் ஒரே சமயத்தில் நிகழும். ஏனெனில் இவை இரண்டும் ஒரே சம்பவத்தின் இரண்டு பக்கங்கள். இதயம் அன்பை எவ்வளவு பிரித்தளிக்கிறதோ அந்த விகிதத்தில் கண்களும் ஈரமாகும்.

**உயிரின் நிரந்தரத் தோழியாம்**
**இந்நெருப்பை உன்னுடன் எடுத்து**
**மண்ணிலிருந்து விண்வரையிலும்**
**போய்க்கொண்டே இரு**
**அன்பின் பிரவாகத்தில் நனையாதவரை**
**உனது நெருப்பிலேயே எரிந்தபடி இரு.**

இன்றைய நெருப்பின் சூடு நாளை பூவாக மலரும். இன்று நெருப்பாக உணர்வதே நாளை உள்ளத்தில் தாமரை ஆகும். அன்பைப் பிரித்தளி. அன்பின் உலகில் 'எப்படி' என்ற கேள்விக்கு இடமில்லை. நிபந்தனையின்றி அன்பை வழங்கு. யாருக்கு என்றும் கேட்காதே. கருமிதான் அப்படிக் கேட்பான். நம் அன்பைப் பெறத் தகுதியுள்ளவனா — தகுதியற்றவனா என்றும் பார்க்க வேண்டாம். அதை முடிவு செய்ய நாம் யார்? யார் கிடைத்தாலும் அன்பைக் கொடு.

உன் அன்பைப் பெற்றவருக்கு நீதான் நன்றியுள்ளவனாக இருக்க வேண்டும்; நீ அவருக்குக் கடமைப்பட்டிருக்க வேண்டும். ஏனெனில் அவர் நினைத்திருந்தால் உன் அன்பைப் பெற மறுத்திருக்க முடியும். அவர் மறுக்காததால் அன்பைக் கொடுக்கும் அதிர்ஷ்டம் உனக்குக் கிடைத்தது. இதனால் அவர் உன் வசமாகிறார். அவர் மூலம் நீ நிரப்பப்படுவாய். ஆகவே நீ அவருக்கு நன்றிகூற வேண்டும்.

வாழ்க்கையில் அன்பு பிரவேசித்தால் சிறிது — சிறிதாக பிரார்த்தனை உணர்வும் மேலோங்கும். எக்காவியமும் புனிதப்

பாசுரமாக ஆகாதவரையிலும், பிரார்த்தனைபோல் புனிதம் பெறாத வரையிலும், கவி அதிருப்தியுடன் சங்கடப்பட்டுக் கொண்டே இருப்பான்.

ஒரு காவியம் உபநிடதம்போல் உன்னதத் தரம் பெற்றுவிட்டால், கவி மறைந்து முனிவராகத் தோற்றம் எடுக்கிறான். கவி, ரிஷி – இரு சொற்களும் ஒரே பொருளுடையவை – வித்தியாசம் என்னவெனில், கவி பிரயாசைப்பட்டு இதய உணர்வுகளைச் சொற்களில் வடிக்கிறான். ரிஷியோ முயற்சி செய்யாமல், இயற்கையாக, உள்தூண்டுதல் மூலம் உணர்வுகளைப் பெருக விடுகிறான். அவை மூளைப் பாறையைக் கடந்து செல்கையில் கேட்கும் ஒலி, கேட்கும் சங்கீதம் – அதுவே அவரது காவியம். அதுவே அவர் இறைவனின் சரணங்களில் சமர்ப்பிக்கும் பிரசாதம்.

**கடைசிக் கேள்வி:**

**ரஜனீஷ் அவர்களே, எனது கடந்த காலமெனும் இருட்டை ஆராய்கையில் உங்களுக்கு என்ன தெரிகிறது? தலைவிதியென்னும் சக்கரத்தில் நான் சிக்கியிருந்தேனா அல்லது அதற்கு வெளியே வந்து கொண்டிருந்தேனா?**

இப்பொழுதும் நீ தலைவிதியென்னும் சக்கரத்தில் மாட்டிக் கொண்டுதான் உள்ளாய். மனிதன் முழுமையான ஆன்மிக விழிப்புப் பெறும்வரை இந்த சக்கரத்தில் சுழன்றபடிதான் இருப்பான். தலைவிதிப்படி என்றாலே மனிதன் சுதந்திரமிழந்து பாதி மயக்க நிலையில் இயங்குகிறான் என்று அர்த்தமாகும். சுயமான, சுதந்திரமான மனிதனுக்குத் தலைவிதி என்பது கிடையாது. தலைவிதியின் வசத்திலுள்ளவனின் எதிர்காலம் குறித்து சோதிடர்களால் சொல்ல முடியும். ஆன்ம விழிப்புப் பெற்றவன் பற்றி சோதிடர் எதுவும் சொல்ல இயலாது. அவனது கடந்த காலத்தை வைத்து இதை நிர்ணயிக்க முடியாது.

தலைவிதியின் வசத்திலுள்ள மனிதனைப் பற்றி கடந்த கால அடிப்படையில் சுலபமாகக் கூறலாம். நீ நேற்று கோபித்தாய். முந்தாநாளும் கோபித்தாய். அதற்கு முன்பும் கோபித்தாய். நாளையும் நீ கோபிக்கத்தான் போகிறாய். அதற்குத் தடையேதும் இல்லை.

ஏனெனில் நீ இதுவரை என்ன செய்து வந்தாயோ அதைத்தான் இனிமேலும் செய்யப் போகிறாய். நீ பழக்கத்திற்கு அடிமை. நீ ஓர் இயந்திரம். சுதந்திரமாகச் செயல்படாததால் நீ நடத்துவது இயந்திர வாழ்க்கை.

விழிப்பு ஏற்படத் தொடங்கியதும், தியான உணர்வு தோன்றியதும், மனிதன் விதியின் பிடியிலிருந்து வெளியேறுகிறான். பிறகு அவன் கடந்தகால பாதிப்பால் இயக்கப்படுவதில்லை. அவ்வப்பொழுது புதிதாக நிகழும் சம்பவங்களுடன்தான் தொடர்பு அமைகிறது. அத்தொடர்பு நேரடியானது. அது கடந்த காலத்துடன் சம்பந்தப்பட்டதன்று. அது உன் பழைய அனுபவங்களால் நிச்சயிக்கப் படுவதுமன்று. 'இப்போது இங்கு உளதாயிருத்தல், இக்கணத்தை உணர்தல்' என்பதுதான் இதை முடிவு செய்கிறது.

இக்கேள்வியைக் கேட்ட தினேஷ் கடந்த வாழ்க்கையை விட்டு வெளியே வர விரும்புகிறான். அவனது விருப்பம் சுபமானது. முயற்சி இருந்தால் ஒரு காலத்தில் வெளியே வந்துவிட முடியும்.

நீ என்னென்ன செய்தாய் என்பது பற்றி எனக்கு அக்கறை யில்லை. நீ பாவம் செய்தாய், கெட்ட காரியங்கள் செய்தாய் அல்லது புண்ணியம் செய்தாய். என்னைப் பொறுத்த வரையிலும் உன் பாவத்திற்கும் மதிப்பில்லை, உன் புண்ணியத்திற்கும் மதிப்பில்லை. ஏனெனில் பாவத்தையும் புண்ணியத்தையும் நீ உறக்கம் போன்ற தெளிவற்ற மனநிலையில் செய்தாய். அந்த சமயம் நீ திருடனா யிருந்தாலும் சரி, சந்நியாசியாக இருந்தாலும் சரி, நான் கவனிப்பது உன் மனத்தில் ஆன்ம விழிப்பிற்கான பெருவிருப்பம் தோன்றி விட்டதா, இல்லையா என்பதைத்தான். அதுதான் உன் வாழ்வின் மாபெரும் நிகழ்ச்சியாக அமையும். அதைப் பொறுத்துத்தான் உன் எதிர்க்காலமே உள்ளது.

ஓர் உருதுக் கவிஞர் கூறுகிறார் – என் இதயம் அழகான பெண்களால் நாசமாயிற்று என்பதை ஒப்புக் கொள்கிறேன். சாடிக் கணக்காய் மது பருகி அவமானப்பட்டதை ஒப்புக் கொள்கிறேன். நர்கிஸ் பூ போன்ற கண்ணழகிகளால் கவரப்பட்டதை ஒப்புக் கொள் கிறேன். ஆனாலும் நான் வாழ்க்கையைச் சரியாக மதிப்பிடுபவர்களின் (ஞானிகளின்) பாதையின் தூசியும்கூட. இந்த விஷயம்தான் முக்கியமானது.

தினேஷ் விஷயத்திலும் இதுதான் நடக்கிறது. அவனும் வாழ்க்கையை மதிப்பிடத் தொடங்கி விட்டான். விரும்புதல் (பற்று) என்னும் நிலையைக் கடக்க விருப்பம் கொண்டு விட்டான். கிழக்கு திசையில் உதயசூரியனின் செங்கிரணங்கள் தோன்றுவது போன்ற ஞான உதயத்தின் நிலையிலுள்ளான். ஆகவேதான் உன் கடந்த காலத்துடன் என்னைத் தொடர்புப் படுத்திக் கொள்ள நான் விரும்பவில்லை.

நீ இதுவரை கனவுலகில் ஆழ்ந்திருந்தாய். இப்போது விழிப்பின் முதல் கட்டத்தில் உள்ளாய். உறக்கம் கலையும் நேரம் இது. மிகவும் மதிப்பு வாய்ந்த நேரம். இந்த விழிப்பிற்கு முன் நீ அரசனாக இருந்தாயா, ஆண்டியாகவா? புண்ணியங்களைக் குவித்தாயா, பாவங்களைச் சேகரித்தாயா? இதெல்லாம் பற்றிய ஆராய்ச்சி வீண். அதெல்லாம் உறக்கத்தில் நிகழ்ந்தவை. கனவு போன்றவை. கனவு கலையும் நேரம் வந்துவிட்டது. தியான நிலை மீது பிரியம் உண்டாகிவிட்டது. இது முக்கியமான மாறுதலாகும். இதற்காக தினேஷ் தன்னையே இழக்கத் தயாராகி விட்டான். அந்த மனப்பான்மை பெற்றவன் கடந்த காலத்திலிருந்து விடுபட்டு விடுவான். ஏனெனில் ஒவ்வொருவரும் கடந்த காலத்தின் தொகுப்புதான்.

அஹங்காரத்தைக் கைவிடு என்று நான் தொடர்ந்து சொல்வதன் அர்த்தம் என்னவெனில் உன்னைக் கடந்த காலம் இதுவரை எவ்வாறு உருவாக்கியுள்ளதோ அதை மறந்துவிடு என்பதுதான். அதனுடனான உன் தொடர்பை அறுத்துவிடு. அப்போதுதான் புதிதாக எதுவும் உன் வாழ்க்கையில் இடம்பெற முடியும்.

தினேஷ் சொல்கிறான் — என் மனக் கதவுகளை எல்லாம் நான் திறந்து விடுகிறேன். இந்த பிரார்த்தனை என் காதில் விழுகிறது. நீ குருவிடம் சென்று 'என்னை — நான் என்னும் உணர்வை — அழித்து விடுங்கள்' என்று கேட்கும் நேரம் சுபமான நேரமாகும். உன் அதிர்ஷ்டம் உதயமாகின்ற நேரமாகும்.

'என் கண்களில் அஞ்சனம்' இடுங்கள் என்றும் தினேஷ் கேட்கிறான். தியானம்தான் அஞ்சனம் என்னும் கண் மை. தியானம் கண்களுக்குப் புத்துயிர் தருகிறது. கடந்த காலத் தூசியை அகற்றிக் கண்ணொளியைப் புதுப்பிக்கிறது.

'என் கடந்த காலம் பற்றி என்ன தெரிகிறது?' என்று தினேஷ் கேட்கும் கேள்விக்கு என் பதில் இதுதான் – 'உன் கடந்த காலம் பற்றி எனக்குக் கவலையில்லை. நடந்தது. நடந்து முடிந்துவிட்டது. கடந்தது. கடந்துபோனது.'

தலைவிதியின் சக்கரத்திலிருந்து இன்னும் தப்பிக்காவிடிலும், வெளியே வரவேண்டும் என்று தினேஷ் ஆசைப்படுவது நல்ல முன்னேற்றமாகும். இந்த விருப்பம் எழுவதே கூட பாதி யாத்திரை முடிந்ததற்கு சமம்.

இதோ இங்கே நான் ஒளியை தயாராக வைத்துக் கொண்டு அமர்ந்துள்ளேன். அதைப் பெற்றுக்கொள்ள நீ தயாரெனில் இதயத்தைத் திறந்துவிடு. உன் கடந்தகால வாழ்க்கை இறந்து போகும்; உனக்குப் புதிய பிறவி கிடைக்கும். ஆனால் சிலுவையிலும் தொங்க நேரிடும். மீண்டும் பிறப்பாய்.

மேலும், முழுமையாக உன் தனித்தன்மையை இழக்கத் தயாராக இருக்க வேண்டும். அதுவே சந்நியாசம் என்பது. கடந்த காலத்தின் பாதிப்பிலிருந்து உன்னை விலக்கிக் கொள்ள வேண்டும். கடந்த காலமென்னும் பூமியிலிருந்து உன் வேர்களை முழுமையாகப் பிடுங்கி எறிய வேண்டும். சந்நியாசம் என்பது புதிய பூமியைத் தேடுதலாகும். இதுவரை வாழ்ந்த முறை வீண்; நடந்தது நடைபெற்று முடிந்து விட்டது. இனி அதனுடனான தொடர்பைக் கைவிடுவோம். கடந்தகாலக் கணக்கை எதிர்காலத்திற்குக் கொண்டு செல்ல மாட்டோம். பின்புறம் திரும்பி – திரும்பி, இதுவரை நடந்துவந்த பாதையைப் பார்க்க மாட்டோம்.

நீ தயாரெனில் நானும் தயார் – உன் கண்களில் அஞ்சனம் தீட்ட. கண்ணில் மை படும்போது சிறிதளவு எரிச்சல் இருக்கத்தான் செய்யும். கண்ணீர் வரும். கண்ணை மூடிக்கொள்ளத் தோன்றும். இதெல்லாம் சகஜம்தான். நீ தைரியமாக இயங்கினால் நிச்சயமாக உனக்குள் பரமாத்மாவின் பிரவேசம் நிகழும்.

வழிகாட்ட நான் ஆயத்தமாக உள்ளேன். நீயும் தயாரெனில் உன் ஆன்மிகப் பயணத்தில் எந்தத் தடையும் எழாது.

கடந்த காலத்தைத் துற.

நடைபோடு, முன்னேறு – எதிர்காலத்தின் ஏற்றமிகு பாதையில்!

